# திருமந்திரம்

# TIRUMANTRAM

## நான்காம் தந்திரம்

## உரையுடன்



வெளியீடு எண் : 432

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருமூலர் திருமந்திரம்

## நான்காம் தந்திரம்

(பாடல்கள் 884-1418)

பஞ்சாக்ஷரதீபம் என்னும் உரையுடன்



இது

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்

இருபத்துமூன்றாவது குரு மகாசந்நிதானம்

சீர் வளர் சீர்

சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்

கட்டளையிட்டருளியபடி

வெளியிடப்பெற்றது.



திருவாவடுதுறை ஆதீனம்

1996

# உள்ளுறை







உ

சிவமயம்

# குருமரபு வாழ்த்து

கயிலாய பரம்பரையிற் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணெய்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பானு வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ.

— தவத்திரு சிவஞான யோகிகள்.
திருவாவடுதுறை ஆதீனம்.



திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்

குருமுதல்வர்

## அருள்திரு நமசிவாய மூர்த்திகள்

சிவானந்தப் பேறு: தை - அசுவதி

# அதிகார அட்டவணை

[ எண் - பக்க எண் ]

## நான்காம் தந்திரம்

உ

சிவமயம்

கயிலாயத் தொருசித்தர் பொதியிற்சேர்வார்
காவிரிசூழ் சாத்தனூர் கருதும்மூலன்
பயிலாநோ யுடன்வீயத் துயரநீடும்
பசுக்களைக்கண் டவனுடலிற் பாய்ந்துபோத
அயலாகப் பண்டையுடல் அருளால்மேவி
ஆவடுதண் டுறையாண்டுக் கொருபாவாகக்
குயிலாரும் அரசடியில் இருந்துகூறிக்
கோதிலா வடகயிலை குறுகினரே.

— ஸ்ரீ உமாபதிசிவாசாரிய சுவாமிகள்.



திருமூலதேவ நாயனர்
சிவானந்தப் பேறு: ஐப்பசி - அசுவதி

உ

சிவமயம்

# பதிப்புரை

உலகத்து யாவர் நெஞ்சத்தும் எக்காலத்தும் நின்று நலம் பயக்கவல்லதான ஒரு நூல் திருமூலர் அருளிய திருமந்திரம். கயிலாயத்து ஒரு சித்தராகிய திருமூலர் மூவாயிரம் ஆண்டுகள் சிவயோகத்தில் வீற்றிருந்து தாம் பெற்ற அநுபவத்தால் விளைந்த இன்பத்தினை வையகம் முழுதும் பெற்றுத் துய்க்கவேண்டும் என்ற கருணையோடு வழங்கிய அருட்கொடை இத்திருநூல். எடுத்த இப்பிறப்பில் வாழ்வாங்கு வாழவும் மறுபிறப்பு இல்லாதபடி இதனை மாண்புடையதாகச் செய்துகொள்ளவும் மக்களாவார் யாவர்க்கும் வழிகாட்டி நிற்கும் ஒரு பெருநூல்.

உயிர்க்கு ஆக்கம் தேடுவோர் யாவரும் இத்திருமந்திர நூலின் மேன்மையினை உணர்ந்து நூல் அருளும் நெறியில் ஒழுகி உய்திபெறவேண்டும் என்று நமது ஆதீனம் சென்ற நாற்பது ஆண்டுகளுக்கு மேலாக ஆற்றிவரும் அருட்பணிகளைத் தமிழுலகு நன்றியோடு போற்றிப் பயன் கொண்டு வருகின்றது. ஆதீனத்து இருபத்துமூன்றுவது குரு மகாசந்நிதானமாக ஞான பீடத்து எழுந்தருளிச் சிவஞானச் செங்கோல் செலுத்தும் **சீர் வளர் சீர் சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள்** அவர்கள் ஆதீன மரபுவழிப் பணிகள் சிறப்புறவும், வேறுபாடுகளின்றி யாவரும் ஒற்றுமையுணர்வொடு இன்ப அன்பு வாழ்வில் மேன்மை எய்தவும் அருள்பாலித்து

வருதலொடு திருமந்திர - பஞ்சாட்சர தீப உரையுடன் அமையும் ஆதீன வெளியீடுகளாகிய நூலின் ஒன்பது தந்திரங்களும் இரண்டாம் பதிப்பாகவும் பாயிரம் முதல் மூன்று தந்திரங்கள் மூன்றும் பதிப்பாகவும் வெளிவரச் செய்தருளினூர்கள். இரண்டாம் பதிப்பு பெற்ற திருமந்திரப் பகுதிகள் மீண்டும் கிடைக்கச் செய்தருள வேண்டுமெனும் அன்பர்கள் பல்லோரின் வேண்டுகோளைத் திருவுளங் கொண்டு சீர் வளர் சீர் குரு மகாசந்நிதானம் அவர்கள் திருஆணையின் வண்ணம் யுவ-ஆண்டு மகரத் தலைநாள் குருபூசை விழாமலராகத் ஆதீன மகாவித்துவான் டாக்டர். ச. தண்டபாணி தேசிகர் ஐயா அவர்கள் இயற்றியுதவிய திருமந்திரம் நான்காம் தந்திரம்-பஞ்சாட்சர தீப உரை நூல் மூன்றும் பதிப்பாக மலர்கின்றது.

திருமந்திரம் என்னும் நூற்பெயருக்குக் காரணமாக விளங்கி, சிவம் முதலான கடவுளர்க்குரிய மந்திரங்களும் யந்திரங்களும் உபாசிக்கும் முறையும் பயனும் உணர்த்தப் பெறுவது நான்காம் தந்திரம். திருமந்திரத்தின் ஏனைய தந்திர உரைப் பகுதிகளும் குரு மகாசந்நிதானம் அவர்கள் ஆணைவழி தொடர்ந்து வெளிவரும் என்பதைப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

எளியேனையும் ஆதீன அருட்பணிகளில் ஆட்படுத்தி அருள்புரியும் சீர் வளர் சீர் குரு மகாசந்நிதானம் அவர்கள் பொற்பாத கமலங்களை என்றும் போற்றி வழிபட்டு நிற்கும் கடப்பாடுடையேன்.

திருவடி மறவா அடியேன்,

*சரசுவதி மகால் நூல் நிலையம் திருவாவடுதுறை.*

**புலவர். பா. மகாலிங்கம்,**
*ஆதீனம் நூலகர்.*

உ

சிவமயம்

# திருமந்திரக் கருத்து

## (நான்காம் தந்திரம்)

பன்னிரு திருமுறைகளுள் திருமூலதேவநாயனாரால் அருளிச் செய்யப்பெற்ற திருமந்திரம் என்னும் பத்தாந் திருமுறை ஒன்பது தந்திரங்களையுடையது. அவற்றுள் நான்காந்தந்திரமே திருமந்திரம் என்னும் பெயருக்குக் காரணமாக-உயிர் நாடியாக விளங்குவது. இதில் சிவம் முதலான பல வேறு கடவுளர்க்குரிய மந்திரங்களும், யந்திரங்களும், உபாசிக்கும் முறையும் பயனும் உணர்த்தப் பெறுகின்றன.

தியானத்தின் தொடக்கநிலையில் மனம், வாக்கு, காயம் ஆகிய மூன்றற்றும் வேலைவேண்டும். இவற்றுள் ஒன்றுமட்டும் தொழிற்படுமானால் ஏனையன, வாசனை மாத்திரத்தால் வேறொன்றைப் பற்றிநிற்கும். அந்நிலை மாறி இந்த மூன்றும் ஒத்து இயங்கவேண்டுமாயின் மனத்தின் கருவிகளாகிய ஐம்பொறிகளும் ஒத்து உணரக் கூடிய பயிற்சி வேண்டும். அதற்காகவே தியானத்தைப் பரமலட்சியமாக வைத்து, அங்கமாக யந்திரத் தாபனமும் பூசைமுறைகளும் அமைக்கப்பெற்றன. ஆகவே மந்திரங்களை மட்டும் மானசிகமாக நினைக்க முடியாதவர்களுக்கு யந்திரமும் பூசையும் உருவத் தியானமும் அமைந்தன என்பது உணரத்தக்கது. கடவுளுடைய ஞானவுரு

மந்திரம்; பருவுரு மூர்த்தி பேதங்கள். மூர்த்தி பேதங்களை மட்டும் தியானித்தால் போதாது. மூர்த்திகளுக்குப் பிராணப்பிரதிட்டைக்கும் உதவுவன மந்திரங்களே. அதனாலே நமது இந்திய சமுதாயம் பஞ்சாக்கர சடாக்கர, அஷ்டாக்கர, நவாக்கர, சோடசாக்கரங்களைக் கொண்டமந்திரங்களைப் பெற்று வழிவழியாக ஈடேறிவருகின்றது. 'மந்திர மேனியாக' எனவரும் சித்தித் திருவிருத்தம் இறைவனுடைய மந்திர உருவின் மகிமையை விளக்குவது, தோத்திரங்கள் மந்திரங்களாகா. தோத்திரமும் மந்திரமுமாக இருப்பன சிலவுண்டு. அவை இறைவனது பெருமைகளை நமக்கு நினைவூட்டி அதன் வாயிலாக நமக்கு அன்பு மனத்தைப் படைத்து அவனடிக்கீழ் என்றும் நீங்காத பிடிப்பை யுண்டாக்கி அருட்பெருக்கிற்கு நம்மை யாட்படுத்துவது. மந்திரங்கள் புகழ்ச்சியாகவோ நிகழ்ச்சியாகவோ நெகிழ்ச்சியாகவோ இன்றி, எழுத்துக்கு எழுத்து ஆழ்ந்த அநுபவப்பொருள் உடையதாக இருப்பது. தோத்திரம் இறைவன் உயிர்களுக்குச் செய்த உபகாரத்தையும் அளவிலாற்றலையும் புகழ்வதாய், புகழ்பவனுக்கு மனவுறுதியையும் அன்பையும் விளைவிப்பது. ஆதலால் தோத்திரம் வேறு: மந்திரம் வேறு: தோத்திர மந்திரம்வேறு என உணர்தல்வேண்டும். திருவைந்தெழுத்து முதலியன என்றும் மந்திரங்களே. அவற்றின் நுட்பத்தை உணர்த்துவது இத்தந்திரம்.

இது பதின்மூன்று அதிகாரங்களை உடையது. அவற்றுள் முதலதிகாரம் 'அசபை' என்பது. மந்திரங்களில் தானாகவே இயங்குவதான மூச்சுக்காற்றின் இயக்கத்தை 'ஸோ' என உள்ளுக்கிழுத்து 'ஹம்' என்று வெளியிடுக என விளக்கப்பெறுவது இம் மந்திரம். மூச்சுக்காற்று

எல்லாராலும் உள்ளுக்கிழுக்கப்பெற்று வெளியே தள்ளப் பட்டு இயங்கிக்கொண்டேதான் இருக்கிறது. அதில் உள்ளுக்கிழுக்கும் போது 'அவன்' என இழு, வெளி விடும் பொழுது 'நான்' என விடு என்று 'அவன் நான்' என்ற இறையுணர்ச்சியையும், தடை நீங்கிய காலத்து அவனே தானாகின்றேன் என்ற பேருணர்ச்சியையும் பிறப்பித்தலால இந்த மந்திரம் பற்றிய அதிகாரம் முதற் கண் இடம் பெறுகிறது. இது மந்திரம் அல்லாத பெருமந் திரம், ஊமை மந்திரம், பேசாப்பெருவெழுத்து என்றெல் லாம் வழங்கப்பெறும். இதுவே சிவம் சத்தி ஆன்மா என்ற முப்பொருளையும், சிவம் சத்தி ஆன்மா திரோதானம் மலம் என்ற ஐந்து பொருளையும் உணர்த்துவனவாகிய சிபஞ்சாக்கரமாம் என்பதை விளக்குகிறது.

இரண்டாவது திருவம்பலச் சக்கரம், அம்பலம்-சிற்சபை யான ஞானசபை; சிதம்பரம். அங்கே ஆனந்தக் கூத்தப் பெருமான் அருட் சத்தியோடு மந்திர வடிவாய் யந்திரத் துள் விற்றிருக்கும் நிலையை உணர்த்துவது இது. இவ் வியந்திரம் மந்தமான பக்குவ முடையவர்க்குச் சிவ ஞானத்தைத் தோற்றுவித்தற்குக் காரணமாயும், தீவிர மான பக்குவம் அடைந்தவர்களுக்கு அநுபவப் பொருளா யும், தீவிரதர பக்குவிகட்கு ஆனந்தத் தானமாயும் விளங் குவது. ஆகவே சமய வாழ்வையே பொருந்தாத மந்ததர பக்குவிகளை ஒழித்து ஏனைய மூவர்க்கும் பயன் தருவதாய் அமைந்தது இது.

மக்கள் விரும்புகின்ற இம்மை மறுமைப் பயன்க ளுக்கு ஏற்ப திருவைந்தெழுத்துக்களை மாறியும், யந்திர வடிவங்கள் வேறியும் அமைந்த முறை இதனுள் விளக்கம்

பெற்றுள்ளது. மனித உருவும், சிவலிங்க உருவும், பூமியும் விண்ணும், பிறவும் சீபஞ்சாக்கர வடிவே என்பதை விளக்குகிறது. பிரணவமும், வேதமும் சிவாலயங்களும் சீபஞ்சாக்கரம் அமைந்த திருவம்பலச் சக்கர வடிவமே என்பதை உணர்த்துகிறது. சிதம்பரத்தில் ஸ்ரீநடராசப் பெருமானுக்கு வலதுபுறத்தில் பொற்றளங்களால் குறித்துக் காட்டப்பெறுகின்ற 'ரகசிய தரிசனம்' என வழங்கப் பெறும் யந்திரமே சிதம்பர சக்கரமாகிய திருவம்பலச் சக்கரம். அது திருமூலரால் பிரதிஷ்டை செய்யப்பெற்றது என்பதும், யந்திர ஆட்டமே நடராசர் ஆட்டத்திற்கு அடிப்படை என்பதும் உலகறிந்த உண்மை. அச்சக்கரத்தை அமைக்கும் முறையும் அதனை உபாசிக்கும் முறையும் விளக்கமாக இதில் கூறப்பெற்றுள்ளது.

மூன்றாவது அதிகாரம் அர்ச்சனை. யந்திரத்தில் மந்திரவடிவாக இறைவனை எழுந்தருளுவித்து தியானிக்கத் தொடங்குமுன், தியானம் உறுதிப்பட பலவகையான பூக்களைக்கொண்டு, மந்திரங்களை உதடும் அசையாமல் உள்ளத்துள்ளேயே எண்ணி வழிபடும் முறையே அர்ச்சனை என்பது. இதில் அர்ச்சனைக்குரிய பூக்களும், அர்ச்சிக்கும் முறையும்: அர்ச்சித்தற்குரியார் இவரென்பதும், புறப் பூசையிலிருந்து அகப் பூசைக்குப் போம் உபாயமும், பயனும் உணர்த்தப் பெறுகின்றன. புறத்தே செய்யும் பூசையெல்லாம் சிவோகம்பாவனையாகிற அகப்பூசைக்கு வாயிலாமே யன்றிப் புறப்பூசையால் மட்டும் பயனில்லை என்பதை வற்புறுத்துகிறது.

நான்காவது அதிகாரம் நவகுண்டம். மந்திரசெபத்திற்கு அவசியமான ஜப, ஹோம, தர்ப்பணங்களுள் ஓமத்திற்கு இன்றியமையாத யாக குண்டங்களின் இலக்க

ணத்தையும், எவ்வெக் குண்டம் எவ்வெத் தேவதைக் குரியது என்பதையும், அவ்வக் குண்டத்துளமைக்கப்படும் அக்கினிகள் எவை என்பதையும் இது கூறுகிறது. இப்படி அக்கினியை வழிபடுவது மந்திரயந்திர வடிவாகத் தியானித்த இறைவனை ஒளிப்பிழம்பாகத் தியானிக்கும் உபாயங்களைக் கூறுகின்றது. மற்றும், புறத்தே யாக சாலையில் இடப்படும் நவகுண்டங்களைப் போலவே அக மார்க்கத்தில் ஆருதார குண்டங்கள் அமைகின்றன என்ற உண்மையையும் உணர்த்துகிறது.

இதுவரை சிவமூர்த்திக்குரிய மந்திர யந்திரங் களைக் கூறி, மேல் சத்தி பேதங்களில், திரிபுரைக்கு உரியனவற்றை உணர்த்தும் திரிபுரைச் சக்கரம் என்ற ஐந்தாம் அதிகாரம் அமைந்துள்ளது. இந்த அதிகாரத் துள் முதற்கண் பத்து மந்திரம் வரை, சத்தியே எல்லாமா யிருத்தல் விளக்கப்பெறுகின்றது- அடுத்து இராஜராஜேஸ் வரி தியானமும், சண்டிகாதேவி தியானமும், கஜலட்சுமி தியானமும் கூறி, அதற்குமேல் ஞானிகள் எவ்வடிவில் எப்படித் தரிசிப்பார்கள் என்பதை விளக்குகிறது. பின்பு ஸ்ரீ வித்தியாசக்கரம். சோடசாட்சரி வித்யை இவற்றை விளக்குகிறது.

ஆருவது அதிகாரம் வயிரவி மந்திரம். சத்தனுக்கும் சத்திக்கும் உள்ள இயைபு அநாதி நித்ய சம்பந்த மானபடியால் அவன்மேல் வைத்து அவன் ஆற்றலை - வழிபடுமுறையை உணர்த்துதல் மரபாகலின் வயிரவ சத்தியான வயிரவியை வழிபடு முறையைக் கூறி வயிரவரை வழிபடும் உண்மை யையும் உணர்த்துகிறது.

ஏழாவது அதிகாரம் பூரணசக்தி. நிறைவிலிருந்து தான் நிறைவு தோன்றும். அங்ஙனம் தோன்றியதால் நிறைவு குறைவுடையது ஆகாது. நிறைவு என்றும் நிறைவே. எங்கும் நிறைவே. இந்த உண்மையை விளக்குவது 'பூரணாத்பூர்ணமிதம்' என்று தொடங்கும் உபநிஷத் மந்திரம். அங்ஙனம் நிறைவான பூரணசக்தி காலதேச வேறுபாடின்றி, இயங்குவ நிற்பவான எல்லாப் பொருளிடத்தும் ஒருசேர வியாபித்திருக்கும் நிலையை உணர்த்துகின்றது.

எட்டாவது அதிகாரம் ஆதார ஆதேயம். ஆதாரம் - நிலைக்களம். ஆதேயம் - அதில் இருப்பது. இந்த இரண்டற்கும் இயைபினை விளக்குவது இப் பகுதி. சத்தி சிவத்திற்கு ஆதாரம்; சிவம் ஆதேயம். சத்திக்குச் சிவம் ஆதாரம்; சத்தி ஆதேயம். 'உடையாள் உன்றன் நடுவிருக்கும் உடையாள் நடுவுள் நீயிருத்தி' என்ற உண்மை இது. அதனை விளக்கி, இவ்விருவருமே எல்லாவற்றிற்கும் ஆதாரமாக இருத்தலை அறியவைக்கின்றது. பிராசாத யோக நிலைகளையும், அவற்றின் அனுபவத்தையும் உணர்த்துகிறது.

ஒன்பதாவது ஏரோளிச் சக்கரம். இதுவரையில் செப்புத்தகடு முதலியவற்றில் சக்கரம் எழுதிப் புறத்தே வைத்து வழிபட்டு, அதன் வாயிலாக அகமார்க்கத்திற்கு வழிசெய்து கொள்க என்று கூறி வந்த திருமூல தேவநாயனார், இவ்வதிகாரத்து மூலாதாரம் முதலிய ஆறுதாரங்களில் உள்ள சக்கரங்களையும், அவற்றில் இறைவன் எழுந்தருளியிருப்பதையும். அவரைத் தியானிக்கின்ற முறைகளையும் அறிவிக்கின்றார்.

பத்தாவது வயிரவச் சக்கரம். வயிரவச் சக்கரத்துள் ஞானமார்க்கத்துக்கு உபகாரப்படு முறையை உணர்த்திய திருமூலதேவர் ஈண்டு பகைவெல்லுதல் முதலிய இம்மை இன்பத்திற்குக் காரணமான காமியப்பயனையும் உணர்த்த வயிரவராகிய கோபமூர்த்திக்குரிய மந்திர யந்திரங்களை உணர்த்துகின்றார்கள.

பதினொராவது சாம்பவிமண்டலச் சக்கரம். சிவம் சத்தியுடன் என்றும் பிரியாதே இருக்கும் நிலை சிவலிங்கத் திருமேனி என்பதையும், அது மந்திரவடிவாக விளங்குவதையும் அறிவிப்பது இப்பகுதி.

பன்னிரண்டாவது புவனபதிச்சக்கரம். ஸ்ரீ வித்தியா மந்திரத்தின் காதிவித்யை இதில் அறிவிக்கப்படுகிறது. மேலும் சிவம் சத்தி சம்பந்தம், அங்காங்கியாயும், குணகுணியாயும் இருப்பது தெரிவிக்கப்பெறுகிறது. இவற்றின் விளக்கங்களை, குருவாயிலாகக் கேட்டால் அல்லாமல் சித்திபெற இயலாதவற்றை மறைத்தே கூறப்பெற்றுள்ளமை சிந்தித்தற்குரியது.

பதின்மூன்றாவது நவாக்கரி சக்கரம். நவாக்கரி மந்திர உத்தாரம் தரப்பெற்றுள்ளது. பஞ்சாட்சர நவாக்கரி முறையே சிவானுபூதிச் செல்வர்க்கு உகந்தது என்பது உணர்த்தப் பெறுகின்றது. இந்த மந்திரமே காமியத்தையும் முத்தியையும் தரவல்லது என்பது வற்புறுத்தப் பெறுகின்றன.

இவ்வண்ணம் இத்தந்திரம் பதின்மூன்றதிகாரங்களாக, ஐந்நூற்று முப்பத்தைந்து மந்திரங்களால் நிறைவெய்துகின்றது.

# TIRUMANTRAM

The term "mantram" denotes "an idea that sustains and safeguards a person who is immersed, as it were, in seeking Truth through its instrumentality."

It is ideas that elevate men to great heights naturally, one who feels a compulsive urge to enter into a higher spiritual level, should safeguard oneself with ideas that bring about an upward orientation in one's being.

Mantram is the spark that lights the torch of knowledge. The late Dr V. V. Ramana Sastri defines mantram as "an idea that is formed out of (spiritual) churning" And he adds: "Mantrams, therefore, are images that emerge in the mind as a result of ceaseless concentration." Such mantrams are a means of attaining true knowledge.

Tirumantram by Tirumular is one of the most important of the Tamil works on mantrams handed down to us from our saints and seers.

Scholars hold conflicting views on the date of composition of Tirumantram, and. whether or not it is a translation from Sanskrit, It is the privilege of scholars to disagree. We shall not here enter into

academic controversies. However, it is well that we seek to have some idea of the social environment of the age in which Tirumular lived and produced his magnum opus

Tirumular's origin, the circumstances that led to his leaving Kailas and to his settling down in the land of the Tamils. the social forces that inspired him to produce the immortal **Tirumantram** all these are lost in the mists of antiquity. we do not even Know the real name of this great sage. Tirumular is the name he acquired later when he became a shepherd. No historical background is possible, We have therefore. to turn to another great treatise, **Periya Puranam**, for what it has to say on the story of his life.

The sage, says **Periya Puranam**, came to Tamil Nadu from Kailas to meat his friend Agastya. After offering worship at several famous shrines, he reached Sattanur, a village on the banks of the Kaveri where he witnessed the tragic spectacle of a herd of cows weeping over the corpse of a shepherd. Evidently, the shepherd had met with sudden death, and the cows feeling that some great tragedy had befallen their master, stood hovering about the body, unwilling to move away. They smelled it and tears, rolled down their long white cheeks like silvery rivulets

This moving sight struck a responsive chord in the sage, and he decided to end the agony of the

cows. As one who had mastered the eight siddhis, he knew the technique of moving from one body to another. He cast aside his body in a safe place, and penetrated into the shepherd's body The shepherd immediately came to life and got up. The cows danced with joy on seeing their master alive again.

The sage who now lived in the body of the Shepherd (his name was Mulan) followed the cows back to the village in the evening. But he stood in the street without entering Mulan's house. Mulan's wife who was awaiting her hasband's return came out, and was puzzled to find him standing in the street. She called him in, and moved up to take his hand. But he stepped aside and asked her not to touch him. He denied he had any ralationship whatsoever with her. Then he entered into a neighbouring mutt, and was soon immersed in deep contemplation.

Mulan's wife would not be consoled easily. How could the poor woman know that her husband was no more and that another saintly soul was now dwelling in his body? She complained to her relatives against her husband's behaviour and cried that he had lost his senses. Some of the elders of the village who saw him at the mutt were wise enough to perceive that the shepherd was in a state of samadhi, They, therefore, asked her not to disturb him, but to leave him alone.

when the sage emerged from contemplation the next morning, he straightaway went to the spot where he had left his former body But it was not to be found there. He then realised that he was destined to spend the rest of his life as Mulan the shepherd, that it was God's will that he should fulfill his purpose as a shepherd.

Known thenceforth as Tirumular (derived after the shepherd's name Mulan), he left Sattanur and reached Tiruvavaduthurai where he sat under a Bodhi tree and passed into a state deep contempla tion. Once a year he woke up, and each time he composed a stanza containing the cream of his spiritual experiences during the year. It took 3000 years for him to compose the 3000 stanzas comprising **Tirumantram**,

This acount of his life in **Periya Puranam** perhaps a clue to the State of society which obtained at the time of Tirumular. Why did Tirumular choose to come down all the way to the land of the Tamils? How did it come to pass that this great exponent of the Vedas and the Agamas was given the form of a shepherd in a lower rung of the social ladder to expound the great Saiva Siddhanta school of philosophy? And why was Saiva Siddhanta in particular chosen in preference to other systems of thought? It is well that we seek here some answer to these questions, if only for obtaining a correct appreciation of some of the stanzas in **Tirumantram**, such as, for instance,

those expresing his strong condemnation of the pretensions of impostors masquerading as saints and seers.

Presumably, early Indian thought which gave birth to some of the greatest metaphysical systems the world has ever seen, recived a setback, and an era of sterility and stagnation had commenced. True flearning and character were eclipsed by principles and practices justifying social malpractices. The true import of the Vedas and the Agamas was allowed to be lost in the jungle of rituals and dogmas. Tamil Nadu the cradle of Saiva Siddhanta, had become the breeding ground of false prophets who used religion and philosophy for securing personal advantages. Such, obviously, was the state, of Tamil society which **Tirumular** felt compelled to reconstruct on lines set forth in the Vedas and the Agamas and as he understood them in the light of his spiritual experiences.

Tirumular wanted humanity to share the divine bliss which he himself had enjoyed. This sharing of his happiness, this freedom of the soul from ignorance and bondage, cannot however be secured unless, first, some of the fundamental tenets of Saiva Siddhanta were instilled into the minds of the people:

Tirumular taught that the liberation of the **Pasu** (soul) was not dependent on the caste, high or low, of the person in whom it dwells, that the soul can attain freedom only if one followed the right

path without allowing oneself to be diverted towards blind alleys; that Saiva Siddhanta, which is the cream of the Vedas and the Agamas, opens the window that reveals true knowledge.

This account, therefore, of Tirumular's teaching Tirumantram as a shepherd, should serve to emphasise his advice that, in as much as the soul and not the body that must needs be freed from bondage, any person be he of high or low birth, can seek to attain Sivananda (divine bliss). That he should have come from Kailas to Tamil Nadu in the extreme South may be taken as reflecting his anxiety that the correct principles of Saiva Siddhanta should again be taught and reinforced in the land of its birth, where social conditions had so altered as to obliterate the prime principles of the Vedas and the Agamas. If the Vedas may be described as the tree of knowledge, the Agamas are its branches and leaves and fruits. While the Vedas content themselves with stating that the soul is the Brahman, the Agamas instruct and guide in leading the soul toward its union with the Absolute Being.

**Tirumantram**, as we have seen, arose out of Tirumular's intense longing that mankind should share the fruits of his spititual experiences. The treatise is divided into nine tantrams (chapterrs) setting forth the fundamental tenets of the nine Saiva Agamas.

---

# FOURTH TANTRAM

The fourth Tantram deals with Mantras and Chakras. The Ajaba Mantra forms the seed of all the Mantras. It is called the dumb Mantra as it could not be recited except in conjunction with others. Tirumular deals in this chapter with Panchakkara Mantra and other Beeja Mantras. He seeks also to explain Chakras, such as Tiruvambala Chakra Tripurai Chakra, Yeroli Chakra etc.. and their appropriate letters, besides giving guidance on various methods of reciting them.

In the section dealing with Archanas (worship according to rituals) Tirumular takes pains to stress that real worship consists not in the formal observance of elaborate and complicated rituals, but in inward seeking with humility and perseverance. Incidentally Tirumular also refers to sakthi Mantras such as Balai, Tirpurai, Bhuvanai, Navakshari, Panchakshari, Sodasakshari and their roots.

சிவமயம்

# திருமூலர் திருமந்திரம்

## ஸ்ரீ பஞ்சாக்ஷரதீபம் என்னும் உரையுடன்

## நான்காம் தந்திரம்

### 1. அசபை

அஃதாவது, செபிக்கப்படாமலே பிராணனோடு இழைந்தியங்கும் மந்திரம். அது ஹம்ஸ என்பது. இது அம்சமந்திரம் என்றும், அங்குசம் என்றும், அன்னமந்திரம் என்றும் வழங்கும். திருமால் இந்த மந்திரத்தைச் செபித்துக்கொண்டே அறிதுயிலமரும் போது, அவன் இதயத்தை இடமாகக்கொண்டு ஸ்ரீ தியாகேசப்பெருமான் அசைந்தாடினார். அதனால் அவர் ஆடுகின்ற நடனமும் அசபாநடனம் எனப்பெற்றது. முன் தந்திரத்திற் கூறியாங்கு யோகநெறிநின்றார். தாம் செய்யும் யோகத்தை நிர்ப்பீசமாக்காது, சபீசயோக மாக்க மந்திரங்கள் இன்றியமையாதன ஆதலின் அவற்றை அருளுவான் முற்பட்ட ஆசிரியர் திருமூல தேவர் மந்திரங்களுக்கெல்லாம் அடியான அசபையை அறிவிக்கின்றார்.

**போற்றுகின் றேன்புகழ்ந் தும்புகல் ஞானத்தைத்**
**தேற்றுகின் றேன்சிந்தை நாயகன் சேவடி**
**சாற்றுகின் றேன்அறை யோசிவ யோகத்தை**
**ஏற்றுகின் றேன்எம் பிரான்ஓர் எழுத்தே. 884**

இம்மந்திரம் என்னுதலிற்றோவெனின், ஓரெழுத்து மந்திரமாகிய அசபையை ஏற்றுகின்றேன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் : புகழ்ந்து சொல்லப்படுகிற சிவ ஞானத்தைப் போற்றுகின்றேன் ; மனத்தில் உலக நாயகனாகிய சிவன் சேவடியையே தெளிகின்றேன்; சிவயோகத்தைத் தெரிவிக்கின்றேன் ; எம்பிரானாகிய சிவபரம்பொருளின் ஓரெழுத்து மந்திரத்தை உரு வேற்றுகின்றேன் என்றவாறு.

போற்றுதல் – இடைவிடாது எண்ணுதல். ஞானி களாலும் ஆகமங்களாலும் புகலப்படுகின்ற ஞானம் சிவஞானம். புகலுதல் – விரும்புதலுமாம். தேற்றுதல் – நமக்குத் துணையாவது இதுவன்றி வேறில்லையெனத் தெளிதல். நாயகன் – எல்லாருக்கும், எல்லாவற்றிற்கும் தலைவனாக, தனக்குத் தலைவனில்லாதவன்.

அறையோ ; உலகவரை விளிக்கும் விளிச்சொல். சிவயோகம் கேட்பார்க்கு மட்டும் உபதேசிக்கத்தக்க தாக வழிவழிகேட்டே அநுபவிக்கத்தக்கதாக இருப் பினும் உலகமனைத்தும் உய்க என்னும் உயர்நோக் கால் அறையோ எனக் கூவிச் சாற்றுகிறேன் என்றது.

எம்பிரான் ஓரெழுத்து - சிவபெருமானைக் குறிக்கும் பிரணவமந்திரம். ஏற்றுதல், உருவேற்றி னான் என்பது போன்ற வழக்கு. (1)

**ஓரெழுத் தாலே உலகெங்கும் தானாகி**
**ஈரெழுத் தாலே இசைந்தங் கிருவராய்**
**மூவெழுத் தாலே முளைக்கின்ற சோதியை**
**மாவெழுத் தாலே மயக்கம றுத்ததே.** 885

இம் - எனின். பிரணவத்தின் பொருளுணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : 'ஒ' என்னும் ஓரெழுத் தாலே, உலகெல்லாம் ஒழிவற நிறைந்துநின்று, அகாரமும் உகாரமும் ஆகிய ஈரெழுத்தாலே சிவமும் சத்தியுமாகிய இருவராகப் பொருந்தி நின்று, அகார உகார மகார மாகிய மூவெழுத்தாலே சிருஷ்டி யுன்முகமாகக் காட்சி யளிக்கின்ற ஒளிப்பிழம்பாகிய சிவம், மகாரத்தால் மயக்கத்தைச் செய்தது என்றவாறு.

ஓம் என்பது அகார உகார மகார நாத விந்து இவற்றின் கூட்டுறவால் விளைந்தமையை விளக்கி அருளுகின்றார்.

உலகெங்கும் தானுசி என்றது 'ஒ' என்பதிலுள்ள O பிந்துவாகிய வட்டமும், - இவ்வடிவுள்ள நாதமும் கூட உலகந்தோன்றி நிற்குமாதலின், பிந்து நாதங்களுடைய – அகார உகாரங்களுடைய சேர்க்கையே உலகெலாம் என்றது. அவ்வோரெழுத்தும் முற்கூறியாங்கு அகாரவுகாரங்களின் சேர்க்கையே என்பதும், அவ்வெழுத்துக்களே சிவசத்திகள் என்பதும் இசைந்தங்கு இருவராய் என்பதால் விளக்கியருளப்பட்டது.

மூவெழுத்து என்றது மேற்கூறியவற்றோடு மல எழுத்தாகிய மகாரமும் கூடிய நிலையாம். சோதி ஐ எனப் பிரித்து, சோதிவடிவான தலைவனாகிய சிவம் எனப் பொருள் கொள்க, மயக்கம் அது உற்றது – மயக்கை விளைவித்தது, அது. பகுதிப்பொருள் விகுதி.

பிரணவமும் அசபையாதலின் இம்மந்திரம் இவ் வதிகாரத்திற்கு இயைபுடைத்தாயிற்று. ( 2 )

**தேவர் உறைகின்ற சிற்றம் பலமென்றுந்**
**தேவர் உறைகின்ற சிதம்பர மேயென்றுந்**
**தேவர் உறைகின்ற திருஅம் பலமென்றுந்**
**தேவர் உறைகின்ற தென்பொது வாமே.** 886

இம் - எனின், தென் பொதுவாகிய சிற்றம்பலத்தின் பரியாயப்பெயர்கள் இவையெனல் நுதலிற்று.

இ - ள் : தேவர்கள் தரிசித்தற்காக வந்து உறைகின்ற அழகிய பொதுவே சிற்றம்பலம், சிதம்பரம், திருவம்பலம் என்றெல்லாம் ஆம் என்றவாறு.

அம்பலம் – ஊர்ப்பொதுமன்றம், சிறு அம்பலம் – சிற்றம்பலம் ; சிறிய சபை, சிறுமை, சிறுத்தொண்டர் என்பதுபோல நுணுக்கம் என்பதின்மேற்று. அம்பரம் – ஆகாயம், சித் அம்பரம் - சிதாகாசம ; பரஞானகாயம் என்பதாம்.

திரு – ஞானம். 'போகமும் திருவும் புணர்ப்பானை' என்பதன் கண்ணும் இப்பொருட்டாதலை அறிக. திருவம்பலம் ஞானசபை. இத்திருவம்பலம் புண்ணிய பூமியாகிய மண்ணுலகத்திருப்பினும் போகபூமியாகிய விண்ணிலுறையும் தேவர்கள் தம் போகபூமிவாசம் நிலைபெற வணங்கிச்செல்ல வந்து உறைகின்றனர் என்பதாம்.

இம்மந்திரத்தின் பொருள் இந்த அதிகாரத்திற்கு ஏற்புடைத்தாமாறு யாங்ஙனமெனின், அசபையைத் தியானிக்க, சிதாகாசமாகிய தகராலயதரிசனம் கிட்டுமாதலின் என்க. ( 3 )

**ஆமேபொன் னம்பலம் அற்புதம் ஆனந்தம்**
**ஆமே திருக்கூத் தனவரத தாண்டவம்**
**ஆமெ பிரளய மாகும்அத் தாண்டவம்**
**ஆமேசங் காரத் தருந்தாண் டவங்களே.** 887

இ்ம் - எனின், மேற்கூறிய பொன்னம்பலத்துள் இறைவனியற்றுவன ஐந்து தாண்டவங்களாம் என்பது அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : பொன்னம்பலத்தில் இறைவன் ஆடும் தாண்டவமே அற்புதத் தாண்டவம், ஆனந்தத் தாண்டவம், அனவரத தாண்டவம், பிரளயத் தாண்டவம் சங்காரத் தாண்டவம் என ஐவகையாம் என்றவாறு.

இவ்வைவகைத் தாண்டவங்களின் இயல்பையும் பின் வரும் மந்திரங்களான் அறியலாம். பொன்னம் பலம் என்றது பொன்னம்பலத்துள் ஆடும் கூத்தை உணர்த்திற்று, ஆனந்தமாம் திருக்கூத்து என இயையும். இதில் ஏ அசை. இங்ஙனமன்றி, பொன்னம்பலக் கூத்து, அற்புதம், ஆனந்தம், அனவரத தாண்டவம், பிரளயத் தாண்டவம் என ஐவகைப்படும் எனவும் பொருள் கொள்ளலாம். இப்பொருளில் பிரளயமாம் அத்தாண்டவம் சங்காரத்தருந் தாண்டவங்கள் ஆம் எனக் கூட்டுக. பிரளயத் தாண்டவமே சங்காரத் தாண்டவமாம் என்றவாறு. (4)

**தாண்டவ மான தனியெழுத் தோரெழுத்**
**தாண்டவ மான தனுக்கிர கத்தொழில்**
**தாண்டவங் கூத்துத் தனிநின்ற தற்பரந்**
**தாண்டவங் கூத்துத் தமனியந் தானே.** 888

இம் – எனின், தாண்டவம் சிபஞ்சாக்கரமும் பஞ்ச கிருத்தியமும், பரமும் ஆம் என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : தாண்டவமான ஒப்பற்ற எழுத்து ஓரே எழுத்தாம். அத்தாண்டவம் அனுக்கிரகத்தையே முதற் றொழிலாகக் கொண்டு இயங்குவதாம். அது எல்லா வற்றினும் மேலாக நின்ற தற்பர சிவ நிலையாம். அது பொன்னம்பலத்துள் நிகழ்வதாம் என்றவாறு.

ஓரெழுத்தென்றது சிவ எழுத்தாகிய ஓகாரத்தை. இறைவன் தாண்டவத்தால் பஞ்சகிருத்தியங்களையும் இயற்றினும், அந்தத் தொழில்களனைத்துமே அனுக்கிர கத்தை அடியாகக் கொண்டவை ஆகலின் அனுக்கிரகத் தொழில் எனப்பட்டது. இக்கூத்து வேறு எந்தக் கடவுளருக்கும் இன்றி, சிவபரம்பொருள் ஒன்றற்கே உரியதாகலின் தனிநின்ற தற்பரம் என்றார். தற்பரம் - மேலானவற்றிற்கெல்லாம் மேலானது. தனி நின்ற தற்பரம் - ஒப்பற்று நின்ற பரம்பொருள்.

தமனியம் என்றது விராட்சொரூபத்தில் பொன்னம் பலத்தையும், அந்நிலையில் தகராகாசமாகிய இதயத்தை யும் உணர்த்தின. (5)

**தானே பரஞ்சுடர் தத்துவ மாய்நிற்குந்**
**தானே அகார உகாரம தாய்நிற்குந்**
**தானே பரஞ்சுடர் தத்துவக் கூத்துக்குத்**
**தானே தனக்குத் தராதலந் தானே.** 889

இம் – எனின், இறைவனே அந்தக் கூத்திற்கு ஆதாரமாயும், ஆதேயமாகிய தத்துவப்பொருளாயும் இருப்பன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : சிவபரம்பொருளாகிய பரஞ்சோதி வடிவமே மெய்ப்பொருளாகத் திகழும். அதுவே அகார உகார வடிவாக ஒன்றாயிருக்கும். அது இயற்றும் தத்துவக்கூத்திற்கு ஆதாரமாக இருப்பதும் அதுவேயாம் என்றவாறு.

ஆகவே, பரஞ்சுடர் வடிவான சிவபரம்பொருள் செய்யும் திருக்கூத்தே தத்துவக்கூத்து. அதற்கு ஆதாரமாக இருப்பவரும், ஆடுபவரும் அவரே என்பதாம். அப்பிராகிருதமான அருட்கூத்திற்கு, மாயேயமாகிய பிரபஞ்சம் ஆதாரமாகாது. ஆதலின், தானே தனக்குத் தராதலம் என்றவாறும். தராதலம் - தங்கும் இடம்; அதாவது ஆதாரம். (6)

**தராதல மூலக்குத் தற்பர மாபரன்**
**தராதலம் வெப்பு நமவா சியவாம்**
**தராதலஞ் சொல்லிற் றுனவா சியவாகுந்**
**தராதல யோகந் தயாவாசி யாமே.** 890

இம் - எனின், மூலாதாரமுதல், ஆதாரத்தானங்களில் திருவைந்தெழுத்து நிற்குநிலை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : ஆதாரமாகிய மூலாதாரத்திலே தற்பரமாக எழுந்தருளியுள்ள சிவம், அக்கினிமண்டலத்தில் ந ம வ சி ய என நிற்கும். அதற்கு மேலதான மண்டலத்தில் கூறப்புகின், ந வா சி ய என்றாகும். அதற்கு மேலதாகிய யோக ஆதாரத்தில் கருணையோடு கூடிய ய வா சி ஆம் என்றவாறு.

மூலாதாரம், அக்கினிமண்டலம், சூரியமண்டலம், சந்திரமண்டலம் இவற்றில் முறையே நமசிவாய நமவசிய, நவாசிய, யவாசி என நிற்கும் என்பதாம். இஃதென்சொல்லியவாறோ எனின் மூலாதாரத்தில் நம சிவய என்று மலவெழுத்துக்களின்பின் முற்பட்டு நின்று சிவம் வாசிய எனத் திருவருளை முற்படுத்தியும், பின்னர் மலம்நசிக்க நவாசிய எனத் திரோதத்தோடு திருவருளிணைந்து நின்றும், பின்னர் அதுவும் மறைய சிவ, சத்தி, ஆன்ம எழுத்துக்கள்மட்டும் மதி மண்டலத்துத் தனித்து நின்றும் அசபையில் தரிசனமாம் என்பது அருளியவாறும். மல திரோதங்கள் நீங்கப் பெற்று ஆன்மா தாயின்வழியாகத் தந்தையைக்கூடி ய வா சி என நிற்கும் என்பது கருத்து. (7)

**ஆமே சிவங்கள் அகார உகாரங்கள்**
**ஆமே பரங்கள் அறியா விடம்என்ப**
**ஆமே திருக்கூத் தடங்கிய சிற்பரம்**
**ஆமே சிவகதி ஆனந்த மாமே.** 891

இம் - எனின், சூனியாகாய அனுபவம் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : பிரணவபஞ்சாக்கரத்துளுள்ள அகார உகாரங்களே பஞ்சாக்கரத்திலுள்ள சிகார வகாரங்களாம். அவையே பரங்களாம். அவை உறையுமிடம் அறியப்படாத இடமாகிய சூனியமாம். அவ்விடமே திருக்கூத்து அடங்கியிருக்கின்ற பரஞானத் தலமாம். அதுவே நித்தியானந்தத்தைப் பயக்கவல்ல சிவகதியாம் என்றவாறு.

ஆன்மாவும் கலந்து, 'சிவ' மாத்திரமாய்ச் சூனியா காயமாகிய ஞானவெளியிலே தானும் சத்தியுமாக சூக்கும நட்டம்புரிந்து ஆனந்தவடிவாகத் திகழும் பரம் பொருள். அதுவே, சிவகதியாம் என்பது கருத்து. (8)

**ஆனந்த மூன்றும் அறிவிரண் டொன்றுகும்**
**ஆனந்தஞ் சிவாய அறிவார் பலரில்லை**
**ஆனந்த மோடும் அறியவல் லார்கட்கு**
**ஆனந்தக் கூத்தாய் அகப்படுந் தானே.** 892

இம் - எனின், திருவைந்தெழுத்து அனுபவத்தில் ஆனந்த நடனம் இதுவாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : ஆனந்தம் மூன்றெழுத்துக்களும், அவற்றுள் ஞானவடிவானது இரண்டும் ஒன்றும் ஆகும். ஆனந்தம் மூன்று எவையெனின் சிவாய என்பதாம். இதனை அறிவார் பலரில்லை. இதனை அசபைத் தியானத்தால் ஆனந்தத்தோடும் அறிய வல்லவர்களுக்கு, ஆனந்தம் கூத்தாகத் தரிசிக்கப்படும் என்றவாறு.

ஆனந்தம் மூன்று சி, வ, ய என்பன. அறிவில் முற்றும் இயல்பாகவே உணர்ந்த ஞானமும், உணர்த்திய அளவில் உணரும் ஞானமும் என இருவகை, முற்றுமுணர்ந்த ஞானவடிவு சிகார வகாரங்களாகிய இரண்டும். இவற்றையே அறிவு இரண்டு என்றது. உணர்த்த உணரும் சிற்றறிவையே அறிவு ஒன்று என்றது. (9)

**படுவ திரண்டும் பலகலை வல்லார்**
**படுவ தோங்கார பஞ்சாக் கரங்கள்**
**படுவது சங்காரத் தாண்டவப் பத்தி**
**படுவது கோணம் பரந்திடும் வாறே.** 893

இம் – எனின், அசபை இதுவென்பதும், அதனை இருத்தவேண்டிய இடமும், பிறவும் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: பல கலைகளைத் தரிசித்து வல்லராகிய அநுபவஞானிகளாற் சொல்லப்படுவன ஹம் சம் என்னும் மந்திரங்கள் இரண்டுமாம். அங்ஙனமே அசபாத் தியானத்தால் விளைவன பிரணவமும், பஞ்சாக்கராதிகளுமாம். சங்கார தாண்டவமுறையில் உச்சரிக்கப்படுவதாம். இது மூலத்தில் அடங்கிநின்று பரவுவதாம் என்றவாறு.

ஹம் என்பது உயிரையும், ஸ என்பது சிவத்தையும் உணர்த்துவன. உயிர் இறையொளியில் அடங்கி இருக்குமானல் இறைவனுடைய பிரணவ பஞ்சாக்கர வடிவுகள் அநுபவ சித்தியாம். அது மூலாதாரம் முதல் சங்கார தாண்டவ முறையில் தியானிக்கப்படுவதாயின் வியாபகத்தன்மை சித்திக்கும் என்பதாம்.

சங்காரதாண்டவமுறை ஞானநடன அமைப்பு. சிவாயநம என்ற முறை, ஹம்ச: என்று உயிரைச் சிவத்துடன் ஒன்றச்செய்வதும் சங்காரகிரமமாம். (*10*)

**வாறே சதாசிவ மாறிலா ஆகமம்**
**வாறே சிவகதி வண்டுறை புன்னையும்**
**வாறே திருக்கூத்து ஆகம வசனங்கள்**
**வாறே பொதுவாகு மன்றின் அமலமே.** 894

இ-ம் – எனின், அசபையை இவ்வாறு அறிந்து அனுபவித்தலே ஆகமமும், வேதமும், சிவகதியுமாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள : இவ்வாறே அருளுவது சதாசிவமூர்த்தியால் அருளிச்செய்யப்பட்ட ஒன்றோடொன்று முரணாத ஆகமங்கள். இவ்வாறே வினைவது, சிவகதியாகிய வளவிய துறையாம், இதனால் ஆன்மபோதமாகிய இழிதகைமை கழலும். ஆகம வசனங்களாகிய பிரமாணங்களால் அறுதியிடப்படும் திருக்கூத்து இவ்வண்ணமாம். இதுவே பொதுவாகிய சிற்சபையில் விளங்கும நின்மலசிவமாம் என்றவாறு.

வாறு - தன்மை. சதாசிவம் மாறிலா ஆகமம் வாறே எனக்கூட்டுக. மாறிலா ஆகமம் - அதிகாரி பேதத்தானும் சொல்முறை மாறினும் முடிவுமாறாத ஆகமங்கள். வேதத்தோடு முரணாத ஆகமங்கள் எனினுமாம்.

வண்துறை சிவகதி வாறே - வளவிய துறையாகிய சிவகதியும் இவ்வண்ணமேயாம். புல் - இழிதகைமை; புன்மை; டையும் - நீங்கும்; லெிகுன்றும். அமலம் - நின்மல சொருப சிவம். **(11)**

**அமலம் பதிபசு பாசங்கள் ஆகமம்**
**அமலந் திரோதாயி யாதுமா னந்தமாம்**
**அமலஞ்சொல் ஆணவ மாயை காமியம்**
**அமலந் திருக்கூத்தங் காடு மிடந்தானே. 895.**

இ-ம் - எனின், திருக்கூத்து நிகழுகின்ற இடத்தில் எல்லாம் அமலமாம் என்றல் நுதலிற்று.

இ - ள் ; பதி பசு பாசங்கள் ஆகமம் எல்லாம் சுத்தமாம், திரோதாயியாக நிற்தும் சத்தியும் ஆனந்தம் விளைக்தும் சுத்தமாம். மலக்கூட்டத்துள் வைத்துச் சொல்லப்படுகின்ற ஆணவம் மாயை கன்மம் ஆகிய எல்லாம் சுத்தமாம். திருக்கூத்து ஆடுகின்ற இடமும் சுத்தமாம் என்றவாறு.

பசு, மலகன்மங்களோடு கூடிய பெத்தநிலையில் மலசகிதமாய்ப் பின்பு பதியைச்சார்ந்து பதிபோதம் மேவரப்பெற்று இரதகுளிகையைச் சார்ந்த செம்பு போல மலக்களிம்பு நீங்கப்பெறுதலின் அமலமாம். பாசம் சடமாய் வன்மை குன்றியும் கெட்டும் ஒழிதலின் அமலமாம். பதி அமலமாதல் யாங்ஙனம் எனின் இயற்கையாகவே அமலமாம் என்க.

திரோதாயியாகும் ஆனந்தம் அமலமாம் என்றது நோய் தோன்றாதிருக்க உண்ணும் மயக்க மருந்துபோல ஆன்ம அறிவை மறைத்து நிற்கின்ற திரோதசத்தி ஆன்மாவிற்கு ஆனந்தத்தை விளைக்கும் ; அது திரோத மலத்தால் அளிக்கப்படுதலின் மலம் ஆனந்தமேயாம். அதுவும் திருக்கூத்துத் தரிசிக்கப் பெறின் அமலமாம் என்றவாறு.

' ஒன்றதாய் அநேகசத்தி உள்ளதாய் ' (சித்தியார்) நிற்கும் எனச் சொல்லப்படுகின்ற ஆணவம் ' சொல்லாணவம் ' எனப்பட்டது. அதுவும் மாயை காமியங்களும், வன்மை கெட்டும் அழிந்தும் போமாதலின் அமலமாம் என்றருளினர்.

திருக்கூத்து ஆடுதல் - அசபாமந்திர செபத்தால் அசைந்து ஆடுதல். அசபாநடனம் புரியுமிடத்தில் எல்லாம் அமலமாம் என்பது கருத்து. (12)

**தானே தனக்குத் தலைவனு மாய்நிற்கும்**
**தானே தனக்குத் தனமலை யாய்நிற்கும்**
**தானே தனக்குத் தன்மய மாய்நிற்கும்**
**தானே தனக்குத் தலைவனு மாமே.** 896

இ-ம் - எனின், இத்திருக்கூத்தே சிவமாய், சத்தியுமாய், எல்லாமாய் நிற்கும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : திருக்கூத்துத் தானே தனக்குத் தலைவியாயும் தனமலையாயும், தன்மயமாயும் தலைவனுயும் நிற்கும் என்றவாறு.

தலைவியாய் நிற்றல் - சத்தியாய்க் காத்தல். தனமலையாய் நிற்றல் - போகத்திற் கின்றியமையாத செல்வமலையாகத் திகழ்தல். தன்மயமாய் நிற்றல் - சிவமேயாக ஆனந்த சொரூபமாதல். தலைவனுக நிற்றல் – பதியாய், பசுக்கள் செய்யும் புண்ணிய பாவங்களைக் காண்பவனுய் நிற்றல். இம்மந்திரமும் அசபையாகிற நடனப் பயன் உணர்த்தியது. (13)

**தலைவனு மாய்நின்ற தற்பரக் கூத்தனைத்**
**தலைவனு மாய்நின்ற சற்பாத் திரத்தைத்**
**தலைவனு மாய்நின்ற தாதவிழ் ஞானத்**
**தலைவனு மாய்நின்ற தாளிணை தானே.** 897

இ-ம் - எனின், திருவடியே தலைமைபூண்டு நின்றது என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : தலைவனுய் நின்ற சிவபரம்பொருளாகிய நித்ய வஸ்துவின் தாளிணைகளே எமக்குத் தலைவனுக நின்றன என்றவாறு.

கூத்தனை, சற்பாத்திரத்தை, தலைவனுமாய் நின்ற தாதவிழ் ஞானத்தாளிணை (எமக்குத்) தலைவனுமாய் நின்ற எனக்கூட்டுக. தலைவனுமாய் நின்ற என்னும் முதல் மூன்றடிக்கண்ணுள்ள எச்சங்கள் தாளிணைக்கு விசேடணமாய் நின்றன.

தற்பரக்கூத்தனைத் தலைவனுமாய் நின்ற: தானே மேலானபொருள் எவற்றிற்கும் மேலாக நிற்கின்ற ஆனந்தக்கூத்தப் பெருமானைத் தமக்கு முதலாகக் கொண்டுநின்ற தாள் என்க.

சற்பாத்திரம்; என்றுமுள்ள ஆதாரப் பொருளான இறைவனே எல்லாவற்றையும் எல்லோரையும் தாங்கு பவனாக இருத்தலின் அருளியது.

தலைவனுமாய் நின்ற தாதவிழ் ஞானத்தாளிணை: தமக்குத் தலைவன் தாமாகநின்ற நாதமாக விரிந்த பர ஞானத்தைப் பயப்பிக்கின்ற திருவருளாகிய திருவடி இரண்டும், எமக்குத் தலைவனுமாய் நின்ற என்க. வேறு பொருள் கொள்ளின் இரண்டாம் வேற்றுமை யுருபுகட்கு இசையபின்மை யுணர்க. (14)

இணையார் திருவடி எட்டெழுத் தாகும்
இணையார் கழலிணை யீரைஞ்ச தாகும்
இணையார் கழலிணை ஐம்பத்தொன் றாகும்
இணையார் கழலிணை ஏழா யிரமே. 898

இம் – எனின், திருவடியே எல்லா மந்திரங்களுமாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: இரண்டான திருவடிகளே எட்டெழுத் தாகிய அகாரமாகும்: இரண்டு என்னும் எண்ணின்

வடிவாகிய உகாரமாகும்; திருவைந்தெழுத்தாகும்; ஐம்பத்தோ ரக்கரங்களாகும்; சப்தகோடி மகாமந்திரங் களாகும் என்றவாறு.

எட்டென்றது எட்டென்னும் எண்ணின் வடி வாகிய அகாரத்தை. அகாரம் சிவம். ஈரைஞ்சதாகும் என்பதனை ஈர் ஆதும். ஐஞ்சதாகும் எனப் பிரித்துக் கூட்டுக. ஈரைஞ்சு என்பதனை ஒன்ருகவே கொண்டு சூக்கும பஞ்சாக்கரமும், தூல பஞ்சாக்கரமும் என் பாரும் உளர். ஐம்பத்தொன்று - அகாராதி க்ஷகாராந்த மான ஐம்பத்தோ ரக்கரங்கள். இம்மந்திரம் இறைவ னுடைய மந்திரசொரூபம் உணர்த்திற்று. ஏழாயிரம் என்றது கோடி என்பதுபோலப் பன்மை யுணர்த்திய அவ்வளவே. **(15)**

**ஏழா யிரமாய் இருபதாய் முப்பதாய்**
**ஏழா யிரத்தும் எழுகோடி தானுகி**
**ஏழா யிரத்துயிர் எண்ணிலா மந்திரம்**
**ஏழா யிரண்டாய் இருக்கின்ற வாறே.** 899

இம் - எனின், மந்திரங்கள் விரிந்து கிடக்கும் முறையும், அத்துணையும் சப்தகோடி மகாமந்திரங்க ளுள்ளும் அம்சமந்திரத்திலும் அடங்கும் என்பதும் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: வெளிப்படை,

இருபதாய் முப்பதாய் என்றது ஐம்பதக்கரங் களாய், அகரம் சிவமாதலின் அதனை நீக்கிக் கூறியது. ஏழாயிரத்தும் எழுகோடி தானுகி - பலவாக இருப் பினும் ஏழு இறுதியுள் அடங்குவதாகி, ஏழுகோடிகள்

அவை நம:, ஸ்வதா, ஸ்வாஹா, வஷட், வௌஷட் ஹூம், ஹூம்பட் என்ற இறுதிகளால் முடிவன

ஏழாயிரத்து உயிர் எண்ணிலா மந்திரம் - இந்த ஏழாயிரத்தும் கணக்கற்ற ஜீவனுயுள்ள மந்திரம். மந்திரங்களில் ஜீவாக்கரம், நேத்திரம், பீசாக்கரம் என்பன உள்வாதலின் ஈண்டு ஜீவனை உணர்த்தியவாறும்.

ஏழாய் - சப்தகோடி மகாமந்திரங்களாய், இரண்டாய் - சோ ஹம் என்ற இரண்டு மந்திரங்களாய். (16)

**இருக்கின்ற மந்திரம் ஏழா யிரமாம்**
**இருக்கின்ற மந்திரம் இத்திறம் இல்லை**
**இருக்கின்ற மந்திரம் சிவன்திரு மேனி**
**இருக்கின்ற மந்திரம் இவ்வண்ணந் தானே** 900

இம் - எனின், மந்திரப் பிரபஞ்சத்திலுள்ள மந்திரங்கள் இத்துணைய எனறும், அவை பெருமானுக்குத் திருமேனியாம் என்றும் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: ஏழாயிரமா யிருக்கின்ற இம்மந்திரங்களைக் காட்டிலும் வேறுயிருக்கின்ற மந்திரங்கள் சிறந்தன இல்லை. இருக்கின்ற மந்திரங்களனைத்தும் சிவபெருமானுடைய திருமேனியேயாம். மந்திரங்கள் அனைத்தும் இவ்வெழுத்துக்களே என்றவாறு.

வண்ணம் - வர்ணம்; எழுத்து. இவ்வண்ணம் என்று சுட்டியது. ஹம் ஸம் என்ற அசபையை. மந்திரமே இறைவனுக்குத் திருமேனியென்பதை,

" சுத்தமாம் விந்துத் தன்னில் தோன்றிய வாத லானும்
சத்திதான் பிரேரித் துப்பின் தானதிட் டித்துக் கொண்டே
அத்தினுற் புத்தி முத்தி யளித்தலால் அரனுக் கென்றே
வைத்தவாம் மந்திரங்கள் வடிவென மறைக ளெல்லாம் "

எனவரும் சித்தித்திரு விருத்தால் உணர்க. (17)

தானே தனக்குத் தகுநட்டந் தானுகுந்
தானே அகார உகாரம தாய்நிற்குந்
தானே ரீங்காரத் தத்துவக் கூத்துக்குத்
தானே உலகில் தனிநடந் தானே. 901

இம் – எனின், இறையே மந்திர சொரூபமாக நின்று ஐந்தொழில் நடனமாற்றும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் பிரேரிபபாரின்றித் தானே தனக்குத் தக்க நடனத்தை மேற்கொள்ளும்; பின் தன்னிற் பிரிந்து சத்தியும் தானுமாய் நிற்கும்; பின்பு மாயையை முதற் காரணமாகக் கொண்டு இயற்றப்படும் பஞ்ச கிருத்திய தாண்டவத்திற்கு உலகிலும் ஒப்பற்ற நடனத்தை மேற்கொள்ளும் என்றவாறு.

தானே என்பன. பிரேரிப்பார் பிறரில்லாமையை உணர்த்திற்று. தகுநட்டம் தானே தானுகும் என்றது சர்வசங்காரகாலத்துப் பிரபஞ்சமனைத்தையும், அதன் மூலகாரணமான மாயையையும் தன்னுளடக்கி நின்று ஆடும் பேரூழிக்கூத்தைக் குறித்தது,

அகார உகாரமதாய் நிற்கும் என்றது, புனருற் பவத்தைத் திருவுள்ளத்தில் எண்ணியபோது, தன்னி லிருந்து சத்தியைத் தோற்றுவித்து, தானும் சத்தியுமாய் நின்றமையை உணர்த்துவது.

ரீம் என்றது மாயாபீஜம். ரீங்காரத் தத்துவக் கூத்து – மாயாமலத்தைக் கொண்டு உலகைப்படைத்து அளித்து அழிக்கும் பஞ்சகிருத்திய நடனம். தத்துவக் கூத்து - பிரபஞ்ச நடனம், (18)

**நடமிரண் டொன்றே நளினம தாகும்**
**நடமிரண் டொன்றே நமன்செய்யுங் கூத்து**
**நடமிரண் டொன்றே நகைசெயும் மந்திரம்**
**நடஞ்சிவ லிங்க நலஞ்செம்பு பொன்னே.** 902

இம் - எனின், நடன வகைகளும் அவற்றின் பயனும் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : இறைவன் இயற்றும் நடனவகைகளுள் அற்புதமும் ஆனந்தமுமாகிய இரண்டு நடனங்களே இன்பம் தருவனவாகும். அவற்றுள்ளும் ஆனந்த நடனமே பேரின்பம் தருவதாகும். பிரளயம், சங்காரம் என்னும் இரண்டு நடனங்களுள், சங்காரமே நமன் செய்யும் கூத்து. பொது, அனவரதம் என்னும் இருவகை நடனங்களுள், அனவரத தாண்டவம் ஆன்மாக்களுக்கு விளக்கத்தைச் செய்யும் மந்திரமாகும். நடனம் சிவலிங்கமாகும், அதனுல் விஊயும் நன்மை செம்பு பொன்னுவதாம் என்றவாறு,

இறைவன் செய்யும் நடனங்கள் பலவற்றை அருள்நடனம், அழிவுநடனம், சந்தர்ப்பநடனம் என மூன்ருகப் பிரித்து, அவையெல்லாம் சிவபெருமானுடைய அருவுருவத் திருமேனி என்று அறிவித்து, அதனுல் ஆம் பயன் ஆன்மாக்கள் அநாதியே பற்றியுள்ள ஆணவ மலத்தினின்றும் நீங்கிச் சிவஞானம் பெற்று, திருவருளில் தோய்ந்து, சிவனடியிற் சார்தலே யாகும் என்று உணர்த்துவது இம்மந்திரம்,

நளினம் – இன்பம். இறைவன் அருளில் ஆயிரத்தில் ஒருகூறு அமைய நமன் சங்காரத்தைச் செய்வானாயினும், அதனை நமன் செய்யும் கூத்தென்றது, 'சிற்பி செய்த கோயில்' என்புழிப் போன்றதொரு வழக்கு. செம்பு அநாதியே களிம்போடு கூடியிருத்தல் போல, ஆன்மாக்களும் அநாதியே ஆணவமலத்தோடு கூடியிருப்பன. செம்பு இரதகுளிகையினால், களிம்பற்றுப் பொன்னாவதுபோல ஆன்மாக்களும், ஞானாசாரியருடைய நோக்கால் – பரிசத்தால் – உபதேசத்தால் மலநீக்கம் பெற்று, ஞான ஒளிபெற்றுத் திகழும் என்பதனைச் 'செம்பு பொன்னே' என அறிவித்தவாறு. (19)

**செம்புபொன் னாகுஞ் சிவாயநம வென்னிற்**
**செம்புபொன் னாகத் திரண்டது சிற்பரஞ்**
**செம்புபொன் னாகும் ஸ்ரீயுங் கிரீயுமெனச்**
**செம்பொன் னான திருவம் பலமே.** 903

இம் - எனின், அவ்வண்ணம் பொன்னாகத் திருவைந்தெழுத்து பயன்படும் என்பதும், அதன் மேல் விளைவுகளும உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : 'சிவாயநம' எனத் திருவைந்தெழுத்தை ஓதினால் செம்பு பொன்னாகும்; அவ்வண்ணம் செம்பு பொன்னாகத்திரண்டு ஒன்றானதே சிற்பரமாம். அங்ஙனமே ஸ்ரீம். கிரீம் என்று சொல்லச் செம்பு பொன்னாகும், செம்பு பொன்னான நிலையே திருவம்பலமாம் என்றவாறு.

ஆணவமலம் நீங்கிச் சிவஞானம் பெற்று, அதிலே திளைத்து முற்றிய நிலையே சிற்பரம் என்பது. ஸ்ரீம், கிரீம் என்ற சத்திபேதங்களைச் செபித்தாலும் ஆணவம்

ஒடுங்கும்; ஆன்மா அறிவொளி பெறும். அதுவே திருவம்பலமாம். (20)

**திருவம் பலமாகச் சீர்ச்சக் கரத்தைத்**
**திருவம் பலமாக வீராறு கீறித்**
**திருவம் பலமாக விருபத்தைஞ் சாக்கித்**
**திருவம் பலமாகச் செபிக்கின்ற வாறே.** 904

இ-ம் - எனின், திருவம்பலச்சக்கரம் அமைக்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : திருவம்பலமாக விளங்கும் சிறப்புப் பொருந்திய சக்கரத்தைத் திருவும். அழகம், வன்மையும் மேன்மேலும் பெருக. நெடுக்கும் குறுக்கமாக ஆறு கோடுகளைக்கீறி, மாறுபட்ட வம்பு அல்லேமாக இருப்ப தைந்து அறைகளாக்கி, திருவைந்தெழுத்தைச் செபிக்க என்றவாறு.

இரண்டாமடிக்கண் திரு அம பலம் எனவும், மூன்றுமடிக்கண் திருவு வம்பு அலமாக எனவும், பிரித்துப் பொருளகொள்க. நான்காமடிக்கண் திருவம்பலம் என்ப தற்கூற்றுச் சிவம் விளங்கும் இடம் எனப் பொருள் கொண்டு. திருவைந்தெழுத்து எனப் பொருள் காண்க. (21)

**வாறே சிவாய நமச்சி வாயநம**
**வாறே செபிக்கில் வரும்பேர் பிறப்பில்லை**
**வாறே யருளால் வளர்கூத்துக் காணலாம்**
**வாறே செபிக்கல் வரும்செம்பு பொன்னே.** 905

இ-ம் - எனின், செபிக்கின்றமுறை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : செபிக்கும்முறை யாதோ எனின், 'சிவாய நம சிவாயநம, என்று செபித்தால் இனி வரக்கடவதாகிய பெரிய பிறப்பு இல்லையாம்; அவ்வாறு செபிக்கின் இறைவன அருளால், பேன்மேலும் ஆனந்த அனுபவ வளர்ச்சியை அளிப்பதாகிய கூத்தைத் தெரிசிக்கலாம. அதனுல் ஆன்மா ஆணவ மலத்தினின்று நீங்கி அறிவொளிபெற்றுத் திகழும் எனறவாறு.

| | | | | |
|---|---|---|---|---|
| சி | வ | ய | ந | ம |
| வ | சி | ய | ந | ம |
| ய | வ | சி | ந | ம |
| ந | ய | வ | சி | ம |
| ம | ந | ய | வ | சி |

சிவாயநம, சிவாயநம எனச்செபிக்க என்கிறது இம்மந்திரம். பேர் பிறப்பு - பெயர்ந்து மாறிவருகின்ற பிறப்பு எனலும் ஆம். வளர் கூத்து - ஆனந்த அனுபவத்தை வளர்க்கும் கூத்து; என்றது ஆனந்தக்கூத்தை. சித்சபையாகிய புருவநடுவுள், ஆனந்த தாண்டவத்தைத் தெரிசிக்கலாம் என்பது கருத்து. *(22)*

**பொன்னுன மந்திரம் புகலவு மொண்ணுது**
**பொன்னுன மந்திரம் பொறிகிஞ்சு கத்தாகும்**
**பொன்னுன மந்திரம் புகையுண்டு பூரிக்கிற்**
**பொன்னுகும் வல்லார்க் குடம்புபொற் பாதமே. 906**

இம் - எனின், மந்திரத்தைச் செபிக்கும் முறை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: பொன்போல் பொதிந்து வைத்துக் கொள்ளக் கூடிய இம்மந்திரத்தை வாயால் சொல்லக் கூடாது. உதட்டளவில் அமைதல் ஓரளவு பொருந் துவதாம். அதனைப் பிராணனோடு பூரகம் செய்தால் உடம்பு பொன்னாகும்; அதன்மேலும் கும்பிக்க வல் லார்க்குத் திருவடிப்பேறு சித்திக்கும் என்றவாறு.

பொன்னான மந்திரம் - திருவைந்தெழுத்து. புகல வும் ஒண்ணாது – சொல்லக்கூடாது. சொல்லுதல் இரு வகை; தன் காது கேட்க ஒலித்தலும், பிறர் காது கேட்க ஒலித்தலும் என. இவை இரண்டும் மந்திர செபத்துக்கு ஆகாதன. உதட்டளவில் சொல்லுதலும் அத்துணைச் சிறப்பின்றென்பார், கிஞ்சுகத்து ஆகும் என்றார். கிஞ்சுகம் - முள்முருக்கமலர். ஈண்டுப் பண் பாகுபெயராய் உதட்டை உணர்த்திற்று.

புகை - வாயு; ஈண்டுப் பிராணனை உணர்த்திற்று. திருவைந்தெழுத்தையே பிராணவாயுவாகக் கொண்டு பூரித்தால் என்பது கருத்து. வல்லார்க்கு - பூரகத்தின் மேலும் கும்பகம் செய்ய வல்லார்க்கு. *(23)*

**பொற்பாதங் காணலாம் புத்திர ருண்டாகும்**
**பொற்பாதத் தாணையே செம்புபொன் னாயிடும்**
**பொற்பாதங் காணத் திருமேனி யாயிடும்**
**பொற்பாத நன்னடஞ் சிந்தனை சொல்லுமே.** 907

இம் – எனின், திருவைந்தெழுத்தின் இருமைப் பயன்களையும் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: திருவடி தரிசனம் செய்யலாம்; புத்திரப் பேறு உண்டாம். திருவடிமேல் ஆணை; ஆணவமலம் நீங்கப்பெற்று, ஆன்மா அறிவொளியைப்பெறும்.

திருவடியையே என்றும் தெரிசித்திருக்கச் சிவசாரூபம் எய்தலாம். ஆதலால், பஞ்சாக்கர நடனத்தின் தியானத்தைச் சொல்லுங்கள் என்றவாறு.

அசபையாக, திருவைந்தெழுத்தினைத் தியானிப்பார்க்குத் திருவருட்பேறும், ஞானசந்ததியும், ஆணவமலநீக்கமும், சிவசாரூபமும் முறையே விளையுமாதலின் சீபஞ்சாக்கரநடனத்தை உபதேசிக்க என்று ஆணையருளியவாறு. சொல்லும் - உபதேசியுங்கள். ஞானிகளுக்கு ஔரசபுத்திரர்கள் இல்லையாதலின், புத்திரர் என்றது ஞானபுத்திரர்களாகிய பரிபாகமுற்ற சீடர்களை என அறிக. (24)

**சொல்லு மொருகூட்டிற் புக்குச் சுகிக்கலாம்**
**நல்ல மடவார் நயந்துட னேவருஞ்**
**சொல்லினும் பாசச் சுடர்ப்பாம்பு நீங்கிடுஞ்**
**சொல்லுந் திருக்கூத்தின் சூக்குமந் தானே.** 908

இம் - எனின், இதுவும் அசபையின் பயன் அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : சொல்லப்படுகின்ற ஓருடலிலே புகுந்து இன்புறலாம்; நல்ல பெண்கள் விரும்பி உடன் வருவார்; ஆசா பாசங்களாகிற பாம்புகள், இவர்கள் சொன்னாலே நீங்கிப்போகும்; இதுவே திருக்கூத்தின் இரகசியமாம் என்றவாறு.

ஒருகூடு என்றது ஆன்மாவுக்குரிய ஐவகைக் கோசங்களுள், ஒருகோசத்திலிருந்தே எல்லா இன்பங்களையும் நுகரலாம் என்பது. மடவார் - உலகியலையொட்டிப் பெண்கள் எனக் கொளளப்படுமாயினும், சிறப்பாகத் திருவருளை உணர்த்தி, அது உடனே சித்திக்கும் என்க.

ஆசாபாசங்கள் பாம்புபோலத் தீண்டி வருத்துவன ஆகலின், அசபா மந்திரசக்தி உடையார் சொன்னுலும் போதும் அவை நீங்குமென றது. அசபாமந்திர முடைய வர்கட்கு மனம் ஒடுஙகப், பற்றுக்கள் கழலுமென்பதை விளக்கிற்று. சூக்குமம – இரகசியம். (25)

**சூக்கும மெண்ணு யிரஞ்செபித் தாலுமேற்**
**சூக்கும மான வழியிடைக் காணலாஞ்**
**சூக்கும மான வினையைக் கெடுக்கலாஞ்**
**சூக்கும மான சிவனதா னந்தமே. 909**

இம் - எனின், இத்தனை உரு செபிக்க என வரையறுத்தல் நுதலிற்று.

இ - ள் : மானசீகமாக எண்ணுயிரம் உரு செபித் தால், சூக்குமமான பிரமரந்திரத்தைத் தெரிசிக்கலாம். நுகரக்கூடிய அளவு பரிபாகப்பட்டு பருவினையாகாமல். உயிரை ஒட்டிநிற்கும் சூக்கும கன்மங்களையும் கெடுக் கலாம்; சிவானந்தய வினையும் என்றவாறு.

சூக்குமம் – மனத்தாலேயே மந்திரங்களை எண்ணு கின்ற நுண்ணியநிலை; சூக்குமமான வழி - சகஸ்ரா ரத்தில் ஒளிப்பிழம்பு வெளிப்படும் துளை. சூக்கும மான வினை – மூலகன்மம், நுகர்ச்சிக்கு வந்த பருவினை யைக்கெடுக்க முடியாமையின, செபத்தாற்கெடுவன ஆகாமிய சஞ்சிதங்களாகிற சூக்கும கன்மமே ஆதலின் இங்ஙனம் கூறினர். (26)

**ஆனந்த மொன்றென் றறைந்திட வானந்தம்**
**ஆனந்தம் ஆ-ஈ-ஊ-ஏ ஓமொன் றைந்திடம்**
**ஆனந்த மானந்தம் மஞ்சும தாயிடும்**
**ஆனந்தம்-அம்-ஹ்ரீம்-அம்-க்ஷம்-ஆம் ஆகுமே. 910**

இம் – எனின், ஆனந்தம் பிறக்கும் இடங்களை அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : ஆனந்தம் ஒன்றேயாம் ; அதற்கு இட மாவன ஆ, ஈ, ஊ, ஏ, ஓ, என்ற ஐந்துமாம. அம், ஹ்ரீம், ஹ்ரா, க்ஷம், ஹ்ராம் என்னும் ஐந்துமே ஆனந் தத்துள் சிறந்த ஆனந்தமாம் என்றவாறு.

சீபஞ்சாக்கரத்துள் உயிரெழுத்து மாத்திரையாக; உணர்த்திய பீஜம் முற்கூறிய ஐந்தும். அவற்றுள் ஆ சிவத்தையும், ஈ சததியையும், ஊ ஆன்மாவையும், ஏ திரோதானத்தையும், ஓ மலத்தையும் உணர்த்துவன. அவ்வைந்திற்கும் பீஜமந்திரங்கள் அம், ஹ்ரீம் முதலிய ஐந்துமாம். (27)

**மேனி யிரண்டும் விளங்காமல் மேற்கொள்ள**
**மேனி யிரண்டு மிக்கார விகாரியா**
**மேனி யிரண்டும்-ஊ-ஆ-ஈ-ஏ-ஓ-என்னும்**
**மேனி யிரண்டும்-ஈ-ஓ-ஊ-ஆ-ஏ-கூத்துவே.** 911

இம் - எனின், ஹம்ஸ என்னும் அசபையை எண்ணுவதால் ஆம் பயன் கூறுதல் நுதலிற்று.

இ - ள் : உயிருக்கும் இறைக்கும் மேனியாக உள்ள ஹம் ஸ: என்னும் மந்திரங்களை ஸோஹம் ஸோஹம் என எது முந்தியது எது பிந்தியது என்று விளங்காதபடி செபிக்க, இரண்டும் தம்முள் சிறந்து பொருந்த விகாரம் எய்தும். அம்மேனி இரண்டும் ஊ, ஆ, ஈ, ஏ, ஓ என்னும் திருவைந்தெழுத்தின் பீசங் களாம் : அவையே ஈ, ஓ, ஊ, ஆ, ஏ என மேனியாகித் திருக்கூத்தாம் என்றவாறு.

உயிர்மேனி ஹம், இறைமேனி ஸ: மேனி என்றது மந்திரவடிவை. விளங்காமல் மேற்கொள்ளலாவது ஸோஹம் ஸோஹம் என விரைந்து எண்ண பசு போதங்கெட்டுப் பதிபோதம் மிக்குப் பொருந்துவதால் சீவத்துவம் நீங்கச் சிவத்துவம் பெறுதலாகிய விகாரி யாதலாம். (28)

**கூத்தே சிவாய நமசி வாயிடுங்**
**கூத்தே ஈ-ஊ-ஆ-ஏ-ஓம்-சிவாயநம வாயிடுங்**
**கூத்தே ஈ-ஊ-ஆ-ஏ-ஓம்-சிவாயநம வாயிடுங்**
**கூத்தே இ-ஊ-ஆ-ஏ-ஓம் நமசிவாய கோளொன்று**
**மாறே. 912**

இம் - எனின், பீஜாக்கரங்களை மாறியிட்டுத் திருவைந்தெழுத்தை ஓதின் மனோலயம் உண்டாம் என்றல் நுதலிற்று.

இ - ள்: திருக்கூத்து சிவாயநம சிவாய ஆய். அவை பீஜாக்கரங்களோடு கூடின் ஈ, ஊ, ஆ, ஏ, ஓம். சிவாயநம ஆம், அதனையே ஒன்றுகொண்டு மாறுக என்றவாறு.

ஒன்று கோள்மாறு - ஒன்றைக்கொண்டு மாறுக, அங்ஙனம் மாறும்பொழுது நூற்றிருபத்தைந்து மாறலாகும். (29)

**ஒன்றிரண் டாடவோ ரொன்று முடனுட**
**ஒன்றினின் மூன்றுட வோரேழு மொத்தாட**
**ஒன்றினு லாடவோ ரொன்பது முடனுட**
**மன்றினி லாடினுன் மாணிக்கக் கூத்தே. 913**

இம் - எனின், இறைவனே யாவும் யாவருமாக இருப்பதால், அவன் மாணிக்கக் கூத்தாட, அனைத்தும் ஆடுவன என்றல் நுதலிற்று.

இ - ள் : ஒன்ருகிய பிருதிவியும் இரண்டாகிய அப்புவும் ஆட, அங்ஙனம் ஒவ்வொரு பூதங்களும் ஆட, அங்கியாகிய ஒன்றில் மூன்றுருவாக அமைந்துள்ள சூரிய சந்திர அக்கினிகள் ஆட, ஏழுலகங்களும் ஒருசேர ஆட, சிவபரம்பொருளாகிய ஒன்றினல் நவந்தரு பேதங்களாகிய ஒன்பதும் ஆட இறைவன் மாணிக்கக்கூத்தினை மன்றினில் ஆடினுன் என்றவாறு.

இவ்வண்ணம் இப்பகுதியுள் ஆசிரியர் திருமூல தேவநாயனர், அசபை கூறப்புகுந்து, திருவைந்தெழுத்தும் திருவம்பலச்சக்கர மந்திரமும் கூறியது, அவை சூக்கும தூலங்களாய்த் தம்முள் இயைதலின் என்க. ஆகவே அசபைக்கும் பிரணவ பஞ்சாக்கரம், சூக்கும தூல பஞ்சாக்கரங்கள், திருவம்பலச் சக்கரத்துள்ள உயிர்ப் பஞ்சாக்கரங்கள். பீஜாக்கரங்கள் இவற்றுள் பேதமின்று என்று அறிக. (30)

## 2. திருவம்பலச்சக்கரம்

மந்திர அரசாகிய சீபஞ்சாக்கரத்திற்கு அமைந்த சக்கரங்கள பல. அவற்றுள் திருவம்பலச் சக்கரம் என்பது, சிதாகாயப் பெருவெளியில் ஆனந்தக் கூத்தாடும் அம்பலவாணப் பெருமான் அருட்சத்தியோடு மந்திரவடிவாய் நின்று நிலவும் யந்திரம். மந்த பக்குவிகளுக்கு உத்தாரக ஏதுவாய், தீவிர பக்குவிகட்கு அநுபவப்பொருளாய், தீவிரதரபக்குவிகட்கு ஆனந்தத் தானமாய் விளங்குவது யந்திரவடிவு. ஆகவே மாக்களாகிய மந்ததரத்தினர் நீங்க, ஏனைய மூவர்களுக்கும் அவரவர் விரும்பியவண்ணம். நற்பயன் அளித்துக் கடைத்தேற்றுவது திருவம்பல யந்திரம். ஆதலால்.

அசபைக்குப் பின்னர் மந்திரத் தலையாகிய இந்தத் திருவம்பலச் சக்கரம் அமைந்துள்ளது.

**இருந்தவிவ் வட்டங்க ளீராறி ரேகை**
**இருந்த விரேகைமே லீரா றிருத்தி**
**இருந்த மனைகளு மீராறு பத்தொன்**
**றிருந்த மனையொன்றி லெய்துவன் றானே. 914**

இம் - எனின், திருவம்பலச்சக்கரம அமைக்கும் முறை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இருந்த இச்சக்கரங்களாகிற வட்டங்கள் பன்னிரண்டு கோடுகளைக் குறுக்குமநெடுக்குமாக அமைத்து, நூற்றிருபத்தொரு மனைகளாக்க. அதன் நடுமனையில் சன் எய்துவன் என்றவாறு.

சீவன என்றது சிவாக்கரமாகிய சிகாரம் என்பதாம். ஈராறு ரேகை - பன்னிரண்டு கோடு. மனை - கட்டம். ஈராறு பத்தொன்று - பன்னிரண்டும் பதினொன்றும். அமைப்பைப் படததுட் காண்க. *(31)*

**தானொன்றி வாழிடந் தன்னெழுத் தேயாகுந்**
**தானொன்று மந்நான்குந் தன்பே ரெழுத்தாகுந்**
**தானொன்று நாற்கோணந் தன்னைந் தெழுத்தாகுந்**
**தானொன்றி லேயொன்று மவ்வரன் றானே. 915**

இம் - எனின், திருவைந்தெழுத்துள் இன்ன அக்கரம் இன்னாருக்கு உரித்து எனல் நுதலிற்று.

இ - ள் : சிவமாகிய தான் பொருந்தி வாழும் இடம் தனக்குரிய எழுத்தாகிய சிகாரமாகும். சிகாரமாகிய தான் ஒன்றுதற்க இடமாயிருக்கும் ஏனைய வயநம என்னும் நான்கெழுத்துக்களும். தன் பெரிய எழுத்துக்களாம். சிவம் பொருந்தியுள்ள முற்கூறிய

நாற்கோணம் திருவைந்தெழுத்தாகும்: எங்குமாயிருக்கின்ற பரசிவம் சக்கரத்துள ஒருமனையிலேயும ஒன்றி யிருக்கும் என்றவாறு.

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| சி | வ | ய | ந | ம | சி | வ | ய | ந | ம | சி |
| ம | ம | ம | ம | ம | ம் | ம | ம | ம | ம | வ் |
| ந் | ம | ந | ந | ந | ந் | ந | ந | ந | ம | ய் |
| ய் | ம | ந | ய | ய | ய் | ய | ய | ந | ம | ந் |
| வ் | ம | ந | ய | வ | வ் | வ | ய | ந | ம | ம் |
| சி | ம | ந | ய | வ | சி | வ | ய | ந | ம | சி |
| ம | ம | ந | ய | வ | வ் | வ | ய | ந | ம | வ் |
| ந் | ம | ந | ய | ய | ய் | ய | ய | ந | ம | ய் |
| ய் | ம | ந | ந | ந | ந் | ந | ந | ந | ம | ந் |
| வ் | ம | ம | ம | ம | ம் | ம | ம | ம | ம | ம் |
| சி | ம | ந | ய | வ | சி | ம | ந | ய | வ | சி |

சக்கரத்துள் சிவம் எங்குமாயும், ஓரிடத்தும் ஒன்றியிருப்பன் என அவருடைய எலலாமாய் எங்குமாய் இருக்கும தன்மையுணர்த்தியது இம்மந்திரம். ஒன்றிவாழிடம் - நடு. தன்னெழுத்து — சி. தானென்றும் அந்நான்கு - நடுவில் நிற்கும் தனக்கு நேரான நான்கு திசை. தன் பேரெழுத்து-சி. தானென்றும் நாற்கோணம்-கோணத்திசை நான்கு. தன் ஐந்து எழுத்து-சிவயநம (32)

**அரகர என்ன அரியதொன் றில்லை**
**அரகர என்ன அறிகிலர் மாந்தர்**
**அரகர என்ன அமரரும் ஆவர்**
**அரகர என்ன அறும்பிறப் பன்றே.** 916

இம் - எனின், அரகர என்பதன் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : வெளிப்படை

அர அர என்ன அமரராகலாம், முத்தியெய்தலாம் என்பது கருத்து. (33)

**எட்டு நிலையுள எங்கோன் இருப்பிடம்**
**எட்டினில் ஒன்றும் இருமூன்றும் ஈரேழும்**
**ஒட்டிய விந்துவும் நாதமும் ஓங்கிடப்**
**பட்டது மந்திரம் பான்மொழி பாலே.** 917

இதன் பொருள் விளங்கவில்லை. (34)

**மட்டவிழ் தாமரை மாதுநல் லாளுடன்**
**ஒட்டி இருந்த உபாயம் அறிகிலர்**
**விட்ட எழுத்தை விடாத எழுத்துடன்**
**கட்டவல் லாருயிர் காக்கவல் லாரே.** 918

இம் - எனின், அசபாமந்திரத்தைக் கட்டவல்லார் எய்தும் பயனுணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : தேன் விரியப்பெற்ற இதயத்தாமரைக் கண்ணே, உமாதேவியாரோடு இறைவன் எழுந்தருளி யிருப்பதன் காரணத்தை யாரும் அறியகில்லார். ரேசக எழுத்தோடு பூரக எழுத்தைக் கும்பிக்க வல்லார் உயிரைக்காக்க வல்லவராவர் என்றவாறு.

மட்டு அவிழ் தாமரை - இன்ப அன்பு பொருந்திய இதயத்தாமரை, அதன்கண் என ஏழாவது விரிக்க. மாது நல்லாள் - உமாதேவி. விட்ட எழுத்து - ரேசகத்துள் விட்ட எழுத்தாகிய ஹம் என்பது. விடாத எழுத்து - பூரகத்துள் விடாது உள்வாங்கும் எழுத்தாகிய ஸோ என்பது. இரண்டையும் கட்டுதலாவது கும்பித்தல் (35)

**ஆலய மாக அமர்ந்தபஞ் சாக்கரம்**
**ஆலய மாக அமர்ந்தவித் தூலம்பேர்**
**ஆலய மாக வருகின்ற சூக்குமம்**
**ஆலய மாக அமர்ந்திருந் தானே.** 919

இம் - எனின், தூல சூக்கும பஞ்சாக்கரங்களையே ஆலயமாகக் கொண்டவன் இறைவன் என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இறைவனுக்கு ஆலயமாக விளங்கும் சீபஞ்சாக்கரம் தூலம் சூக்குமம் என இருவகைப் படும். இறைவன் இவற்றை ஆலயமாகக்கொண்டு எழுந்தருளியிருந்தான் என்றவாறு.

ஆலயம் - பசுக்கள் லயமாதற்குரிய இடம். உறை விடம். தூலம் - நம்முதலாம் ஐந்தெழுத்து.

**नमश्शिवायेति स्थूलपञ्चाक्षर मितिस्मृतम् ।**
**नमश्शिवाय शिवायनमइत्येत त्स्थूलसूक्ष्मकम् ॥**

என்ற சித்தாந்த போதங்கொண்டும் தெளிக. (36)

**இருந்தவிவ் வட்ட மிருமூன்றி ரேகை**
**இருந்த வதனு ளிரேகை யைந்தாக**
**இருந்த வறைக ளிருபத்தைஞ் சாக**
**இருந்த வறையொன்றி லெய்து மகாரமே.** 920

இம் - எனின், 904 - ம் மந்திரம்போலச் சக்கர இயல்பு உரைத்தல் நுதலிற்று,

இ - ள் : வெளிப்படை,

எய்தும் அகாரமே என்றது அகார வாச்சியனுகிய சிவன் நடுவில் உறைவான் எனபதாம். (37)

**மகார நடுவே வளைந்திடுஞ் சத்தியை**
**ஒகாரம் வளைந்திட் டும்பிளந் தேற்றி**
**யகாரந் தலையா யிருகண் சிகாரமாய்**
**நகார வகாரநற் காலது நாடுமே.** 921

இம் - எனின், திருவம்பலச்சக்கரத்துள் கூத்தனை மந்திர புருஷாகாரமாகக் காணும் முறைமை கூறுதல் நுதலிற்று.




இ - ள் : மகாரத்தை நடுவே வளைத்துள்ள சத்திபீஜத்தை, ஒகாரம் வளைத்து, மகரத்தை உகாரத்தால் பிளந்து மேலேற்றி யகாரம் தலையாகவும், இரண்டுகண்களும் சிகாரங்களாகவும், நகார அகாரங்கள் இரு கால்களாவும் நாடுக என்றவாறு.

அ+உ+ம் = ஓம். நமசிவய என்ற தாரபஞ்சாக்கரம் இதில் இருத்தலைக் காணலாம.

तत्रोन्नमश्शिवायेतितारपञ्चाक्षरंभवेत्

என்பது சித்தாந்தபோதம். (38)

நாடும் பிரணவ நடுவிரு பக்கமும்
ஆடு மவர்வா யமர்ந்தங்கு நின்றது
நாடு நடுவுண் முகநம சிவாய
வாடுஞ் சிவாயநம புறவட்டத் தாயதே. 922

இம் - எனின், திருவம்பலத்துள் ஐந்தெழுத்தருள் மந்திரத்தை அமைக்கும் முறைகளுள் ஒருவகையைக் கூறுகின்றது.

இ - ள் : விரும்பப்படுகின்ற பிரணவத்தை நடுவாகக்கொண்டு இருபக்கமும் கூத்தனது எழுத்தாகிய சிகாரத்தையும், வா ய என்னும் எழுத்துக்களையும் பொருந்தியது அந்த நிலைபெற்ற மந்திரமாம். மேற் கூறியவண்ணம் நாட்டப்படுகிற நடுவுள் முகம் நமசிவாய என்பதும். புறவட்டத்துள் ஆடுகின்ற சிவாயநம என்பதும் ஆயது என்றவாறு. (39)

ஆயுஞ் சிவாய நமமசி வாயந
வாயு நமசிவா யயநம சிவாயந
வாயுமே வாய நமசியெனு மந்திர
மாயுஞ் சிகாரந் தொட்டந்தத் தடைவிலே. 923

இம் – எனின், சிகாரம் முதலாக சிகாரம் ஈறாக மாறும் முறை அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : ஆராயப்பெற்ற சிவாயநம, மசிவாயந, நமசிவாய, யநமசிவா வாயநமசி என்னும் மந்திரம் சிகாரந்தொட்டு சிகாரம் ஈறாக முறையாக வாயும் என்றவாறு

| | | | | |
|---|---|---|---|---|
| சி | வா | ய | ந | ம |
| ம | சி | வா | ய | ந |
| ந | ம | சி | வா | ய |
| ய | ந | ம | சி | வா |
| வா | ய | ந | ம | சி |

இப்படி இருபத்தைந்து அறையுள் அக்கரங்களை மாறி அமைக்க. (40)

அடைவினில் ஐம்பதும் ஐயைந் தறையின்
அடையும் அறையொன்றுக் கிரெழுத் தாக்கி
அடையு மகாரத்தில் அந்தமாம் க்ஷவ்வும் [924
அடைவின் எழுத்தைம் பத்தொன்றும் அமர்ந்ததே

அமர்ந்த அரகர வாம்புர வட்டம்
அமர்ந்த அரிகரி யாமத னுள்வட்டம்
அமர்ந்த அசபை யாமத னுள்வட்டம்
அமர்ந்தவி ரேகையும் ஆகின்ற சூலமே. 925

ஹ்ரீம் ஸ்ரீம் ஹ்ரீம் ஸ்ரீம் ஹ்ரீம் ஸ்ரீம் ஹ்ரீம் ஸ்ரீம் ஹ்ரீம் ஸ்ரீம் ஹ்ரீம்

ஹ்ரீம் ஸ்ரீம் ஹ்ரீம் ஸ்ரீம் ஹ்ரீம் ஸ்ரீம் ஹ்ரீம் ஸ்ரீம் ஹ்ரீம் ஸ்ரீம் ஹ்ரீம்

| | | | | |
|---|---|---|---|---|
| ந | ம | சி | வ | ய |
| ம | சி | வ | ய | ந |
| சி | வ | ய | ந | ம |
| வ | ய | ந | ம | சி |
| ய | ந | ம | சி | வ |

ஹ்ரீம் ஸ்ரீம் ஹ்ரீம் ஸ்ரீம் ஹ்ரீம் ஸ்ரீம் ஹ்ரீம் ஸ்ரீம் ஹ்ரீம் ஸ்ரீம் ஹ்ரீம்

ஹ்ரீம் ஸ்ரீம் ஹ்ரீம் ஸ்ரீம் ஹ்ரீம் ஸ்ரீம் ஹ்ரீம் ஸ்ரீம் ஹ்ரீம் ஸ்ரீம் ஹ்ரீம்

923 - 926 திருமந்திரங்களின் விளக்கம்

**சூலத் தலையினில் தோற்றிடுஞ் சத்தியுஞ்**
**சூலத் தலையினில் சூழும்ஓங் காரத்தால்**
**சூலத் திடைவெளி தோற்றிடும் அஞ்செழுத்**
**தாலப் பதிக்கும் அடைவது வாமே.** 926

இவை - எனின், ஐம்பத்தோரக்கரத்தையும் சக்கரத்துள் அடக்குமுறை உணர்த்துதல் நுதலின,

இ - ள் : அறைக்கு இவ்விரண்டெழுத்தாக அகாராதி க்ஷகாராந்தமான ஐம்பத்தோரெழுத்துக்களையும் அடக்குக. புறவட்டத்துள் ஹர ஹர என்றும், அதனை அடுத்த உள்வட்டத்தில் ஹரி ஹரி என்றும், அதனை அடுத்த உள்வட்டத்துள் ஹம் ஸம் என்றும் அறைகளமைக்க. உதவிய ரேகைகளில் சூலமும், அவற்றின் நுனியில் சத்தியெழுத்தாகிய ஹ்ரீம் என்பதும், சூலத்தைச்சுற்றி வளைத்து ஓ என்பதும், சூலங்களுக்கிடையில் திருவைந்தெழுத்தும் எழுதுக. இதுவே ஆலமுண்ட பதிக்கு அடைவாகிய இடமாம் என்றவாறு.

விளக்கத்தைப் படத்தில் காண்க. (41-43)

**அதுவாம் அகார இகார உகாரம்**
**அதுவாம் எகாரம் ஒகார மதஞ்சாம்**
**அதுவாகுஞ் சக்கர வட்டமேல் வட்டம்**
**பொதுவாம் இடைவெளி பொங்குநம் பேரே.** 927

இம் - எனின், முற்கூறிய ஐந்தெழுத்தும் ஐந்து உயிர்களாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : அப்பஞ்சாக்கரமே, அகார, இகார, உகார எகார ஒகாரமாகிய ஐந்தாம், இதனைச் சக்கரவட்டம்

அதன் மேல்வட்டங்களில் முறையாக இடுக. இதுவே நமது பேராம் என்றவாறு. (44)

**பேர்பெற் றதுமூல மந்திரம் பின்னது**
**சோர்வுற்ற சக்கர வட்டத்துட் சந்தியின்**
**நேர்பெற் றிருந்திட நின்றது சக்கரம்**
**ஏர்பெற் றிருந்த இயல்பிது வாமே.** 928

இம் – எனின், மூலமந்திரமும், அது அமைந்த சக்கரமும் இதுவே என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : இதுவே பேர்பெற்றதாகிய மூலமந்திர மாம். பின்பு அம்மந்திரம் அமைந்த சக்கரத்து வட்டத் துள்ளும், சந்திகளிலும் அமைந்ததே சக்கரமாம். இதுவே புகழ்பெற்றமைந்த வரலாறும் என்றவாறு.

சோர்வுற்ற – பொருந்திய. சோர்தல் – பொருந்துதல் அல்லது அமைதல். நேர் – முறை. (45)

**இயலுமிம் மந்திரம் எய்தும் வழியின்**
**செயலும் அறியத் தெளிவிக்கு நாதன்**
**புயலும் புனலும் பொருந்தங்கி மண்விண்**
**முயலும் எழுத்துக்கு முன்னு இருந்ததே** 929

இம் – எனின், ஐந்தெழுத்துக்கு முன்னர் பஞ்சபூத பீசங்களும் இயையுமுறை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : ஐந்தெழுத்த மந்திரம், பயன் தருவழியின் கிரியைகளையும் குருநாதன் தெரிவிப்பார். காற்று, நீர், தீ, மண், விண்ணுகிய ஐம்பூதங்களுக்கு உரியவாகிய யம், வம், ரம், லம், ஹம் என்ற பீசங்களும் முயலும் எழுத்துக்கு முதலாக இருந்தது என்றவாறு.

அஃதாவது முதற்கண் முயலும் எழுத்தாகிய சிவயநம என்பதற்குமுன் ஹம் எனும் ஆகாய பீசமும், மசிவாயந என்பதற்குமுன் வாயுபீசமாகிய யம் என்பதும், நமசிவய என்பதன் முன் அக்கினி பீசமாகிய ரம் என்பதூர், யநமவசி என்பதனமுன் பிருதிவி பீசமாகிய லம் என்பதும், வயநமசி எனபதன்முன் அப்பு பீசமாகிய வம் என்பதும் சேர்க்க என்பதாம். ஏனெனின், சிகார வாச்சியமுகிய சிவம் ஆகாயம்போல அனைத்தையும் தன்னகத்து அடக்கி நிற்றலில் அதற்கு ஆகாயபீசம் அமைவதாயிற்று. இங்ஙனமே ஏனையவற்றிற்கும் அமைதி காண்க. இவற்றை உண்மை விளக்கம் ஆரும் வெண்பாவும், சித்தியார் இரண்டாம் சூத்திரம் 67-ம் திருவிருத்தமும் கொண்டு தெளிக. (46)

**ஆறெட் டெழுத்தின்மே லாறும் பதினலும்**
**ஏறிட் டதன்மேலே விந்துவும் நாதமுஞ்**
**சீறிட்டு நின்று சிவாய நமவென்னக்**
**கூறிட்டு மும்மலங் கூப்பிட்டுப் போமே.** 930

இ - ளின், மலநீக்கம் செய்யும் திருவைந் தெழுத்து உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : நாற்பத்தெட்டாம் எழுத்தாகிய ஸ என்பதின்மேல் ஆறும் எழுத்தாகிய ஊகாரத்தையும் பதினலாம் எழுத்தாகிய ஔகாரத்தையும் ஏறிட்டு அதின்மேல் விந்துவாகிய ( o ) அநுஸ்வாரத்தையும், நாதமாகிய (:) விசர்க்கத்தையும் கூட்டிச் சீறவிட்டு, நிலைபெற்று சிவாயநம என்று செபிக்க மும்மலங்களும் பிளந்து கூவிக்கொண்டு ஓடும் என்றவாறு.

ஓம் ஸஹும் ஸௌ : சிவாயநம : எனச் செபிக்க மலங்கள் அகலும் என்பதாம். (47)

**அண்ணல் இருப்ப தவளங் கரத்துளே**
**பெண்ணினல் லாளும் பிரானக் கரத்துளே**
**எண்ணி இருவர் இசைந்தங் கிருந்திடப்**
**புண்ணிய வாளர் பொருளறி வார்களே.** 931

இம் - எனின் : ' உடையாளுன்றன் நடுவிருக்கும் உடையாள் நடுவுள் நீயிருத்தி ' என்பதனை விளக்குதல் நுதலிற்று.

இ - ள் : இறைவன் எழுந்தருளியிருப்பது சத்தி பீசமாகிய 'ஹ்ரீம்' என்பதனுள் ; பெண்ணினல்லாளாகிய பெருமாட்டி எழுந்தருளியிருப்பது சிவபீசமாகிய, 'சௌ' என்பதனுள். அவ்வண்ணம், இருவரும் ஒருவரில் ஒருவராகப் பொருந்தியிருக்க, சிவபுண்ணிய சீலர்கள், சிவபரம்பொருளை உணர்ந்து ஈடேறுவார்கள் என்றவாறு.

சிவசக்தி பீசங்கள் இவையாதலைக் காரணாகமம் மந்திராவதாரப் படலத்துள் காண்க. பின்னர், சாக்தேய தந்திரத்தும் இவை முழங்கி வருதல் உணர்க. இதனை இங்ஙனமன்றி, அவளக்கரம் 'வ' காரம் என்றும், பிரானக்கரம 'சி' காரம் என்றார். அண்ணலிருப்பது அவளக்கரத்துள்ளே என்பது 'வசிவசி' என்பது என்றும், பெண்ணினல்லாளை பிரானக்கரத்துள் இருப்பது 'சிவசிவ' என்றும், இருவர் இசைந்து அங்கு இருந்திடல் ஆன்மாவினிடமாக சிவயவசி என இருவரும் இருந்திடல் என்றும், இப்படி உண்மைப் பொருள் அறிவார்கள் என்றும், எமது ஞானாசாரியர் வாயிலாகக் கேட்டறிந்த

பொருள் ஒன்று உண்டு. இதுவே 'உடையாளுன்றன் நடுவிருக்கும், உடையாள் நடுவுள் நீயிருத்தி, அடியேன் நடுவுள் இருவீரும் இருப்பதானல்' என்னும் அறிவாற் சிவமேயான வாதவூர் வள்ளலின் கருத்தும் ஆம். (48)

**அவ்விட்டு வைத்தங் கரவிட்டு மேல்வைத்து**
**இவ்விட்டுப் பார்க்கில் இலிங்கம தாய்நிற்கும்**
**அவ்விட்டு மேலே வளியுறக் கண்டபின்**
**தொம்மிட்டு நின்ற சுடர்க்கொழுந் தாமே** 932

இ-ம் – எனின், தகராகாயத்தில் பிரணவ சொரூபமான சிவம் இருக்குநிலை உணர்த்துதல் நுதலிற்று.




இ-ள்: அகார எழுத்தைப் பீடமாக இட்டு, ஹர என்பதனை அதன்மேலே வைத்து, அதற்கு மேல் இகாரத்தை இட்டுப் பார்த்தால் இலிங்க வடிவாக இருக்கும். அகாரத்தினைக் கபாலத்தில் பிராண வாயுவோடு பொருந்தச் செய்து தகராகாயத்தில் பிரணவ வடிவாய்ச் சுடர்க்கொழுந்தாய் விளங்குகின்ற சிவம் வெளிப்படும் என்றவாறு.

**அவ்வுண்டு சவ்வுண் டனைத்துமங் குள்ளது**
**கவ்வுண்டு நிற்குங் கருத்தறி வாரில்லை**
**கவ்வுண்டு நிற்குங் கருத்தறி வாளர்க்குச்**
**சவ்வுண்டு சத்தி சதாசிவன் தானே. 933**

இ-ம் - எனின், 'அம்ச' என்பது அசபாமந்திரமாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: அகரமும் சகரமுமாகிய இவ்விரண்டனுள் எல்லாம் அடங்கியுள்ளது. இவ்விரண்டனுள் எல்லாம் கலந்திருக்கும் கருத்தை அறியத்தக்க ஞானிகள் இலர். அதனை அறியும் பரிபாகத்தார்க்குச் சவ்வும் என்பதில் சத்தியும் சதாசிவமும் இருத்தல் வெளிப்படும் என்றவாறு.

அவ்வுண்டு சவ்வுண்டு - அகரமும் உண்டு சகரமும் உண்டு

கவ்வுண்டு - கலந்து; சிவம் சத்தியாகிய இவற்றின் கலப்பிலேயே எல்லா உலகமும் அடங்கியிருக்கிறது என்பதாம். இதனை அறியின 'சவ்வும' என்ற பீஜமும் சத்தியும் சதாசிவமுமாயிருத்தலை அறியலாம் என்பது கருத்து. (50)

**அஞ்செழுத் தாலே அமர்ந்தனன் நந்தியும்**
**அஞ்செழுத் தாலே அமர்ந்தபஞ் சாக்கரம்**
**அஞ்செழுத் தாகிய வக்கர சக்கரம்**
**அஞ்செழுத் துள்ளே அமர்ந்திருந் தானே. 934**

இ-ம் - எனின், திருவைந்தெழுத்தே எல்லாமெனல் நுதலிற்று.

இ - ள் : இறைவன் அஞ்செழுத்தாகிய மந்திரமே வடிவாக அமர்ந்திருந்தனன்; அன்றியும், சீபஞ்சாக்கரமும் ஐந்தெழுத்தாலேயே அமைந்தது. ஐந்தெழுத்தாகிய அக்கரங்கள் அடைக்கப்பட்ட சக்கரத்துள்ளே அஞ்செழுந்தையே தமது திருமேனியாகக் கொண்டு அமர்ந்திருந்தான் என்றவாறு.

சீபஞ்சாக்கரமே சிவன் திருமேனி; சீபஞ்சாக்கரம் அடைக்கப்பட்ட யந்திரமும் அவன் சொரூபமே என்று அவனது மந்திர யந்திர சொரூபம் உணர்த்திய வாறு. (51)

**கூத்தனைக் காணுங் குறிபல பேசிடிற்**
**கூத்த னெழுத்தின் முதலெழுத் தோதினர்**
**கூத்தனெ டொன்றிய கொள்கைய ராய்நிற்பர்**
**கூத்தனைக் காணும் குறியது வாமே.** 935

இம் - எனின், நடராசப்பெருமானைத் தரிசிக்கும் முறைமை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : கூத்தப்பெருமானைத் தரிசிக்கும் அடையாளங்களைப் பற்றிப் பேசினல், கூத்தன் எழுத்தாகிய சீபஞ்சாக்கரத்தின் முதலெழுத்தை ஓதியவர்கள், அச்சிவத்துடன் அநந்நிய பாவமாய் நிற்பார்கள்; இதுவே கூத்தனை யறியும் உபாயமாம் என்றவாறு.

இதனால், பிரணவத்தோடு கூடிய சீபஞ்சாக்கரமே திருவாசியோடு கூடிய ஆனந்தக்கூத்தனின் அருளுரு என்றும், முதலெழுத்தாகிய சிகாரமே அவனுக்குரியதா யவனேடு ஒன்றிநிற்பது எனவும் அறிவித்தவாறும். முதலெழுத்து ஓதினர் என்றது, சிகாரத்தை மட்டும்

ஓதாது மகாரத்தையும் சேர்த்துச் ‘சிம்’ என்று ஓதினுர் என்பது. ‘சிம்’ என்று ஓதுதல் கும்பகமுறையாம். (52)

**அத்திசைக் குள்நின்ற அனலை எழுப்பியே**
**அத்திசைக் குள்நின்ற நவ்வெழுத் தோதினல்**
**அத்திசைக் குள்நின்ற அந்த மறையனை**
**அத்திசைக் குள்ளுற வாக்கினன் தானே. 936**

இம் - எனின், பிரணவத்தியானத்தால், சிவனை அறிந்து உய்யலாம் என்பது அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : மூலாதாரத்து நின்ற குண்டலினியை எழுப்பி, மூலாதாரத்தில் அடங்கியிருக்கின்ற பிரணவமாகிய அந்த எழுத்தை ஓதினல், அம்மூலாதாரத்துள் நின்ற மறையவனுகிய பிரமன் நம்மையும் அந்தக் குண்டலினிசத்தியோடு உறவுகொள்ளும்படி செய்தான் என்றவாறு.

அத்திசை என்பது நெஞ்சறி சுட்டாக மூலாதாரத்தை உணர்த்திநின்றது; அனல் எனனும் குறிப்பால், மூலாதாரத்துள் பிரணவ வடிவாகச் சுருண்டு கிடக்கின்ற குண்டலினியை, எழுப்புவதற்காகப் பிரணவத்தைச் செபித்தால், மூலாதாரத்துள் மறைந்து கிடக்கின்றவனுகிய சிவத்தைத் தானே உறவாக்கிக் கொண்டவன் ஆவன் என்பது கருத்து. (53)

**• தானே யளித்திடுந் தையலை நோக்கினல்**
**தானே யளித்திட்டு மேலுற வைத்திடுந்**
**தானே யளித்த மகாரத்தை ஓதிடத்**
**தானே யளித்ததோர் கல்லொளி யாகுமே. 937**

இம் - எனின் : குண்டலினிதரிசனமே சகத்திரார தரிசனமாக வெளிப்படும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : குண்டலினியாக சத்தியை நோக்கினால் அது தானாகவே அருள் எழுந்தும். அங்ஙனம் அருள் எழுங்கிச் சகத்திராரத்தின்மேல் பொருந்தவைக்கும். அங்கே, மகார மாகிய நாதத்தை ஓதிக்கொண்டிருக்க, தானே விளைகின்ற ஒப்பற்ற உதயசூரிய ஒளி விளையும் என்றவாறு.

மூலாதாரத்தில் குண்டலி தரிசனம் செய்தார்க்கு அனுபவம் முதிர்ந்து சகத்திராரத்தில் சதகோடி சூரியனைப் போன்ற ஒளியான திருமேனிபடைத்த சிவதெரிசனமும் சித்திக்கும் என்பதாம். கல் - மலை ; ஈண்டு உதயகிரி. மகாரம் - நாதம். (54)

**கல்லொளி யேயென நின்ற வடதிசை**
**கல்லொளி யேயென நின்றனன் இந்திரன்**
**கல்லொளி யேயென நின்ற சிகாரத்தைக்**
**கல்லொளி யேயெனக் காட்டிநின் றனே:** 938

இம் - எனின், இறைவன் தன்னை மலைமேல் விளக்காகக் காட்டியருளும் கருணையை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : ஒளிபொருந்திய மலையாக நிலைபெற்ற வடதிசையில் கயிலைமலைமீதுள்ள ஒளியாக, இந்திரனாகிய சிவபெருமான் நின்றனன். அங்ஙனம் நின்று, மாணிக்கக் கல்லினுள், ஒளிபோல நின்ற சிவமாகிய தன்னை, மலைமேலிட்ட தீபம் போல விளக்கிக்காட்டி நின்றான் என்றவாறு.

முதலடிக்கண், ஒளி ஏய் கல் என நின்ற வடதிசை எனமாறி ஒளியோடுகூடிய இமயமலையாகவே காட்சி அளிக்கின்ற வடதிசைக்கண் எனப் பொருள் கொள்க.

இரண்டாமடிக்கண் கல் - கயிலாயம்; கயிலாயத துச்சியுள்ளானாகிய கண்ணுதற்பெருமான், கயிலாய மலைமீதுள்ள ஒளியாய் நின்றான் என்று, தம் அநுபவக் காட்சி அறிவித்தவாறு. இந்திரன் என்றது, செல்வன் என்னும் காரணப்பொருளதாய், ஏரி நிறைந்தவை செலவனாகிய சிவத்தைஉணர்த்திற்று.

சிவம் எங்கும் நிறைந்து நிற்றற்கு மாணிக்கக் கல்லுள் ஒளி நிறைந்துள்ளமை உவமை. சிகாரம் - சிவம் மாமணிச் சோதிபோல எங்கும் நிறைந்த பொரு ளாகிய சிவம் மலைமீது விளக்கப்போல, இலக்காயிற்று. என்றவாறு. கல்லொளியேய் எனக்காட்டினான் என்பதற்கு மலையினிடத்து எழுதப்பட்ட சித்திரம் போல எனப் பொருள் சொல்வாரும் உளர். (55)

**தானே யெழுகுணத் தண்சுட ராய்நிற்குந்**
**தானே யெழுகுணம் வேதமு மாய்நிற்கும்**
**தானே யெழுகுண மாவதும் ஓதிடில்**
**தானே யெழுந்த மறையவ னாமே.** 939

இம் - எனின்: சிவபரம்பொருளிடத்து எழுகின்ற குணமே எல்லாமாயிருக்கும் தன்மை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: வேறு ஒரு முதல்வன் இன்மையால் தானே எழும் இறைமைக்குணங்களால், ஒளிவடிவாய்

நிற்கும். இன்னும் அதனால் வேதமாயும் மறையவனுயும் நிற்கும் என்றவாறு.

ஆன்மாக்களுக்குப் போல, குணம் வேறொருவரால் எழுப்பப்படாது ஆன்மாக்களுக்கு அருள்செய்ய வேண்டு மெனனும் திருவுள்ளக்குறிப்பு எழுந்தபோது அதுவே குணங்களாய்ச் சூக்கும பஞ்சகிருத்தியம் செய்யத் தொடங்குகின்றது. அதனாலேயே குணமே சுடராய ஒளிவடிவாயும், வேதமாகிய ஒலிவடிவாயும், அவ் வேதத்தை ஓதுகின்ற உருமேனி தாங்கிய மறையவனுயும் இருக்கும் என்பது கருத்து. (56)

**மறையவ னாக மதித்த பிறவி**
**மறையவ னாக மதித்திடக் காண்பர்**
**மறையவன் அஞ்செழுத் துண்ணிற்கப் பெற்ற**
**மறையவன் அஞ்செழுத் தாமது வாகுமே. 940**

இம் - எனின் ; சிவன் கொடுத்த இப்பிறவியிலேயே சிவமாந்தன்மையை எய்துக என்பது அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : ஆதிமறையவனாகிய சிவபரம்பொருள், தானாகவே எண்ணிக்கொடுத்த இப்பிறவியை, சிவஞானம் பெற்ற அந்தணனாக எல்லாரும் மதிக்கக் காண்பவர்கள், மறையவனாகிய திருவைந்தெழுத்துள் இருக்கப்பெற்ற மந்திர வடிவனாக அஞ்செழுத்து விளங்கும். அந்த அஞ்செழுத்து சிவபரம்பொருளாகிய அதுவேயாகும் என்றவாறு.

இறைவன் நாம் செய்த இருவினைக்கு ஈடாகத் தானாகவே எண்ணிப்பார்த்து இப்பிறவியைத் தந்தார்.

எடுத்த இப்பிறவியிலே நாம், மெய்ஞ்ஞானம் பெற்ற மறையவனாக நடத்தல் வேண்டும். அங்ஙனம் நடப்பவர்கள், திருவைந்தெழுத்தைத் தியானிக்கப்பெற்ற புண்ணிய விசேடத்தால், அஞ்செழுத்து வடிவான மறையவனே ஆவர் என்பது, 'அஞ்செழுத்தாமது மறையவன் ஆகும்' என்று கூட்டுக. அது - பகுதிப்பொருள் விகுதி. திருவைந்தெழுத்து ஓதுவார் சிவமே ஆவர் என்பது கருத்து. (57)

**ஆகின்ற பாதமு மந்நவாய் நின்றிடும்**
**ஆகின்ற நாபியுள் அங்கே மகாரமாம்**
**ஆகின்ற சீயிரு தோள்வவ்வாய்க் கண்டபின்**
**ஆகின்ற வச்சுட ரவ்வியல் பாமே.** 941

இ - னின், மந்திரமே மேனியாதலை அறிவித்தல் நுதலிற்று.

இ - ள்: இறைவனுடை திருவடிகள் இரண்டும், அந்நகாரமாய் நிலைபெறும். நாபிச்சுழியுள் அவ்விடத்தே மகாரம் பொருந்துவதாம். சிகாரம் இரண்டுதோளாய், வகாரத்தை வாயாகக் கண்ட பிறகு இறைவன் திருமுடிக்கண் விளங்குகிற அச்சுடர் யகாரத்தன்மையை உடையதாம் என்றவாறு.

**அவ்வியல் பாய இருமூன் றெழுத்தையுஞ்**
**செவ்வியல் பாகச் சிறந்தனன் நந்தியும்**
**ஒவ்வியல் பாக ஒளியுற நோக்கிடிற்**
**பவ்வியல் பாகப் பரந்துநின் றானே.** 942

46-A




941-வது திருமந்திர விளக்கம்

இ-ள் - எனின், மந்திரவடிவாகிய இறைவனே வேதமாயும் விளங்குகின்றான் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: அத்தகைய பிரணவம் உள்ளிட்ட சிபஞ்சாக்கரமாகிய ஆறெழுத்தையும் தமக்குத் திரு மேனியாகக்கொண்டு செம்மையாகிய இயல்போடு சிவ பரம்பொருள் விளங்கினன். அவனை ஓகாரமாகிய பிரண வத்தின் தன்மையாக ஒளிபொருந்தத் தியானிக்கின் அவன் அக்கரங்களாலான பாவின் தன்மையாயும் பரந்து நின்றான் என்றவாறு.

அவ்வியல்பாய என்றது, அகார வாச்சியனை சிவத்தின் இயல்பாய எனவும் பொருள்படும். இரு மூன்றெழுத்து என்பது ஓம் நமசிவாய என்பதாம். செவ்வியல்பாக - செம்மைத் தன்மையோடு சிறந்த னன் - தமக்குச் சொரூபமாகக் கொண்டு விளங்கினன். ஓ இயல்பாக - ஓங்காரத்தின் தன்மையாக. ஒவ்வு இயல் பாக எனக்கொண்டு ஒத்த இயல்பினதாக எனலுமாம். ப இயல்பு - பாவின்தன்மை - என்றது பாவடிவாகிய வேதத்தை; மந்திரமே வடிவானமகேசுரனைப் பிரணவ வடிவாக எண்ணின், அவனே வேதவடிவாகவும் விளங்குவன் என்பதாம். (59)

**பரந்தது மந்திரம் பல்லுயிர்க் கெல்லாம்**
**வரந்தரு மந்திரம் வாய்த்திட வாங்கித்**
**துரந்திடு மந்திரஞ் சூழ்பகை போக**
**உரந்தரு மந்திரம் ஓமென் றெழுப்பே** 943

இ-ம் - எனின், மந்திரங்கள் வந்த வரலாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : பலவாகிய உயிர்களுக்கும் இவ்வாறு மந்திரங்கள் பரவின. மேன்மையைத் தருகின்ற மந்திரங்களாகிய இவற்றைப் பொருந்தப்பெற்று, உன்னை இடைவிடாமல் சூழ்ந்திருக்கின்ற பகைவர்களாகிய பிறப்பிறப்புக்களும் அறியாமையும் கெட்டொழிய, இம்மந்திரங்களை ஏவு; ஞானவன்மையைத் தருகின்ற மந்திரமாகிய ஓம் என்பதை எழுப்பு என்றவாறு.

பல்லுயிர் என்றது வினைவிசேடத்தால் பலதரப்பட்ட உடம்புகளை மேற்கொண்ட உயிர்கள் அனைத்தையும், மக்களுக்கன்றி யந்திரத்தால் பயன் யாதோ என்னின், ஏனைய உயிர்களும் மந்திரங்களைத் தாம் கூற முடியாவிட்டாலும் பிறர் கூறக்கேட்டுப் பயன் எய்தியமையைச் சேரமான ஏறிச்சென்ற குதிரை முதலியவற்றிற்காண்க. வரம் - மேன்மை; நினைத்த வரங்களும் ஆம், வாய்த்திட — தானேவந்து வாய்க்க, மந்திரமும் மந்திரசித்திகளும் தேடி அலைவார்க்குக் கிடைக்கா; திருவருளால் தானே வந்தடையும் தன்மையன.

**பெய்யும் மாரியால் பெருகு வெள்ளம்போய்**
**மொய்கொள் வேலைவாய் முடுகும் ஆறுபோல்**
**ஐய நின்மகற் களவில் விஞ்சைவந்து**
**எய்து காலமின் றெய்திற் றென்னவே** 944

எனக் கம்பரும் மந்திரங்கள் தாமாக வந்தெய்தும் தன்மையன என்பதை விளக்குதல் காண்க. புறஞ்சென்றவற்குப் பொற்கிழி கிடைத்தவாறுபோல, மந்திரங்கள வலியவந்து கிடைப்ப, அதனை ஏற்றுப் பயன் கொள்ளுதல் வேண்டும என்பது உணர்த்தியவாறு உரம் — ஞானவலிமை. ஓம் என்று உரந்தரு மந்திரம் எழுப்பு எனக்கூட்டுக.

ஓமென் றெழுப்பித்தன் உத்தம நந்தியை
நாமென் றெழுப்பி நடுவெழு தீபத்தை
ஆமென் றெழுப்பியவ் வாறறி வார்கள்
மாமன்று கண்டு மகிழ்ந்திருந் தாரே. 944

இ - னின், ஓம் நம அம் என்று உச்சரித்து, அநாகத சிவத்தைத் தரிசித்தவர்கள் மன்று கண்டவராவார்கள் என்பது உணர்த்துதல நுதலிற்று.

இ - ள் : ஓம் என்னும் பிரணவத்தை உச்சரித்து, நாதத்தை மேல்நோக்கி எழச்செய்து, ஆன்மாவாகிய தனக்குள்ளே விளங்குகின்ற பரசிவத்தை நம் என்னும் பீசத்தால் விளங்கச் செய்து, அநாகதமாகிய புருவ நடுவுள் எழுகின்ற விளக்கொளிபோன்ற சிவத்தை அம் என்னும் பீசத்தால் எழச்செய்து, ஓம் என்பதை நாதமாகவும், நம் என்பதை அநாகதச் சிவச்சோதியாகவும், அம் என்பதை அதனோடு ஒற்றித்திருக்கிற உயிராகவுமறிபவர்கள், நாதன் நடம்நவிலும் மாமன்றினைக் கண்டு மகிழ்ந்திருந்தாராவர் என்றவாறு.

மூலாதாரத்து, பிரணவ வடிவாகிய மந்திரமேனியோடு இறைவன் எழுந்தருளியிருக்கின்றார் ஆதலின் அவரை எழுப்பி அநாகதமாகிய புருவநடுவிற்கொண்டு வந்து நம் என்னும் மந்திரத்தாற்சேர்த்து, ஹம் என்ற ஆன்மாவையும் ஒன்றச் செய்து, உணர்பவர்கள், பேரம்பலம் கண்டவர்கள் ஆவார்கள் என்பது கருத்து. ஹம் என்பது எதுகைநோக்கி ஆம் என ஆயிற்று.

இம்மந்திரத்திற்கு முதற்கண் ஓம் என்னும் பிரணவத்தை எழுப்பித் தனது உத்தமகுருவாகிய சிவபெருமான திருநாமத்தை நம என்பது முதலாகக்கொண்டு

எழுப்பி, நடுநிலைத்தீவகமாகிய சிகாரமுதலாக நமக்குப் பொருந்துவதாம் என உச்சரித்து அவ்வாறு அறிபவர்கள், மன்றுகண்டு மகிழ்ந்திருப்பாராவர் என உரைத்தலுமாம். இப்பொருளில், 'நாம் என்று' என்பது நமவென்று என்பதன் திரிபு. ஓம் நமசிவாய என்பதை ஓம் சிவாயநம என உச்சரிப்பவர்கள் மன்று கண்டு மகிழ்ந்தவராவர் என்பதாம். (61)

ஆகின்ற சக்கரத் துள்ளே எழுத்தைந்தும்
பாகொன்றி நின்ற பதங்களில் வர்த்திக்கும்
ஆகின்ற ஐம்பத் தோரெழுத் துள்நிற்கப்
பாகொன்றி நிற்கும் பராபரன் தானே. 945

இம் - எனின், முன்னர் 'அடைவினில் ஐம்பதும்' என்ற மந்திரத்தாற் கூறியவண்ணம் யந்திரத்தைப் புறப்பாகப் பூசிக்கும்முறையை அகப்பூசையாக்கிப் பூசிக்க என அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : இருபத்தைந்து அறைகொண்ட சக்கரத்துள் திருவைந்தெழுத்து வாகாக ஒன்றி நின்ற அறைகளில் இருக்கின்ற ஐம்பத்தொரு அக்கரங்களும் பதமொன்றிற்கு இரண்டெழுத்தாக உள்ளே நிற்க பராபரனாகிய சிவன், அவற்றில் பாகுபோல் ஒன்றி நிற்பன் என்றவாறு.

இதன் சக்கர அமைப்பை, முன் 924 - ஆம் திருமந்திரத்தின் அடிக்குறிப்பில் காண்க. (62)

பரமாய அஞ்செழுத் துள்நடு வாகப்
பரமாய நவசிம பார்க்கில் மவயநசி
பரமாய சியநம வாமபரத் தோதிற்
பரமாய வாசி மயநமாய் நின்றே. 946

50 - B

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ஶி | வ | ய | ந | உ | உ | வ | ய | ந | உ | ஶி |
| வ | ய | ந | உ | ஶி | ந | ய | ந | உ | ஶி | வ |
| ய | ந | உ | ஶி | வ | ய | ந | உ | ஶி | வ | ய |
| ந | உ | ஶி | வ | ய | வ | உ | ஶி | வ | ய | ந |
| உ | ஶி | வ | ய | ந | ஶி | ஶி | வ | ய | ந | உ |
| உ | ந | ய | வ | ஶி | ஹௌம் | ஶி | வ | ய | ந | உ |
| உ | ஶி | வ | ய | ந | ஶி | ந | உ | ஶி | வ | ய |
| ஶி | வ | ய | ந | உ | வ | உ | ஶி | வ | ய | ந |
| வ | ய | ந | உ | ஶி | ய | ஶி | வ | ய | ந | உ |
| ய | ந | உ | ஶி | வ | ந | வ | ய | ந | உ | ஶி |
| ந | உ | ஶி | வ | ய | உ | ய | ந | உ | ஶி | வ |

946 - வது திருமந்திர விளக்கம்

இ-ம் — எனின் : முற்கூறிய சக்கரத்தில் திருவைந் தெழுத்து நிற்கும் முறை உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள் : எல்லாவற்றிலும் மேலான அஞ்செழுத்துள், நடுவாக விளங்கும் மேலான யகாரம் முதலாக, யநவசிம என்று பார்க்கில், மயவநசி, சியநமவ, வசிமயந என நின்று மேலாம் நிலையை எய்துவிக்கும் என்றவாறு.

பரமாய அஞ்செழுத்துள் நடுவாகப் பரமா யநவசிம பார்க்கில், மயவநசி, பரமாய சியநமவ, பரமாய வசிமயந ஆய்நின்று பரத்துஓதின் ஆம் எனக்கூட்டிப் பொருள் கொள்க. (63)

நின்ற எழுத்துக்கள் நேர்தரு பூதமும்
நின்ற எழுத்துக்கள் நேர்தரு வண்ணமும்
நின்ற எழுத்துக்கள் நேர்தர நின்றிடில்
நின்ற எழுத்துள்ளும் நின்றனன் தானே. 947

இ-ம் - எனின் : பஞ்சாக்கரமே பூதங்களும் வண்ணங்களுமாகப் பொருந்தி நின்றன என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : பஞ்சாக்கரமாய் நின்ற எழுத்துக்களே நேர்ந்த பூதங்களும், நேர்ந்த வண்ணங்களும் ஆம் ஆதலால் அவ்வெழுத்துக்கள் முறையாக நின்றால் அவ்வெழுத்துள்ளே பரசிவம் நிலைபெற்றுத் தோன்றுவன் என்றவாறு.

நின்ற எழுத்துக்கள் என்றது சிம் முதலாக முறையே நின்ற எழுத்துக்கள் என்றவாறு. இவ்வைந்தெழுத்தையும் திருமேனியாகக் கொண்டு சிவபெருமான் நின்றனன் என்றவாறு. (64)

நின்றது சக்கரம் நீளும் புவியெல்லாம்
மன்றது வாய்நின்ற மாயநன் னாடனைக்
கன்றது வாகக் கறந்தனன் நந்தியுங்
குன்றிடை நின்றிடுங் கொள்கைய னாமே. 948

இம் - எனின் : திருவைந்தெழுத்தை ஓதியே அருள்நந்தி அகம்படிமைத் தொழில் பூண்டான் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : எங்கும் பரவியுள்ள பூமியெல்லாவற்றி லும், யந்திரம் நிலைபெற்றிருந்தது. அதனைத் தாம் விளங்கும் மன்றமாகக் கொண்டு எழுந்தருளியிருந்த இறைவனை நந்தியெம்பெருமான், கனறாக மறைந் திருந்து பயன்கொண்டு திருக்கயிலை மலையில் காவற் றலைமை பூணும் கொள்கையனானன் என்றவாறு.

புவியெங்கும் வியாபித்த சக்கரத்தையே தமது நிலைக்களனாகக் கொண்டு நின்ற இறைவனை ஆவின் கன்றாகத் தனது உருமறைந்த நந்தியெம்பெருமான் தியானித்துக் கயிலையங்கிரி காவற்றலைமை பூண்டான் என்பது கருத்து. மாயநன்னாடன் - மாயாகாரியமான நல்ல நாட்டின் தலைவனும நடத்துவோனும் ஆவன். கன்றதுவாகக் கறத்தலாவது ஆவின்பயனை முழுதும் கொள்ளும் கன்றுபோல, சீகண்டசிவத்தின் அருட்பயனை முழுதும் கொள்ளுதல், கறத்தல் – தன்னுட் கொளளுதல் குன்று – கயிலை. (65)

கொண்டஇச் சக்கரத் துள்ளே குணம்பல
கொண்டஇச் சக்கரத் துள்ளே குறியைந்து
கொண்டஇச் சக்கரங் கூத்தன் எழுத்தைந்துங்
கொண்டஇச் சக்கரத் துள்நின்ற கூத்தே. 949

இம் - எனின், இருபத்தைந்து அறைகொண்ட இச்சக்கரத்துள்ளே, எல்லாம் பொருந்தியிருக்கின்றன என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: கொண்ட இச்சக்கரத்துள்ளேயே விளையும் நன்மைகள் பலவாம். ஐவகைத் திருமேனிகளும் ஐந்து எழுத்துக்களும், இறைவனுடைய நடனங்களும் அடங்கியுள்ளன என்றவாறு.

குறி ஐந்தென்றது, குறித்துணர்வதற்கு வாய்ப்பான சிவம், சத்தி, நாதம், பிந்து, சதாசிவம், மகேச்சுரம் என்பனவற்றை, அன்றி, ஈசானுதி பஞ்சப் பிரமசொரூபம் என்றும், பிரமா விஷ்ணு ருத்திரன் மயேச்சுரன சதாசிவன் என்றும், மூலாதாரத்தைத் தவிர்தத ஆதாரச்சக்கரங்கள் ஐந்து என்றும் உரைத்தலும் உண்டு. கூத்தன் எழுத்து ஐந்து. திருவெழுத்தைந்துமே கூத்தன் திருமேனியாதலின் இங்ஙனம் கூறப்பெற்றது. (66)

வெளியி லிரேகை யிரேகையி லத்தலை
சுளியில் உகாரமாஞ் சுற்றிய வன்னி
நெளிதரு கால்கொம்பு நேர்விந்து நாதந்
தெளியும் பிரகாரஞ் சிவமந் திரமே 950

இம் - எனின், திருவம்பலச் சக்கரத்தின் உச்சியில் இடப்படும் உகாரவடிவாகிய சுழியின் இயல்புஉணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: வெளியில் இரேகையில் திருவம்பலமாகிய சிதம்பரச் சக்கரத்தின் இரேகையில், அந்தத் தலைப்பில் சுழிவடிவான உகாரம் பொருந்தும்; அதில்

சுற்றியுள்ளதானசுழி நெருப்பு; நேர்கொம்பு அசைந்து பரவுகின்ற காற்று; சுழி – விந்து, நேர்கோடு – நாதம்; இதுவே தெளியும் முறையாம்; அதுவே சிவமந்திரமாம் என்றவாறு.

வெளியில் இரேகை – சிதாகாசவெளியில் இடம் பெறும் இரேகை வடிவான திருவம்பலச் சக்கரம் என்றவாறு. மீட்டும் இரேகைகள் என்றது அந்தத் திருவம்பலச் சக்கரத்திலுள்ள கோட்டில் என்றவாறு. அத்தலை என்றது அதன் தலைப்பில் என்றவாறு.

சுளியில் உகாரமாம் என்றது சுழிவடிவான உகார மாகும் என்றவாறு. சுழியில் என்பது எதுகைநோக்கித் திரிந்தது. சுற்றிய உகாரம் – வட்டமாகச் சுற்றியுள்ள முதற்பகுதி; அது நெருப்பின் வடிவாம்.

நெளிதரு கால்; உகாரத்தில் சுழியையும் நேர் கோட்டையும் இணைப்பதற்காக வளைந்திருக்கின்ற கால் என்றவாறு. அது வாயு வடிவாம். சுழி நாதமாகவும், கொம்பு பிந்துவாகவும் ஆதலும் உண்டு.

தெளியும் பிரகாரம் சிவமந்திரமே – இவ்வாறு தெளியும் முறைமையே சிவமந்திரமாம் என்றவாறு. பிரகாரம் – முறைமை. இது சுழிவடிவாகிய பிரணவ பஞ்சாக்கரத்தின் அமைப்பை அறிவிக்கின்றது. (67)

**அகார வுகார சிகார நடுவாய்**
**வகாரமோ டாறும் வளியுடன் கூடிச்**
**சிகார முடனே சிவன்சிந்தை செய்ய**
**ஒகார முதல்வன் உவந்துநின் றானே** 951

இம் - எனின், பிரணவத்தலைவனாகிய இறைவன், பிரணவசகிதமாகிய சீபஞ்சாக்ரத்தைச் செபிக்க மகிழ்வன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : ஓம் நமசிவாய என்று சடாக்கரத்தை இடகலை பிங்கலைகளோடு கூடிச்செபித்தும் சிகாரத்தொடு வைத்துச் சிவனைத் தியானித்துமிருக்க, பிரணவநாதனாகிய பெருமான் மகிழ்ந்து நிற்பன் என்றவாறு.

செய்ய உவந்து நின்றான் எனவிரைவுபற்றி இறந்த காலத்தாற் கூறினர். அகார உகார சிகாரம் நடுவாய் ஓதுதல் – ஓம் நமசிவாய என்பதில், சிகாரம் நாயகமணியாய் இருத்தல் காண்க. வகாரமோடு ஆறு என்றது, ஓம் வசியநம என்பது. சத்திமுதலான சத்திபஞ்சாக்கரத்தை உச்சுவாச நிச்சுவாசங்களில், பிராணவாயுவோடு கூடிச் செபிக்கின் என்றவாறு. சிவாயநம என்று சிவ எழுத்தை முதற்கண் நிறுத்தித் திருவைந்தெழுத்தின் பொருளாகிய சிவனைத் தியானிக்க என்பது.

ஓகார முதல்வன் – பிரணவநாயகனாகிய இறைவன். ஆகவே ஓம் நமசிவாய, ஓம் வசியநம, ஓம் சிவாயநம என்று தியானிக்கில், இறைவன் மகிழ்ந்து வெளிப்படுவன் என்பது உணர்த்தியவாறும். (68)

**அற்ற விடத்தே அகாரம தாவது**
**உற்ற விடத்தே யுறுபொருள் கண்டிடச்**
**செற்றம் மறுத்த செழுஞ்சுடர் மெய்ப்பொருள்**
**குற்றம் அறுத்த பொன்போலுங் குளிகையே. 952**

இம் – எனின் : சிவபரம்பொருளைத் தெரிசிக்கும் முறைமை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : ஆறு ஆதாரங்களும் கடந்த இடத்தே, அகாரப் பொருளாகிய சிவம் விளங்குவது ; அந்த இடத்தே பொருந்தி தானேவந்தெய்தும் பொருளைக்காண, அது குற்றத்தில பொருந்தாத செழுஞ்சுடராய் மெய்ப் பொருளாய்த் தோன்றும். அதுவே ஆன்மாக்களுக்கு அநாதியே பொருந்திய குற்றமாகிய ஆணவமலக் களிம்பை நீக்கிப் பொன்போற்செய்யுங் குளிகையாம் என்றவாறு.

அற்ற இடம் – இடமற்ற இடமாகிய துவாதசாந்தம். மூலம் முதல் ஆக்ஞை வரையில உள்ள இடம் ஆதாரம். அது உடம்பினுள் உற்ற ஒவ்வொரு இடமாதலின், அதனைக் கடந்த துவாதசாந்தப் பெருவெளியை அற்றவிடம் என்றருளியது அகாரமது ஆவது ; 'யாரு மறிவர் அகரம் அவன் என்று' ஆதலின், அகாரத்தின் பொருளாகிய சிவம் விளங்குவதாம். அது : பகுதிப் பொருள் விகுதி. ஆவது – விளங்குவது. உற்றவ்விடத்தே எனற்பாலது எதுகை நோக்கித் தொகுத்தல் விகாரம் பெற்றது. 'அவ்விடத்தே உற்று' எனமாறி அந்தத் துவாதசாந்தப் பெருவெளியில் பொருந்தி எனப் பொருள் கொள்க.

உறுபொருள் – தியானிப்பவர்க்கு வந்து உறுவதாகிய சிவபரம்பொருள். சிற்றறிவினராகிய ஆன்மாக் களுக்குக் கற்பனையாலும் அடையமுடியாமல் கருணையால் தானேவந்து உறும்பொருளாதலின் உறுதலைப் பொருளின் வினையாக்கி உரைவைத்தார்.

கண்டிட – அறிய. செற்றம் மறுத்த செழுஞ் சுடர்–இருளாகிய குற்றத்தைப் பொருந்தாதே மறுத்த

செழுஞ்சுடராகிய மெய்ப்பொருள் எனக் கூட்டுக. ஞான ஒளியாகிய பரசிவம் ஆணவாதி மலங்களைப் பொருந்தாது என்பதை விளக்கியவாறு. செற்றம் அறுத்த எனப் பிரிக்கின், செற்றத்தை ஆன்மாக்களுடையதாக உணர்க. பின்னர்க் 'குற்றமறுத்த' என வருதலின், இப்பொருள் கூறியது கூறலாம். தகுதி அறிந்துகொள்க.

துவாதசாந்தப் பெருவெளியில் பரசிவம் கோடி சூரியப் பிரகாசத்தோடு விளங்குபவர் என்ற பொருள் பட "சூர்யகோடி சமப்பிரபம்" என்று சிவாகமங்கள் தெரிவிக்கின்றன. ஆகையால், இங்ஙனம் அருளினர்.

குற்றமறுத்த பொன்: பொன்னுக்குள்ள குற்றம்; புறச்சாதனங்கள் நீக்கினும் நீங்காத அநாதியே உள்ள களிம்பு, அதனைப்போக்கிய குளிகைபோல்வது மெய்ப் பொருள் என்ற உவமையால் ஆன்மாக்களை அநாதியே பற்றி நின்று, அறியாமையை விளைவிக்கும் ஆணவ மலக் களிம்பை அறுத்துச் சொக்கத் தங்கமாய் ஆக்கியருளுவது பரசிவம் என உவமையடையால் பொருளடை புலப்படுத்தியவாறு. மெய்ப்பொருள் பொன்னுக்குக் குளிகைபோல்வது என விரித்துப் பொருள் காண்க. (69)

> அவ்வென்ற போதினில் உவ்வெழுத் தாலித்தால்
> உவ்வென்ற முத்தி யுருகிக் கலந்திடும்
> மவ்வென்றென் னுள்ளே வழிபட்ட நந்தியை
> எவ்வணஞ் சொல்லுகேன் எந்தை இயற்கையே 953

இம் - எனின், பிரணவத் தியானத்தால் வரும் பயன் சொல்லொணாதது என்பதறிவித்தல் நுதலிற்று.

இ - ள்: அ என்று உச்சரித்த காலத்திலேயே உ என்றும் உச்சரித்தால் உகரமாகிய முத்தியானது உருவழிந்து ஒன்ருகும். மகாரத்தோடு இணைத்து என்னுள்ளே வழிபட்ட அதனுல் விளைந்த சிவானுபவத்தை எவ்வாறு சொல்லுவேன்? அது எமது தந்தையாகிய சீபரமேசுவரனது இயற்கையாம் என்றவாறு.

அ என்ற போதினில் உ எழுத்து ஆலித்தால் - அகார உகாரங்களை இயைத்து உச்சரித்தால்.

உ என்ற முத்தி - உகாரமாகிய முத்தி. முத்தி கருணையாதலின், கருணை திருவருட்சத்தியாதலின், அதுவே கரைந்து உருகி ஒன்ருகும். அகரமாகிய சிவம் ஆதாரமாய், உகரமாகிய கருணை ஆதேயமாய், இரண்டுங்கலந்து ஓ என்ருகி அந்தக்கரணமாகிய மனத்துட் படுங்காலத்து, மாயையாகிற மலத்தொடு பொருந்தி ஓம் என்று தியானித்து வழிபாடுசெய்ய வெளிப்பட்ட சிவத்தை எங்ஙனம் சொல்லுவேன் என்று வியந்தவாறு. ஓம் என்று ஒன்ருக்கிக்கூருது இங்ஙனம் பிரித்துக் கூறியது சொற்பொருள் விரித்தல் என்னும் உத்தி. இதனுற்பயன், சிவமும் சத்தியும் மாயையும் இயையப் பரவெளியுள் பிரணவம் தோன்றுகிறது; அதனைத் தியானிக்கச் சிவம் வெளிப்படும் என்பதாம். வழிப் பட்ட என்றும் பாடம். *(70)*

**நீரில் எழுத்திவ் வுலகா ரறிவது**
**வானில் எழுத்தொன்று கண்டறி வாரில்லை**
**யாரிவ் வெழுத்தை அறிவா ரவர்கள்**
**ஊனில் எழுத்தை உணர்கிலர் தாமே** 954

இம் - எனின், பிரணவத் தியானமுடையார்க்குப் பிறப்பில்லை என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள் : இந்த உலகில் பொருந்திய அறிவாகிய அது நீரில் எழுதிய எழுத்துப்போல நிலையற்ற எழுத்தாம். பரநாதவெளியில் தோன்றுகின்ற எழுத்தொன்று உண்டு. அதனைத் தியானித்து அறிபவர்கள் யாருமில்லையாம். இவ்வெழுத்தை அறிபவர்கள் யாரோ, அவரே, பிரமனால் தலையில் எழுதப்படும் 'பிரமலிபி' யை உணராதவர்களாவார்கள்; என்றது பிறப்பில்லை என்றபடி என்றவாறு.

உலகாரறிவது : உலகு ஆர் அறிவு அது — இவ்வுலகத்தில் பொருந்திய அறிவாகிய அது; என்றது பாசஞானத்தை; அது நீரிலெழுத்து என்றது, நிலையற்றது என்பதாம். பாசஞானம் நிலையற்றதாய், அறிதோறறியாமையைப் பயப்பது. பதிஞானமோ, இறைவன் அறிவித்தாங்கறிந்து அறிவாயமர்ந்திருப்பது. இதனானே நிலையற்ற பாசஞானத்தை நீர்மேல் எழுத்து என்று அருளியது.

வான் - சிதாகாயம், வானிலெழுத்தென்றது, பிரணவத்தை: சமட்டிநிலையில் பிரணவத்தை ஒன்றாக எண்ணுக என்பார், 'எழுத்தொன்று' என்றார் ஒலியுலகுக்கெல்லாம் வித்து பிரணவமாதலானும், அதனைக் காண்பார் அறியாராகலானும், 'கண்டறிவார் இல்லை' என்றார்.

ஊனிலெழுத்து — ஊன் ஆகுபெயர். உடம்பு என்றது ஈண்டு சிரத்தை உணர்த்திற்று. அதில் எழுதிய

எழுத்து பிரமலிபி என அறிக. பிரணவத்தியானம் உடையாருக்குப் பிறப்பில்லையாகலின் ஊனெழுத்தை உணர்கிலர் என்று அருளியது. (71)

**காலை நடுவுறக் காயத்தில் அக்கரம்**
**மாலை நடுவுற ஐம்பது மாவன**
**மேலை நடுவுற வேதம் விளம்பிய**
**மூலம் நடுவுற முத்திதந் தானே** 955

இம் – எனின், பிரணவமே, ஐம்பத்தோரக்கரமும் ஆவன என உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: பிராணவாயு அநாகதத் தானத்தைப் பொருந்தப் பராகாயத்தில் உற்பவித்த பிரணவமாகிய எழுத்து மாலையாக நடுவிலே உற்ற ஐம்பத்தோரக்கரங்களுமாவன. மேலும், அம்மாலா மந்திரத்தின் நடுவிலே, வேதநடுவில் சொல்லப்பட்ட மூலமந்திரமானது பொருந்த முத்தியைத் தந்தான் இறைவன் என்றவாறு.

காலை: ஐசாரியை. கால் – காற்று: நடு – புருவநடுவாகிய அநாகதஸ்தானம். காயம்; ஆகாயம் என்பதன் முதற்குறை; ஈண்டுப் பரமாகாயத்தை, காயத்திலக்கரம் காலோடு நடுவுற எனக்கூட்டுக.

அக்கரமாலை ஐம்பது நடுவுற ஆவன. மாலா மந்திரங்களாகிய ஐம்பது எழுத்துக்களும் பிரணவத்தினின்றும் பிறப்பன; என்றது பிரணவமே எல்லா எழுத்துக்களுக்கும் வித்தாய் ஒலியுலகைப் படைப்பது. வேதம் நடுவுற விளம்பிய மூலம் – வேதம் மூன்றனுள் நடுவானது எசுர்; அதில் நடுவானது ஸ்ரீ ருத்திரம்; அதன் நடுவாக விளங்குவது சிவாயநம என்னும் மூலமந்திரம்.

நடுவுற முத்திதந்தான் ; மாலா மந்திரங்களின் நடுவாக மூலமந்திரத்தை மனத்துள் தியானிக்க வாசனு மலமும் அற்று முத்தி சித்திதலின் 'முத்திதந்தான்' இறைவன் என்று அருளியவாறு. நடு உற – தியானிக்க.

**(72)**

**நாவியின் கீழது நல்ல எழுத்தொன்று**
**பாவிக ளத்தின் பயனறி வாரில்லை**
**ஓவிய ராலும் அறியவொண் ணாதது**
**தேவியுந் தானுந் திகழ்ந்திருந் தானே. 956**

இம் – எனின், மூலாதாரத்தில் உள்ள பிரணவத்தை இடமாகக்கொண்டு பெருமானும் பெருமாட்டியும் விளங்குவர் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : நாபித்தானத்தின் கீழேயுள்ள மூலாதாரத்தில் நல்ல எழுத்தாகிய பிரணவம் இருக்கிறது. பாவிகள் அதன் பயனை அறியார். பிரமனாலும், அது அறியமுடியாதது ; அதில், சிவமும் சத்தியும் எழுந்தருளி இருந்தார்கள் என்றவாறு.

நாபி, நாவி என நின்றது. நாபியின்கீழ் உள்ளது மூலாதாரமதலின் இடம் சுட்டி உணர்த்தியவாறு. நல்ல எழுத்தென்று விசேடித்தது, பிரணவம் பஞ்சாக்கரமாய்ப் பெரும்பேறளித்தலின் ஒன்று எனறது சமட்டிநிலையை அதின் என்பது அத்தின் என விரித்தல் விகாரம்பெற்றது. பிணிக்கு மருந்து கையிலிருந்தும் பயன்கொள்ள மாட்டாதார்போல, பிரணவம் மூலாதாரத்திருந்தும் பயன் கொள்ளமாட்டாத அறிவின்மைக்கு வருந்தி அவர்களைப் பாவிகள் என்றது

ஓவியர் : படைத்தலாகிய சிற்பத்தொழில் செய்யும் பிரமன். அவனுக்குப் பிரணவ ஒலி தெரிந்திருந்தும், அதனது பொருள் அறியாமையைக் கந்தபுராணத்து அயனைச் சிறைசெய் படலத்து வரலாற்றான் உணர்க. அவன் அறியாதபொருள் தேவியும் தானுமாகத் திகழு கின்ற தன்மை. (73)

அவ்வொடு சவ்வென்ற தரனுற்ற மந்திரம்
அவ்வொடு சவ்வென்ற தாரும் அறிகிலர்
அவ்வொடு சவ்வென்ற தாரும் அறிந்தபின்
அவ்வொடு சவ்வும் அனாதியு மாமே. 957

இம் — எனின், சிவமந்திரம் இவை எனத் தெரி வித்தல் நுதலிற்று.

இ - ள் : சிவமந்திரமாவன ஔ, சௌ என்பன. இது யாருமறியாத உண்மை. இதனை அறியின் இம் மந்திரங்கள் அநாதி என்பதை அறியலாம் என்றவாறு.

ஔ: இது ஹௌ என்பதன் திரிபாய் 'ஹ' என் பதை மட்டும் உணர்த்தி நின்றது. இவையிரண்டும் மகரத்தோடு கூட்டி உச்சரிக்கும் போது ஹம்ச மந்திர மாதல் தெளிக. இதுவே அசபை. ஹம் என்னும் ஆன் மாவும். சம் என்னும் சிவனும் அநாதி நித்தியப் பொருள் என்பார், அவ்வொடு சவ்வும் அநாதியுமாமே என்றருளினர். (74)

மந்திரம் ஒன்றுள் மலரால் உதிப்பது
உந்தியி னுள்ளே உதயம்பண் ணுநிற்குஞ்
சந்திசெய் யாநிற்பர் தாம தறிகிலர்
சந்தி தொழுதுபோ யார்த்தகன் றார்களே 958

இம் - எனின், பிரணவம் அந்தணரும் அறியாத அருமையுடைத்து என்பது அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : இதயத் தாமரையிலிருந்து எழுவதாகிய மந்திரம் ஒன்றுண்டு. அது உந்திக் கமலத்திலிருந்து சூக்குமமாய்த் தோன்றும். சந்தியாவந்தனம் செய்பவர்களாகிய அந்தணர்கள் இதனை அறிகிலர். சந்தியா தேவியை வணங்கிப்போய் ஆரவாரித்து ஒழிந்தவர்களாவார்கள் என்றவாறு.

இதன் கருத்து, இதயத் தாமரையிலிருந்து எழுகின்ற பிரணவம் உந்திக்கண்ணதாகத் தோன்றும். இது பிரணவத்தோடு வேதத்தை ஓதும் வேதியர்க்கும் அறியப்படாதது என்பது கருத்து.

சந்திசெய்யாநிற்பார் என்றது கிரியைகளைச்செய்து அதனால் விளையும் ஞானத்தை அறிகிலர். இவர்கள் செய்வன ஆரவாரத்தன்மையனவே என்பார் ஆர்த்தகன்றார்களே என்றார். (65)

சேவிக்கு மந்திரஞ் செல்லுந் திசைபெற
ஆவிக்குள் மந்திரம் ஆதார மாவன
பூவுக்குள் மந்திரம் போக்கற நோக்கிடில்
ஆவிக்குள் மந்திரம் அங்குச மாமே 959

இம் - எனின், திரு ஐந்தெழுத்து உபகாரப்படும் முறைமையை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : நம்மால் சேவிக்கப்படுகின்ற மந்திரங்கள், எல்லாத் திசைகளிலும் வியாபித்துச் செல்லும். உயிருக்கு உள்ளப்படுகின்ற மந்திரமாவன, ஆதாரங்கள்

ஆறிலும் விளங்குகின்ற அக்கரங்கள். ஆறு ஆதாரங்களிலுமுள்ள, நான்கு இதழ்த்தாமரை முதல் ஆயிரம் இதழ்த் தாமரைவரை உள்ள மலருள் தங்கிய மந்திரங்களைக் குற்றமற ஆராயின், ஆன்மாவிற்குச் சாதனமாக உள்ளப்படுகின்ற திருவைந்தெழுத்தாகிய மந்திரமே மலக்களிற்றை அடக்கும் அங்குசமாம் என்றவாறு.

சேவிக்கும் மந்திரம் திசைபெறச்செல்லும் எனக் கூட்டுக. இதன் கருத்து, நம்மால் தியானிக்கப்படுகின்ற மந்திரம எல்லாத் திசைகளிலும் வெற்றியை உண்டாக்கும் என்பதாம்.

உள் மந்திரம் - நினைக்கப்படுகின்ற மந்திரம். ஆறு ஆதாரங்களிலும் விளங்குகின்ற அக்கரங்களே ஆவிக்கு உள்ளப்படும் மந்திரங்களாம். பூ என்றது ஆதாரங்களில் விளங்குகின்ற தாமரைகளை. போக்கறநோக்குதலாவது மறப்பும் நினைப்பும் மாறி வராதபடி ஆதாரங்களையும், அவற்றின் அதிதெய்வங்களையும், அக்கரங்களையும் எப்பொழுதும் இடைவிடாது எண்ணுதல்.

ஆவிக்கு உள் மந்திரம் - உயிருக்குள்ளே உயிர்க்குயிராக விளங்குகின்ற சிவமந்திரம். அதனால் மலநீக்கம் விளைதலின் மலத்தைக் களிறாக எண்ணி ஏகதேசவுருவகமாக மந்திரத்தை அங்குசமாக உருவகித்தார். (76)

அருவினில் அம்பரம் அங்கெழு நாதம்
பெருகு துடியிடை பேணிய விந்து
மருவி யகார சிகார நடுவாய்
உருவிட ஆறு முறுமந் திரமே 960

இ-ம் - எனின், திருவைந்தெழுத்தை உச்சரிக்கும் முறைமையும் அதனாலுறும் பயனும் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : அருவாயிருக்கின்ற ஆகாயத்தில் எழுகின்ற நாதமும், கருணைபெருகுகிற உடுக்கைபோலும் இடையினையுடைய உமாதேவியார் விரும்பி அமர்ந்த விந்துவும் கூடிச் சிகாரத்தை நடுவாக அமைத்து, ஆன்மாவானது உரு ஏற்றச் சிவானந்தத் தேன் ஊறும் என்றவாறு.

ஆகாயம் அருவாய் ஏனைய பூதங்களுக்கு விரிந்து இடங்கொடுத்து நிற்பது ஆகலின், அருவினில் அம்பரம் என்று அருளியது.

அங்கு எழுநாதம் என்றது, இயல்பாகவே எழுகிற நேர்கோட்டு வடிவாகிய நாதம்; அகாரமுமாம். உகாரமாகிய புள்ளி சிவசத்திக்கு இருப்பிடமாதலின் 'பெருகு துடியிடை பேணிய விந்து' என்றருளியது. அம்பரம் சிவமும், நாதம் அதன் தத்துவமும், துடியிடை சத்தியும், விந்து அதன் தத்துவமுமாய் அமைதல் காண்க. மருவி சிகாரம் நடுவாய் என்றது, நாத பிந்து சேர்க்கையாகிய பிரணவத்தோடு கூடி, சிகாரத்தை நடுவாகக்கொண்டு உச்சரிக்க என்றது. ஓம் நமசிவாய என்று உச்சரிக்க என்றவாறு. உருவிடுதல் – செபித்தல். யகாரம் உருவிட - ஆன்மா உருவேற்ற.

உறும் மந்திரம் ஊறும் – அதனுள் உற்ற தேன் சுரக்கும். மந்திரம் என்பது கள்ளுக்கும் தேனுக்கும் பெயராதலின் அவற்றிற்கேற்ப ஊறும் என வினை

கொள்ளவைத்தார். சிவானந்தர், சிவனுடையதாய்ச் சீவனுக்குள்ளே ஊறுவதாகலின் ஊறும் என்றார். (77)

விந்துவும் நாதமும் மேவி யுடன்கூடிச்
சந்திர னோடே தலைப்படு மாயிடில்
அந்தர வானத் தமுதம்வந் தூறிடும்
அங்குதி மந்திரம் ஆகுதி யாமே 961

இம் - எனின், பிரணவந் தியானத்தால் அமுதம் சுரக்கும் என்பது அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : சத்தியும் சிவமும் விரும்பி ஒன்று கூடி, ஆக்ஞாசக்கரத்தைச் சென்று அணையுமாயின் பிரம கபாலமாகிய ஆகாயத்தினின்றும் அமுதம் ஊறும்; அங்கே தோன்றுகின்ற மந்திரமாகிய பிரணவம் ஓமத் திரவியமாம் என்றவாறு.

விந்து – சக்தி; நாதம் – சிவம். சந்திரன் – சகஸ்ரார மாய சந்திரமண்டிலம். தலைப்படுதல் – கூடுதல். அந்தர வானத்து அமுதம் – மதிமண்டலத்துள்ளிருந்து ஊறு கின்ற அமுதம். அங்கு உதி மந்திரம் – பிரமரந்திரத்து மோதி வெளிப்படும் பிரணவம். அமரர் விரும்ப நெய்யை ஆகுதிசெய்தால் தீ மேலோங்கி எழுதல் போலப் பிரணவமந்திரம் மூலத்திலிருந்து மேலெழு கின்றது என்பதாம். (78)

ஆறெழுத் தோதும் அறிவார் அறிகிலார்
ஆறெழுத் தொன்றாக ஓதி உணரார்கள்
வேறெழுத் தின்றி விளம்பவல் லார்கட்கு
ஓரெழுத் தாலே உயிர்பெற லாமே 962

இ-ம் - எனின் : திருவைந்தெழுத்தை ஒன்றில் ஒன்றடக்கி, சிவாக்கரத்தை மட்டும் ஓதவல்லார் உறு பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : பிரணவத்தோடு கூடிய சீபஞ்சாக்கர மாகிய ஆறெழுத்தையும் ஓதும் ஞானத்தை அறிய மாட்டாதவர் யார் ? ஆனால் ஆறெழுத்தையும் ஒன்றாகவே ஓதி உணரமாட்டார்கள். வைகரியாக அன்றி அதிசூக்குமமாக ஓதவல்லார்க்குச் சிவ எழுத்தாகிய ஒன்றினாலேயே ஆன்ம ஆக்கத்தை அடையலாகும் என்றவாறு.

ஆறெழுத்து – ஓம் நமசிவய என்பது. ஆறு எழுத்து ஓதும் அறிவு அறிகிலார் ஆர் எனக் கூட்டிப் பொருள் காண்க, இதன் கருத்து தூலபஞ்சாக்கரத்தை ஓதும் அறிவு எல்லோராலும் எளிதில் இயலுவது ஒன்றும்.

ஆறு எழுத்து ஒன்றாக ஓதியுணரார்கள் ; அங்ஙனம் உணர்த்தலாவது நகார மகாரங்களை மாயையுளடக்கி, மாயையை வகாரமாகிய சத்தியுளடக்கி, யகாரமாகிய உயிர் மலம் மாயை கன்மங்களற்றதாயவழி அதனைச் சிகார வகாரங்களாகிய சிவசத்திகளினிடமாக அருக்க னொளியில் விளக்கொளிபோலக் கலக்கச்செய்து, சத்தி யையும் சிகாரமாகிய சிவத்துளடக்கிச் ' சி ' மட்டும் எல்லாம் அடங்க நிற்கும் பரசிவ நிலையை ஆராய்ந்து தெளிதலாம். இது எல்லார்க்கும் எளிதில் இயைவதன் றாகலின் ஓதி உணரார்கள் என்றது.

முயற்சிப்பிறப்பானும், இடப்பிறப்பானும் எழுத் தொலிகள் வேறுபடுதலால் விளையும் வைகரிவாக்கு

தன்செவிக்கும் கேளாவண்ணம் நுணுகித் தியானிக்க வல்லார்க்கு என்பார் வேறெழுத்தின்றி விளம்பவல்லார்க்க என்றருளினர். வல்லார்க்க என்பது அங்ஙனம் விளம்பமாட்டாமையை உணர்த்தி நின்றது.

ஓரெழுத்து – 'சி' என்னும் சிவாக்கரம். உயிர் பெறுதலாவது உயிர் எய்தவேண்டிய உறுதியைப் பெறுதல். ஆகவே மலமாயைகளைக் கெடுத்த உயிர் சத்தி சிவத்தில ஒடுங்கி, சத்தியும் சிவத்தில் ஒடுங்கி நிற்கும் நிலையைத் தியானிக்கில் உயிர் எய்துதற்கரிய இன்பநிலை எய்தும் என்பதாம்.

இதற்கு வேறு கூறுவாரும் உளர். அதற்கேற்ற சொற்களில்லாமையைக் கண்டுதெளிக. (79)

**ஓதும் எழுத்தோ டுயிர்க்கலை மூவைஞ்சும்**
**ஆதி எழுத்தவை ஐம்பதோ டொன்றென்பர்**
**சோதி எழுத்தினில் ஐயிரு மூன்றுள**
**நாத எழுத்திட்டு நாடிக்கொள் வீரே. 963**

இ-ம் - எனின்: ஐம்பத்தோரக்கரங்களும் ஆறு ஆதாரத்தில் அடங்குமுறை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: முதற்கண் ஓதப்படும் எழுத்தோடு, உயிர் எழுத்துக்கள் பதினைந்தும், முதல் எழுத்துக்களாகிய மெய்யெழுக்களோடும் பிரணவத்தோடும் கூட ஐம்பத்தோரக்சரமாம் என்பர். சோதிவடிவான பிரணவத்தின்கீழ் ஆதாரங்கள் ஆறுள்ளன. அவற்றை ஒலியெழுத்தாகச் செய்து அறிந்துகொள்ளுங்கள் என்றவாறு.

ஓதும் எழுத்து முதற்கண் அங்காத்தலாகிய தொழில் ஒன்றாலேயே ஓதப்படும் எழுத்தாகிய அகாம். அதனோடு, உயிர்க்கலை முறைவந்து சூ முதல் சு: வரையுள்ள பதினைந்தெழுத்துக்கள் ஓதும் எழுத்தோடு உயிர்க்கலை முறைவந்து சு முதல் சு: வரையுள்ள பதினாறு எழுத்துக்கள். உயிர் எழுத்தைக் கலை என்றது அவையே மெய்யெழுத்துக்களுக்கு விளக்கம் தருவதாகலின். ஓதும் எழுத்து என்று அகாரத்தைப் பிரித்தது எல்லா எழுத்துக் களுக்கும் உடனாய் எல்லா உயிர்களுக்கும் ஒன்றாய்ச் சிவம் போல இருத்தலின். ஆதி எழுத்து – முதலெழுத்து. ' உயிரும் உடம்புமா முப்பதும் முதலே ' என்றபடி நூல் முற்பகுதியில் கூறிய உயிரெழுத்தொழிய, பாரிசேடத் தால் பெறப்பட்ட முதலெழுத்து. அவை கம்முதல் க்ஷ வரையுள்ள முப்பத்து நான்காம். ஆக ஐம்பது. இதனுடன் ஒன்று பிரணவம் ; ஆக ஐம்பத்தொன்று.

மூலாதாரமுதல் ஆறு ஆதாரங்களிலும் ஐம்பது எழுத்துக்கள் நிற்குமுறை வருமாறு :

மூலாதாரம் வ ஶ ஷ ஸ ஆக 4; சுவாதிட்டானம் வ ஹ ௐ ய ர ல ஆக 6 மணிபூரகம் ; ட ட ண த ய ஊ ய ந வ ம ஆக 10 ; அநாகதம் க வ ம வ ஊ வ ஊ ஜ ஞ ஞ ட ட ஆக 12 ; விசுத்தி சு முதல் சு: வரையுள்ள ஆஞ்ஞை : 16 ஹ க்ஷ ஆக 2; அதற்குமேல் திரிகோணம் ஓம என்ற பிரணவம் ஒன்று.

சோதி எழுத்து – ஆஞ்ஞையென்ற மேலாதாரத் தின்மேல் திரிகோணமிருக்கிறது; அதில் சோதி வடி வான பிரணவம இருக்கிறது. இதுவே அந்தராத்மா.

இது தீப சோதிபோல மூலாதாரம் முதல் பிரமரந்திரம் வரை ஒளியைச் செய்கிறது.

நாத எழுத்து இட்டு நாடிக்கொள்வீர் : இதனை ஒலியெழுத்துக்களாக உச்சரித்து அந்தந்த ஆதாரங்களில் நிலைபெறுத்தித் தியானியுங்கள் என்பதாம். இதன் கருத்து, சோதி (ஒளி) யெழுத்தை நாத (ஒலி) எழுத்தாகத் தியானிக்க எனச் சாதகராவார்க்கு உணர்த்தியவாறும். இம்மரபு அறியாதார் இம்மந்திரத்திற்கு வேறு உரைகூறி இடர்ப்படுவர். இவற்றிற்குரிய பிரமாணங்கள் வடமொழி யோக நூல்களில் உள்ளன. (80)

**விந்துவி லுஞ்சுழி நாதம் எழுந்திடப்**
**பந்தத் தலைவி பதினறு கலையதாய்க்**
**கந்தர வாகரங் காலுடம் பாயினள்**
**அந்தமும் இன்றியே ஐம்பத்தொன் றுயதே. 964**

இம் - எனின் : மாதிருகா மந்திரங்களே தேவியின் திருவுரு என்றல் நுதலிற்று.

இ - ள் : சுழி வடிவான விந்துவிலும் நாதம் எழ, சிருட்டி யுன்முகமாகிய சத்தி பதினறு கலைகளாக, கழுத்து வாய் கை கால் முதலான உடம்பாயினள். அக்ஷரங்கள் ஐம்பத்தொன்றாயின என்றவாறு.

சுழி விந்துவில் என மாறுக. விந்து (O) சுழிவடிவாயது. நாதம் (—) நேர்கோட்டு வடிவாயது. இரண்டும் இணையும்போது 'உ' ஆகிறது. உ! இது சக்தியட்சரம். விந்து நாத இணைப்புச் சக்தியாக, அது பதினறு கலையாக, அவைகளே அம்மைக்கு அவயவங்களாயின எனபதாம்.

பதினறுகலைகளாவன உயிர் ஒன்றும், ஐவர்க்கம் ஐந்தும். ய ர ல வ ள ஷ ஸ ஹ க்ஷ ஓம் என்பவை ஒவ்வொன்றுகப் பத்தும் ஆகப் பதினறு கலைகள். அக்கரங்களைக் கலையென்றது, ஞானவிளக்கம் செய்தலின். யகாராதி பத்தும் இனமின்றித் தனியெழுத்துக்களே ஒவ்வொரு கலையாயின என்றுணர்க. (81)

ஐம்ப தெழுத்தே அனைத்தும்வே தங்களும்
ஐம்ப தெழுத்தே அனைத்தாக மங்களும்
ஐம்ப தெழுத்தேயு மாவ தறிந்தபின்
ஐம்ப தெழுத்தும்போய் அஞ்செழுத் தாமே. 965

இ-ம் - எனின் : எல்லாம் ஐம்பதெழுத்துக்களே ; ஐம்பதும் ஐந்தாகும் என்பது உணர்த்திற்று.

இ - ள் : பிரணவம் ஒழிந்த ஐம்பதெழுத்துக்களே வேதங்களும், ஆகமங்களும், அனைத்தும் ; இவ்வைம்பதெழுத்தின் கண்ணும் பொருந்திய பயனை அறிந்தபின், இவைகள் அகன்று ஐந்தெழுத்தாகும் என்றவாறு.

ஐம்பதெழுத்து ஏயும் ஆவது அறிந்தபின் எனப் பிரிக்க, வேதசிவாகமங்களாக விரிந்துநின்ற ஐம்பது எழுத்துக்களாலாய பயனையறிந்தபின், அவை அடங்கி அ, உ, இ, எ, ஒ எனவும் திருவைந்தெழுத்தாகவும் நிற்கும் என்பது கருத்து. (82)

அஞ்செழுத் தாலைந்து பூதம் படைத்தனன்
அஞ்செழுத் தாற்பல யோனி படைத்தனன்
அஞ்செழுத் தாலிவ் வகலிடந் தாங்கினன்
அஞ்செழுத் தாலே அமர்ந்துநின் றனே. 966

இம் – எனின், ஐந்தெழுத்தால் அகிலமும் விளைந் தமை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : ஐந்தெழுத்துக்களால் ஐம்பூதங்களும், பல யோனிகளும் படைத்தனன்; அவற்றாலேயே இவ் வுலகத்தைக் காத்தனன்; அவற்றுள் ஒன்றாயும் அமர்ந் தனன் என்றவாறு.

ஐந்தெழுத்துக்களில் சிகார வகாரங்கள் சிவமும் சத்தியுமாம் ஆதலின் அவ்விருவரும் முதலாக நின்று மகாரமாகிய மாயையிற்கூட்டி யகாரமாகிய உயிர்களை நகாரமாகிய திரோதாயியைக்கொண்டு மறைப்பித்து வினைபபோகம் ஊட்டிக் காத்துவந்தலின் இங்ஙனம் கூறினர். பலயோனி - எண்பத்துநான்கு நூறாயிரமான பிறவிவேறுபாடு. பூதம படைத்தனன் என்றது உலகம் படைத்ததை; யோனிபடைத்தனன் என்றது யோனி யில் பிறக்கப்படைத்தான் என உயிர்களை உடலொடு கூட்டிப் படைத்தமையை. உட்லெடுத்த உயிரும் உலகும் கூடவே போகம் படைத்தமையும், அகலிடம் தாங்கினன் என்றமையால் உலகம் தமகால எல்லை வரை அழியாமல்தாங்கிய திதியும், அமர்ந்துநின்றான் என்பதால் அஞ்செழுத்தே தமது திருமேனியாகக் கொண்டு எல்லாவற்றையும் தம்முள் அடக்கித் தான் மட்டுமாக அமர்ந்து நின்றான் எனச் சங்காரமும் கூறப் பட்டமை காண்க. (83)

**வீழ்ந்தெழ லாம்விகிர் தன்திரு நாமத்தைச்**
**சேர்ந்தொழி யாமல் தொடங்கும் ஒருவற்குச்**
**சார்ந்த வினைத்துயர் போகத் தலைவனும்**
**போந்திடும் என்னும் புரிசடை யோனே** 967

இ-ம் - எனின் : திருவைந்தெழுத்தால் போகமும் மோட்சமுமாம் எனல் நுதலிற்று.

இ-ள் : விகிர்தனுகிய இறைவன் திருநாமமாகிய திருவைந்தெழுத்தை, மனஞ்சோர்ந்துவிடாமல் செபிக்கும் ஒருவற்கு, போகத்தைத் துய்த்தலாகிய வீழ்தலும் அதனின்று மீளுதலாகிய எழுதலும் ஆம், புரிசடையோனுகிய தலைவனும், ஆன்மாக்களைநோக்கி 'உங்களைச் சார்ந்துள்ள வினைகளும், அவற்ருல் வினையும் துன்பமும் நீங்க (வீட்டுலகிற்கு) வாருங்கள்' என அழைப்பார் என்றவாறு.

போகம், விருப்பத்தால் விளைவதாகலின் வீழ்ந்து என்ருர். வீழ்தல் - விரும்புதல், எழல் - போகத்தினின்று மீளல்; முத்தி. ஆகவே தூல, சூக்கும பஞ்சாக்கரங்கள் போக மோட்சங்களைத் தருவதாம் என்பது. சோர்ந்து - மறந்து. "நாதன் நாமம் நமச்சிவாயவே" என்பதும் "நான் மறக்கினும் சொல்லுநா நமச்சிவாயவே" என்பதும் ஈண்டு இணைத்து எண்ணத்தக்கன. புரிசடையான் - ஐந்து, ஏழு, ஒன்பது, பதினொன்று, பதின் மூன்று புரிகளாகப் பிரிந்துள்ள சடையை யுடையவன். சடை - திருவாதிரைநாள். புரிசடையான் என்பதனைச் சடைபுரியான் என விகுதி பிரித்துக்கூட்டித் திருவாதிரை நாளை விரும்புதலையுடையவன் எனவும் கூறலாம்.

சீபஞ்சாக்கர செபத்தால் வினைகெட, இறைவன் போந்திடும் (வாரும்) என்னும் என்பதாம். இதனுல் இம்மை மறுமை இன்பங்களும் உண்டாம் என்பது உணர்த்தப்பட்டது. (84)

**உண்ணு மருந்தும் உலப்பிலி காலமும்**
**பண்ணுறு கேள்வியும் பாடலு மாய்நிற்கும்**
**விண்ணின் றமரர் விரும்பி அடிதொழ**
**எண்ணின் றெழுத்தஞ்சு மாகிநின் றனே. 968**

இம் - எனின், சீபஞ்சாக்கர வடிவாய் நிற்கும் சிவன் மருந்து முதலிய எல்லாமாக உதவுவன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : சுவர்க்கத்திலிருக்கின்ற அமரர்கள் வந்து அன்பு பூண்டு அடிவீழ்ந்து வணங்க, பாசங்களினீங்கிய ஆன்மாக்களின் உள்ளத்தினின்று சீபஞ்சாக்கர வடிவாக நிலைபெற்ற சிவம், அவர்கள் உண்ணுகிற அமுதமாயும், வற்றாத காலதத்துவமாயும், இசையொடு கூடிய வேதமாயும், பண்ணொடுகூடிய பாடலாயும் நிற்பன் என்றவாறு.

அவரவர் பரிபாகநிலைக்குத் தகப் பரமனிருப்பன் என்பதை, பசுபுண்ணிய பேலீட்டால் சுவர்க்காதி பதவிகளைப்பெற்ற விண்ணவர்கள் விரும்பி அடிதொழு வாராயின் அவர்களுக்கு அமுதாய் இருப்பன் : காய சித்தியாகிய யோகப்பயனை விரும்புவார்க்கு அழிவற்ற காலமாயிருப்பன்; விதிமார்க்கங்களை விரும்புவார்க்கு வேதமாயிருப்பன் : பக்திமார்க்கத்தை விரும்புவார்க்குப் பண்ணுறு பாடலாக இருப்பன் என உணர்த்தியவாறு.

இங்ஙனமன்றி அமுதாய் - அதன்பயனாய அமரத்வ மாயும், கேள்வி அறிவாய் - அதன் காரணமாய பண்ணுறு பாடலாகவும் இருப்பன் எனலுமாம். அமுது

உண்டவர் சாவார் ஆதலின் மருந்தும் காலமுமாய் நிற்கும் என்றருளியது. விண்ணின்றமரர் என்றது அமரர்கள் தாம் அடைந்த பதவியில் நீடித்திருக்க மருந்து உண்டு உலப்பிலாக்காலம் வாழ விழைவர்; ஏனையோர் கேள்வியும் பாடலுமாக அனுபவித்து அன்பு நெறியில் தலைசிறக்க எண்ணுவர். இந்த இருவகையார்களும் எண்ணியாங்குச் சீபஞ்சாக்கர செபம் பயனளிக்கும் என்பதாம். (85)

**ஐந்தின் பெருமையே அகலிட மாவதும்**
**ஐந்தின் பெருமையே ஆலய மாவதும்**
**ஐந்தின் பெருமையே யறவோன் வழக்கமும்**
**ஐந்தின் வகைசெயப் பாலனு மாமே.** 969

இம் – எனின், சீபஞ்சாக்கரப் பெருமையைத் தெரிவித்தல் நுதலிற்று.

இ - ள் : இவ்வகன்ற உலகம் மாற்றமும் அழிவு மின்றி நிலைபெற்று வருவது, சீபஞ்சாக்கரப் பெருமை யாலேயேயாம். ஆலயங்கள் அமைவது சீபஞ்சாக்கரப் பெருமையாலேயோம். தரும சொரூபியாயபெருமான் கருணை வழங்குவதும் சீபஞ்சாக்கரப் பெருமையாலே யாம். ஆதலால், சீபஞ்சாக்கரத்தைச் செபிக்குமுறை தெரிந்து செபிக்க அவனே பரிபாலகனாக எழுந்தருளுவன் என்றவாறு.

ஆலயமாதலாவது, கருப்பக்கிருகம் சிகரம்; அர்த்த மண்டபம் வகரம்; இடபம் எழுந்தருளிய மகாமண்டபம் யகரம்; கூத்தப்பிரான் இருக்கும் மன்றம் நகரம்; பலிபீடம் மகரம். ஆக கருவறை முதல் பலிபீடம்

வரை சீபஞ்சாக்கரவடிவாதலை ஓர்க. பாலன் – காப்பவன். வகைசெய்தலாவது ஓது முறை அறிந்து ஓதுதல். (86)

**வேரெழுத் தாய்விண்ணாய் அப்புற மாய்நிற்கும்**
**நீரெழுத் தாய்நிலந் தாங்கியும் அங்குள்ள**
**சீரெழுத் தாயங்கி யாயுயி ராமெழுத்**
**தோரெழுத் தீசனும் ஒண்சுட ராமே.** 970

இம் - எனின், அகாரவழி வினாய இறைவன் அக்கரங்கள் அனைத்துமாய் ஒண்சுடருமாவன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: பிரணவமாயும், ஆகாயபீசமாயும், அதற்குப்பின எண்ணப்படும் முறையின் நிற்கும் வாயு, தேயு, அப்பு பீசங்களாயும், நிலமாகத் தாங்கிநிற்கும் பிருதிவி பீசமாயும், ஐம்பூதங்களிலும் வியாபித்துள்ள சிறப்பெழுத்தாகிய சிகாரமாயும், அதற்கு உடலாக வுள்ள வகாரமாயும் நின்றுஒண் சுடராவன் என்றவாறு.

உயிராம் எழுத்து ஓரெழுத்து ஈசன், ஆய் ஒண் சுடர் ஆம் எனக்கூட்டுக.

உயிராம் எழுத்து ஓரெழுத்து – உயிரெழுத்துக்கள் இயங்குதற்குக் காரணமாய் எல்லாவற்றோடும் கலந்துள்ள ஓரெழுத்தாகிய அகரம். அகரம் ஈசன். சிவனே அகரமாதலையும், நிறைந்திருத்தலையும் 'அகரவுயிர் போலறிவாகி யெங்கும் நிகரிலிறை நிற்கும் நிறைந்து' எனும் திருவருட்பயன் கொண்டு தெளிக.

வேராய்: வேர் – மூலம். வேராய் – மூல எழுத்தாகிய பிரணவமாகி. பிரணவமே எல்லாவற்றிற்கும்

மூலமாதலின் இங்ஙனம் அருளியது. விண்ணும் - ஆகாய பீசமாகிய ஹம். அப்புறமாய் நிற்பா ரீரெழுத்தாய் எனபதனுள் ஆகாயத்தையடுத்து அதன்பின்னிற்பவை யாகிய வாயு, தேயு, அப்பு பீசங்கள் அறிவிக்கப்பெற்றன. நிலம் தாங்கி-நிலமாகிய அனைத்தையும் தரித்து நிற்பதாய பூதம். 'மண் கடினமாய்த் தரிக்கும்' என்ற இலக்கணம் தெளியநின்றது இச்சொற்றொடர். அங்குளள சீரெழுத் தாய் - ஐம்பூதங்களிலும் தனித்தனியே வியாபித்துள்ள சிறப்பான எழுத்து, 'சி' என்னும் சிவாக்கரம்.

அங்கியாய் : அங்கத்தையுடையது அங்கி. அங்கி யாய் - சத்தியக்கரமாய். சிகாரம உடலாய். வகாரம் உயிராய் என்றவாறு.

ஒண் சுடர் ஆம் - ஒளிபொருந்திய சுடர் ஆவன் ; என்றது சிவம் சுடரும், சத்தி ஒளியுமாக இயைந்து இருவரும் வேறறியவொண்ணாத நிலையில் நிற்றலின் ஒண சுடராய் இயைந்து ஒன்றாய் நிற்பர் என்பதாம்.

இரண்டாமடியிறுதியை 'அங்குளன்' எனப் பாட மோதி, பிரணவமாய், ஐம்பெரும்பூத எழுத்துக்களாய் அவற்றிற்கு அப்பாலுமாய் நிற்பான். இவ்வெழுத்துக்களாக நின்றியக்கும் சிவன ஒளிப்பிழம்பினன் என்று முடிபு காணாது உரை வகுப்பாரும், உயிராம் எழுத்து அன்ன மந்திரம் ஒண்சுடர் துரியாதீதசிவம் என உரை கூறுவாரு மாகப் பலருளர்.

எங்ஙனமாயினும் இத்திருமந்திரம், ஈசன் ஓரெழுத் தாய்த் தோன்றிப் பலவாய் விரிந்து, இரண்டாய் அடங்கி,

ஒண்சுடராய் (அதாவது சிவசத்தி அபின்னமாய் நிற்பன்) என்ற மந்திராவதார உண்மையைப் புலப் படுத்துவது என்பது தெளிவு. உண்மைவிளக்கத்திலும் பஞ்சபூத பீசங்கள் ஆகாயமுதல் முறையே ஹம், யம், ரம், வம், லம் என்பனவாதலையறிக. ஆகமத்துணிவும் இதுவே. (87)

**நாலாம் எழுத்தோசை ஞாலம் உருவது**
**நாலாம் எழுத்தினுள் ஞாலம் அடங்கிற்று**
**நாலாம் எழுத்தே நவிலவல் லார்கட்கு**
**நாலாம் எழுத்தது நன்னெறி தானே.** 971

இம் – எனின் : வகாரத்தைச் செபிப்பார்க்கு வரும் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : நம் முதலாக ஓதும் சீபஞ்சாக்கரத்துள் நாலாமெழுத்தாகிய வகார ஓசை உலக உருவானது. ஆதலால் அவ்வெழுத்துள்ளே உலகம் அடங்கிற்று. அதனைச் செபிக்க வல்லார்க்கு அதுவே தாரகமாய் நின்று நன்னெறி காட்டுவதாம் என்றவாறு.

நாலாம் எழுத்து ஞாலவுருவது என்றது மாயை சக்திகாரியமாதலானும், அதுவே உலகவுருவாய் நிற்ற லானும் என்க. இது சிருட்டி கூறியது. தோன்றிய இட்த்து ஒடுங்குதல் நியமமாதலின் பின்னடி நாலாம் எழுத்தினுள் ஞாலம் அடங்கிற்று என்றருளியது. நாலாம் எழுத்தது நன்னெறிதானே - சத்தியாகிய திருவருளே நன்னெறியாகும் என்பது உணர்த்தியவாறு. திருவருள் வழிகாட்டவில்லையாயின் நாதனைக் கூடுவதெப்படி யென்க. அதிகாரிபேதங்கருதி நம்முதலாம் முறை கொண்டு இவ்வண்ணம் அருளப்பெற்றது. (88)

**இயைந்தனள் ஏந்திழை என்னுள மேவி**
**நயந்தன ளங்கே நமசிவ என்னும்**
**பயந்தனை யோரும் பதமது பற்றும்**
**பெயர்ந்தனன் மற்றும் பிதற்றறுத் தேனே, 972**

இம் - எனின், திருவருள் பெற்றமையால் காமியப் பயனைக்கருதும் நிலையும் அற்றதென்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : சீபராசத்தி ஆன்மாவாகிய அடியேன் உள்ளத்தை விரும்பிப் பொருந்தினுள் ; அதனையே விரும்பி அங்கே அமர்ந்தனள்; அதனால் நமசிவ என்னும் காமியங்கருதிச் செபிக்கும் நிலைக்கண்ணுள்ள பற்றும் நீங்கினேன்; வேறு பிதற்றல்களையும் ஒழிந்தேன் என்றவாறு.

முன் திருமந்திரத்தில் கூறியாங்கு நமசிவய என்பதில் நாலாவது எழுத்தாகிய வகாரத்தைச் சிந்தித்த அடியேனுள்ளத்தைப் பராசக்தி விரும்பியமர்ந்தாள் ; அதனால் காமியங்கருதிச் செய்யப்படும் நம் முதலான மந்திரப்பற்றும் அற்றது; காமியம்கருதிப் பிறதெய்வங்களைப்பற்றிப் பிதற்றும் பிதற்றல்களும் நீங்கின என்க. நம்முதலாக ஓதுவார் உயர வகாரத்தைச் சிந்திக்க என்றும், சிந்தித்தால் வருபயனிது வென்றும் விளக்கியருளியவாறு. நமசிவ என்பதனுள் யகரம் இல்லையே எனின், 'என்' என்றதால் ஆன்ம எழுத்தாகிய யகரம் குறிக்கப்பெற்றது. தியானிப்பவன் ய, தியானிக்கப் படுபொருள் சிவ, கழன்ற பொருள் ந ம க்களாகிய மலங்கள். ஆகவே நிஷ்காமிய இச்சை விளைந்தது என்பதாம்.

(89)

ஆமத் தினிதிருந் தன்ன மயத்தினை
ஓமத்தி லேயுதம் பண்ணும் ஒருத்திதன்
நாம நமசிவ என்றிருப் பாருக்கு
நேமத் தலைவி நிலவிநின் றாளே. 973

இம் - எனின், நமசிவ எனத் தான் ஒன்றிநின்று தியானிப்பார்கட்குச் சத்தி வெளிப்படுவாள் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : அரிசியினிடமாக இனிது வீற்றிருந்து அன்னமயமாகப் பக்குவமாகச்சென்றதை, ஓமகுண்டமாகிய வயிற்றுத்தீயில் ஆகுதி பண்ணுகின்ற பராசத்தியின் அடிமைகளாகிய நாம், அந்த நமசிவ என்று, தானற்று நிற்பார்க்கு, நியமத் தலைவியாகிய பராசத்தி விளங்குவாள என்றவாறு.

ஆமம் - அரிசி. ஆமத்தினிதிருந்து - உண்ணும் உணவில் சுவையாக ஒன்றியிருநது. அன்னமயத்தினை - பக்குவமான அன்னமயத்தை. ஓமம் - வயிறு (அன்னு சயம்) சத்தியே வயிற்றில் அக்கினியாக இருந்து அன்னத்தைச் சீரணிக்கச்செய்து ஆனமாக்களைக் காக்கிருள் எனபது. ஒருத்திதன்நாம் - சத்தியின அடிமைகளாகிய நாம்; எனறது ஆன்மாக்களை. அநமசிவ என்றது ஆன்மாக்களாகிய யகரம் அந்நான்கனுள் சித்தினிடமாக ஒன்றிப்போக என்பதும் ஆம்.

நேமத்தலைவி - நியதிகட்குத் தலைவியாகிய அன்னை. நிலவி நின்ருள் - ஆன்மாத் தோன்ருதபடித் தானே (எல்லாமாய்) முழுதுமாய்விளங்கினுள என்பதாம். (90)

**பட்டம் பரிசே பரமஞ் செழுத்ததின்**
**இட்ட மறிந்திட் டிரவு பகல்வர**
**நட்டம தாடு நடுவே நிலயங்கொண்**
**டட்டதே சப்பொரு ளாகிநின் றாளே. 974**

இம் - எனின், ஐந்தெழுத்தே எல்லாவற்றினும் மேலானது; அதனை அன்புடன் ஓதப் பராசத்தியருள் கிட்டும் என்பதறிவித்தல நுதலிற்று.

இ - ள்: பட்டமும் அதற்காகப் பெறும் பரிசினும் மிக மேலானது சீபஞ்சாக்கரம்; ஆதலால், சீபஞ்சாக் கரத்தில் நடுவணதாய யகாரத்தை இடமாகக் கொண்டு அட்டமூர்த்திகளின் ஒளிவடிவாய் நிற்கும் அன்னை நடனமாடுவள் என்றவாறு.

பட்டம் பரிசே பரம் அஞ்செழுத்து, அதின் இட்டம் அறிந்திட்டு, இரவு பகல வர நடுவே நிலயங்கொண்டு அட்டதேசப் பொருளாகி நின்றாள் நட்டமதாடும் எனக்கூட்டுக.

பட்டம் - கல்வி தறுகண் அஞ்சாமை கொடை முதலியவற்றால் பெறும் பட்டங்கள். அவை எட்டி, காவிதி முதலியன. பரிசு – மோதிரம் முதலிய பரிசுகள். அவற்றினும் பரம் ஐந்தெழுத்து என்றது அவற்றை உயர்வாகக் கருதியன்று. பின்னையோ எனின், உலகார் நிலையில் தாமிருந்து, அவர்கள் நிலைக்கும் பட்டம் பரிசு களினும் அவற்றானாய பயனினும் சீபஞ்சாக்கரமும் அதனால் எய்தும் பயனும் மேலானது என்று உணர்த்திய வாறு. பட்டபரிசு எனப்பாடங்கொண்டு அடைந்த சிறப்பும் சீரும்எனப்பொருள் கொள்வாரும் உளர்.

அதின் இட்டம் அறிந்திட்டு நட்டமதாடும் என முடிக்க. இட்டம் அறிந்திட்டு - அதில் இடையீடில்லாத பற்றிருத்தலை அறிந்து. இரவு பகல் வர - இருள் நீங்கி ஒளியுண்டாக. அறியாமைநீங்கி ஞானம்பெற என்பதாம். இராப்பகல் என்ற வேறுபாடில்லாமல் எப்போதும் எனலுமாம்.

நடுவே நிலயம்கொண்டு - சீபஞ்சாக்கரத்தில் நடுவணவாகிய யகாரத்தைத் தமது நிரந்த நிலையமாகக் கொண்டு : என்றது ஆன்மாவைக் கலந்து நின்று நட்டம் ஆடுவள் என்றதாம். இதனை உண்மை விளக்கத்து, இறைவன் உயிரின்கண், கலந்துநின்று பிறப்பு அறுத்தற்பொருட்டாக ஆடல்புரிவதையே திருவைந் தெழுத்துணர்த்தும் என்பது கொண்டு உணர்க. அட்ட தேசப்பொருள் - பூதம் ஐந்தும், யமானன் சூரியன் சந்திரன் என்பன மூன்றும் ஆகிய எட்டு மூர்த்திகளும் ஒருவடிவானவை. அவையாகி நிற்பாள் அன்னை என் பதாம். மண்ணும், நீரும் ஒளியுடைமை பௌதிக ஞானத்தாரும் கண்கூடாகக் காண்பர். இப்பாடலை இடைச்செருகலாகக்கொண்டு கழிப்பர்சிலர். பொருட் சிறப்புக்கொண்டு அது ஏலாமையுணர்க. (91)

**அகாரம் உயிரே உகாரம் பரமே**
**மகார மலமாய் வருமுப்ப தாறிற்**
**சிகாரஞ் சிவமாய் வகாரம் வடிவமாய்**
**அகாரம் உயிரென் றறையலு மாமே** 975

இம் - எனின் : பிரணவபஞ்சாக்கர வியட்டி சடப் பொருள்களாயும், சீபஞ்சாக்கரம் சித்துப்பொருளாயும் விளங்கும் முறையை உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள் : அகாரமாகிய பசுவும், உகாரமாகிய பதியும், மகாரமாகிய பாசமும் ஆக வருகின்ற தத்துவங்கள் முப்பத்தாறைப்போல, சீபஞ்சாக்கரத்துள் சிகாரம் சிவமாயும், வகாரம் அவன் திருமேனியாகவும், யகாரம் ஆன்மாவாகவும் சொல்லநிற்பன என்றவாறு.

ஓம் என்பதன் வியட்டி நிலையில், அகாரம் ஆன்ம தத்துவம் இருபத்தைந்தாகவும் : உகாரம் சிவதத்துவம் ஐந்தாகவும், மகாரம் வித்தியாதத்துவம் ஆறுகவும் இருந்து முப்பத்தாறுதல் காண்க. உயிர், பரம், மலம் என்பன அவற்றின் தத்துவங்களை உணர்த்தின. தத்துவங்கள் அனைத்தும் சடமே.

சீபஞ்சாக்கரம் சிவம் சத்தி ஆன்மா எனச் சித்தாதல் காண்க. ஆகவே நாதகாரியமான பிரணவத்தினும் சீபஞ்சாக்கரம் சிறந்ததென்றபடி. ஈண்டுக் கூறியது சூக்கும பிரணவபஞ்சாக்கரமாகிய பிரணவத்தையன்றென்க. வகாரம் வடிவென்றது, முன்னரும் 'சீரெழுத்தாய் அங்கியாய்' (970) என்பதால் உணர்த்தப்பெற்றது. அறையலும் ; உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை.
(92)

**நகார மகார சிகார நடுவாய்**
**வகாரம் இரண்டு வளியுடன் கூடி**
**ஒகார முதற்கொண் டொருக்கால் உறைக்க**
**மகார முதல்வன் மனத்தகத் தானே** 976

இ — எனின் : ஓம் நமசிவய எனச் செபிக்கின் சிவன் சித்தத்துள் மனனுவன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள் : நம என்பதுடன் சிகாரம் நடுவாய்நிற்க வகாரத்தோடு இடைகலை பிங்கலையாக இயங்குகின்ற ஆன்ம எழுத்தாகிய யகாரத்தையும் கூட்டி, ஓகாரத்தை முதலாக வைத்து ஓம் நமசிவய என்று ஒருமுறை தியானிக்க நாதத்தலைவனுகிய சிவன் சித்தத்து நீங்கான் என்றவாறு.

இரண்டும் வளியுடன்கூடி என்பதும் பாடம். இரண்டு வளி — இடைகலை பிங்கலையாகிய பிராணவாயு ; என்றது ஈண்டு ஆன்ம எழுத்தாகிய யகாரத்தை உணர்த்திற்று. உறைக்க — ஒருங்கித் தியானிக்க. உரைக்க எனவும் பாடம். மகாரம் — நாதம். மகார முதல்வன் — நாதத்தலைவனுகிய சிவம். (93)

**அஞ்சுள வானை அடவியுள் வாழ்வன**
**அஞ்சுக்கும் அஞ்செழுத் தங்குச மாவன**
**அஞ்சையுங் கூடத் தடுக்கவல் லார்கட்கே**
**அஞ்சாதி யாதி அகம்புக லாமே** 977

இம் — எனின் : சீபஞ்சாக்கரத்தைத் துணையாகக் கொண்டு ஐந்து இந்திரியங்களையும் அடக்கவல்லார்களுக்கே சிவசத்திகளிருப்பிடம் சேரலாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : காட்டில் வாழ்வனவாகிய யானைகள், ஐந்துள்ளன. அவை ஐந்தற்கும் சீபஞ்சாக்கரம் ஐந்தும் அங்குசம் ஆவன. அவ்வைந்தினையும், எழுத்தஞ்சினையும் கொண்டு ஒருசேர அடக்கவல்லார்க்கே ஐந்தற்கு முதல்வராய சிவசத்திகளிடம் புகமுடியும் என்றவாறு.

யானை என்றது பஞ்சேந்திரியங்களை. அடவி என்றது உடம்பை. காமக்குரோதாதிகளாகிய புதர்மண்டி, அறியாமையாகிய இருள சூழ்ந்திருத்தலின் அடவி யென்றூர். சி, வ, ய, ந, ம என்னும் ஐந்தும், முனைத் தொழும் பொறிகளைந்தினையும் ஒருசேர அடக்கும் ஐந்து அங்குசங்கள். அஞ்சாதி ஆதி – அஞ்சு எழுத்துக் களாகிய முதன்மையானவற்றிற்கும் முதன்மையன வாகிய சிவசத்திகள ; ஐம்பூதங்களுக்கும் முதல்வராகிய சிவம் எனலுமாம். (94)

**ஐந்து கலையில் அகாராதி தன்னிலே**
**வந்த நகாராதி மாற்றி மகாராதி**
**நந்தியை மூலத்தே நாடிப் பரையொடுஞ்**
**சந்திசெய் வார்க்குச் சடங்கில்லை தானே. 978**

இம் - எனின், சீபஞ்சாக்கரம் ஓதுவார்க்குக் கிரியைகள் வேண்டாம் எனபதுணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : ஐந்து கலைகளினின்றும் தோன்றிய அகாராதி அக்கரங்களில் நகாரமுதலாக மாற்றி, நாதத்தலைவனுகிய சிவத்தை மூலாதாரத்தில் தியானித்து, பரையோடு கூட்ட வல்லவர்க்குக் கன்மங்கள் வேண்டாம் என்றவாறு.

ஐந்து கலைகள் சாந்தியதீதை, சாந்தி, வித்யை, பிரதிட்டை, நிவிருத்தி என்பன. இவற்றுள் அடங்கிய எழுத்துக்களாவன :-

க்ஷ முதல் கஃ வரை 16 எழுத்துக்கள் சாந்தியதீதை யிலும், க வ ம மூன்றும் சாந்திகலையிலும், வ முதல்

ஞ வரை ஏழும் வித்யாகலையிலும், ட முதல் ஊ வரை இருபத்துநான்கும் பிரதிட்டாகலையிலும், க்ஷ ஒன்றும் நிவிருத்திகலையிலும் அடங்கும். ஒடுங்கிய முறையே இங்ஙனமே தோன்றும், ஆதலின் 'ஐந்து கலையில் அகாராதி தன்னிலே' என்று அகாராதி க்ஷகாராந்தம் ஐந்து கலையாலே அக்கரங்கள் இயங்குவன என்பதாம்.

நகாராதி மாற்றி – நம் முதலாக ஓதுமதனைச் சிம்முத லாக மாற்றி. அதாவது சிவாயநம என ஓதி. மகாராதி நந்தியை – நாதமுதல்வனாகிய சிவத்தை. மூலத்தேநாடி– மூலாதாரத்தில் தியானித்து, அங்கிருந்து முறையே ஏனைய ஆதாரங்களிலும் அமரச்செய்து, பரையொடும் சந்தி செய்வார்க்கு – ஆஞ்ஞையில் விளங்கும் பராசக்தி யோடும் கூட்டித் தியானிப்பார்க்கு.

சடங்கு இல்லை – கிரியைகள் தேவையில்லையாம். ஞானம் கிடைத்தபின் அதற்கு ஏதுவாயிலான கிரியைகள் தேவையில்லை என்றதாம். (95)

**மருவுஞ் சிவாயமே மன்னும் உயிரும்**
**அருமந்த யோகமும் ஞானமு மாகுந்**
**தெருள்வந்த சீவனார் சென்றிவற் றாலே**
**அருள்தங்கி யச்சிவ மாவது வீடே.** 979

இ – னின், சீபஞ்சாக்கரத்தால் வீட்டையும் முறை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: சி வ ய என்பனவே நிலைபெற்ற உயிரும், உயிரைச் சிவத்துடன் கொண்டியைவிப்பதாகிய அருளும், ஞானமே யுருவான சிவமுமாகும். மலகன்மங் களினின்று நீங்கித் தெளிந்த உயிர்கள் இந்தமூன்று

எழுத்துக்களையும் புணையாகக்கொண்டு சென்று திருவருளின்கண்ணே தங்கி, அச்சிவமேயாவது வீடாம். என்றவாறு.

ய - உயிரும், வ - அருட்சத்தியும், சி - சிவமும் என எதிர்நிரனிறையாகக்கொள்க.

மன்னுமுயிர் என்றது நித்தியத்துள் ஒன்றாகலின் அருமந்நயோகம் என அருட்சத்தியை அழைத்தது ஆன்மாவைச் சிவத்தோடுகொண்டிசையக்கும் உபகாரியாதலின். ஞானம் - சிவம்.

தெருள்வந்த சீவனார் - சீபஞ்சாக்கரத் திறத்தை யிங்ஙனமுணர்ந்து மலநீக்கம்பெற்ற ஆன்மா. சீவனார் என்றது உயர்த்தற்பொருளது. இவற்றாலே சென்று - சிவயநம என்னும் இவற்றை சாதனமாகக் கொண்டு சென்று. அருள் தங்கி - அருளாகிய ஆனந்தவாரியுள் பிரியாதே தங்கி. அச்சிவமாவது - அந்த ஞானமே வடிவான சிவமாக அமர்வது. (96)

**அஞ்சுக அஞ்செழுத் துண்மை அறிந்தபின்**
**நெஞ்சகத் துள்ளே நிறையும் பராபரம்**
**வஞ்சக மில்லை மனைக்கும் அழிவில்லை**
**தஞ்ச மிதுவென்று சாற்றுகின் றேனே. 980**

இ-ம் - எனின், திருவைந்தெழுத்தே என்றும் பற்றுக்கோடாவது எனபது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : ஐந்து மலங்களும் சிந்த, திருவைந்தெழுத்தின் உண்மையை அறிந்தபின், மனத்தை இடமாகக்கொண்டு பரசிவம் தங்கும். இதில் வஞ்சகம்

சிறிதும் இல்லை. மனையாகிய உடலுக்கும் அழிவில்லை யாம். இது ஒன்றே தஞ்சமாவது. நான் சொல்லு கின்றேன் என்றவாறு.

அஞ்சு - எண்ணுக்குப்பெயராக ஆணவம் கன்மம் மாயை மாயேயம் திரோதாயி என்ற ஐந்து மலங்களை உணர்த்தின. அஞ்செழுத்தின்மையாவது சிவம் சத்தி உயிர் மலம் திரோதம் என அவற்றுண்மையை அறிந்து நீங்கவேண்டியவற்றின் நீங்கி. ஒன்றவேண்டியவற்றோடு ஒன்றிப் பின். பராபரம நெஞ்சகத்துள்ளே நிறையும் - நெஞ்சில் மலம்பற்றி நிற்கும் காமாதிகட்கு இடம் இன்மை யின நெஞ்சம் தமக்கே யிடமாகக் கொண்டு சிவம் நிறையும். உக - சிந்த.

மனை - உடல். அழிவில்லை என்றது நரை திரை யின்றி நீடுவாழும் எனபது, தஞ்சம் - பற்றுக்கோடு. சாற்றுகின்றேன் என்று தம்மேல ஏறட்டுக்கூறியது பயனுறுதியென்பது குறிக்க. (97)

**சிவாயவொ டவ்வே தெளிந்துளத் தோதச்**
**சிவாயவொ டவ்வே சிவனுரு வாகுஞ்**
**சிவாயவொ டவ்வுந் தெளியவல் லார்கள்**
**சிவாயவொ டவ்வே தெளிந்திருந் தாரே. 981**

இ - ளின், அவ்வும் சிவாய என ஓதுவார் சிவத்தோடு இரண்டறத் தெளிந்திருப்பார் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : சிவாய என்னும் மந்திரத்தினுடன் அவற்றையே இணைத்து சிவாயசிவ என ஓத, சிவ சத்திகளோடு யகாரமாகிய ஆன்மாவும் அப்போதே

சிவனுநவம் பெறா; இவ்வண்ணம் ஆன்மா சிவசத்தி களோடு கலந்திருத்தலை அறியவல்லார்கள் சிவாயசிவ என்பதே மேலான மந்திரம என்று தெளிந்திருந்தார் ஆவர் என்றவாறு.

அவ்வை எனபதற்கு ஹம்ஸ மந்திரம் எனப் பொருள் கொண்டு சிவாயவொடு அவ்வை – 'சிவாய ஹம்ஸ' என்றுரைப்பாரும் உளர். தெளிந்திருநதாரென இறந்த காலத்தாற் கூறியது துணிவுபற்றி. (98)

சிகார வகார யகார முடனே
நகார மகார நடுவுற நாடி
ஓகார முடனே ஒருகா லுரைக்கு
மகார முதல்வன் மதித்துநின் றானே. 982

இ-ள் - எனின், ஓர் சிவாயநம என்று ஒருமுறை கூறும உரைக்கு நாதன வெளிப்படுவன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: சிவாயநம என்று மனம் பொருந்தத் தியானித்து ஓம் எனபதனுடன் இணைத்துச் செபிக்க நாதத்தலைவனாகிய சிவம இவர்களை மதித்து வெளி நின்றான் எனறவாறு.

முன் 'நகாரமகாரம்' (976) என்னும் திருமந்திரத்து போகம் விழைவார் நம்முதலாக ஓதுக என்றார். இம் மந்திரத்து மோக்ஷம் வேண்டுவோர் சிம்முதலாக ஓதுக என்கின்றார். இவற்றுள் முன்னையது வேதமுறையென் றும், பின்னையது ஆகமநெறி யென்றும் கூறுவதுண்டு. நடு – மனம். புருவமத்தியில் வைத்துத் தியானஞ்செய்து என்றுமாம். நாடியென்றது மானசிக செபத்தை.

'உரைக்கு' என்றது வாசிக செபத்தை. உரைக்கு என்பதில் குவ்வுருபு பொருட்டு என்னும் பொருளில் வந்தது. (99)

**நம்முதல் ஓரைந்தின் நாடுங் கருமங்கள்**
**அம்முதல் ஐந்தில் அடங்கிய வல்வினை**
**சிம்முத லுள்ளே தெளியவல் லார்கட்குத்**
**தம்முத லாகுஞ் சதாசிவந் தானே** 983

இ்ம் - எனின், நம்முதல் ஓதுவார்க்கும், சிம்முதல் ஓதுவார்க்கும் விளையும் நிலைவேறுபாடு இவை எனத் தெரிவித்தல் நுதலிற்று.

இ - ள்: நகாரமுதலாகிய ஐந்தெழுத்துக்களால் நல்வினைப்போகங்கள் விளையும். அவ்வண்ணம் ஓதி ஆற்றல்கெட்ட வலிய வினைகளை யுடையராகிச் சிகார முதலாக மனத்துள் தியானித்துத் தெளியவல்லவர் கட்குப் போகசிவமாகிய சதாசிவம் முதல்வனாயிருந்து கருணைசெய்வர் என்றவாறு.

இதனால் நமசிவய என ஓதினால் விரும்பிய கருமம் கைகூடுவதோடு. வல்வினைகளும் அடங்கும். பின்பு சிவயநம எனத்தியானிக்கின் சதாசிவநாயனாரே முதல்வராக எழுந்தருளி அருள்வழங்குவர் என்பது விளக்கியவாறு.

நாடும் கருமங்கள் - நாடிய காரியங்கள்: என்றது அவற்றுனுடைய பயனையும் உணர்த்திற்று. ஆம் என ஒரு சொல் வருவித்து முடிக்க. அம்முதல் ஐந்தில் - அந்த முதற்கண் ஓதப்பெற்ற நம்முதலாய தூலபஞ்சாக்கரத்தால். அடங்கிய வல்வினை ஆம் - வல்வினைகளும் வலி

குன்றியன ஆம். இவ்வண்ணம் விழைவாசையும் தாக்காது நீங்கவே சூக்கும ஐந்தெழுத்தாகிய சிவயநம என்பதைத் தியானிக்க. அதனால் சதாசிவமூர்த்தியே வெளிப்பட்டருளுவர் என்பதாம. அதிகாரி பேதம் நோக்கித் திருவைந்தெழுத்து ஓதுமுறை உணர்த்தப்பெற்றது. நமசிவய என ஓதி என்பதையும் சிவயநமவென உள்ளே தெளியவல்லார் எனவும் கூறுதல் கொண்டு செபிக்கு முறையை ஊன்றியறிக. சகலான்மாக்களாகிய நாம் பரிபாகமுற்றமையால் சீகண்டருத்ர மாகேச்சுரர்களுக்கு மேலுள்ள போகமூர்த்தியே தலைவனும் என்பதாம். (100)

நவமுஞ் சிவமும் உயிர்பர மாகுந்
தவமொன் றிலாதன தத்துவ மாகுஞ்
சிவமொன்றி யாய்பவ ராதர வாலச்
சிவமென்ப தானும் எனுந்தெளி வுற்றதே. 984

இம் - எனின், திருவைந்தெழுத்துள் இவை சீவன், இவை பரம் எனப் பகுத்துணர்த்துதல நுதலிற்று.

இ - ள் : நமய என்பதும், சிவ என்பதும் முறையே உயிரும் பரமும் ஆம். இவை தவத்தோடு ஒப்பாவன இல்லையாம். வீடுபேருகிய மெய்ப்பொருளைத் தருவன வாம். சிவபெருமானோடு ஒன்றியிருந்து ஆய்பவர்களின் அன்பால் அச்சிவமெனும் பொருளும் தானே யாம் என்னுந்தெளிவு அவர்களுக்குப் பொருந்தியதாம் என்றவாறு.

நவம் உயிராகும் - நகாரமும் மகாரமும் யகாரமும் உயிராம் : என்றது நமக்கள் உயிருக்காக இறைவனால்

உதவப்பெற்ற மலமும் திரோதமுமாம். யகாரம் உயிராம் என உணர நின்றது.

சிவம் பரமாகும் - சிவ என்பன சிவசத்திகளாகப் பரம்பொருளாம். இதனால் திருவைந்தெழுத்து சிவபரம என்னும் இரு பகுதியவாம் என்பதுணர்த்தியவாறு.

தவம் ஒன்று இலாதன - தவத்தோடு ஒன்றுதல் இல்லாதனவாம். ஒன்று: முதனிலைத் தொழிற்பெயர். தவப்பயன் போல உண்டு கழிக்குந் தன்மையல்லாமல் நிலைத்த முத்திப்பேறளிப்பனவாம் என்றவாறு.

தத்துவம் ஆகும் - மெய்ப்பொருளாகும். "வேத நான்கினும் மெய்ப்பொருளாவது. நாதனாம் நமச்சிவாயவே" என்ற சுந்தரமும் இக்கருத்தே விளக்குவதாம்.

சிவம் ஒன்றி ஆய்பவர் - சிவயநம என்பதனுள் யகரமாகிய உயிர் நம என்னும் மலச்சார்பைப் பற்றாது சிவச்சார்பைப்பற்றி ஒருங்கித் தியானிப்பவர். ஆதலால் - அவர்களது இடைவிடாப்பேரன்பால்.

அச்சிவம் 'தான் ஆம்' என்னுந்தெளிவு உற்றது - நமப் பற்றற்றார்க்குப் பற்றாகிய சிவம் ஆன்மாவாகிய தானேயாம் என்னும் தெளிந்த ஞானம் பிறந்ததாம் என்பது கருத்து. (101)

கூடிய எட்டும் இரண்டுங் குவிந்தறி
நாடிய நந்தியை ஞானத்து ளேவைத்து
ஆடிய ஐவரும் அங்குற வாவர்கள்
தேடி அதனைத் தெளிந்தறி யீரே. 985

இம் – எனின், திருவடிஞானத்தில் உயிர் ஈடுபட்டால் விடயசுங்களில் இழுத்துச் சென்ற பொறிகளும் திருந்தும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : சீபஞ்சாக்கரத்தில் கூடியுள்ள யகரமாகிய உயிர், எட்டின்வடிவாகிய அகரத்தோடும் இரண்டின் வடிவாகிய உகரத்தோடும் குவிதலால் அறியப்படும் தேடியபொருளாகிய சிவத்தை ஞானத்துள் வைத்து ஞானத்தாலறிய புறவிடயங்களிற்சென்று பற்றி ஆடிய ஐம்பொறிகளார் புறப்பற்றை விட்டு நம்முயற்சிக்குத் துணையாவார். ஆதலால் அத்தகைய உண்மையாகிய அதனைத் தேடித்தெளியுங்கள் என்றவாறு.

கூடிய எட்டும் இரண்டும் குவிந்து அறி(நந்தியை) நாடிய நந்தியை ஞானத்துளேவைத்து (வைக்க) ஆடிய ஐவரும் உறவாவர், அதனைத் தேடி தெளிந்து அறியீர் எனக் கண்ணழித்து முடிவு காண்க.

கூடி + ய = சீபஞ்சாக்கரத்துள் கூடி(உள்ள) ய என்னும் சீவாக்கரம். எட்டு – எட்டென்னும் எண்ணின் வடிவாகிய 'அ', இரண்டு – இரண்டென்னும் எண்ணின் வடிவாகிய 'உ'. அகரம் – சிவம்: உகரம் – சத்தி. அதனைக் குவிந்து அறிதலாவது ஒன்றியிருந்து நினைத்தல். அறி நந்தி. நாடிய நந்தி எனத் தனித்தனிக் கூட்டிப்பொருள் காண்க.

ஞானத்துள்ளே வைத்து – கருவி கரணங்களால் உணர்தற்கு அரியனாதலின் "ஞானத்தால் அறிவார்கள் ஞானிகள்" என்ற அப்பர் திருமறைக்கொப்ப ஞானத்தால் அறிய. வைத்து என்ற செய்தெனெச்சத்தைச் செயவென்னெச்சமாக்கிப் பொருள்காண்க.

ஆடிய ஐவர் - உலக இன்பமே பெரிதென்று அடங்காப்பிடாரிகளாய்த் தம் இஷ்டப்படி ஆடிய ஐந்து இந்திரியங்கள். அந்த உறவு ஆவர்கள் — பதிஞானம் மேவிப் பசு பாசஞானங்கள் அடங்கிய காலத்து புறத்திற் சென்று பற்றுது பதியருள் மேவுதலின் தாமும் உறவா வார்கள் என்றபடி.

உறவாதல் - ஐந்துபேரறிவும் கண்களேகொள்ள வந்த பேரின்பவெள்ளத்துள் திளைத்தற்குத் துணையாதல். அதனை — நந்தியை, (102)

எட்டும் இரண்டும் இனிதறி கின்றிலர்
எட்டும் இரண்டும் அறியாத ஏழையர்
எட்டும் இரண்டும் இருமூன்று நான்கெனப்
பட்டது சித்தாந்த சன்மார்க்க பாதமே (986)

இம் - எனின், சிவம், சத்தி, உயிர் இவற்றை அறிதலே சன்மார்க்க நெறியெனல் நுதலிற்று.

இ - ள் : எட்டும் இரண்டும் இனிதாக அறிகின்றிலர்: எட்டும் இரண்டும் அறியாத மூடர்கள். எட்டும் இரண்டும் பத்தென்பதே சித்தாந்த சன்மார்க்க பாதமாம் என்றவாறு.

எட்டு - அ. இரண்டு – உ. அதாவது சிவமும் சத்தியும். இவற்றையறிதலாவது பரமபிதா மாதா என்று அறிதல். ஏழையர் - அறிவிலிகள். எட்டு - எட்டென்னும் எண். இரண்டு - இரண்டென்னும் எண். அவர்கள் எண்களே அறியகிற்றிலர் என்க. எட்டும் இரண்டும் இருமூன்று நான்கு எனப்பட்டது - எட்டும் இரண்டும், ஆறும் நான்கும் கூடிய தொகையாகிய பத்தாம்.

பத்தின் வடிவு ய ; இது உயிர். ஆகவே இறை, சத்தி, உயிர் இவற்றை யறிதலாகிய தன்னையும் தலைவனையும் அறிதலே சைவசித்தாந்த ஞானபாதமாம். சன்மார்க்கம் – ஞானம். சன்மார்க்கபாதம் - ஞானபாதம். சைவ சித்தாந்தம் – சைவசித்தாந்த நூலாகிய சிவாகமங்கள், தன்னையும் தலைவனையும் அறியவே தடையையறிதலும் நீக்குதலும் பெறப்படும், ஆகவே இறை சத்தி உயிர் தடைகளையறிந்து, தடையினின்றுநீங்கி இறை சத்தி களை எய்தும் உபாயம் உணர்த்துவதே ஞானபாதமாம் என்க. இவற்றையே சி, வ, ய, ந, ம, என்னும் சீபஞ் சாக்கரமும் உணர்த்துகிறது. (103)

**எட்டு வரையின் மேலெட்டு வரைகீறி**
**இட்ட நடுவுள் இறைவன் எழுத்தொன்றில்**
**வட்டத்தி லேயறை நாற்பத்தெட் டுமிட்டுச்**
**சிட்டஞ் செழுத்துஞ் செபிசீக் கிரமே.** 987

**தானவர் சட்டர் சதிரர் இருவர்கள்**
**ஆனவிம் மூவரோ டாற்றவ ராதிகள்**
**ஏனைப் பதினைந்தும் விந்துவும் நாதமுஞ்**
**சேனையுஞ் செய்சிவ சக்கரந் தானே.** 988

இவை – எனின், சிவசக்கரம் அமைக்கும்முறை கூறுதல் நுதலிற்று.

இ – ள் : எட்டுக் கோடுகளின்மேல் எட்டுக்கோடு களிட்டு நாற்பத்தொன்பது அறைகளாக்கி, அவற்றுள் நடுவறையில் சிவஎழுத்தாகிய ' சி ' பொருந்துமாயின் சுற்றிலும் உள்ள நாற்பத்தெட்டு அறைகளிலும் மிச்ச மான அஞ்செழுத்துக்களையும் அடைந்து விரைவில் செபிப்பாயாக. சுற்றிலும் தானவாராகிய ஐயனார்,

சட்டநாதர், சபைப்புரப் போராகிய பிள்ளையார் முருகன் ஆகிய இந்த மூவகையாரோடு, வாயில் காவலராகிய துவாரபாலகர்கள், மற்றைய பதினைந்து தானங்களில் விந்து, நாதம், சேனைத்தலைவராகிய சிவகணநாதர்கள் இவர்களை ஆவாகிக்க — இது சிவசக்கரமாம் என்றவாறு.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 18 | 19 | 20 | 21 | 22 | 23 | 24 |
| 17 | சி | வ | ய | ந | ம | 1 |
| 16 | ம | சி | வ | ய | ந | 2 |
| 15 | ந | ம | சி | வ | ய | 3 |
| 14 | ய | ந | ம | சி | வ | 4 |
| 13 | வ | சி | ய | ந | ம | 5 |
| 12 | 11 | 10 | 9 | 8 | 7 | 6 |

சிட்டஞ்செழுத்து — சிஷ்டமான ஐந்தெழுத்து. முற்றாமல் குறையான எழுத்துக்கள். தானவர் — ஐயனார் (க்ஷேத்திரபாலர்). சட்டர் — பைரவர் எண்மர், சதிரரிருவர் — இறைவன் எழுந்தருளியுள்ள சபை புரப் போராகிய கணபதி முருகன, மூவர் என்ற தொகைக் குறிப்பு இம்மூவகையாரும் என வகையை உணர்த் திற்று. ஆறு — வழி (வாயில). ஆற்றவர் — வாயில் காவலராகிய துவாரபாலகர்கள இருவர். (104, 105)

**பட்டன மாதவ மாற்றும் பராபரம்**
**விட்டனர் தம்மை விகிர்தா நமவென்பர்**
**எட்டனை யாயினும் ஈசன் திறத்திறம்**
**ஒட்டுவன் பேசுவன் ஒன்றறி யேனே. 989**

இ - னின், சிவசக்கரத்தின் தியானபலன் உணர்த்துதல நுதலிற்று.

இ - ள் : சிவசக்கரம் பெரிய தவஞ்செய்து அடையும் பயனைச் செய்யும் ; அச்சக்கரத்துள்ளே விளங்கும் பராபரப் பொருளாகிய சிவத்திடத்துத் தம்மை அடைக்கலமாகக் கொடுத்தவரும், விகிர்தா ! உனக்கு வணக்கம் என்பவரும் ஆகிய சிவஞானியரோடு, எள்ளள வாயினும் ஈசன் றிறமே பேணுமவனாய்ப் பேசுவேன் ; மற்றொன்றும் அறியேன் என்றவாறு.

சிவசக்கரத்துள விளங்கும் பரசிவத்திடம் தம்மை ஒப்புவித்து, விகிர்தா நம என்பவரோடு, எள்ளளவாயினும் ஈசன்திறம பற்றியே ஒட்டிப் பேசுவேன் ; இஃது அன்றி வேறொன்றையும அறியேன் என்பது கருத்து.

பட்டனம் - சிவசக்கரம். சித்தாரம்பரையிற் கருவூராரும் ' வீதியந்த ஆறுதெரு அமைந்தவீதி விளையாடி நின்ற திருமாளிகை கண்டாய் ' என மாளிகையாகக் கூறுதல் காண்க. மாதவம் ஆற்றும் - மாதவத்தான் வரும்பயனைச் செய்யும், மாதவம் என்பது ஆகுபெயர்.

பராபரம் தம்மை விட்டனர் - பரசிவத்தினிடம் தம்மை ஒப்புவித்தவர்கள், ஆன்மாக்களுக்கு என்றும் சுதந்தரமின்மையின முதல்வனிடம் தம்மை ஒப்படைத்தவர்கள் ; ஆகவே தற்போதம் கெட்டவர்கள் என்றவாறும்.

விகிர்தாநம: - சிவாயநம, விட்டனர். என்பர் (ஓடு) ஈசன் திறத்திறத்தால் ஒட்டுவென் ; பேசுவன் : அறியேன் எனக்கூட்டுக.

எள்தனை என்பது இழிவின் எல்லையைக் குறித்து நின்றது, சிவசக்கரத் தியானமுடையாரோடு ஒட்டுவ தற்குக் காரணம் அவர்கள் எட்டனையாவது ஈசன் நிறமே பேணுதலான் என்க. பேசுவன் - அவற்றையே பேசுவன் : மற்றொன்று - அதனின் வேறாகிய பாசபசுக் களைப்பற்றிய திறங்களை. (106)

**சிவமுதல் மூவரோ டைவர் சிறந்து**
**அவைமுதல் ஆறிரண் டொன்றொடொன் றான**
**அவைமுதல் விந்துவும் நாதமும் ஓங்கச்**
**சவைமுதல் சங்கரன் தன்பெயர் தானே** 990

இம் - எனின், சிவசக்கரத்துள் அமைக்கப் பெறும் ஐந்தெழுத்துக்களின் வித்தெழுத்துக்கள் இவை எனல் நுதலிற்று.

இ - ள் சிவய என்பதனோடு இருவர்கூட் ஐவ ராகச் சிறந்த அவைகட்கு முதலாகிய சக்கரத்தோடு பன்னிரண்டும் ஒன்றோடு ஒன்றுமான பதின்மூன்காவது எழுத்தாகிய ஔ என்பதை முதலாகக்கொண்டு விந்து வாகிய அநுஸ்வாரமும், விஸர்க்கமும் சிறக்க நிற்கும் முதன்மையான சக்கரம் சிவசக்கரமாம் என்றவாறு.

சிவ முதல் மூவர் - சிவம் சத்தி ஆன்மா ஆகிய மூவர், அவர்களை உணர்த்தும் எழுத்து சிவய என்பன. ஐவர் - நம என்னும் மலமும் திரோதான மாயையுங் கூட் ஐவர். சிறந்து - சிறந்து ( விளங்க ) .

அவைமுதல் - அந்த ஐந்திற்கு முதலாகிய சிகாரத்தின் முதலாகிய 'ச்' என்பதனோடு. அவைமுதல் ஆறிரண்டுஒன்றொடு ஒன்று - அகரத்தை முதலாக்கொண்டு பதினொன்காம் எழுத்தான 'ஔ' என்பதனோடு, விந்து ஓங்க சௌம் எனவும், நாதம் ஓங்க சௌ: எனவும் ஆம். அவற்றோடு ஓங்கு அச்சவைமுதல் - சௌம், சௌ: சிவயநம என்று ஓங்கிய அச்சக்கரம் திருவம்பல மாகிய சிவசக்கரமாம் என்பது கருத்து.

எனவே எட்டுவரைமேல் எட்டுவரைகீறி நாற்பத்தொன்பது அறைகளாக்கி நடுவறையில் சிகாரத்தையெழுதி ஏனையவற்றை முறையே மம்முதல் மாறி, அவற்றின் முதலிலே ஸௌம், ஸௌ: என்று சேர்த்து அமைத்துச் செபிக்க என்பதாம். (107)

**வித்தாஞ் செகமய மாக வரைகீறி**
**நத்தார் கலைகள் பதினாறு நாட்டிப்பின்**
**உத்தாரம் பன்னிரண் டாதி கலைதொகும்**
**பத்தாம் பிரம சடங்குபார்த் தோதிடே.** 991

இ-ம் - எனின், சோம சூரிய அக்கினி சக்கரம் அமைக்குமுறை அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : மாயையின் காரியமாகிய உலகமயமாகிய பிருதிவிவடிவாகக் கோடு கீறி, அதனுள் விருப்பமிக்க சந்திரனுடைய பதினாறு கலைகளையும் நாட்டி, பின் பன்னிரண்டாக எழும்புகிற சூரியமண்டலத்தை நாடி யாகம் முதலான பிரமச்சடங்குகளில் கலை பத்தாகத் தொக்குள்ள அங்கி மண்டிலத்தை ஆவாகித்துத் தரிசித்து, செபிக்க என்றவாறு.

மண்ணின் வடிவம் நாற்கோணம் ஆதலின் நாற் கோணசக்கரம் எழுதி, அதனுள் சந்திர சூரிய அக்கினி மண்டிலங்களை எழுதுக என்பதாம்.

சிவசக்கரத்தின் உச்சியில் அக்கினிமண்டிலத்தை யும் வலதுபக்கத்தில் சூரியமண்டிலத்தையும் இடது பக்கத்தில் சந்திரமண்டிலத்தையும் இவ்வண்ணம் கீறிச் செபிக்க என்பதாம. இதன் கருத்து, சிவசக்கரம் மண் முதல அங்கிவரையுள்ள அட்டமூர்த்தி வடிவினது என்பதாம்.

பிரமசடங்க பத்தாம் தொகும் கலையெனக் கூட்டி யாகாதி பிரபச்சடங்கில பத்தின் வடிவாகித் தொக்க கலை எனப் பொருள் கொள்க. (108)

**கண்டெழுந் தேன்கம லம்மல ருள்ளிடை**
**கொண்டொழிந் தேனுடன் கூடிய காலத்துப்**
**பண்பழி யாத பதிவழி யேசென்று**
**நண்பழி யாமே நமவென லாமே** 992

இம் – எனின, சக்கரத்தை வெளியில் பூசிப்பதால் பயனில்லை. தியானிப்பதாலேயே பயன் சித்திப்பதாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இதயத்தாமரையுள் இச்சக்கரவாயிலாகச் சிவத்தைக்கண்டு விழித்தெழுந்தேன். சிவத்தை உட் கொண்டு அச்சிவத்தோடு கூடியகாலத்து, தற்போதம் கெட்டேன். தன்மை கெடாத சிவத்தையே துணையாகக் கொண்டுசென்று அன்பு கெடாதவண்ணம நம என்று சொல்லிக்கொண்டிருக்கலாம் என்றவாறு.

புறத்தே வரைவடிவாகக் கீறிய சக்கரத்தை மனத்தில் தியானிக்கச் சிவம் தோன்றும் ; அதனோடு ஒன்ற ஆன்மபோதம் அழியும் : சிவபோதமாகும். அதனால் சிவயநம என்று தியானித்துக் கொண்டேயிருக்கலாம் என்பது கருத்து.

மலருள்ளிடைக் கண்டு எனவும். (மனத்திற்) கொண்டு எனவும் இயைத்துப் பொருள் கொள்க. நண்பு - நேசம். (109)

**புண்ணிய வானவர் பூமழை தூவிநின் (று)**
**எண்ணுவர் அண்ணல் இணையடி மந்திரம்**
**நண்ணுவர் நண்ணி நமஎன்னு நாமத்தைக்**
**கண்ணென உன்னிக் கலந்துநின் றாரே.** 993

இம் - எனின், இம்மந்திரப் பயனைத் தேவரும் கண்டார் எனல் நுதலிற்று.

இ - ள் : அதிபுண்ணியம் மிக்க சில வானவர்கள் கற்பகப்பூமாரி பெய்து நின்று திருவருள் பயக்கும் சிவமந்திரத்தைக் கணிப்பர். சிவபெருமான் திருமுன்பு நணுகுவர். நணுகி நமசிவய என்னும் நாதனாமத்தைக் கணபோல் கணித்துச் சிவத்தோடு கலந்து நின்றார்கள் என்றவாறு.

ஆகவே அருச்சித்துக் கணிக்க என்றவாறும். (110)

**ஆறெழுத் தாலவ் வாறு சமயங்கள்**
**ஆறுக்கு நாலே இருபத்து நாலென்பர்**
**சாவித் திரியில் தலையெழுத் தொன்றுள**
**பேதிக்க வல்லார் பிறவியற் றார்களே.** 994

இம் – எனின், பிரணவ சகிதமான திருவைந் தெழுத்தானே சமய பேதங்களும் விளைந்தன. ஆதலால் பிரணவத்தைப் பேதிக்க வல்லார் பிறவியற்றார் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : ஓம் சிவயநம என்னும் ஆறெழுத்தால் அத்தகைய ஆறு சமயங்கள் ஆயின. ஆறெழுத்துக் களும் ஒவ்வொன்றும் நந்நான்காகப் பகுக்க இருபத்து நாலாம் என்பர். காயத்திரி மந்திரத்திற் தத் தலையெழுத்து ஒன்றுண்டு : அதனைப் பிரித்துணர வல்லார் பிறவியை நீங்கியவராவர் என்றவாறு,

ஆறெழுத்து ஓம் சிவயநம, அவற்றால் ஆறு சமய மாதல் மகர நகரங்கள், உலகிலே பரந்து செல்லும்படி உயிரைச்செலுத்தி, அதனின்று திரும்பவிடா என்றும், உயிர் அவற்றைச் சாராது பிணிப்பினின்றும் நீங்கி சிவத்தைச்சாரின முத்தியாம் என்பதனையும் உணராது, வகாரமும் சிவத்தைக்காட்டி உயிர்களை உய்விக்கும் என்பதனையும் உணராது, அவையவையே முதல் என்ற கருத்தின் முனைப்பால், பிரணவத்தால் காணுபத்யமும் சிகாரத்தால் சைவமும், வகாரத்தால் சாக்தேயமும், நகாரத்தால் அகம்பிரமவாதமும, மகாரத்தால் மாயா வாதமும் ஆயினமை யுணர்க. இவற்றுள் ஒவ்வொன்றும் அகம், அகப்புறம், புறம், புறப்புறம் என நானகாய் இருபத்துநான்காம். இவற்றுள காயத்திரியைச் சிறப் பாகக் கொள்வாரும், பிரணவத்தைப் பகுத்துணர்வா ராயின் அங்கும் ஐந்து பொருளுண்மையும் அறியப் படுதலின் அவர்கள் சித்தாந்தச் செந்நெறிபற்றிச் சிவ கதிசேரும் தரத்தினராவர் என்பதாம். (111)

**எட்டினில் எட்டறை யிட்டோ ரறையிலே**
**கட்டிய ஒன்றெட்டாய்க் காண நிறையிட்டுச்**
**சுட்டி இவற்றைப் பிரணவஞ் சூழ்ந்திட்டு**
**மட்டும் உயிர்கட் குமாபதி யானுண்டே. 995**

இம் - எனின் : இதுவும் உமாபதி சக்கரம் அமைக்கின்ற முறை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : குறுக்கும் நெடுக்குமாக எட்டெட்டு அறைகள் வரைந்து அதில் ஓரறையிலே அடைக்கப்பட்ட ஒன்றை எட்டாகக் காணும்படி முறையே யிட்டு, இவற்றைப் பிரணவத்தால் வளைத்து அளவிட்டுத் தியானிக்கும் உயிர்கட்கு உமாபதி வெளிப்பட்டு அருளுவர் என்றவாறு.

முன் 987—ல் கூறியாங்கு எட்டு அறைதோன்றச் சக்கரம் செய்து அதன் நடுவில் இட்ட எழுத்தையே முதலாகக் கொண்டு எட்டுத்திசையிலும் சீபஞ்சாக்கரம் தோன்ற அடைத்துச் செபிக்கில் உமாபதி அருளுவர் என்பதாம. (112)

**நம்முதல் அவ்வொடு நாவின ராகிய**
**யம்முத லாகிய எட்டிடை யுற்றிட்டு**
**உம்முத லாகவே உணர்பவர் உச்சிமேல்**
**உம்முத லாயவன் உற்றுநின் றானே. 996**

இம் — எனின். சிவய என உணர்பவர் உச்சியில் சிவம் பிரகாசிக்கும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள் : நகாரம் முதலாக அகாரமாகிய உயிர் இறுதியாக உள்ள எழுத்துக்களோடு உரைக்கின்ற

நாவினையுடையராகி, உந்த முதலாகிய சிகரம நடுவாக, யகரம முதலாகிய எழுத்துக்களை இடைக்கண் உள்ள எட்டு அறைகளில பொருந்தச்செய்து, அறிகிற சாதகருடைய உச்சியின் மேல, சக்தியுத்தனாகிய சிவம் பொருந்தி விளங்குவன் என்றவாறு.

நம் முதல் அவ்வொடு என்றது நமசிவய என்பதனை உணர்த்துவதாம. அ – உயிர். ஈண்டு உயிரைக் குறிப்பதாகிய ‘ய’ என்பதை உணர்த்திற்று. நமசிவய என்று உச்சரித்துக்கொண்டு என்றவாறும. உம்முதல் – உந்த முதல்வனைக் குறிககும் சி. ஆக - இடைககண்பொருந்த. யம்முதலாகிய - யகாரத்தை முதலாக. ஆகிய – ஆக.

| | | | | |
|---|---|---|---|---|
| | | | | |
| | ய | வ- | -ய | |
| | வ்- | -சி- | -வ | |
| | ய- | -வ் | ய் | |
| | | | | |

இடை எட்டு – சக்கரத்துள் இடையிலுள்ள எட்டறைகளில் இட்டு. உணர்பவர் - தியானிப்பவர்.

உண்பவர் என்றும் பாடம். உ முதலாயவன்; உ - சத்தி, முதலாயவன் – அந்தச் சத்திக்கு முதலாயவன். சத்தி யுத்தனுகிய சிவன். உச்சிமேல் உற்றுநின்ருன் எனக் கூட்டுக.

இது தியானித்தற்கும், நமசிவய உச்சரித்தற்தும் உரியதென்பார் நம்முதல் அவ்வொடு நாவினராகி, முதலாக உற்றிட்டு உணர்பவர் என்றருளினர். (113)

**நின்ற அரசம் பலகைமேல் நேராக**
**ஒன்றிட மவ்விட்டு ஓலேயிற் சாதகந்**
**துன்று மெழுகையுள் பூசிச் சுடரிடைத்**
**தன்ற வெதும்பிடத் தம்பனங் காணுமே.** **997**

இம் - எனின், தம்பனமுறை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : நிலேபெற்ற அரசம்பலகைமேல் நேராகப் பொருந்த மகாரமுதலாக மாறியிட்டு பனேயோலேயில் அவ்வாறே அடைத்து, சாதகம் சித்திக்க மெழுகை ஓலேயுட்பூசி, விளக்குச்சுடரில் நன்ருகக் காய்ச்சத் தம்பனமாம என்றவாறு.

தம்பனமாவது கட்டுதல், எதிரியைச் செயற்படாத வாறு கட்டுப்படுத்துதல். சாதகம் - உருவேற்றுதல். ம இட்டு – முதலெழுத்தாக மகரத்தை இட்டு ; என்றது மகரமுதலாகக் கொண்டு மாறுமுறை உணர்த்திற்று, மெழுத - தேன்மெழுத, நேயத்தை மெழுகு எனல் சித்த மரபு. ஆதலால் ஓலேயில் தேன்பெழுத பூசினலும் சக்கரத்துள் நேயம்வைத்து என்பது உட்பொருளாம், தன்ற – நன்ருக. நின்ற அரசம்பலகை என்றது தானகப்

பட்டுப்போன மரப்பலகை யந்திர அமைப்புக்கு ஆகாமை யான் என்க.

| | | | | |
|---|---|---|---|---|
| ம | சி | வ | ய | ந |
| ந | ம | சி | வ | ய |
| ய | ந | ம | சி | வ |
| வ | ய | ந | ம | சி |
| சி | வ | ய | ந | ம |

இதன் முதலிலும், இறுதியிலும் மகாரம் இருத்தல் காண்க. (114)

கரண விறளிப் பலகை யமன்றிசை
மரணமிட் டேட்டின் மகார வெழுத்திட்டு
வரணமி லேங்காயம் பூசி யடுப்பிடை
முரணிற் புதைத்திட மோகன மாகுமே. 998

இம் - எனின், மோகனமுறை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: சாதனமாகவுள்ள கொன்றைப் பலகையின் மேல், தெற்குத் திசையின் மாரக மந்திரத்தை எழுதி, எட்டில் மகாரமிட்டு, மறைப்பற்ற ஐங்காயத்தைப் பூசி அடுப்பில் தலைகீழாகப் புதைத்தால் மோகன சக்தி யுண்டாம் என்றவாறு.

மோகனம் - மயங்கவைத்தல். கரணம்-சாதனம். உப கரணம். இரளி-கொன்றை, மரணம் இட்டு - நசி என்ற மந்திரம் எழுதி, வரணம் - ஆவரணம் என்பதன் குறை; மறைப்பு, ஐங்காயம்-சுக்கு, மிளகு, கடுகு, உள்ளி. வெள்ளுள்ளி என்பன. வெள்ளுள்ளி நீக்கிப் பெருங்காயம் கூட்டி எண்ணுவாரும் உளர்.

வடக்கு

மேற்கு / கிழக்கு

| | | | | |
|---|---|---|---|---|
| சி | வ | ய | ம | ந |
| வ | ய | ம | ந | சி |
| ய | ம | ந | சி | வ |
| ம | ந | சி | வ | ய |
| ந | சி | வ | ய | ம |

தெற்கு

நசிவயம என்ற மாரண பஞ்சாக்கரத்தை யமன் திசையில் எழுதி, எட்டில 'ம' என்றுமட்டும எழுதி ஐங்

காயம் பூசி அடுப்பில் செருக, மோகன சக்தி விளையும் என்பது கருத்து. எட்டின் என்றும் பாடம். முன்னும் பின்னும் உள்ள மந்திரங்களில் ஏட்டின் என்றிருப்பதால் இதுவும் ஏட்டின் என்றிருப்பதே நலம். துணை கிடைக்குமாயின துணியலாம். (115)

**ஆங்கு வடமேற்கில் ஐயனுர் கோட்டத்திற்**
**பாங்த படவே பலாசப் பலகையில்**
**காங்கரு மேட்டிற் கடுப்பூசி விந்துவிட்(டு)**
**ஓங்காரம் வைத்திடு உச்சாட னத்துக்கே. 999**

இம் - எனின், உச்சாடன முறை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் ; வடமேற்கு மூலையில் ஐயனுர்க்கு உரிய கோஷ்டத்தில், புரசம் பலகையில் அழகாகக் காங்கை யோடு கரிய ஏட்டின் விஷத்தைப் பூசி விந்துவாகிய மகாரத்தை விலக்கி ஓ என்பதை மட்டும் இடுக, இது உச்சாடனத்திற்கு உரியதாகும என்றவாறு.

ஆங்கு என்பதற்குத் தாமிநக்கும் கிராமத்தின் என்று கூறுதலுமாம். காங்கை கரும் ஏடு என்பது காங்கருமேடு என ஆயிற்று. (116)

**உச்சியம் போதில் ஒளிவன்னி மூலையிற்**
**பச்சோலை யிற்பஞ்ச காயத்தைப் பாரித்து**
**முச்சது ரத்தின் முதுகாட்டில் வைத்திடு**
**வைச்சபின் மேலோர் மாரணம் வேண்டிலே, 1000**

இம் - எனின், மாரண முறை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள : வைத்துபிறகு மேலே ஒரு மாரணத்தை நீ விரும்பின். பச்சையோலையில பஞ்சகாயத்தைப் பூசி அக்கினி மூலையால் நண்பகல் நேரத்தல் சுடுகாட்டிலே முக்கோணச் சக்கரம் இட்டு அதனமேல ஓலையை வைத்திடு என்றவாறு.

'மாரணம் வேண்டில் வைத்திடு' என முடிக்க. (117)

**ஏய்ந்த வரிதார மேட்டின்மேலே பூசி**
**ஏய்ந்த வகாரம் உகாரம் எழுத்திட்டு**
**வாய்ந்ததோர் வில்வப் பலகை வசியத்துக்**
**கேய்ந்தவைத் தெண்பதி னுயிரம் வேண்டிலே 1001**

இம் - எனின், வசியமுறை உணர்த்திற்று.




இ-ள்: அரிதாரம் பூசிய பொருந்திய ஏட்டின் மேலே அகார உ காரங்களை யெழுதி, வசியத்துக்குப் பொருந்திய வில்வப் பலகையில் வைத்து, எண்பதினுயிரம் உரு செபம் செய்க எனறவாறு.

இது எழுத்திடுமுறை என்பர். (118)

**எண்ணுக் கருடனை ஏட்டின் யகாரமிட் (டு)**
**எண்ணுப் பொன்னுளில் எழுவெள்ளி பூசிடா**
**வெண்ணுவற் பலகையி லிட்டுமேற் கேநோக்கி**
**எண்ணு வெழுத்தொடெண் ணுயிரம் வேண்டிலே;**
**1002**

இம் - எனின், ஆகர்ஷணமுறை அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : எண்ணப்படுகின்ற ஆகர்ஷணமுறை யாவது, ஏட்டில் யகாரத்தை மாறி எழுதி வியாழக் கிழமையில், வெள்ளிப்பற்பத்தை மேலேபூசி, வெண் ணெய்ப் பலகையிட்டு மேற்குத்திசை நோக்கியிருந்து, எண்ணு எழுத்தாகிய விந்துவோடு எண்ணுயிரம் உருச் செபிக்க என்றவாறு.

| | | | | |
|---|---|---|---|---|
| ய | ந | ம | சி | வ |
| வ | சி | ய | ந | ம |
| சி | வ | ய | ந | ம |
| ம | சி | வ | ய | ந |
| ந | ம | சி | வ | ய |

எண்ணெழுத்து'ம்' அதாவது 'யம்' எனச் செபிக்க என்பதாம். நின்ற (997) என்னும் மந்திரம் முதல் இதுவரை தம்பனமாதி அட்டகன்ம வித்தை அறிவிக் கத்தொடங்கி ஆறேயருளினர்கள். ஏனையவும் இருந்து

மறைந்திருத்தல் வேண்டும். இவற்றுள்ளும் சிலவற்றிற்குப் பீசமட்டும் சொல்லப்பெற்று மந்திரம் சொல்லப்படாமையும், யந்திரம் கீறுமுறை சொல்லிய பெருமையுஞ் அறிக. மந்திர சாஸ்திரங்களிலும் சித்தர் முறைகளிலும் வேறு வேறுமுறையில் அட்டகன்ம வித்தைகள் அறிவிக்கப்பெற்றுள்ளன. இவை அவரவரனுபவ மாதலின் உயர்வு தாழ்வு கற்பியாது உறுதிகொண்டு ஓதின் உறுதியெய்தும் என்க. (119)

## 3. அருச்சனை

அருச்சனையாவது யந்திரத்திலே மந்திரவடிவாக இறைவனை எழுந்தருளுவித்துத் தியானித்து தியானம் நன்கு உறுதிப்படுதற்பொருட்டும் மந்திரவடிவாகிய கடவுளை உபசரித்தற்பொருட்டும் பூக்களைக் கொண்டு பூசித்தலும், நிவேதித்தலும் தூபதீபாதி உபசாரங்கள் செய்தலும் இன்றியமையாதன ஆதலின் அம்முறைகளை உணர்த்துவது இவ்வதிகாரம்.

**அம்புய நீலங் கழுநீ ரணிநெய்தல்**
**வம்பவிழ் பூகமும் மாதவி மந்தாரம்**
**தும்பை வகுளஞ் சுரபுன்னை மல்லிகை**
**செண்பகம் பாதிரி செவ்வந்தி சாத்திடே** 1003

இம் - எனின், அருச்சித்தற்கு உரிய மலர்களை அறிவித்தல் நுதலிற்று.

இ - ள்: தாமரை, நீலோற்பலம், செங்கழுநீர், அழகிய கருநெய்தற்பூ, மணம் விரியுங் கமுகம்பூ, குருக்கத்தி, மந்தாரம், தும்பை, மகிழம்பூ, சுரபுன்னையாகிய

வாழை, மல்லிகைப்பூ, செண்பகம், பாதிரி, செவ்வந்தி இவற்றைச் சாத்துக என்றவாறு. (120)

சாங்கம் தாகவே சந்தொடு சந்தனந்
தேங்கமழ் குங்குமங் கர்ப்பூரங் காரகில்
பாங்கு படப்பனி நீராற் குழைத்துவைத் (து)
ஆங்கே அணிந்துநீர் அர்ச்சியும் அன்பொடே 1004

இ‌ம் - எனின், சந்தனம் சாத்தும்முறை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : முறையாகப் புனுகு, கத்தூரி முதலிய சாந்துடன் கூடிய சந்தனம், இனிய மணங்கமழ்கின்ற குங்குமப்பூ, பச்சைக்கர்ப்பூரம், காரகிற்குழம்பு இவற்றை அழகாகப் பனிநீர்விட்டு நன்றாகக் குழைத்துச் சக்கரத்திற்குச் சாத்தி அன்பொடு நீர் அர்ச்சியும் என்றவாறு. (121)

அன்புட னேறின் றமுதமும் ஏற்றியே
பொன்செய் விளக்கும் புகைதீபந் திசைதொறுந்
துன்பம் அகற்றித் தொழுவோர் நினையுங்கால்
இன்புட னேவந் தெய்திடும் முத்தியே. 1005

இம் - எனின். உபசரிக்கும்முறை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : அன்புடனே அமுதத்தை நிவேதித்து, பொன்விளக்கை ஏற்றிவைத்து, திசைதோறும் தூப தீபங் காட்டுக. மனத்துள் துன்பங்களனைத்தையும் நீக்கித் தொழுகின்றவர்கள் இம்மை யின்பங்களோடு முத்தியும் சித்திக்கப்பெறுவர், என்றவாறு. (122)

எய்தி வழிப்படில் எய்தா தனவில்லை
எய்தி வழிப்படில் இந்திரன் செல்வமும்
எய்தி வழிப்படில் எண்சித்தி உண்டாகும்
எய்தி வழிப்படில் எய்திடும் முத்தியே. 1006

இம் - எனின், பூசித்தலின் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இவ்வண்ணம் எய்தி வழிபட்டால் தாமே வந்து எய்தாத பேறுகள் இல்லையாம். இந்திரன் செல்வமும், எண்வகைச் சித்திகளும் உண்டாகும். மறுமைக்கு முத்தியும் சித்திக்கும் என்றவாறு. (123)

நண்ணும் பிறதார நீத்தார் அவித்தார்
மண்ணிய நைவேத் தியமனு சந்தான
நண்ணிய பஞ்சாங்க நண்ணுஞ் செபமென்னு
மன்னு மனபவ னத்தொடு வைகுமே. 1007

இம் - எனின், இவ்வண்ணம் பூசிப்பார் மேற்கொள்ளவேண்டிய பொறியடக்கம் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இவ்வண்ணம் பூசிப்பவர்கள் தானே வந்தணுகும் பிறர் மனைவியையும துறந்தவர்களாய், அஞ்சு பொறிகளையும் அடக்கியவராய், தூய்மையான நைவேத்தியம அனுசந்தானம் அடைந்த பஞ்சாங்க நமஸ்காரம், செபம் என்று சொல்லப்படுகிற மனமும் பிராணனும் ஒன்றியிருத்தலாகிய உயிர்நிலை இவற்றோடு அசையாமல் அலையாமல் தங்கியிருப்பர் என்றவாறு.

பிறதாரம் தானே வலியவந்தணுகினும் மந்திரசெப முடையார் துறந்தொழுக வேண்டும். எனவே தாமே தேடிப் பிடித்தல் சொல்லாமலே கடியப்பட்டது. அவித்தார் என்றது முற்கூறிய பெருநிலை, இந்திரியங்களைத் தொழிற் படாமலே அவித்தார்க்கன்றி எய்தாமையின் கெடுக்க என்றது.

மண்ணிய நைவேத்தியம் என்றதால், கள்ளும் ஊனும் நிவேதித்துப் பொறியடக்கத்தையும் கெடுத்துக் கொள்ளும் வாமமார்க்கம் கடியப்பட்டது. அனுசந்தானம்- தைல தாரைபோல இடைவிடாது எண்ணுதல். பஞ்சாங் கம்-கையிரண்டு, முழந்தாளிரண்டு, சிரம் என்ற ஐந்தங்கங் களும் நிலம்தோய வணங்குதல், இது பெண்களுக்கே யுரிய வணக்கமாம். ஆயினும் பரமபதி யாகிய புருஷன் முன்னிலையில், ஆன்மாக்கள் அனைவருமே மகளிராதலின் இங்ஙனம் விதிக்கப்பட்டது.

நண்ணும் செபம் – செபிப்பவனாகிய தன்னிடம் பரங்கருணைத் தடங்கடலாகிய பரமேஸ்வரனை நணுகச் செய்யும் செபம் என்க. இது மனமும் பிராணனும் ஒன்றி அலையாமலிருக்கச் செய்வது என அதனியல்பும் உய்த் துணர வைத்தவாறு. (124)

**வேண்டார்கள் கன்மம் விமலனுக் காட்பட்டோர்**
**வேண்டார்கள் கன்ம மதிலிச்சை யற்றபேர்**
**வேண்டார்கள் கன்மம் மிகுசிவ யோகிகள்**
**வேண்டார்கள் கன்மம் மிகுதியோ ராய்ந்தன்பே 1008**

இம் – எனின், விமலனுக்கு ஆட்பட்டோர் கன்மம் விரும்பார் என்று உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : அநாதியே மலரகிதனுன சீபரமேசுரனுக்கு ஆளானபேர்கள் கிரியைகளை விரும்பார். அதில் விருப்பமும் அற்றவரார், சிவயோகிகளும் கன்மம் வேண்டார். அன்பையே ஆய்ந்து அதில் ஈடுபட்டு, அவ்வன்பின் மிக்கோராகக் கன்மத்தை விரும்பார் என்றவாறு.

கன்மம் - முன் திருமந்திரங்ளில் கூறிய அட்ட கன்மங்களை. விமலனுக் காளானவர்கட்குக் கன்மத்தில் இச்சையும் விளையாது என்பதாம். (125)

**அறிவரு ஞானத் தெவரும் அறியார்**
**பொறிவழி தேடிப் புலம்புகின் றூர்கள்**
**நெறிமனை யுள்ளே நிலைபெற நோக்கில்**
**எறிமணி யுள்ளே இருக்கலு மாமே.** 1009

இம் - எனின், அகமுகமாக நோக்குதலே ஞான வாயிலாகச் சிவனையறிக எனல் நுதலிற்று.

இ - ள்: உணர்வரிய மெய்ஞ்ஞானத்தால் சிவனை அறியலாம்படியிருக்க அங்ஙனம் செய்யாராய், கருவி கரணங்களைத் துணையாகக்கொண்டு தேடி வருந்து கின்றனர். விதியால் விளைந்த மனையாகிய உடலுக் குள்ளே ஒன்றி நிலைபெறக் காணின், ஒளிவீசும் மணிக் குள்ளே விளங்கும் ஒளிபோல இறைவனைக் காணலாம் என்றவாறு.

அறிவரு ஞானம் - உணர்வரிய மெய்ஞ்ஞானம். இறைவனை அறியவேண்டுவது ஞானத்தால். 'ஞானத் தால் அடைவார் சில ஞானிகள்' என்பது சான்று.

அங்ஙனமாகவும் அதனைத் துணைக்கொண்டு அடையாமல் ஐம்பொறிகளையும் மனமுதலிய அந்தக்கரணங்களையுந் துணைக்கொண்டு அடைய முயற்சித்து வருந்துகின்றார்களே என்று இரங்கியவாறு.

நெறி மனை - முறையோடுகூடிய மனை : என்றது நியதி தத்துவத்தில் கட்டுண்டு வினைப்போகங்களைத் துய்க்கின்ற உடல். நிலைபெற நோக்குதலாவது சித்திர தீபம்போல மனம் சலியாது தியானித்தல்.

எறி மணி - ஒளியுள்ளமணி : ஒலிமணியும் ஆம். மணியுள் ஒளிபோலவும். ஒலிபோலவும் இருத்தலை அறியலாம் என்றவாறு. *(126)*

**இருளும் வெளியும்போல் இரண்டாம் இதயம்**
**அருளறி யாமையும் மன்னு மறிவு**
**மருளியவை விட்டெறி யாமை மயங்கு**
**மருளுஞ் சிதைத்தோ ரவர்களா மன்றே.** **1010**

இ-ம் - எனின். இதயம் இருதன்மையுடைமையின், ஒருதன்மை மேவிநிற்கும் உபாயம் இதுவெனல் நுதலிற்று.

இ-ள் ; இதயம் இருளையும் வெளியையும்போல இருதன்மையுளதாம். அதனால் அம்மனம் அருளையும். அறியாமையையும் மன்னும். மயக்கஞானத்தை விட்டெறியாமையால் அறிவுமயங்கும் ; ஆகையால் மருள் சிதைத்தோர் சிவனடியாராவர் என்றவாறு.

இதயம் என்றது அகக்கரணமாகிய இதயத்தையும் இயக்குவதாய ஆன்மாவை உணர்த்தியது. ' உள்ளம் '

என்பதுபோல. ஆன்மா இருளைச்சார்ந்து இருளாயும் வெளியாகிய ஒளியைச்சார்ந்து ஒளியாயும் இருக்கும் இருதன்மையுடையது, இதனால சிதசிததாகிய ஆன்மா இருளால் அறியாமையையும, வெளியால் அருளையும் பொருந்துவதாம. அம்மட்டோடு அன்றி மருளினீங்காமையினால் அதனுள் அழுந்தி மயங்கியும் நிற்கும். ஆதலால் அம் மருளைச் சிதைத்தோரே அடியார் ஆவர் என்பது கருத்து.

(127)

**தானவ னாக அவனேதா னாயிட**
**ஆன இரண்டில் அறிவன் சிவமாகப்**
**போனவ னன்பிது நாலாம் மரபுறத்**
**தானவ னாகுமோ ராதித்த தேவரே.** **1011**

இம் - எனின், அவனே தானாய் நிற்றலின் பயன் சாயுச்சியமாம் என்பது உணர்த்துதல நுதலிற்று.

இ - ள் : தான் சிவம், சிவமே தான் என்ற ஒரு வகையுள் சிவமே தானாக அறிபவனுடைய அன்பு இத் தன்மைத்தாம். இதன் பயன் சிவசாயுச்சியமாகிய நாலாம் மரபுறத் தான் அவனாதலாகிய சிவசூரியராம் என்றவாறு.

தான் அவனாதல் – பெத்தநிலையில் ஆன்மாக்கள் ஆணவமலத்தால் முனைத்துநிற்கச் சிவன் அவ்வுயிரின் பிற்பட்டு நிற்பன். ஆகவே, ஆன்மாவாகிய தான் முற்பட்டுப் பதி பிற்பட நிற்றல். யானே எனநிற்றல்.

அவனே தானாதல் – பரமேசுரன் இவ்வான்மாவாய் நின்ற முறைமையான் அவனிடத்து ஏகனாகி நிற்றல். அங்ஙனம் நின்றாலன்றித் திரிபுடி ஞானத்திற்கேது வாய்

மலவாசனை நீங்காது. வாசனை நீங்கினாலன்றிச் சிவா நந்தத்தை யநுபவித்தல் கூடாது. இதன் விளக்கத்தை "நானவனென் றெண்ணினர்க்கு" என்ற சிவஞான போத வெண்பாவையும், அதற்குச் சுவாமிகள் வகுத் தருளும் மாபாடியச் சிறப்பையும் நோக்கி அறிக.

அறிவன் சிவமாகப் போனவன் - ஞாதா. ஞேய மாகப்போனவன். ஞாதா - ஆன்மா. ஞேயம் - சிவம். அன்பிது என்றது ஞாதா ஞேயமாகவே அதன் அருள் வியாபகத்துள் தான் அடங்கியிருத்தலாகிய அன்பு இத் தன்மைத்து என்றவாறும்.

நாலாம் மரபு - சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம் என்றவற்றுள் நான்காவதான சாயுச்சியம் எய்துதல். தீவிரதர சத்திநிபாதமுறை எனலுமாம். தான் அவன் ஆகும் ஓர் ஆதித்ததேவர் (ஆம்) - சிவ சூரியனது ஒளிக்குள் அடங்கிய விளக்கொளிபோல ஆன்மா சிவத்துள் அடங்கித் தான் சிவசூரியனே ஆம் என்க.

*(128)*

**ஓங்கார முந்திக்கீழ் உற்றிடும் எந்நாளும்**
**நீங்கா வகாரமும் நீள்கண்டத் தாயிடும்**
**பாங்கார் நகாரம் பயில்நெற்றி யுற்றிடும்**
**வீங்காதும் விந்துவும் நாதமே லாகுமே. 1012**

இம் - எனின், அக்கரங்கள் நிற்குமிட முணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : ஓங்காரம் கொப்பூழின்கீழ் மூலாதாரத் துள் நிலைபெற்றிருக்கும். எந்நாளிலும் ஆன்மாவை

விட்டுநீங்காத வகாரம் கழுத்தை இடமாகக்கொண்டு விளக்கும், அழகிய நகாரம் இடைவிடாது இறைவனை நிறுத்திப் பழுதற்று இடனுகிய நெற்றியைப் பொருந்தும். பெருமை தரும் விந்துவும் நாதமும் நெற்றிக்குமேலே ஆணையிலும், அதற்குமேலும் முறை விளங்கும் என்றவாறு.

துன்பக்காலேயும் இன்பக்காலேயும் தம் மகனை விட்டுநீங்காத தாய்போல அருள்வடிவாகிய வகாரம் பெத்தகாலத்தும் முத்திகாலத்தும் ஆன்மாவை விட்டு நீங்காமையின் "எந்நாளும் நீங்கா வகாரம்" என்று அருளியது. (129)

**நமவது வாசன மான பசுவே**
**சிவமது சித்திச் சிவமாம் பதியே**
**நமவற வாதி நாடுவ தன்றுஞ்**
**சிவமாகு மாமோனஞ் சேர்தல்மெய் வீடே.** 1013

இம் – எனின், சீபஞ்சாக்கரத்தை நமவற ஓதுக எனல் நுதலிற்று,

இ – ள் : ஆன்மாக்கள் நம என்னும் மலதிரோதங்களை ஆசனமாகக் கொண்டியங்குவன. அவ் வாசனத்தைவிட்டு, 'சிவ' என்பதைச்சார்ந்து சித்தம் செய்க. அதனல் சிவமாம் பதியாகும். ஆதியில் நம அற்றுப்போம்படி நாடுவது மரபன்று. சிவயநம சிவய நம எனச் சிந்தித்தே சிவமாகும் மௌன நிலையைச் சேர்க. அதுவே உண்மையான வீடாம் என்றவாறு.

நகாரம் திரோதானமாயையும். மகாரம் மலமும் ஆதலின் அவற்றையே இருப்பிடமாகக் கொண்டு

விடாதுபற்றி வாழ்வன உயிர்கள். அப்பற்றை விட்டு யகாரமாகிய உயிர் ' சிவ ' என்பதைச்சார்ந்து சிந்திக்கச் சித்தியாம். சிவமான பதித்தன்மையும் விளைவதாம்.

முதல்வனைத் தேடும் சாதகர்கள் நம என்பதை அறவே விட்டுச் செபித்தல் கூடாது. சிவாயநம எனச் சேர்த்தே தியானித்து. முதல்வனை நாடவேண்டும். இவ் வண்ணம் சாதித்துக் கொண்டுவந்தால் நம என்னும் மல எழுத்துக்கள உறங்கியவன் கைப்பொருள் போல தானே நழுவும். அப்போது சிவமா யமர்ந்திருத்தலாகிய பெரிய மோனநிலை சித்திக்கும். அதுவே வீடாம் என்பதாம். ஆதிநம அற நாடுவது (மரபு) அன்றும் எனக்கூட்டுக. (130)

**தெளிவரு நாளிற் சிவஅமு தூறும்**
**ஒளிவரு நாளில் ஒரெட்டில் உகளுங்**
**ஒளிவரு அப்பதத் தோரிரண் டாகில்**
**வெளிதரு நாதன் வெளியாய் இருந்தே** 1014

இம் – எனின், மோனநிலையில் தெளிவு பிறக்குங் காலத்துளதாம் அனுபவம் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : தெளிவு பிறக்குங்காலத்துச் சிவாமுதம் சுரக்கும். ஞானேயம் உளதாம். அப்போது அகாரத் தில் விளங்கும் சிவச்சோதிக்குரிய ' அ ' என்னும் பதத் தில், ஒன்றியநிலை மாறி, காண்பானும் காணப்படு பொருளுமாகிய இரண்டான நிலை எய்தின் சிதாகாயத்து விளங்குகின்ற சிதம்பரநாதன் வெளிப்படுவன் ; கண்டு உய்யலாம் என்றவாறு.

முன் திருமந்திரத்திற் கூறியாங்கு சிவமாய் அமர்ந்திருக்கும்போது தெளிவு உண்டாம். அப்போது சிவ அமுதம் சுரக்கும். உச்சந்தலையிலிருந்து உள்ளங்கால் வரை ஓரின்பம் பரவும். அப்போது சிவஞானம் உண்டாம். அவ்வறிவு அகரமாகிய சிவத்தினிடமிருந்து பெறுவது ஒன்றா. அவ்வண்ணம் அகார வாச்சியனை இறைவனைக் கண்டிருக்கும்போது, தானும் சிவமும் வேறான இரண்டிலையெய்தின் சிதம்பரநாதன் காட்சி வழங்குவன். ஒன்றான நிலையிற் காண்பான் இல்லையாதலின், இறைவன் வியாபகத்துள் அடங்கி ஆன்மா சிவமேயாயிருத்தலின், அநுபவம் சித்தியாது. இரண்டாகில் அனுபவம சித்திக்கும் என்பதாம். ( 131 )

## 4. நவகுண்டம்

மந்திரப்பயிற்சிக்கு இன்றிமையாதன மூன்று தொழில்கள். அவை ஜபம். ஹோமம், தர்ப்பணம் என்பன. அவற்றுள் மந்திரஜபத்தைவிட நூறு மடங்கு உயர்ந்தது ஹோமம். அதனின் நூறு மடங்கு பயன் அதிகந் தருவது தர்ப்பணம். இவற்றுள் ஹோமமாவது, சிவாகம விதிப்படி வாகீஸ்வரி வாகீஸ்வர கர்ப்பத்திலிருந்து சிவாக்கினிபெற்று அதற்குச் சாதகன்மாதி கிரியைகளையும் செவ்வனேசெய்து, ஓமத்திற்குரிய குண்டத்தில் பிரதிட்டை செய்து, அக்கினியை எரியச்செய்து, அதைச் சிவமாகப் பாவித்துப் பூசித்து, உரிய பொருள்களால் ஓமஞ்செவதாம். அதற்கு மிக இன்றியமையாதது குண்டம். குண்டம் என்பது ஆழமான குழி. சிவயாகத்திற்கு ஒன்பது வகையான குண்டங்கள் இடப்படுதல் மரபு. அவை திரி

கோணம், சதுரம், வட்டம், பிறை, அறுகோணம் முதலி யன இப்பகுதி மந்திரஜ்பத்தின் அவசியத்தையும். செய் முறையையும் தெரிவித்தபின்னர், மந்திரசித்தியின் பொருட்டுச் செய்யப்பெறுவதாய ஓமத்திற்கு இன்றி யமையாத குண்டங்களை முன்னிட்டு ஓமாதிகளை விளக்குகின்ற ஆசிரியர் முதற்கண் நுதலிப்புகுதல் என்ற உத்திபற்றி நவகுண்டம்பற்றித் தெரிவிக்கிறார்

**நவகுண்ட மானவை நானுரை செய்யின்**
**நவகுண்டத் துள்ளெழு நற்றீபந் தானும்**
**நவகுண்டத் துள்ளெழு நன்மைகள் எல்லாம்**
**நவகுண்ட மானவை நானுரைப் பேனே.** **1015**

இ-ம் - எனின், நுதலிப்புகுகின்றது.

இ-ள் : நவகுண்டங்களைப் பற்றி நானுரை செய்யின் நவகுண்டத்தில் நல்ல சோதியானது எழும். நன்மைகள் யாவும் அங்கேயே விளைவன. ஆதலால் நவகுண்டங் களைப்பற்றி நானுரைப்பேன் என்றவாறு.

நல் தீபம் - நல்லொளிப் பிழம்பாகிய சிவம். ( 132 )

**உரைத்திடுங் குண்டத்தின் உள்ளேமுக் காலும்**
**நகைத்தெழு நாற்கோண நன்மைகள் ஐந்தும்**
**பகைத்திடு முப்புரம் பாரங்கி யோடே**
**மிகைத்திடு குண்டங்கள் மேலறி யோமே.** **1016**

இ-ம் - எனின், குண்டவகைகளை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : சொல்லப்பெறுகின்ற குண்டங்கள் முக் கோணமும், விளக்கத்தோடு எழுகிற நாற்கோணமும்.

நன்மைகளமைந்த ஐங்கோணமும், அறுகோணமும் ஆம் என்றவாறு.

முக்கால் என்றது யோனிகுண்டமாகிய முக்கோண குண்டத்தை. நாற்கோணம் என்றது சதுரஸ்ர குண்டத்தை. ஐந்து என்றது பஞ்சகோண குண்டத்தை. பகைத்திடுமுப்புரம் – முக்கோணம் இரண்டு ஒன்றற்கொன்று மாறாக அமைக்கப்பெற்றது. அது அறுகோண குண்டம். (133)

**மேலறிந் துள்ளே வெளிசெய்த வப்பொருள்**
**காலறிந் துள்ளே கருத்துற்ற செஞ்சுடர்**
**பாரறிந் தண்டஞ் சிறகற நின்றது**
**நானறிந் துள்ளே நாடிக்கொண் டேனே** 1017

இம் – எனின், அகத்தே நவகுண்டத்தில் அனல் ஓம்புமுறை அறிவித்தல் நுதலிற்று.

இ – ள் : ஆஞ்ஞைவரையில் வியாபித்திருப்பதாக உள்ளே வெளிபபட்ட சிவம், பிராணாயாமமாகிற காற்றை அறிந்தடக்க உள்ளே தியானத்தினிடமாகப் பொருந்திய செஞ்சோதி, பிருதிவி புவனங்களையும், அண்டமுகட்டையும் கடந்துநின்றது. இந்நிகழ்ச்சியை அடியேன் அகத்துள்ளே அறிந்து அது எழுவதை அறிந்தேன் என்றவாறு.

மேல் – மேல்வரை; பிரமரந்திரம் வரையில் உள்ளே வெளிசெய்தலாவது ஆருதாரங்களிலும் அங்கங்குள்ள மூர்த்திகளாய்த் தோன்றநிற்றல். அப்பொருள் என்றது அகாரவாச்சியனை சிவத்தை.

கால் - காற்று; பிராணன். அறிந்து - அறிய எனத் திரித்து, பிராணாயாமஞ்செய்ய எனப் பொருள்கொள்க. செஞ்சுடர் - செஞ்சோதியாய சிவம். பார் அறிந்து - பார்முதலிய பூதங்களைக்கடந்து. அண்டம சிறது அற - அண்டப்புறமும கடந்து. அற - கடக்க. பொருள், சுடர் நின்றது எனக் கூட்டுக. அதனைநான் கண்டேன் என்றது ஆசாரிய மூர்த்திகளாகிய திருமூலதேவர் தம் அநுபவங் கூறித் தெளிவித்தது. (134)

**கொண்டஇக் குண்டத்தின் உள்ளெழு சோதியால்**
**அண்டங்கள் ஈரேழு மாக்கி அழிக்கலாம்**
**பண்டையுள் வேதம் பரந்த பரப்பெலாம்**
**இன்றுசொல் நூலாய் எடுத்துரைத் தேனே** 1018

இம் - எனின், அக்கினியின் ஆற்றல் அறிவித்தல் நுதலிற்று.

இ - ள்: இங்ஙனம் அகமார்க்கத்தில் கொண்ட இக்குண்டத்துள்ளே எழுகின்ற சோதியால் ஈரேழு அண்டங்களையும் படைத்து அழிக்கலாம். பழைய மறைகளின் பொருட்டுப் பரப்பு அனைத்தையும், இன்று சொன்ன தந்திரமாகச் சொன்னேன் என்றவாறு.

நூல் - தந்திரம். முன் திருமந்திரத்திற் கூறியாங்கு அகமார்க்கத்து ஆருதாரக் குண்டத்துள் எழுகின்ற சிவாக்கினியால் அனைத்தையும் ஆக்கி அழிக்கலாம் என்பது. சோதியாய் எனப் பாடங்கொண்டு வேட்கும் அந்தணர் ஒளிவடிவாய், உலகங்களை ஆக்கவும் அழிக்கவும் வல்லவராவர் என்றுரைப்பாரும் உளர். பஞ்ச கிருத்திய ஆற்றல் இறைவனுக்கன்றி ஏனையோருக்கு ஒருசேர அமையாமை நோக்கித் தெளிக. ( 135 )

**எடுத்தவக் குண்டத் திடம்பதி ஞறிற்**
**பதித்த கலைகளும் பாலித்து நிற்கும்**
**கதித்தனல் உள்ளெழக் கண்டுகொள் வார்க்கே**
**கொதித்தெழு வல்வினை கூடகி லாவே. 1019**

இம் - எனின், பதினறுகலைகளிலும் அனல் கண்ட வற்கு வினையில்லை எனல் நுதலிற்று.

இ - ள்: இங்ஙனம் எடுக்கப்பெற்ற அக்குண்டத்தில், சோடச கலைகளும் விளங்கித் தோன்றும். அங்கே சோதி விளங்குதலைக் கண்டறிபவர்களுக்கு, சீறியெழு கின்ற வலிய வினைகள் சேரவே மாட்டா என்றவாறு.

எடுத்த குண்டம் என்றது வினைக்கீடாகத் தாங்கப் பெற்ற உடலை. இடம் ஏழன் சொல்லுருபு. பதினறில் பதித்த கலைகள் - சோடசகலைகள். அவற்றின் விரிவை பிராசாதசட்சுலோகியுட் காண்க. அவைகளைத் தியா னிக்க அங்கங்கேயும் சோதியாகச் சிவம் பிரகாசித்தலை அறிவன். அங்ஙனம் அறிவார்க்கு வினை இல்லையாம் என்றவாறு. *(136)*

**கூடமுக் கூடத்தின் உள்ளெழு குண்டத்துள்**
**ஆடிய ஐந்தும் அகம்புறம் பாய்நிற் தும்**
**பாடிய பன்னி ரிராசியும் அங்கெழ**
**நாடிக்கொள் வார்கட்கு நற்சுடர் தானே 1020**

இம் - எனின், நவகுண்டத்தை யோகமார்க்கத்தில் வைத்து உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் ; மூலாதாரத்தில், மூன்று கோணங்களில் உள்ள குண்டத்தில, விளங்குகின்ற அகார உகார மகார பிந்து நாதமாகிய ஐந்தும் அகமாயும் புறமாயும் நிற்கும். ஒலியோடியங்கும் பன்னிரண்டு இராசியும் அங்கு எழ அதனைக் காண்பவர்கட்குச் சிவச்சோதி தானே தோன்றும் என்றவாறு.

கூடமுக்கூடம் - மூலாதாரத்திலுள்ள மூன்று கோடுகளின் இணைப்பாகிய திரிகோணசக்கரம். இது உள்ளெழுகுண்டம் ; என்றது மூலாதாரத்தை.

ஆடிய ஐந்து – விளங்குகின்ற ஐந்து ; என்றது வியட்டிப் பிரணவமாகிய முற்கூறிய ஐந்தும். இது எண்ணுகுபெயர் ; அவை அகமாய் நிற்றல், புறமாய் நிற்றல் ஒலியுலகிற்கும் பொருளுலகிற்கும் காரணமாக அமைந்திருத்தல். பாடிய பன்னீரிராசி – பன்னிரண்டு கலைகள். இதனைச் சிலர் பிராணனியக்கம் பன்னிரண்டங்குலம் கூறுவதெனக் கூறி இடர்ப்படுவர், (137)

நற்சுட ராகுஞ் சிரமுக வட்டமாங்
கைச்சுட ராகுங் கருத்துற்ற கைகளிற்
பைச்சுடர் மேனி பதைப்புற் றிலிங்கமும்
நற்சுட ராயெழு நல்லதென் றுளே. 1021

இம் - எனின், குண்டத்து அங்கியே சிவலிங்கம் எனல் நுதலிற்று.

இ - ள் : வட்டமான சிரம் முகம் ஆகிய இவைகளும் நல்ல சோதியாம். தியானத்துப் பொருந்திய கைகளும் சுடரம். அந்தக் கைகளோடு விளங்கிய

திருமேனியாகப் பிரகாசிக்கும் இலிங்கமும் சோதியாய் ஓங்கியெழும். இதுவே நன்மை பயப்பதாம் என்றாள் அன்னை என்றவாறு.

திருவருட்சத்தி அங்கியே சிவலிங்கம் என்றறி வித்தாள் என்பது கருத்து. சிவலிங்கத் திருமேனியில் பாணமாகிய முகம் சிரமிரண்டும் தீ. சத்திபீடமாகிய முக்கோணமாகிய கோமுகையோடு கூடிய பகுதியும் தீ அக்கைகளோடு விளங்குகின்ற பசிய சுடர் வடிவம் சிவலிங்க வடிவே. ஆன்மாக்களுக்கு அறியாமை அகற்றி அறிவருள்வது இதுவே என்பது கருத்து

பதைப்புற்ற இலிங்கம் எனற்பாலது, பதைப்புற் றிலிங்கம் எனவாயிற்று. பதைப்புற்ற - பிரகாசிக்கின்ற இறந்தகாலம் நிகழ்காலமாக மாறியது. (138)

**நல்லதென் றாளே நமக்குற்ற நாயகஞ்**
**சொல்லதென் றாளே சுடர்முடி பாதமா**
**மெல்லநின் றாளை வினவகில் லாதவர்**
**கல்லதன் றாளையுங் கற்றும்வின் றாளே** 1022

இம் - எனின், அதுவே ஐந்தெழுத்தும் பிறவும் என்பதறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : அங்ஙனம் நல்லதென்ற பராசத்தியே, ஆன்மாக்களாகிய நமக்குக் கடைத்தேறற்கு ஏற்ற சொல்லாயிருப்பதும் அது என்றாள். இவ்வண்ணம் சுடர்முடியும், பாதமுமாக நின்ற சீபஞ்சாக்கர வடி வினளாகிய சத்தியை உசாவி அறியமட்டாதவர் கல்விக்கு அடியாயுள்ள நாதபிந்துக்களைக் கற்றும் அச் சத்தி அவற்றின் வேறுபட்டவளேயாவள் என்றவாறு.

வின்ஞள் - பின்ஞள் என்பதன் போலி. பின்னம் - வேறுபட்டது. நாயகம் சொல் - தலையாய சொல; சீபஞ்சாககரம். பிரணவமும், ஐந்தெழுத்தும் ஆகிய இரண்டும் சிவலிங்கமே பரணவவடிஉம் சீபஞ்சாககர வடிவும்; இம்முறை முன் திருமந்திரங்களில் குறித்த படங்களான் உணர்க.

சுடர்முடி பாதமா என அடியும் முடியுங் கூறவே. நெற்றி. கண், தோள் முதலிய உறுப்புக்களாக ஐந்தெழுத்து அமைந்திருத்தலையும் உண்மைவிளக்கங் கொண்டு உய்த்துணர்க. மெல்லநின்ருளை - சத்திக்கும் சத்தனுக்கும் வேறுபாடு இன்மையில குணியியல்பு குணததிற்குரியதாகக் கூறபபட்டது. அவரவர்களின் பரிபாபக நிலைக்கு ஏற்ப மென்மையுடன் விளங்கி நின்ற **அன்னையை.**

வினைவுதல்; நமக்கும் அவளுக்கும் உள்ள இயைபு என்ன? தடை எனன? அது நீங்கும உபாயம் எனன? என்று ஆய்தல்.

கல் - கலை, கல்லது - அது பகுதிப்பொருள் விகுதி. தாள் - கலையின் அடியாய நாத பிந்துக்கள். கற்றும் என்ற உம்மை இழிவுசிறப்பு. கற்ருல் ஒன்றி வாழ வேண்டிய நிலையிலிருந்தும் இழத்தலின் வேருனவன் என்றது. (139)

**வின்ஞ விளம்பிறை மேவிய குண்டத்துச்**
**சொன்ஞல் இரண்டுஞ் சுடர்நாகந் திக்கெங்கும்**
**பன்ஞலு நாகம் பரந்த பரஞ்சுடர்**
**என்ஞகத் துள்ளே இடங்கொண்ட வாறே** 1023

இ-ம் - எனின், பிறைமதிக் குண்டத்துப் பெருமான் நிற்குநிலை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : வில்லின் நாக்குப்போலும் வளைந்த அர்த்தசந்திர குண்டத்தில், அட்டநாகங்களும் திக்கு எட்டிலும் அமர. சொலலப்படுகின்ற நாலு பாம்புகள் பரந்துள்ள பாஞ்சுடராகிய சிவம் என் உள்ளத்துள் இடங்கொண்டு எழுந்தருளியுள்ளது என்றவாறு.

வில் நா இளம்பிறை - வில்லின் இருநுனிபோல வளைந்த இளம்பிறை. பிறைமேவிய குண்டம் - பிறை போல் உள்ள குண்டம்; எனறது அர்த்தசந்திர குண்டத்தை.

சொல நாலிரண்டு சுடர் நாகம் - சொல்லப்படும் அட்டமா நாகங்கள். பல நாலுநாகம் - சொல்லப்படும் திருக்கரம், இடுப்பு, முடியாகிய நான்கிடங்களிலும் விளங்குகின்ற நாகங்கள். ஆகம் (மார்பு) - நெஞ்சு, யோகமார்க்கததில அர்த்தசந்திர குண்டமாவது சுவா திட்டானம். அங்கு நால் + இரண்டு = ஆறு; ஆறு சொற்களாகிய வை. ஹ. ஓ. ய. ர. ல. என்னும் ஆறும் உள்ளன : அங்கே சிவம் விளங்கிநிற்கின்றது என்றும் கூறப்படும், (140)

இடங்கொண்ட பாதம் எழிற்சுட ரேக
நடங்கொண்ட பாதங்கள் நன்னி ரதற்குச்
சகங்கொண்ட கையிரண் டாறுந் தழைப்ப
முகங்கொண்ட செஞ்சுடர் முக்கண ரைக்கே 1024

இ-ம் - எனின். அச்சுடரே ஆனந்தக்கூத்தனின் திருவுரு எனல் நுதலிற்று.

இ - ள் : முக்கண்ணராகிய சிவனுக்கு ஊன்றிய பாதமாகிய அழகியசோதி ஒன்று. அச்சோதிக்கு நடங் கொண்ட பாதமே நல்லநீராம். அதன் எட்டுக்கரங்களே உலகைத் தாங்கி நிற்பனவாம். சூரியனே முகமாம் என்றவாறு.

இடம் கொள்ளுதல் — ஊன்றுதல். நடங்கொள் ளல் — வீசி நடமாடுதல் முக்கண்ணார்க்கு ஊன்றிய பாதம் ஒன்று. வீசியபாதம அதனீர். எண்தோள்களும் எட்டுத் திசைகளையுடைய வுலகம், முகம் சூரியன். இங்ஙனம் சிவன் விராட்சொரூபியாக விளங்குவன் என் பதாம். யாகத்தீயே இறை ; அதன் உருவத்தியானம் இது என்றவாறு. நடங்கொண்ட பாதத்தை நன்னீர் என்றது அருளல் உடைமையால் எனக. (141)

**முக்கணன் றனே முச்சுட ராயவன்**
**அக்கணன் றனே அகிலமும் உண்டவன்**
**திக்கணனாகித் திசையெட்டுங் கண்டவன்**
**எட்கணன் றனுக்கும் எந்தை பிரானே** 1025

இம் - எனின், சிவனே ஐந்தொழிலாற்றி அனை வரையும் அவ்வத்தொழிலில் அமர்த்துபவன் என்றல் நுதலிற்று.

இ - ள் : மூன்று கண்களையுடைய சிவனே முச் சுடராயவன் ; அந்தக் கண்ணனாகிய திருமாலாகி உலக முழுவதையும் காப்பாற்றத் திருவயிற்றில் அடக்கி யவன் : எட்டுக்கண்களை உடையவனாகி, திசைகளனைத் தையும் படைத்தவன். எவ்விடத்துள்ள தேவர்களுக் கும் ஏனையோர்களுக்கும் எம் தந்தையே தலைவன் என்றவாறு.

முழுச்சுடர் என்றும் பாடம். இந்தப்பாடத்திற்கு நிறைந்த சோதியாயுள்ளவன் என்க. முக்கண்ணன் என்பதற்கு ஏற்ப முச்சுடராயவன் என்ற பாடமே சிறத்தல் காண்க. முச்சுடர் – சோமசூரியாக்கினி.

அக் கண்ணன் - அந்தத் திருமால். திருமாலைக் கண்ணன் என்றது கரியநிறமுடைமையின், கிருஷ்ணாவதாரத்தை உட்கொண்டு உரைத்தது. அவன் உலகம் உண்ட வரலாற்றை அறிவிப்பது.

திக்குக் கண்ணன் - எட்டுக் கண்களுடையவன் ; பிரமன், திக்கு எண்குறித்து நின்றது. கண்டவன் - படைத்தவன். எக் கண்ணன் - எந்த (கண் - இடம்) இடத்திலுள்ளவர்களுக்கும் : அனைத்து உயிர்களுக்கும் என்றபடி. எந்தை பிரானே - சிவனே தலைவன். (142)

எந்தைபிரானுக் கிருமூன்று வட்டமாய்த்
தந்தைதன் முன்னே சண்முகந் தோன்றலால்
கந்தன் சுவாமி கலந்தங் கிருத்தலான்
மைந்தன் இவனென்று மாட்டிக்கொள் ளீரே 1026

இம் - எனின், சண்முகக்கடவுள் அவதாரத்தை அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : இங்ஙனம் சோதி வடிவான சிவனிடத்து ஆறு பொறிகளாகத் தந்தையின் திருமுன்னர் சண்முகம் தோன்றியதால், கந்தனாக இறைவன் கலந்து அங்கு எழுந்தருளினன், அதனால் முருகன் சிவனுக்கு மைந்தன் முறையாவான் என அறிந்துகொள்ளுங்கள் என்றவாறு.

தந்தையாகிய தனக்கு முதலாவதாக ஆறுமுகம் தோன்ற அதினின்று, ஆறு வட்டங்களாக ஆறு பொறிகள் தோன்ற, அதில சந்தனுக்க கலந்தங்கிருந் தமையால் கந்தன் மைந்தனுயினுன என்று அறிக எனபதாம்.

தந்தை தன் முன்னே சண்முகம் தோன்றலால், எந்தைபிரானுக்கு (தீ) இருமூன்று வட்டமாய், கந்தன (ஆக) சுவாமி கலந்திருத்தலால், இவன் மைந்தன் என மாட்டிக்கொள்ளீர் என முடிக்க. (143)

மாட்டிய குண்டத்தின் உள்ளெழு வேதத்துள்
ஆட்டிய காலொன்றும் இரண்டாய் அலர்ந்திடும்
வாட்டிய கையிரண் டொன்று பதைத்தெழ
நாட்டுஞ் சுரரிவர் நல்லொளி தானே 1027

இம் – எனின், பிராணவாயுவை யடக்கச் சுரராய் ஒளிபெறுவர் எனல் நுதலிற்று.

இ – ள் : பொருந்திய குண்டமாகிய மூலாதாரத் துள் வேதமுதலாகிய பிரணவத்துடன் கலந்துள்ள காற்றாகிய பிராணன், இடை பிங்கலையாகிய இரண் டாக விரியும். அதனை வாட்டுவதற்காக, இரு கைகளில் ஒன்று விரைந்து எழ அக்கையைக்கொண்டு அதனைக் கட்டுப்படுத்துகின்ற இவர் சுரராய் நல்லொளி பெறுவ என்றவாறு.

நவகுண்ட யாகம் எனப் பிராணுயாமத்தைக் குறித்தவாறு யோகநெறிபற்றி. குண்டத்தினுள் எழு வேதம் = மூலாதாரத்துத் திரிகோண சக்கரத்துள்ள ஓம் என்னும் எழுத்து. வேதம் என்பது வேதத்தின்

முதற்கண் ஒலிக்கப்படுவதாய் அதன் காரணமாய் நிற்கின்ற பிரணவத்தை உணர்த்திற்று.

வேகத்துள் ஆட்டிய கால் - மூலாதாரத்திலே பிரணவத்தோடு கலந்து உறைகின்ற பிராணவாயு, காலொன்றும் என்றதிலுள்ள ஒரு காற்றேயென்ற சிறப்புப்பொருள் தந்தது. இடைகலை பிங்கலையாக. உச்சுவாச நிச்சுவாசமாக விரிதலை இரண்டாய் அலர்ந் திடும் என்றருளியது. ஒருகாலில் இரண்டு மலர்கள் என்ற வேறு பொருளும் தொனிக்க நிற்றல் காண்க.

ஒட்டிய : செய்யிய என்னும் வினையெச்சம். அது எழ என்னும் வினையைக்கொண்டது. அந்தக் காற்றைக் கட்டுப்படுத்த. கை இரண்டு ஒன்று - இரு கைகளுள் ஒரு கை. பதைத்து - விரைந்து. வலது கையால மூக்கை மாறி மாறிப்பற்றி இழுத்தலும், விடுத்தலும், நிறுத்தலும் செய்து நாட்டுவார் தேவராக ஒளிபெறுவர் எனபதாம்

புதைத்து எழ எனவும் பாடம், இப்பாடத்திற்கு, கையால் பொத்திக் கால் மேலெழ எனப் பொருள் கொள்க. சுரர்கட்குத் தேவரென்றபெயரே ஒளியுடை யவர் என்ற காரணத்தால் வந்தது. ஆகவே இங்ஙனம் மூலக்குண்டத்து வேட்பார் சுரராய் ஒளி பெறுவர் என்பது கருத்து ஒளி தானே ஆவர் என வினை வருவித்து முடிக்க, (144)

**நல்லொளி யாக நடந்த வுலகெங்கும்**
**கல்லொளி யாகக் கலந்துள் இருந்திடும்**
**சொல்லொளி யாகத் தொடர்ந்த உயிர்க்கெலாம்**
**கல்லொளி கண்ணுளு மாகிநின் றுளே** 1028

இ-ள் - எனின், உடலொளியாக உண்டான அருளை உயிரொளியாகவும் உபதேச ஒளியாகவும் மெய்யொளி யாகவும் நிற்கும் முறைமை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : (முற்கூறியவண்ணம்) நல்ல ஒளியாக உலகெங்கும் பரவிக கற்றலால்வரும் ஒளியாக உயிருட் கலந்து விளங்கும். சொல்லால் விளையும் ஒளியாய்ப் பரவி உயிர்க்கெல்லாம் மெய்ஞ்ஞானமுமாய கண்ணுறுள் கலந்து காட்டுமுபகாரம் புரியும் ஒளியுமாகிக் கலந்து நின்றருள் திருவருட்சத்தி என்றவாறு.

நல்லொளி என்றது முற்றிருமந்திரத்தில் கூறிய உடலொளியை அநுவதித்தது. உலகெங்கும் நடந்து எங்கும் பரவி ; என்றது எல்லாரானும் எங்கும் அறியப் பட்டு என்றவாறும். நடந்து அவ்வுலகெங்கும் என்பது நடந்த உலகெங்கும் எனத்தொகுத்தல் விகாரமாயிற்று. 'நடந்துலகெங்கும்' எனவும் பாடம்.

கல் ஒளி – கற்றலான் வரும் ஒளி ; என்றது நூலறி வாகிய பாசஞானம். பாசஞானமாய் பதிஞானத்திற்கு வாயிலாயிருந்து துணைசெய்வதாய் உயிரைப் பொருந் தும் என்பதனை 'கல்லொளியாகக் கலந்து உள் இருந் திடும்' என்று குறிப்பித்தவாறு. மாணிக்கத்துள் ஒளி போல எங்கும் வியாபகமாய் இருக்கும் என்பாரும் உளர். இதற்கேற்ப ஏனைய அடிகளின் உரையையும் யாற்ற முடியாமை ஓர்க.

சொல்ஒளி – ஆசானின் உபதேசமாகிய ஞானம் என்றது சிவஞானம். கல்லொளி - மலைபோல நிலைத்த ஞானம் ; மெய்ஞ்ஞானம், கண் - விழி; அறிவுமாம். (145)

நின்றஇக் குண்டம் நிலையாறு கோணமாய்ப்
பண்டையில் வட்டம் பதைத்தெழு மாறுறுங்
கொண்டஇத் தத்துவம் உள்ளே கலந்தெழ
விண்ணுளும் என்ன எடுக்கலு மாமே 1029




இ-ம் - எனின், ஒளிக்கு இடமாக நின்ற இக் குண்டம் ஆதாரங்களாகவும், தத்துவங்களாகவும் இருக்கின்ற முறை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : ஒளிமயமாய் நின்ற குண்டம் ஆறு ஆதாரங்களும் சக்கரமாக அவற்றைச் சுற்றிலும், பழமை போல, வட்டவடிவாகிய பிரணவமானது ஒளிவிட்டெழும். முப்பத்தாறு தத்துவங்களும் இதனுள் கலந்து எழ 'விண்ணுளும்' என்னப் பதமந்திரம் தொடங்கலும் ஆம் என்றவாறு.

(146)

எடுக்கின்ற பாதங்கண் மூன்ற தெழுகை
கடுத்த முகம்இரண் டாறுகண் ணாகப்
படித்தெண்ணு நாவெழு கொம்பொரு நாலும்
அடுத்தெழு கண்ணான தந்தமி லாற்கே 1030

இம் — எனின், குண்டத்துள் எழும் சிவாக்கினி தேவதாத்தியானம உணர்த்துதல நுதலிற்று.

இ - ள் : அந்தமிலாத சிவாக்கினிக்கு, எடுக்கின்ற பாதங்கள் மூன்றும், ஏழு கைகளும், கடுகடுத்த முகம் இரண்டும், ஆறு கண்ணும், கற்று எண்ணும் நாகக்கள் ஏழும், கொம்புகள் நாலுமாகப் பொருந்தி எழுகின்ற இடமாயிற்று என்றவாறு.

அந்தமிலாற்கு எடுக்கின்ற பாதங்கள் மூன்றது, எழுகை, கடுத்த முகம் இரண்டு, ஆறு கண், படித்தெண்ணு நா எழு, கொம்பு ஒரு நாலு, அடுத்து எழு கண் ஆனது குண்டம் எனக் கூட்டிப் பொருள் கொள்க.

இம்மந்திரம் சிவாக்கினி முற்கூறிய ரூபத்தோடு குண்டத்தை இடமாகக் கொண்டெழுவதாம் என்க. இக்கருத்து முழுதும்,

**सप्तहस्तं चतुश्शृंगं सप्त जिह्वोहि शीर्षकम्।**
**त्रिपात्प्रसन्नवदन सुखासीनश्शुचिस्मितः ॥**

என்ற சுலோகத்துடன் ஒத்திருத்தலைக்காண்க. இங்ஙனமன்றித் தமக்குத் தோன்றியவாறே பொருள் கண்டு இடர்ப்படுவாரும் உளர். (147)

**அந்தமில் லானுக் ககடலிந் தானில்லை**
**தந்தமில் லானை அளப்பவர் தாமில்லை**
**தந்தமில் லானுக் கடுத்த சொற் றுனில்லை**
**அந்தமில் லானை அறிந்துகொள் பத்தே** **1031**

இ - னின், அங்கியின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : ஈறு அற்றவனாகிய அங்கிக்கு இருப்பிடமும், அளந்து வரையறை செய்வாரும், அறிவிக்கும் பொருத்தமான சொல்லும் இல்லையாம். ஆதலால் அவனைப் பத்தின் வடிவாகிய (ய) யகரமாக அறிக என்றவாறு.

அங்கி பாவற்றிற்கும் ஈறுசெய்வதாய், தான் ஈறு இன்றி இருத்தலின் அந்தமில்லான் என்று அழைக்கப் படுகிறது. அந்தமில்லாதவனாகிய இறைவனும் இந்த அங்கி வடிவமாய்ச் சிவாக்கினி, சிவச்சோதியென்று அழைக்கப் பெறுகின்றார் என்பதறிக. சார்ந்த இடத்தை அழிப்பது அங்கியின் இயல்பாதலின் 'அகலிடந்தான் இல்லை' என்றருளினர்

தீ, பிறருடைய ஆற்றலை அளக்கும் அளவுகோலாக. ''தீயன்ன தெறலும்'' எனக் கூறப்படுதலின 'அளப் பவர்தாம் இல்லை என்றது. ஒளியும் தெறலும் உடைமை காரணமாக அடுத்து வழங்கப்படுகின்ற பொருளில்லை யாகவே அதனைக் குறிக்கும சொல்லும் இல்லையாயிற்று.

அவனைப் பத்தாக அறிதலாவது பத்தின் வடிவம் (ய) தலைகுவியுமாயின் அது அங்கியின் இருதலைகளையும்

ஒத்ததாகும், ஆதலால் அங்கியைக்குறிக்கும் அடையாள எழுத்து ய என்பதாம். அக்கினி பீஜம் ரம்; அதனைக் குறித்தன்று என்க. (148)

பத்திட்டங் கெட்டிட் டாறிட்டு நாலிட்டு
மட்டிட்ட குண்டம் மலர்ந்தெழு தாமரை
கட்டிட்டு நின்று கலந்தமெய் யாகமும்
பட்டிட்டு நின்றது பார்ப்பதி பாலே 1032

இம் – எனின். சிவாக்கினி தத்துவ யஞ்ஞத்தைக் கடந்து சத்திமண்டலத்தைத் தாவி எரிந்தமை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: வரையோடு கூடிய குண்டத்து மலர்ந்தெழுந்த செந்தாமரைபோன்ற அக்கினியானது, பத்து இதழ், எட்டிதழ், ஆறிதழ், நாலிதழ் இவற்றையுடைய மணிபூரகம், அநாகதம், சுவாதிட்டானம், மூலாதாரம் என்ற ஆதாரங்களையுடைய கலந்த மெய்க்கண் இயற்றப்படுகின்ற தியானயஞ்ஞம் சகஸ்ராரமாகிய துவாதசாந்தத் தலத்திலே விளங்குகின்ற பராசக்தியினிடம் பொருந்தி நின்றது என்றவாறு.

மூலாக்கினி துவாதசாந்தம்வரை தாவி எரிந்தது என்பதாம்.

மூலாதாரம் நாலிதழ்க்கமலம். சுவாதிட்டானம் ஆறிதழ்க்கமலம், மணிபூரகம் பத்திதழ்க்கமலம், இதயம் எட்டிதழ்க்கமலம், விசுத்தி பதினாறிதழ்க்கமலம், தாலு இருபத்துநாலிதழ்க்கமலம், ஆஞ்ஞை நாலிதழ்க்கமலம், பிரமரந்திரம் பதினாறிதழ்க்கமலம், சிரமேல் ஐம்பத்திதழ்க்கமலம், துவாதசாந்தம் ஆயிரம் இதழ்க்

காலம். இதுவே சக்திமண்டலம். இங்குச் சர்வ வியாபியான சிவம் வீற்றிருக்கிறது என்று சித்தாந்த சாராவளி கூறுகிறது. ஆதலால் மூலக்கனலாகிய சிவம் வியாபகத்தை உணர்த்துவது இம் மந்திரம்.

எண்ணுப்பெயர்கள் அவ்வவ் வெண்களையுடைய இதழ்களையுடைய கமலங்களை உணர்த்தி அவற்றையுடைய ஆதாரங்களை உணர்த்தின. ஆதாரங்களை முறைமாற்றிக் கூறியருளியது சிவ ஒளி மேல போகப்போகக் கீழ் இல்லை என்பதில்லை; ஒளி முன்னும் பின்னும் செல்லுந் தன்மையுடைது என்பதை விளக்க,

மட்டிட்ட குண்டம் - ஆதாரங்களை அமைத்து வரையறைசெய்தகுண்டம; என்றது உடலை. தாமரை - அக்கினி; உவமவாகுபெயர்.

கலந்தமெய்யாகமும் கட்டிட்டு நின்று பார்ப்பதி பால் பட்டிட்டு நின்றது எனக்கூட்டுக.

மெய்யாகம் - தத்துவ யஞ்ஞம். புறத்தே செய்யப்படுகின்ற யாகங்களைக்காட்டிலும் இதுவே உண்மையான பயன தருவதாகலானும். இவ்வியாகம் நிலை பெறுதற்காகவே புறயாகங்கள செய்யப்படுகின்றனவாகலானும் இது மெய்யாகம் எனப்பட்டது. சக்திமண்டலம் வரை பரவிச் சிவத்தை விளங்கச்செய்வது இதுவே என்றவாறு. (149)

**பார்ப்ப பாகன் பரந்தகை நாலைஞ்சு**
**காற்பதி பத்து முகம்பத்துக் கணைகளும்**
**பூப்பதி பாதம் இரண்டு சுடர்முடி**
**நாற்பது சோத்திரம் நல்லிரு பத்தஞ்சே** 1033

இம் - எனின், சதாசிவமூர்த்தியின் தியானம் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : பார்வதிபாகனாகிய சதாசிவமூர்த்தியின் இருபக்கமும் பரவிய கைகள் இருபதாம். காலுக்கும் பதியாகிய நாசிகள் பத்தாம். முகத்தில் விளங்குகின்ற கண்களும் பத்தாம், மலரையொத்த திருவடிகள் இரண்டாம். ஒளிவிடுகின்ற திருமுடிகளும் அக்கரங்களின் நாற்பதாம் எழுத்தாகிய ஹ போன்ற காதுகளும் இருபதும் அஞ்சுமாம் என்றவாறு.

பார்ப்பதிபாகன் - மனோன்மணிக்குத் தலைவனாகிய சதாசிவமூர்த்தி. பரந்த கை நாலைந்து - ஐந்து திருமுகங்கட்கும், முகம் ஒன்றற்கு நான்காகப் பரந்த கைகள் இருபதாம்.

கால் - காற்று. பதி - இடம். காற்பதி - பிராண வாயுவுக்கு இடமாக விளங்கும் நாசி. ஐந்து முகங்களுக்கும் பத்தாம்.

முகம் பத்துக்கண் - முகக்கண் பத்தாம். நெற்றிக் கண் இவைகளுக்கு வேறாக ஐந்துளவாம் எனக் குறித்த வாறு.

பூ பதி பாதம் - திருமாலின் கண்போன்ற தாமரை கள் பதிந்துகிடக்கின்ற திருவடி; இரண்டாம். திருவீழி மிழலையில் நேத்திரார்ப்பணேசரது திருவடியில் கண் மலர் இருத்தல் ஈண்டு நினைத்தற்குரியது, அதுபோல அன்பர்கள் சாத்தியமலர்கள் பதிந்துகிடக்கின்றபாதம் என்பது.

சுடர் முடிகளும், நாற்பது சோத்திரம் - நாற்பதாம் எழுத்துப்போன்ற காதுகளும் இருந்தும் அஞ்சாம் என்பது. நாற்பது என்பது அகாராதி அக்கரங்களுள் நாற்பதாம் எழுத்தாகிய 'ஹ' என்பதை உணர்த்திற்று. செவி 'ஹ'போல இருத்தல் காண்க. முடி ஐந்தும், சோத்திரம இருபதும் என எதிர்நிரனிறையாகக்கொள்க. நால்பது சோத்திரம் - தொங்குகிற பத்து. 'ய' வடிவான சோத்திரம் எனவுமாம். இதுவே சிறந்த உரை எனலாம். (150)

அஞ்சிட்ட கோலம் அளப்பன ஐயைந்தும்
அஞ்சிட்ட குண்டமலர்ந் தங்கிருத்தலால்
பஞ்சிட்ட சோதி பரந்த பரஞ்சுடர்
கொஞ்சிட்ட வன்னியைக் கூடுதன் முத்தியே 1034

இம் - எனின், சிவபேதம் அனைத்தும் குண்டத் திருத்தலால், குண்டத்து அக்கினியைக் கூடுதலே முத்தியாம் எனல் நுதலிற்று.

இ - ள் : சதாசிவமூர்த்தியின் ஐந்தான திருமேனியும், அவற்றின் பேதமாய், அதிகாரமாய் நின்று அளப்பனவாகிய மயேச்சுர வடிவங்கள் இருபத்தைந்தும், அழகியகுண்டத்தில் விளங்கியிருத்தலால், பஞ்சீகரணம் செய்யப்பெற்ற சோதியாய் எல்லாப் பூதங்களிலும் பூத காரியங்களிலும் பரவிய பரஞ்சுடராகிய நுண்ணிய அக்கினியைக் கூடுதல் முத்தியாம் என்றவாறு.

அஞ்சிட்ட கோலம் ; ஈசானம், தத்புருஷம், அகோரம், வாமதேவம், சத்யோஜாதம் என்ற மூர்த்திகள். அளப்பன - அதிகரிப்பனவாகிய மாகேஸ்வர வடிவம்

இருபத்தைந்து, அவை விக்கின பிரசாதர், பிரம சிரச் சேதர், பிட்சாடனர், வீரபத்திரர், கஜசம்மாரர், கிராதர், காளகண்டர், கங்காளர், சக்ரபிரதர், சண்டேசாநுக்கிரகர், சுகாசனர், ஏகபாதர், சபாபதி, சலந்தராரி, திரிபுராரி, காலாரி, காமாரி, இலிங்கோற்பவர், சந்திர சேகரர், சோமாஸ்கந்தர், இடபாரூடர், உமாமகேசர், கலியாண சுந்தரர், அர்த்தநாரீசர், அரிபர்த்தர் என்பன.

அஞ்சு இட்ட குண்டம் - பஞ்சகுண்டம்; பஞ்ச முககுண்டம். இது சிவகுண்டம்.

கொஞ்சு – கொஞ்சம்; அம் குறைந்தது. வன்னி - தீ. கொஞ்சிட்ட வன்னி - சூட்சுமமாகிய அக்கினி; என்றது சிவபரம்பொருளை. (151)

முத்தநற் சோதி முழுச்சுட ராயவன்
கற்றற்று நின்றார் கருத்துள் இருந்திடும்
பற்றற நாடிப் பரந்தொளி யூடுபோய்
செற்றற் றிருந்தவர் சேர்ந்திருந் தாரே 1035

இ - எனின், இறைவனிருக்குமிடமும், அவன் இயல்பும், அவனை அடையும் உபாயமும அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : அநாதிமல முத்தனான சோதியாய் முழுச் சுடராய் உபகரிக்கும் பரம்பொருள், கலைஞானங்களை முற்றவோதி அதில் மயங்காது அவற்றைக் கடந்து நிற்பாரது கருத்துள் எழுந்தருளும். அதனை, உலகப் பற்றறத் தேடி வியாபியாயுள்ள குண்டலினியாகிய ஒளியின் துணையால் கடந்துசென்று, சினமாகிய பகை

நீங்கி, அசையாதிருந்தவர்கள் அதனோடு அநாதியமாய்ச் சேர்ந்திருப்பர் என்றவாறு.

முத்த நல் சோதி - முத்துப்போலும் நற்சோதியெனவுமாம். முழுச் சுடர் - குறையாதே, குறைந்து நிறையாதே என்றும் முழுச் சுடராயே ஒரு தன்மைத்தாயிருப்பவன். கற்று - கலைஞானங்களை முற்ற ஓதி. அற்று - அதில் நிலைத்து கடபடாம் என உருட்டி மருட்டித் தருக்கி நில்லாது அதனைக்கடந்து மெய்ஞ்ஞானத்தைப் பற்றிநிற்பர். கலைஞானமும் பாசமாய், சிவஞானத்திற்குத் தடைசெய்யும் பொன்விலங்காதலின் அதனையும் துறத்தல் இன்றியமையாததாயிற்று. மாணிக்கவாசக சுவாமிகள் "கல்வி என்னும் பல்கடற் பிழைத்தும்" என்று அருளினமையும் காண்க.

பற்றற நாடி - எனது, யான் என்னும் அகப்பற்றும், புறப்பற்றும் நீங்க ஆராய்ந்து. ஒளியூடுபோய்-மூலத்தினின்றும் குண்டலினி ஒளியோடு, அவ்வவ்வாதாரங்களிலுள்ள அதி தெய்வங்களாகிய ஒளிகளைப் பேதித்துக் கொண்டு, மதிமண்டலம் சென்று அதனையுங் கடந்து துவாதசாந்தப் பெருவெளியில் விளங்கும் பேரொளியாகிக் கலந்து,

செற்று-சினம். இது செற்றம் என்பதன் குறை, சேர்ந்திருந்தார் தியானபரராய் இருந்தனர். வீடு சேர்ந்திருந்தார் எனவுமாம். **(152)**

**சேர்ந்த கலையஞ்சுஞ் சேருமிக் குண்டமும்**
**ஆர்ந்த திசைகளும் அங்கே அமர்ந்திடும்**
**பாய்ந்தனும் பூதமும் பார்க்கின்ற வன்னியைக்**
**காய்ந்தவர் என்றுங் கலந்தவர் தாமே** 1036

இம் - ஏனின், பரவெளியில் ஒளியோடு உடனுறை கின்ற காலத்துளதாம் அநுபவம் அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : பொருந்திய நிவிருத்தியாதி பஞ்ச கலை களும், அவற்றைப் பொருந்திய ஓமகுண்டமும், அவை வாழ்வதற்காகப்பட்ட திசைகளும, எல்லாம் நுணுகி அங்கே பொருந்திடும். ஆதலால் பரவிய பருப்பூதங்கள் ஐந்தாலும் காணப்பட்ட காட்டைக் கொளுத்தியவர்களே என்றும் இரண்டறக் கலந்து விளங்குபவராவர் என்றவாறு.

சேர்ந்தகலை - 'மலச்சேற்றுள் அழுந்திக் கிடக்கிற ஆன்மாக்கள் 'சிறிது ஞானப்பிரகாசம் பெற்றுய்வதாக' என இறைவனால் உபகரிக்கப்பெற்ற நிவிருத்தி, பிர திட்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை என்னும் ஐந்து கலைகளும்.

சேரும் இக் குண்டமும் - அந்த ஐந்து கலைகளும் சேர்ந்துள்ள சரீரமாகிய இந்த ஓமகுண்டமும்.

திசை என்றது திசைகளை உடைய உலகையுணர்த் திற்று. ஆர்ந்த திசைகளும் - வினைப்போகத்தை நுகர் தற்காக அருளபெற்ற எல்லாம் நிறைந்த உலகமும் என்பது. அங்கே அமர்ந்திடும் - முதல் திருமந்திரத்தில் அருளியதுபோல் பெருவெளியில் ஒளியோடு கலந்திருக் கின்ற காலத்தில் இவையெல்லாம் நுணுகிக் காரணத் தன்மை எய்தி விளங்கும் என்பதாம்.

பாய்ந்த ஐம்பூதம் - பருப்பூதம் ஐந்தும் பார்க் கின்ற - காண்கின்ற; என்றது ஐம்பூதங்களும் கூடியும்

குறைந்தும் கூடிப்படைக்கப்பட்ட. வன்னி - காடு : என்றது பௌதிக உலகத்தை. உலகம் பொறிகளுக்கு ஏற்ற புலன்களாகிய காட்டினையுடையது. ஆதலால் வன்னியென்று உருவகிக்கப்பட்டது.

காய்ந்தவர் - காட்டைக் கொளுத்தியவர்; புலன் களை வென்றவர். என்றும் கலத்தல் - பிரியாமே அநுபவ மாதல். தாம், ஏ அசைகள். ( 153 )

**மெய்கண்ட மாவ்விரி நீருல கேழையும்**
**உய்கண்டஞ் செய்த ஒருவனைச் சேருமின்**
**செய்கண்ட ஞானந் திருந்திய தேவர்கள்**
**பொய்கண்டம் இல்லாப் பொருள்கலந் தாரே 1037**

இம் - எனின், உலகேழையும் உய்வித்த ஒருவனைச் சேருங்கள் என அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : விரிந்த கடலால் சூழப்பட்ட உலகு ஏழினையும் நிலைத்ததாம் வண்ணம் உய்யும் கண்டங்க களாகச்செய்த ஒப்பற்ற முதல்வனைத் தியானியுங்கள். செய்கைகளால் வரையறுக்கப்பட்ட ஞானம் எய்தித் திருந்திய தேவர்கள், பொய்யால் வரையறுக்கப்படாத மெய்ப்பொருளைக் கலந்தவரானார்கள் என்றவாறு.

செயலாகிய யாகாதி கன்மங்களிலே எப்போதும் தோய்ந்து களிக்கும் இந்திராதி தேவர்கள்கூட, கிரியை யால் பரிபாகப்பட்டு ஞானம் எய்தித் திருந்தி, மெய்ப் பொருளோடு கலந்தார்கள்; ஆகையால், மாயையின் காரியமாய், தோன்றி அழிவதாய உலகு ஏழையும் உய்யும்வண்ணம் ஆட்கொண்ட முதல்வனைச் சேருங் கள்; நீங்களும் முத்தியடையலாம் என்பது கருத்து.

மெய்கண்டமாம் உய்கண்டம் செய்து ஒருவனை எனக்கூட்டுக. உலகேழ் என்றது சப்த தீவிபங்களை. பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம், மகாலோகம், தபோலோகம் முதலான ஏழு உலகங்கள் என்க. விரிநீர் என்ற அடைமொழி உலகென்ற சொல்லை பற்றி வந்ததாகக் கொள்க. எல்லா உலகங்களும் மாயை யின் காரியமாகத்தோன்றி நின்று அழியும் தன்மையது ஆதலின் பொய்கண்டம். அவற்றை மெய்கண்டமாம் உய்கண்டம் செய்தான் இறைவன் என்பதாம். சேர்தல் - இடைவிடாது நினைத்தல்.

செய்கண்டம் - பொய்யாகிய வரையறை; என்றது கிரியைகளை. யாகாதி கருமங்கள். இதனால் ஞானம் பெறமுடியாது. இவைகள் பசுபுண்ணியங்கள்; பதவி களையே அளிப்பன. இவற்றின் நிலையாமை உணர்ந்து தேவர்கள் பசுபுண்ணியங்களைச் செய்யாமல் சிவவழி பாடு முதலிய பதிபுண்ணியகளைச் செய்து திருந்திய தேவர்களானார்கள். அதனால் அவர்கள் பொய்யால் வரையறுக்கப்படாது அதனைக் கடந்துள்ள மெய்ப் பொருளாம் சிவத்தைக் கலந்து விளங்கினார்கள் என்பது. (154)

**கலந்திரு பாதம் இருகர மாகும்**
**மலர்ந்திரு குண்ட மகாரத்தோர் மூக்கு**
**மலர்ந்தெழு செம்முக மற்றைக்கண் நெற்றி** 1038
**உணர்ந்திரு குஞ்சியங் குத்தம னார்க்கே**

இம் - எனின். ஓமகுண்டத்தில் தியானிக்கப்படும் இறைவன் திருவுரு இதுவெனல் முதலிற்று.

இ - ள்: தாமரைபோல மலர்ந்த பெரிய குண்டத்து விளங்குகின்ற உத்தமனாராகிய இறைவனுக்கு மலர்ச்சியான சிவந்த முகமும்; இருகண்களோடு மற்றைக்கண்ணாகிய நெற்றிக்கண்ணும், மகாரம்போன்ற ஒப்பற்ற மூக்கும், உணர்ந்த கரிய மயிர்முடியும், கலந்துள்ள இருபாதமும் இருகரமும் ஆகும் என்றவாறு.

மலர்ந்த இரு குண்டம் அங்கு உத்தமனார்க்கு, மலர்ந்தெழு செம்முகம், மற்றைக்கண், நெற்றி(க்கண்) உணர்ந்த இருகுஞ்சி, மகாரத்து ஓர் மூக்கு, கலந்த இரு பாதம், (கலந்த) இரு கரம் ஆகும் எனக் கூட்டிப் பொருள்கொள்க, அங்கங்களை நிரலே கூறுது பாதம் முதலாக மாற்றி அமைத்தது பாதாதிகேசமாகத் தெய்வங்களுக்குச் சொல்லும் மரபுபற்றி. *மூக்கின் நுனி* மகாரம் போல்வதாகலின் மகாரத்தோர் மூக்கு என்றது. குஞ்சி - ஆண்பால் தலைமயிர்.

கலந்த இரு பாதம் - அருளல் கலந்த இருபாதம். (155)
கலந்த இரு கரம் - திதி கலந்த இரு கரம் என்க.

**உத்தமன் சோதி உளனொரு பாலனாய்**
**மத்திம னாகி மலர்ந்தங் கிருந்திடும்**
**பச்சிம திக்கும் பரந்து குழிந்தன**
**சத்திமா னாகத் தழைத்த கொடியே** 1039

இம் - ளின், இறைவன் ஆஞ்ஞையில் சத்திமானுக விளங்குநிலை உணர்த்திற்று.

இ - ள்: ஓமகுண்டத்து உத்தமனாகிய சிவன் சோதிவடிவாய், பாலப்பருவமும் யௌவனப்பருவமுமுடையவராய் விளங்கி அங்கெழுந்தருளுவர். அதனால்

மேற்றிக்கும் பரந்து குழிந்தன. அவன் சத்திமானுக அங்கே விளங்க அவனோடு கொடிபோன்ற பராசத்தி தழைத்தாள் என்றவாறு.

உத்தமன் ஒரு சோதி பாலனுய் உளன் - சிவம் பாலாக்கினியாய் முதற்கண் குண்டத்து விளங்குவன். பின்பு யௌவனுக்கினியாய் அங்கேயே விளங்குவன்.

அக்கினியை வாகீஸ்வரி கர்ப்பத்திலிருந்து எடுத்துச் சாதகன்மம் முதலிய சமஸ்காரங்கள் செய்தபோது அவ்வக்கினி பாலாக்கினியாம். அதன் பிறகு ஏனைய சோடசக் கிரியைகளைச் செய்தபோது தருணுக்கினி அல்லதுயௌவனுக்கினியாம். ஆதலின் சிவச்சோதியே வளர்ந்து இங்ஙனம் விளங்கும் எனப்பட்டது.

பச்சிமத் திக்கு என்றது மேல் என்ற அளவில் நின்றது. ஆகவே உச்சிவரையில் அக்கினி வளர்ந்து எட்டியபோது உச்சிக்குழி மிகக்குழிந்து தோன்றியது. உச்சிக்குழி - ஆஞ்ஞாசக்கரம். அங்கே சத்தியோடு கூடியவனுகச் சிவம் விளங்கச் சத்தி பிரிந்து தோன்றி யது என்பார் 'சத்திமானுகத் தழைத்த கொடியே' என்றார். கொடி - கொடிபோன்ற சத்தி: குண்டலினி சத்தியுமாம்.

பாலாக்கினி முதலிய வேறுபாடுகளை ஆகமத்திற் காண்க. (156)

**கொடியாறு சென்று குலாவிய குண்டம்**
**அடியிரு கோணமாய் அந்தமும் ஒக்கும்**
**படியே மூலகும் பரந்த சுடரை**
**மடியாது கண்டவர் மாதன மாமே** 1040

இ-ள் - எனின், ஷட்கோணகுண்டம் இட்டு அதில் அக்கினிகாரியம் செய்தவர் அடையும் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் ; ஆறுகோடுகளை இடுவதால் விளையும் குண்டத்தில், இருகோணங்கள் அடியிலும் மேலுமாக இருக்கும், ஏழுலகிலும் பரவியுள்ள சிவச்சோதியைச் சோம்பாது அதனுட் கண்டவர்க்குப் பெருஞ்செல்வம் விளையும் என்றவாறு.

கொடி - கோடு. கொடி ஆறு சென்று குலாவிய குண்டம் - ஆறு கோடுகளை ஒன்றோடு பொருத்துவதால் விளைகின்ற குண்டம் ; ஷட்கோணம் அடி இருகோணமாய் அந்தமும் ஒக்கும் - கீழ் இருகோணமாக இருக்கும் ; மேலும் அங்ஙனமே விளங்கும் இங்ஙனம் அமைக்குமுறைமை,

"षट्सूत्रं परितन्कृत्वा षटकोणंतत्भवेदिह"

என்பதனுணர்க, (157)

**மாதன மாக வளர்கின்ற வன்னியைச்**
**சாதன மாகச் சமைந்த குருவென்றும்**
**போதன மாகப் பொருந்த உலகாளும்**
**பாதன மாகப் பரிந்தது பார்த்தே** 1041

இம் - எனின், அங்கிவழிபாட்டால் ஆகும் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : பெருஞ்செல்வமாக வளர்கின்ற ஓமாக்கினியை, பயிலுஞ்சாதனமாகக் கொண்ட குருவானவர்

என்றும் அறிவிக்கும் தொழிலையுமிருக்க, அருள் வீழ்ச்சியாக அதனையே அன்புடன் பார்த்து உலகை யாளுவன் என்றவாறு.

வன்னியைச் சாதனமாகக் கடைந்து, பாதன மாக அது பரிந்து பார்த்து, என்றும் போதனமாகப் பொருந்த உலகு ஆளும் எனக் கூட்டுக.

சாதனம் - வாயில். போதனம் - உபதேசித்தல். பாதனம் - வீழ்ச்சி; அஃதாவது அதனையன்றி மற்றொன் றையும் பற்றாது மடங்கி நிற்றல். (158)

**பார்த்திடம் எங்கும் பரந்தெழு சோதியை**
**ஆத்தம தாகவே யாய்ந்தறி வாரில்லை**
**காத்துட லுள்ளே கருதி இருந்தவர்**
**மூத்துடல் கோடி யுகங்கண்ட வாறே** 1042

இம் - எனின், எங்கும் நிறைந்துள்ள சோதியை அறிந்து, உடலுக்குள்ளேயே கண்டவர் காயகற்பம் பெறுவர் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : பார்த்த இடங்கள் அனைத்திலும் பரந்து எழுகின்ற சோதியாகிய சித்தை அன்போடு ஆய்ந்து அறிவார் யாரும் இல்லை. பொறிகளைப் புலன்வழியே போக்காத வண்ணம் காத்து, உள்ளே தியானிப்பவர், சரீரம் முதிர்ந்து கோடியுகங்கள் கண்டு வாழ்வார் என்றவாறு.

ஒளியான் திருமேனி படைத்த இறைவன் எங்கு மாய் நிற்பவன் என்பதும், அவனை அன்போடு தமக் குள்ளேயே காணவேண்டும் என்பதும், அங்ஙனம்

கண்டால் அறியாத உடல் அடையாளம் என்பதும் உணர்த்தப்பெற்றன.

**உகங்கண்ட ஒன்பது குண்டமும் ஒக்க**
**அகங்கண்ட யோகியுள் நாடி எழுப்பும்**
**பயங்கண்டு கொண்டவிப் பாய்கரு வொப்பச்**
**சகங்கண்டு கொண்டது சாதன மாமே 1043**

இ-ள் - எனின், நவகுண்டமும் தமக்குள் கண்ட யோகி உலகம் முழுதையும் அறிவன்; அதுவே சாதனம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : மிகப் பழமையான நவகுண்டங்களையும் ஒருசேரத் தமக்குள் கண்ட சிவயோகியானவன் உள் நாடிக்கண் எழுப்புதலால் விளையும் பயனை அநுபவித்தறிந்ததால் ( உலோகம் ) பாய்கின்ற இந்தக் கருவை யொப்ப உலகத்தை உணருவன்; அதுவே சாதனமாம் என்றவாறு.

உலகமுழுதும் அந்தச் சிவயோகிக்குப் பாய்கின்ற கருவினை ஒத்துத் தெற்றென அறியப்படும் என்பதாம். உருவங்களை வார்க்கின்றபோது கருக்கட்டி, அதனுள் நீர்போல, உலோகத்தைக் காய்ச்சி யூற்ற அவ்வுருச் சமைந்து கண்ணுக்கு அறியப்படுமாறுபோல, நவகுண்டத்தையும் தம்முட் கண்ட யோகிக்கு உலகம் முழுதும் அறியப்படும்; அதுவே சாதனமாம் என்பது கருத்து. ஒன்பதுகுண்டம் - சதுரம், யோனி, பிறை, முக்கோணம், வட்டம், அறுகோணம், பதுமம், அட்டகோணம், வர்த்துலம் என்பன. வட்டம் - சமவிருத்தம். வர்த்துலம் - நீளவிருத்தம். இவை முறையே

யாகமண்டபத்தின் கிழக்கு, அக்கினி, தெற்கு, நிருதி, மேற்கு, வாயு, வடக்கு, ஈசானம், ஈசானத்திற்குப் கிழக்கிற்கும் நடு இவ்விடங்களில் அமைக்கப்பெறு வன. இது குண்டங்களை வெளியேயிட்டுச் செய்யப் படும் கிரியாவதி முறைக்கு.

இவ்வொன்பது குண்டங்களை அகம் காயுமுறை யாகிய ஞான ஹோமமாவது சதுரகுண்டம் மூலா தாரத்துள்ள பூமண்டலம். பிறைக்குண்டம் சுவாதிட் டானத்துள்ள ஜலமண்டலம். அறுகோணகுண்டம் அநாகத சக்கரத்துள்ள வாயுமண்டலம். முக்கோண குண்டம் மணிபூரகத்துள்ள அக்கினி மண்டலமாம். வட்டகுண்டம் விசுத்த சக்கரத்துள்ள ஆகாய குண் டம். பதுமகுண்டம் ஆஞ்ஞா சக்கரத்துள்ள சுக்கில பதுமத்தைக் குறிப்பதாம். யோனி குண்டம் மூலாதாரத் திற்கும் சுவாதிட்டானத்திற்கும் இடையிலுள்ள காம வாயுவிற்கும் காம பீஜத்திற்கும் இடமாகவுள்ள திரி கோணத்தைக்குறிப்பது. அஷ்டகோணகுண்டம் சிரத் திற்கு மேலுள்ள ஒன்பதிதழ்க் கமலத்தைக் குறிப்பது. வர்த்துலகுண்டம் துவாதசாந்தத்திலுள்ள பராகாயத் தைக் குறிப்பது. இவ்வண்ணம் அகக்கிரியையிலே குண்டங்களைத் தமக்குள்ளேயே தியானித்து அந்தந்த அதிதெய்வங்களை அவ்வக்குண்டங்களில் எரியும் சோதியாகப் பாவித்துத் தரிசித்தல்.

இங்ஙனம் தரிசிக்கின் உள்நாடிகளில் குண்டலி யையும் பிராண வாயுவையும் எழுப்பும் பயனைக் கண்டவனுவன். கண்டுகொண்ட என்பதனைக் கண்டு கொண்டமையால் என ஏதுவாக்கி முடிக்க.

கருவொப்பச் சகம் கண்டுகொண்டது ஆம் என ஒருசொல் வருவித்து முடிக்க. (160)

**சாதனை நாலு தழல்மூன்று வில்வயம்**
**வேதனை வட்டம் விளையாறு பூநிலை**
**போதனை போதைஞ்சு பொற்கய வாரண**
**நாதனை நாடு நவகோடி தானே** 1044

இம் - எனின், நவகுண்டங்களைத் தொகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : நாற்கோணமும், முக்கோணமும், வில் நுனியும், வட்டமும், அறுகோணமும், அட்டகோண மும், பதுமமும், யோனியும், வட்டமும் ஆகிய ஒன் பதுமே இறைவனை நாடும் ஒன்பது கோணங்களில் அமைந்த குண்டங்களாம் என்றவாறு

எண்களைக் குறிக்க அவற்றின் பொருள்களைக் கொண்டு உணர்த்துகின்றார். சாதனை நாலு - சரியை கிரியை யோகம் ஞானம் என்ற சாதனங்கள் நான்கு; என்றது சதுரகுண்டத்தைக் குறிப்பது. தழல்மூன்று - தட்சிணாக்கினி, ஆகவநீயம், காருகபத்யம் என்பன; என்றது முக்கோணக் குண்டத்தை. வில் வயம் - வய வில், வளைந்தவில்; என்றது பிறைக்குண்டத்தை.

வேதன் ஐ வட்டம் - வேதங்கட்குத் தலைவனாகிய பிரமனுக்கும் தலைவனாகிய சிவரூபமாகிய ஆகாயத்தின் வடிவாகிய வட்டம்; என்றது விருத்த குண்டத்தை. விளை ஆறு - அநுபம் விளையும் இடமாகிய ஆறு ஆதாரங்கள்; என்றது அறுகோண குண்டத்தை. பூ - பூமி. நிலை - அதன் நிலைகளாகிய திசை. பூ நிலை என்றது எட்டுத் திசை

போல்வதாகிய அட்டகோண குண்டத்தை. போதியோனி - போதி விருட்சமாகிய அரசின் இலையை ஒத்த யோனி குண்டம். போது - தாமரை; என்றது பதும குண்டத்தை.

பொற்கயவாரணம் - அழகிய ஆழமான குண்டம்: என்றது குக்குடவாரமாகிய வட்டவடிவ குண்டத்தை. வாரணம் - கோழி. கோழியின் வடிவம் வட்டமானது; ஆதலால் வட்டக்குண்டம் என்பது. ஆகிய இவை ஒன்பதும் இறைவனை விரும்பி அழைத்தற்கு உரிய ஒன்பது குண்டங்களாம் என்பது.

இந்த மரபுபற்றிக் குண்டங்களைப் பரியாயங்கூறி மறைத்து மொழிந்தவாறு காண்க. (161)

## 5. சத்திபேதம் – திரிபுரைச் சக்கரம்

‘அருளது சத்தியாகும் அரன் தனக்கு’ என்பராக லின், இறைவனை என்றும் பிரியாத அருளே சத்தியாம். அச்சத்தியே இறைவனுடைய அருளாணையின்வண்ணம் பல வடிவு தாங்கி அருள்புரிவள். ஆதலால் சத்தியின் பேதங்களை அறிவிக்கின்றது இப்பகுதி. இதனுள், அன்னையின் பல பெயர்களையும், அவற்றின் காரணங்களையும் அறியலாம். மனங்கரைக்கும் தோத்திரமாக விளங்குவது. மூன்று கண்டங்களாகிய சக்கரத்திற்கு உரியவள் ஆதலால் திரிபுரை எனப் பெறுகின்றாள் அன்னை. அன்னைக்குச் சக்கரமும் அதன் மந்திரமும் ஒரு திருமேனியாதலின் அதன் அமைப்பை அறிவிக்கின்றது இப்பகுதி.

**மாமாயை மாயை வயிந்தவம் வைகரி**
**ஓமாயை உள்ளொளி ஓராறு கோடியில்**
**தாமான மந்திரஞ் சத்திதன் மூர்த்திகள்**
**ஆமா யலவாந் திரிபுரை யாங்கே** **1045**

இ-ள் - எனின், திரிபுரை மாமாயை முதல் அனைத்து மாகியும், அல்லவாகியும் இருப்பவள் என்பது உணர்த் துதல் நுதலிற்று.

இ-ள் : மாமாயை என்னும் சுத்த மாயையாகி யும், அசுத்த மாயையாகியும், விந்துவாகியும், வைகரி வாக்காகியும், ஓம் என்னும் பிரணவமாகியும், உள் ளொளியாகியும், ஆறு இறுதியினையுடைய மந்திர வடி வான சத்திகள் தாமாயும், அவற்றைக் கடந்து அல்ல வையும் விளங்குவள் திரிபுரை என்றவாறு,

மாமாயை - சுத்தமாயை, மாமாயை, சுத்தமாயை, குடிலை, விந்து, குண்டலி என்பன ஒருபொருட் கிளவி கள். மாயை - அசுத்தமாயை. அசுத்தமாயை, அதோ மாயை, மோகினி மாயை என்பன ஒருபொருட் கிளவி கள். திரிபுரை சிருட்டி யுன்முகமாகி ஒலியுலகையும், பொருளுலகையும் படைக்கத் தொடங்கியபொழுது மாயையை முதல் காரணமாகக்கொண்டு சிருட்டி செய்வள். அப்போது அன்னை இங்ஙனம் ஆகின்றாள். ஆனாலும் இவற்றைக்கடந்து இவற்றைக் காரியப் படுவதாக்கி அல்லவாயும் நிற்பள். உள் ஒளி என்றது ஞானசத்தியை, கோடி - இறுதி, ஆறு கோடியில் தாமான மந்திரம் - நம :, வௌட், வௌஷட், ஸ்வாஹா, ஸ்வதா, ஹும்பட் என்பன. மந்திரங்களனைத்துமே பிரணவ நாதகாரியமாதலின் பிரணவம் பராசத்தியின்

அருள் திருமேனியாதலின் ஆறுகோடியில் தாமாவ மந்திரமாயிற்று. மூர்த்திகள் ஆம்; ஆய் அவ ஆம் எனப் பிரித்துப் பொருள்கொள்க. (162)

**திரிபுரை சுந்தரி அந்தரி சிந்துரப்**
**பரிபுரை நாரணி யாம்பல வண்ணத்தி**
**இருள்புரை ஈசி மனோன்மணி என்ன**
**வருபல வாய்நிற்கு மாமாது தானே** 1046

இம் - எனின், அம்மை பலவாய் நிற்கும் எனல் நுதலிற்று,

இ - ள் :மாமாதாகிய பராசத்தி, திரிபுரைமுதல் மனோன்மணி யீருன பலவடிவாக நின்று அருள் வழங்குவர் என்றவாறு,

திரிபுரை - மூன்று கண்டங்களான முக்கோண சக்கரத்துள் விளங்குபவள். சுந்தரி - அழகியவள், அந்தரி - விண்வடிவாக இருப்பவள். சிந்துரப் பரிபுரை - சிந்தூர நிறம்போலும் நிறத்தையுடைய பரிபுரை, பரிபுரை - உலகங்களைத் தாங்கிக் காப்பவள். நாரணி - மாலின் சத்தியாகிய நாராயணனுக்குத் திதித்தொழில் கைவரச் செய்யும் அருளாற்றலாக விளங்குபவள்.

ஆம் அசை. பிராமியாகிய பால வன்னத்தி - பால்போன்ற நிறமுடையவள். இருள்புரை ஈசி - மகேசுவரன் சத்தியாகிய கருநிறம் பொருந்திய மகேசை, சதாசிவ சத்தியாகிய மனோன்மணி - நினைப்பவர் மனத்தில் விளங்குபவள். இவை சிவத்திற்குச் சத்தியாயும்; நாதத்திற்கு விந்துவாயும், சதாசிவத்திற்கு மனோன்மணியாகியும், மகேசனுக்கு மகேஸ்வரியாகியும்.

உருத்திரனுக்கு உமையாயும், மாலுக்குத் திருவாகிய நாராயணியாகியும், பிரமனுக்குப் பிராமியாகியு மிருந்து சத்தி அருள்வழங்கலை அறிவிக்கின்றது. (163)

**தாஞ அமைந்தவம் முப்புரந் தன்னிடைத்**
**தானுன மூவுரு வோருருத் தன்மையள்**
**தானுன பொன்செம்மை வெண்ணிறத் தாள்கல்வி**
**தானுன போகமும் முத்தியும் நல்குமே** 1047

இம் - எனின், திரிபுரை மூவுருவாய், மூவுருவும் ஒருருவாய், மூந்நிறமாய், முப்பயன்களை அளிப்பள் எனல் நுதலிற்று.

இ - ள்: இயல்பாகவே அமைந்த முப்புரங்களில் மூவுருவுடையாளாய், மூவுருவும் ஒருருவாந்தன்மை யளாய், பொன் செம்மை வெண்மை நிறத்தையுடைய ளாக, கல்வியும் போகமும் மோட்சமும் அளிப்பவ ளாவள் என்றவாறு.

மூவுரு - சிவை, திருமகள், கலைமகள் என்ற மூவுருவுடையாள். ஒருருவாதல் - இம்மூன்றுற்றலையும் தாமே தாங்கி உமையாக நிற்றல். வெண்ணிறத்தா ளாகிய கலைமகள் கல்வியையும், பொன்னிறத்தாளாகிய திருமகள் போகத்தையும், செந்நிறத்தாளகிய சிவை முத்தியையும் நல்கும் என்க. (164)

**நல்குந் திரிபுரை நாதநா தாந்தங்கள்**
**பல்கும் பரவிந்து பாரண்ட மானவை**
**நல்கும் பரையபி ராமி அகோசரி**
**புல்கு மருளுமப் போதாந்தந் தாளுமே** 1048

இம் - எனின், திரிபுரை ஆட்கொள்ளும் முறைமை உணர்த்தல் நுதலிற்று.

இ - ள்: திரிபுரை நாத நாதாந்தங்களை நல்குவள்; பரவிந்தாக இருந்து பல்கிப் பார்முதலான அண்டங்களானவைகளை நல்குவள். பரையும் அபிராமியும் அகோசரியுமாகிய அன்னை அன்போடு தழுவுவள். அருளுவள்; அறிவு தந்தாட்கொள்ளுவள் என்றவாறு.

பல்குதலாவது ஒன்று பலவாகப் பெருகுதல். அபிராமி-பேரழகுடையவள். அகோசரி - வாக்கு மனோதீத மானவள். போதம் - மெய்ஞ்ஞானம். (165)

**தாளணி நூபுரஞ் செம்பட்டுத் தானுடை**
**வாரணி கொங்கை மலர்க்கன்னல் வாளிவில்**
**ஏரணி அங்குச பாசம் எழில்முடி**
**காரணி மாமணிக் குண்டலக் காதிக்கே** 1049

இம் - எனின், இராஜராஜேஸ்வரியின் தியானம் அறிவித்தல் நுதலிற்று.

இ - ள்: கரிய நீல்மணியாலான குண்டலத்தை அணிந்த காதினையுடைய பராசத்திக்குத் திருவடியில் அழகிய சிலம்பு, செம்பட்டுடை, கொங்கையிலணி செய்வது கச்சு, மலர் அம்பு, கரும்பு வில், எழுச்சியை அளிக்கும் அழகுசெய்யும் அங்குசம், பாசம், அழகிய கிரீடம் இவை விளங்குவனவாம்.

இது ராஜராஜேஸ்வரி தியானத்திற்கு உரியதாதல் காண்க. (166)

**குண்டலக் காதி கொலைவில் புருவத்தள்**
**கொண்ட வரத்தினின் மன்னுகோ லத்தள்**
**கண்டிகை யாரங் கதிர்முடி மாமதிச்**
**சண்டிகை நாற்றிசை தாங்கிநின் றளே** 1050

இம் - எனின், சண்டிகாதேவியின் தியானங் கூறுதல் நுதலிற்று.

இ - ள் : குண்டலங்களைக் காதில் அணிந்தவள்; கொல்லுந் தன்மை வாய்ந்த வில்போலும் புருவத்தள்; மேற்கொண்ட வரதகோலத்தில் வீற்றிருப்பவள்; கண்டார் கண்களைத் திகைக்கச்செய்யும் ஆரத்தையும், ஒளிவிடுகின்ற சந்திரனையும், முடியினையும் உடைய சண்டிகைதேவி நாற்றிசையையுடைய உலகங்களைக் காத்துநின்றாள் என்றவாறு.

கொண்ட வரத்தினின் மன்னு கோலம் - வரத ஹஸ்தத்தோடு கருணைசெய்யும் கோலமாகிய சாந்தரூபம். (167)

**நின்ற திரிபுரை நீளும் புராதனி**
**குன்றலில் மோகினி மாதிருக் குஞ்சிகை**
**நன்றுறி கண்டிகை நாற்காற் கரீடணி**
**துன்றிய நற்சுத்த தாமரைச் சத்தையே** 1051

இம் - எனின், கஜலட்சுமி தியானம் கூறுதல் நுதலிற்று.

இ - ள் : நிலைபெற்ற திரிபுராதேவி மிகத்தொன்மை வாய்ந்த புராதனி, குறைவின்றி எல்லா உயிர்களையும் மயக்கி நிற்பாள், தாய். மயிர்முடியினை உடையாள்,

நன்ருக அறிகின்ற கண்களை உடையாளாக நான்கு திசையிடங்களிலும் உள்ளாரை ஆகர்ஷணம் செய்பவள், நல்ல சுத்தமான இதயத்தாமரையில் சுத்த முடையாள் என்றவாறு.

குன்றினின் மோகினி எனவும் பாடம். குஞ்சிகை. மயிர் முடியுடையாள்; திகை நால்கால் - திக்குகளாகிற நான்கு இடம். கால் - இடம். கரிடணி - ஆகர்ஷணி என்பதன் குறை. காமாதிகளாற் பற்றப்படாத இதயம் 'நற்சுத்த தாமரை'. (168)

**சுத்தவம் பாரத் தனத்தி சுகோதயள்**
**வத்துவ மாயா ளுமாசத்தி மாபரை**
**அத்தகை யான மனேரணி தானுமாய்**
**வைத்தவக் கோல மதியவ ளாகுமே** 1052

இம் - எனின், இதுவும் அம்மையின் தியானம் கூறுதல் நுதலிற்று.

இ - ள்: தூய அழகிய கனத்த தனங்களையுடையாள்; சுக உற்பத்திக்குக் காரணமானவள்; அனைவரையும் ஓர்பொருளாகக் கொண்டு ஆட்கொள்ளும் பெரிய சக்தி; பெரிய பராசக்தி; அங்ஙனமான மன ஆரண்யத்திற்கு உரியவள்; தானேயாகப் படைத்திட்டுக் கொள்ளும் அவ்வடிவத்தோடு ஞானசொரூபியும் ஆவள் என்றவாறு.

மலத்தோடு கூடி, கேவலத்துட்பட்டு வருந்தும் ஆன்மாக்களாகிய பொருளல்லாதவரையும் தன் தடையிலாக் கருணையால் எடுத்துப் பொருளாகக் கொண்டு

ஆளும் தன்மையை 'வித்துவமாய் ஆளும் மா சத்தி' எனப் பாராட்டியது.

மன ஆரணி - மனக்காட்டிலே வசிப்பவள்; 'கடம் பாரண்ய நிவாஸினி' என்பது லலிதாதேவியின் பேயர் களில் ஒன்று.

தானுமாய் வைத்த அக்கோலம் - வினைக்கீடாகப் பிறர் தர வாராது தன்னிச்சையால் தானே பொருந்திய திருவுருவம். மதியவள் - ஞானசொரூபி. **(169)**

**அவளை யறியா அமரரும் இல்லை**
**அவளன்றிச் செய்யும் அருந்தவம் இல்லை**
**அவளன்றி ஐவரால் ஆவதொன் றில்லை**
**அவளன்றி யூர்புகு மாறறி யேனே.** **1053**

இம் - எனின், அவளே எல்லாம் என்பது உணர்த் துதல் நுதலிற்று.

இ - ள்: பொருள் வெளி.

அமரர்கள் தமது வாழ்நாள் இன்பமாகக்கழிய அன்னையின் அருளை வேண்டி நிற்பாராதலின் 'அவளை அறியா அமரரும் இல்லை' என்றது,

தவஞ்செய்வார்க்குக் குண்டலினிசத்தியாக மதி மண்டலம்வரை ஏறி, பராசத்தியாகத் தவப்பயனைத் தருபவள் சத்தியாதலின் 'அவளன்றிச் செய்யும் தவம் இல்லை' என்றது

ஐவர் - பஞ்சேந்திரியங்கள். பிரமா, விஷ்ணு, ருத்ரன், மகேசன், சதாசிவன் என்ற ஐவருமாம். சத்தியின்றி இவர்கள் எத்தொழிலும் ஆற்றகில்லாராதலின் 'அவளன்றி ஐவராலாவதொன்றில்லை' என்றது. இந்திரியங்களும் தத்தம் புலன்களைச்சென்று நுகரவேண்டுமாயின் தாயின் கருணைவேண்டும் என்க. சத்திநிபாதம் பெற்றாலன்றி வீடடைதல் ஆகாதாதலின் 'அவளன்றி யூர்புகுமாறு அறியேன்' என்றது. (170)

**அறிவார் பராசத்தி ஆனந்தம் என்பார்**
**அறிவார் அறிவுரு வாமவள் என்பார்**
**அறிவார் கரும மவளிச்சை என்பார்**
**அறிவார் பரனு மவளிடத் தானே** 1054

இம் - எனின், ஞானிகள் தரிசிக்குமுறை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : ஞானிகள், பராசக்தி ஆனந்தவடிவினள் என்பார்கள்; ஞானசொரூபி என்பார்கள்; நாம்செய்யுங் கன்மங்களனைத்தும் அவளதிச்சையின்வழியே நடப்பனவாம் என்பார்கள்; பரசிவனும் அவளிடம் எழுந்தருளியிருப்பவரே என்பார்கள் என்றவாறு. (171)

**தானெங் குளதங் குளதையன் மாதேவி**
**ஊனெங் குளஅங் குள்ளுயிர்க் காவலன்**
**வானெங் குளஅங் குளேவந்து மப்பாலாம்**
**கோனெங்கும் நின்ற குறிபல பாரே,** 1055

இம் - எனின், சிவசத்திகளின் வேறற்ற நிலை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: சிவமாகிய தான் எங்குளதோ அங்குள தையலாகிய மகாதேவி; ஊனுலாகிய உடலெங்கோ அங்கு உயிர்க்குள் உயிராக இருந்து காப்பவள்; ஞான காயம் எங்கே அங்கு அதனுள்ளாக வியாபித்துநின்றும், அப்பாலுமாக இருப்பவள்; தலைவனுகிய பரசிவம் எங்கோ அங்குத் தானும் பிரியாது குறிப்புக்கள் பல வற்றையும் ஆராய்ந்துபார் என்றவாறு.

வாமமார்க்கத்தார், எல்லாம் சக்தியின் ஆற்றலே; சக்தி தனியேநின்று அனைத்தையும் சிவத்தையும் ஆட் கொள்ளும் என்பர். அவர்கள் கூற்றை மறுத்தது இம்மந்திரம், **(172)**

**பராசத்தி மாசத்தி பல்வகை யாலுந்**
**தராசத்தி யாய்நின்ற தன்மை யுணரா**
**உராசத்தி ஊழிகள் தோறும் உடனே**
**புராசத்தி புண்ணிய மாகிய போகமே** 1056

இம் - எனின், சத்தியின் ஆற்றல் அறிவித்தல் நுதலிற்று.

இ - ள்: பொருள் வெளி.

பல்வகையாலும் தராசத்தியாய் நின்ற தன்மை யுணரா உரு ஆ சத்தி - பல்வகையாலும், அவரவர் பரி பாகங்கட்கு ஏற்பப் பாதுகாக்கும் சத்தியாய் அவள் நின்ற நிலையையுணராத சடவுருவாகிய தம்முடம்பை பற்றிய ஆசையிலும், புண்ணியமாயும் போகமாயும் உடனாய் நின்றருள்பவள் என்பது.

புராசத்தி - திரிபுராசத்தி. ஆசத்தி - ஆசக்தி என்பதன் திரிபு. ஆசை. (173)

**போகஞ்செய் சத்தி புரிகுழ லாளொடும்**
**பாகஞ்செய் தாங்கே பராசத்தி யாய் நிற்கும்**
**ஆகஞ்செய் தாங்கே அடியவர் நாடொறும்**
**பாகஞ்செய் ஞானம் படர்கின்ற கொம்பே. 1057**

இதுவுமது.

இ - ள்: ஆன்மாக்களுக்குப் போகத்தையூட்டி, புரியாகிய கூந்தலையுடையாள் என்னும் நாமத்தோடு ஆன்மாக்களுக்குப் பரிபாகத்தை விளைவித்து, பராசத்தியாய் நிற்பள்; அடியார்கள் தியானித்துப் பரிபாகப் படுத்துகின்ற ஞானம் என்னும் கொடியானது படர்தற்கேற்ற கொழுகொம்பாய் நிற்பள் என்றவாறு.

போகஞ்செய் சத்தி - போகசக்தி. பாகம் - பரிபாகம். ஆகஞ்செய்தல் - தியானித்தல். ஆகம் - மனம். நாடொறும் பாகம் செய்ஞானம் - நாடோறும் இடைவிடாது தியானித்துப் பக்குவப்படுத்தப்பட்ட ஞானம். அம்மையைக் கொம்பாக உருவகித்தமையின் ஞானம் கொடியாயிற்று. ஏகதேசவுருவகம். (174)

**கொம்பனை யாளைக் குவிமுலை மங்கையை**
**வம்பவிழ் கோதையை வானவர் நாடியைச்**
**செம்பவ ளத்திரு மேனிச் சிறுமியை**
**நம்பிஎன் உள்ளே நயந்துவைத் தேனே 1058**

இதுவுமது.

இ - ள் : பொருள் வெளி.

கொம்பனையாளை குவிமுலை மங்கையை என்பது திரிபுரை நிலை. வானவர் நாடியை என்பது இராஜ ராஜேஸ்வரிநிலை. சிறுமியென்றது பாலைநிலை. இங்ஙனம் இறைவியின் மூன்று நிலைகளையும் மொழிவது இந்த மந்திரம் (175)

**வைத்த பொருளும் மருவுயிர்ப் பன்மையும்**
**பத்து முகமும் பரையும் பராபரைச்**
**சித்தக் கரணச் செயல்களுஞ் செய்திடுஞ்**
**சத்தியும் வித்தைத் தலைவ ளாமே** **1059**

இ - எனின், ஸ்ரீ வித்யாதேவியினுடைய ஆற்றல் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : உண்டுபண்ணி வைத்த பொருள்களும், இவ்வுலகத்துப் பொருந்திய உயிர்ப்பன்மையும், பத்து முகங்களும், பரையும், பராபரையும், அந்தக்கரணச் செயல்களும், எல்லாவற்றையும் இயக்கும் சத்தியுமாக விளங்குபவள் ஸ்ரீ வித்யா தலைவியாம் என்றவாறு.

வைத்த பொருள் - இவ்வுலகத்துத் தோற்றுவிக்கப்பெற்ற அசரங்களாகிய உலகு, உடல் முதலிய பொருள்கள். மருவு உயிர்ப்பன்மை - அவற்றை இடமாகக்கொண்டு மருவிய புல் மரம் முதல் தேவரீறான உயிர்களின் பன்மை. நேர்த்திசையும் கோணத் திசையும் பூமியும் விண்ணுமாகிய பத்துத் திசைகளாகிய பத்துமுகமும். முகம் - இடம். பரை - கிரியா சத்தி. பராபரை - இச்சாசத்தி. சித்தக்கரணச்செயல்கள்

- சித்தம் முதலான அந்தக்கரணங்களைச் செயற்படுத்து கின்றவள். செய்திடும் சத்தியும் - அனைத்தையும் இயக்கும் ஆற்றலாகிய சத்தியும். வித்தைத்தலையவள் - ஸ்ரீ வித்யா தலைவி, ( 176 )

**தலைவி தடமுலை மேல்நின்ற தையல்**
**தொலைவில் தவஞ்செயுந் தூய்நெறித் தோகை**
**கலைபல வென்றிடுங் கன்னியென் னுள்ளம்**
**நிலைபெற இங்கே நிறைந்துநின் றாளே. 1060**

இதுவுமது.

இ - ள் : தலைவி, தடமுலை கீழ்நோக்கிச் சாயாது மேல்நிமிர்ந்தேயுள்ள அழகே வடிவானவள் ; அழியாத தவத்தைச் செய்யும் தூய நெறிகளையருளிய தோகை மயில்போல்வாள் ; அறுபத்துநான்கென்னும் கலைகளையும், மேதாதி கலைகளையும் வென்றிட்டுத் தம் வழிப் படுத்திய கன்னி; என் உள்ளத்தில் நிலைபெற இங்குப் பூரணமாய் நின்றாள் என்றவாறு. ( 177 )

**நின்றவள் நேரிழை நீள்கலை யோடுற**
**என்றன் அகம்படிந் தேழுல குந்தொழ**
**மன்றது வொன்றி மனோன்மணி மங்கலி**
**ஒன்றென்ன வொன்றநின் றொத்தடைந் தாளே**
**1061**

இம் - எனின், சத்தி சிவத்தோடு ஒன்றி ஒன்றாயே நிற்பள் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இவ்வண்ணம் நின்றவளாகிய நேரிய இழையுடையாளாகிய பராசத்தி பூரண கலைகளோடு

பொருந்த அடியேனுடைய உள்ளத்தே பொருந்தி, ஏழுலகும் போற்ற, சித்சபையில் பொருந்தி, சிவத்தோடு அபின்னமாய் மணியின்கண் ஒளிபோலவும் தீயின்கண் சூடுபோலவும் ஒன்றிநின்று, மனோன்மணி சத்தியாய் நித்திய மங்கலையாய் ஒத்து அடைந்தாள் என்றவாறு.

**ஒத்தடங் குங்கும லத்திடை யாயிழை**
**அத்தகை செய்கின்ற வாய பெரும்பதி**
**மத்தடை இன்ற மனோன்மணி மங்கலி**
**சித்தடைக் கும்வழி தேர்ந்துண ரார்களே. 1062**

இம் - எனின், இவள் வாயிலாகவே சித்து அடைக எனல் நுதலிற்று.

இ - ள்: அங்ஙனம் ஒத்தடங்கிநிற்கும் உள்ளத் தாமரையில் உள்ள ஆயிழையாகிய பராசத்தியும், அவ் வண்ணம் செய்கின்ற ஆகிய பெரிய தலைவனைக் களித் துக் கூடுகின்ற மனோன்மணியும் மங்கலியும் ஆகிய அவளால் அட்டமாசித்திகளையும் ஒருசேரத் தம்மிடத்தே அடைத்துக்கொள்ளுகின்ற உபாயத்தைத் தெளிந்துண ரார்கள் உலகவர்கள் என்றவாறு.

சித்தி சித்து எனவாயிற்று, பதி - தலைவன். மத்து - மதம் (களிப்பு). சித்தடைக்கும் வழி - மனத்தில் அடைத்துவைக்கும் உபாயமுமாம். (179)

**உணர்ந்துட னேநிற்கும் உள்ளொளி யாகி**
**மணங்கமழ் பூங்குழல் மங்கையுந் தானும்**
**புணர்ந்துட னேநிற்கும் போதருங் காலைக்**
**கணிந்தெழு வார்க்குக் கதியளிப் பாளே. 1063**

இதுவுமது.

இ - ள்: உயிர்க்குயிராக நின்று அனைத்தையும் உணர்ந்து உடனாய்நிற்கும்; நறுமணம் கமழுகின்ற பூவையணிந்த குழலையுடைய உமாதேவியும் தானுமாகக் கூடி நிற்கும்; அந்நிலையில் அருள்புரிய எழுந்தருளும் போது தியானிப்பார்களுக்குக் கதியளிப்பாள் என்றவாறு.

உள்ளொளி - உயிருக்குள்ளே விளங்கும் ஒளிப் பொருள். உணர்ந்து - எல்லாவற்றையும் தானுணர்ந்து என்றது சாட்சியாய் என்பதாம்.

தான் என்றது சிவத்தை. போதருங்கால் - சத்தியும் சிவமுமாக எழுந்தருளும்பொழுது. கணிந்து - கணித்து; எண்ணி.

**அளியொத்த பெண்பிள்ளை ஆனந்த சுந்தரி**
**புளியுறு புன்பழம் போலுள்ள நோக்கித்**
**தெளியுறு சித்துச் சிவகதி காட்டி**
**ஒளியுற வைத்தென்னை உய்யவுண் டாளே. 1064**

இம் - எனின், சத்தி தம்மை ஆட்கொண்டவகை அறிவித்தல் நுதலிற்று.

இ - ள்: கருணையால் அனைவரிடத்தும் ஒத்து விளங்குகின்ற பெண்பிள்ளையும், ஆனந்த வடிவான அழகியும், புளியம்பழமும் அதன் ஓடும்போல ஆன் மாவை நோக்கி, தெளிந்த சித்தத்தில் சிவகதியைக் காட்டி, அடியேனுக்கு ஒளி பொருந்தச்செய்து அடியேனுய்யத் தமதாக்கிக்கொண்டாள் என்றவாறு.

அளி ஒத்த என்பதை ஒத்த அளியென மாற்றி ஒத்தகருணையைச் செய்கின்ற எனப் பொருள்கொள்க.

உள்ளம் புளியுறு புன்பழம் போல் நோக்கி யெனக் கூட்டுக. தெளியுறு சித்து - தெளிந்த சித்தம். அம் குறைந்து நின்றது. ஒளி - ஞானம். உண்டாள் - விழுங்கினுள்; என்றது தம்வியாபகத்துள் அடியேனை அடக்கியாண்டாள் என்பதாம். (181)

**உண்டில்லை என்ற துருச்செய நின்றது**
**வண்டில்லை மன்றினுள் மன்னி நிறைந்தது**
**கண்டிலர் காரண காரணி தம்மொடு**
**மண்டல மூன்றுற மன்னிநின் றுளே. 1065**

இதுவுமது.

இ - ள்: காரணங்கட்கெல்லாம் காரணியாய சிவத் தோடு மூன்று மண்டலங்களிலும் நிலைபெற்று நின்ருள்; அவள் உண்டு இல்லையென நின்றதையும், உருவங் கொள்ள நின்றதையும், வளவிய தில்லை மன்றினுள் நிலை பெற்று நின்றதையும் யாரும் கண்டிலர் என்றவாறு.

காரண காரணி தம்மொடு: காரணம், காரிய மாகக் காணப்படும் தனுகரணுதிகட்கெல்லாம் மூலமானது; அது மாயை. காரணி காரணமாக இருப்பவன். மாயைக்கும் காரணமாய், அதனைக் கலக்கிச் செயற்படுத்துபவராகிய சிவம். காரணி என்பதில் இகரம் வினைமுதற்பொருளில் வந்த விகுதி.

உண்டு என்றது - இல்லை என்றது சத்தும் - அசத்து மாய பொருளாய் இருப்பவள் பராசத்தி என்பதாம். உருச்செய நின்றது - விரும்பியஉருவம் தாங்கி அருள் வழங்க நிலைத்தது.

தில்லைமன்று, சிதாகாசமாதலின் அதனுள் அவள் நிறைந்திருப்பதைக் கண்டிலர் என்றவாறும். என்றது கண்டிலர்: நிறைந்தது கண்டிலர்; நின்றது கண்டிலர் எனத் தனித்தனியே கூட்டுக. (182)

**நின்றா ளவன்றன் உடலும் உயிருமாய்ச்**
**சென்றாள் சிவகதி சேரும் பராசத்தி**
**ஒன்றாக என்னுட் புகுந்துணர் வாகியே**
**நின்றாள் பரஞ்சுடர் ஏடங்கை யாளே.** 1066

இம் - எனின், பராசத்தி உயிருட்கலந்து நிற்கும் நிலை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: பரசிவத்தின் உடலும் உயிருமாகக் கலந்துநின்றாள்; உயிர்களோடு உடனாய்ச் சேர்ந்துள்ள பராசத்தி சிவகதிக்கண் சென்றாள்; என்னோடு ஒன்றாக அடியேன் உயிர்க்குள் புகுந்து உணர்வாகி நின்றாள். அங்ஙனம் நின்றவள் புத்தக தாரிணியாகிய பரஞ்சுடர் வடிவானவள் என்றவாறு.

அவன்தன் உடலும் உயிருமாய் நின்றாள் என்றது சிவத்தோடு அபின்னமாய் நிற்றலை உணர்த்தியது.

சிவகதி சென்றாள் என்றது முத்தி யின்பத்திலே ஆன்மாக்களை உய்விப்பவள் என்பதாம். சென்றாள் என்பதனைச் செல்வித்தாள் எனப் பிறவினையாக்குக.

என்னுட்புகுந்து உணர்வாகியே என்றது ஒன்ரு நலை உணர்த்திற்று. ஏடு அங்கையாள் - ஞானவடிவி யாகிய கலைமகள். (183)

**ஏடங்கை நங்கை இறைஎங்கள் முக்கண்ணி**
**வேடம் படிகம் விரும்பும்வெண் டாமரை**
**பாடுந் திருமுறை பார்ப்பனி பாதங்கள்**
**சூடுமென் சென்னிவாய் தோத்திரஞ் சொல்லுமே**
**1067**

இம் - எனின், கலைமகளின் தியானம் கூறுதல் நுதலிற்று.

இ - ள் : ஏட்டினைத் திருக்கரத்தேந்திய நங்கை ; எங்கட்கு இறைவியாகிய முக்கண்ணி ; திருமேனியின் நிறம் பளிங்குபோல்வாள் ; விரும்புமிடம் வெண்டா மரை ; திருமுறையாகிய வேதத்தைப் பாடும் பார்ப் பனி ; அவள் மெல்லிய சிரத்தில் திருவடியைச் சூட்டு வாள். ஆதலால் தோத்திரங்கள் சொல்லுங்கள் என்ற வாறு.

வேடம் படிகம் - ' உருப் பளிங்கு போல்வாள் ', வெள்ளைக்கமலத்தே வீற்றிருப்பாளாதலின் ' விரும்பும் வெண்டாமரை ' என்றது. பார்ப்பான் - பிரமன், பார்ப்பனி - பிராமி. மென்சிரத்தில் பாதங்கள் சூடும் ஆதலால் தோத்திரங்கள் சொல்லும் என உலகவரை நோக்கிக் கூறியவாறு. ( 184 )

**தோத்திரஞ் செய்து தொழுது துணையடி**
**வாய்த்திட ஏத்தி வழிபடு மாறிரும்**
**பரர்த்திடு மங் தச பாசம் பசுங்கரும்**
**பார்த்திடும் பூம்பிள்ளை யாகுமாம் ஆதிக்கே. 1068**

இம் - எனின், இராஜராஜேஸ்வரியின் தியானம் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : உயிர்களைப் பாதுகாப்பதற்காகப் பார்த்துக்கொண்டேயிருக்கும் அங்குசம் பாசம் பசிய கரும்பு வில் இவற்றை ஏந்திய பூப்போலும் மெல்லியளாகிய இராஜராஜேஸ்வரிக்கு, தோத்திரஞ்செய்து தொழுது, துணையடிகளை ஏத்தி வழிபட்டிருங்கள் என்றவாறு.

ஆதி - முதல்வி ; இராஜராஜேஸ்வரி, பூம்பிள்ளை - பூப்போலும் மெல்லியளாகிய பெண்பிள்ளை. (185)

**ஆதி விதமிகுத் தண்டந்த மால்தங்கை**
**நீதி மலரின்மேல் நேரிழை நாமத்தைப்**
**பாதியில் வைத்துப் பல்காற் பயில்விரேல்**
**சோதி மிகுத்துமுக் காலமுந் தோன்றுமே.** 1069

இம் - எனின், தேவிமந்திரப்பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : முதற்றொழிலாகிய சிருட்டியைச்செய்து, கருணையைத் தந்து விளங்குகிற திருமாலுக்குத் தங்கையும் நீதியையுடைய மலராகிய தாமரைமேல் எழுந்தருளியுள்ள நேரிழையும் ஆகிய தேவியின் நாமத்தை நெஞ்சில் பதித்து, பலகாலும் தியானிப்பீராயின் ஞானவொளிமிக்கு முக்காலமும் தோன்றும் என்றவாறு,

ஆதிவிதம் - முதல்வகையாகிய சிருட்டி. தண்தந்த மால் - காத்தலாகிய தண்மையைத் தந்த மால் என மாலுக்கு அடையாக்குக. மால் தங்கையென்றது நாராயணி நிலையை.

நீதி - ஒன்ருனது: இரண்டற்றது. நீதிமலர் - ஒரு கால் உடைய தாமரைமலர். நாமம் ‘ ஸ்ரீம் ’ என்பது. பாதி - உடலிற் பாதியாகிய கொப்பூழ். யோகநூல் கொள்கைப்படி அது அப்புமண்டலமாகிய சுவாதிட்டானத்தானமாம். அங்கு ஆறிதழ்த்தாமரையும் அதன் பொகுட்டில் ‘வம்’ என்ற அப்புபீஜமும், அதில் நாராயணரும் இருக்கின்றனர்; அந்நாராயணருடைய இருதயத்தில் ஸ்ரீ சத்தி விளங்குகிருள் ஆதலின் ‘பாதியில் வைத்துப் பயில்விர் என்றது.




நேரிழை நாமம் வம் என்பது. லக்ஷ்மிபீஜம் ஸ்ரீம் என்பது. சோதி மிகுத்தல் - ஒளி மிகுத்தல்: தேசு பெறுதல். (186)

**மேதாதி ஈரெட்டு மாகிய மெல்லியல்**
**வேதாதி நூலின் விளங்கும் பராபரை**
**ஆதார மாகியே ஆய்ந்த பரப்பினள்**
**நாதாதி நாதத்து நல்லரு ளாளே.** **1070**

இம் - எனின், சத்தியின் இடமும் பெருமையும் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : மேதை முதலிய பதினாறு கலைகளுமாகிய மெல்லியல் ; வேதம் முதலிய நூல்களில் விளங்கும் பராபரை; அனைத்திற்கும் ஆதாரமாகி ஆய்ந்த பரப்பை யுடையவள். நாதத்தும், அதனைக் கடந்துள்ள அதீத நாதமாகிய பரநாதத்தும் விற்றிருக்கும் நல்லருள் வடி வானவள் என்றவாறு.

மேதாதி ஈரெட்டுக்கலை - அகாரம், மேதை, உகாரம் , மகாரம், பிந்து, அர்த்தசந்திரன், நிரோதினி, நாதம், நாதாந்தம், சத்தி, வியாபினி, சமனை, உன்மனு, பர சிவம். இவையாவும் சத்தியின் வடிவேயாம் என்பது.

வேதாதி நூல் - வேதாகமங்கள் சாஸ்திரங்கள் ஸ்மிருதி புராணங்கள். அவற்றில் ஞானசொருபமாக விளங்பகுவள் சத்தி. ஆதாரம் - எல்லாம் நிலைபேறு எய்துதற்குரிய நிலை. ஆய்ந்த பரப்பினள் - ஞானிகளால் ஆராயப்பெற்ற பரந்த இடமாக விளங்குபவள்.

நாதம் அதிநாதம் - நாதமும் அதனைக் கடந்த நாதாந்தமும். இவ்விரண்டிடத்தும் கருணையே வடிவாக விளங்குபவள் என்பதாம். (187)

**அருள்பெற் றவர்சொல்ல வாரீர் மனிதர்**
**பொருள்பெற்ற சிந்தை புவனு பதியார்**
**மருளுற்ற சிந்தையை மாற்றி யருமைப்**
**பொருளுற்ற சேவடி போற்றுவன் நானே** 1071

இம் - எனின், உலகவர்க்கு உண்மையை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: மனிதர்களே! நித்தியானந்தமாகிய பொருளைத் தமக்கே உரிமையாகப்பெற்ற சிந்தையையுடைய புவனுபதியாகிய அம்மை, தம்முடைய மயங்கிய சிந்தையைத் தெளிவித்து, அருளைப் பெற்றவர்கள் தம அநுபவத்தைச் சொல்ல அதனைக் கேட்க வாருங்கள்; நான் அவளுடைய எளிதிற் பெறுதற்கருமையான முத்தியின்பமாகிய பொருளையுற்ற சிவந்த திருவடியைப் போற்றுவேன் என்றவாறு.

நீங்களும் அநுபவஞானிகள் சொல்வதைக்கேட்டு அதன்வழியே நின்று பேரின்பப்பொருளைப் பெறுங்கள் என்பது கருத்து.

மனிதர், பொருள்பெற்ற சிந்தைப் புவனுபதியார் மருளுற்ற சிந்தையைமாற்றி அருள்பெற்றவர் சொல்ல (கேட்க) வாரீர். நான் சேவடி போற்றுவேன் எனக் கூட்டுக.

புவனுபதியார் மாற்றி (ற) அருள் பெற்றவர் மனிதர் சொல்ல வாரீர். நான் அருமைப்பொருளுற்ற சேவடி போற்றுவேன் எனக்கூட்டி, அம்மையருள் பெற்றவர்கள் அவ்வநுபவத்தைச் சொல்லுங்கள் பார்க்கலாம்; நான் அறிந்து அவளுடைய சேவடியைப் போற்றுகிறேன்

என்று அருள் அறைகூறுவதாகவும் கொள்ளலாம். (188)

**ஆன வராக முகத்தி பதத்தினள்**
**ஈன வராகம் இடிக்கும் முசலத்தோ(டு)**
**ஏனை யுழுபடை ஏந்திய வெண்ணகை**
**ஊனம றவுணர்ந் தாருளத் தோங்குமே. 1072**

இம் - எனின், அம்மை அன்பருள்ளத்து ஓங்கி வளர்வள் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: ஆகிய வராகமுகத்தை உடைய வாராகி. திருவடியையுடையவள்; இழிந்தோருடைய உடலையிடித்து வருத்துகின்ற உலக்கைப் படையோடு மற்றைய கலப்பை முதலிய படைகளையும் ஏந்திய, வெண்மையான நகையினையுடையவள். அவள் குற்றமறத் தியானிப்பவர் உள்ளத்தில் சிறந்து விளங்குவள் என்றவாறு.

ஆன - வாராகி செய்த பல வீரச்செயல்களை மனத் தடக்கி எழுந்த தொடர்புரை. வராகமுகத்தி - வாராகி, தேவியின் எழுமாதர் நிலையில் ஒன்றான திருவுருவம். பதத்தினள் என்று அடைகொடாது கூறியது திரு வடியே எல்லா இன்பப் பேற்றிற்கும் நிலைக்களன் என்பதை அறிவிக்க.

ஈனவர் - இழிதகைமை உடையவர்; என்றது தீவினையாளரை. ஆகம் - உடல். முசலம் - உலக்கை. உழுபடை - கலப்பை. வெண்ணகை - வெண்ணகை யினையுடையாள்; அன்மொழித்தொகை, ஊனம் அற - தியான சலனமின்றியும், பொறிபுலன்களை அடக்கியும்

உணர்ந்தார் - தியானித்தவர்கள். ஓங்கும் - சிறந்து விளங்கும். **(189)**

**ஓங்காரி என்பாள் அவளொரு பெண்பிள்ளை**
**நீங்காத பச்சை நிறத்தை யுடையவள்**
**ஆங்காரி யாகியே ஐவரைப் பெற்றிட்டு**
**ரீங்காரத் துள்ளே யினிதிருந் தாளே 1073**

இம் - எனின், சத்தியே எல்லாம் அருளி எல்லாம் படைத்தவள் என்றல் நுதலிற்று.

இ - ள்: பிரணவ வடிவாய பெண்பிள்ளை, பச்சை நிறமுடையவளாய் அகங்கரித்தெழுந்து, அயன் அரி அரன் ஈசன் சதாசிவன் என்ற ஐவரையும் தோற்றுவித்து ஹ்ரீம் என்னும் அவளது எழுத்தில் எழுந்தருளியிருந்தாள் என்றவாறு.

ஆங்காரி - அகங்காரம். ஈண்டு ஏனையோர்க்கு ஆணவமல காரியமாக விளைவதாகிய அகங்காரம் போல்வது அன்று இது. பரசிவம் உலகத்தைப் படைக்க வேண்டும் என்று திருவுளம்பற்றியபோது சத்தியும் முனைத்து எழுதலே ஆங்காரம்: அதனை உடையவள் ஆங்காரி.

ஐவர் - அயன் முதலிய ஐவரும். பெறுதல் - அவரவர்களை அவ்வத்தொழிலில் நிலைபெற எண்ணி ஆற்றலாக அமர்தல். ரீம் என்பது சக்திபீஜமாய ஹ்ரீம் என்பதன் திரிபு. ஹ்ரீங்காரத்திற்கும் பராசத்திக்கும் வாச்சிய வாசக சம்பந்தம் உண்டென்பதை, லலிதா திரிசதியில் ஹ்ரீங்காரத்தால் தொடங்குகிற அறுபது

மந்திரங்களையும் அம்மந்திரங்களின் விரிவுரையையும் நோக்கியறிக. (190)

**தானே தலைவி யெனநின்ற தற்பரை**
**தானே யுயிர்வித்துத் தந்த பதினறும்**
**வானேர் தலமும் மனமும்நற் புத்தியுந்**
**தானே சிவகதி தன்மையு மாமே** 1074

இம் - எனின், முழுமுதற்றலைவி சத்தியே; அவள் தந்த பீஜம் பதினறும் இருமையின்பங்களைத் தரும் என நுதலிற்று.

இ - ள்: தானே இயங்குவனும் நிற்பனவுமாய அனைத்திற்கும் முதல்வியாக நின்றவள்: தானே உயிருள்ள வித்துக்களாக அளித்தன பதினறு. விண்ணும், மனமும், புத்தியும் சிவகதித்தன்மையுமாம் என்றவாறு.

தற்பரை என்றதன் சொற்பொருள் விரித்தது 'தானே தலைவி என நின்ற' என்பது.

உயிர் வித்து - ஜீவாக்ஷரங்களாகிய பீஜாக்ஷரங்களாம், அவை பிரணவசகிதமான காதி வித்தையாம் இவற்றைக் குருமுகமாகக் கேட்டு அநுசந்திக்க. அதனால் விளையும் விண்ணும், மனம் புத்திகள் தன்மையப்படுதலும் சிவகதியுமாம் என்பன.

விண் இடவாகுபெயராக அங்குவிளையும் இன்பை உணர்த்திற்று. விண் என போககாமிகட்குப் பயனும். சிவகதி என மோட்சகாமிகள் எய்தும் பயனும், மனமும் நற்புத்தியும் என போககாமிகள் நன்மனம் நற்புத்தி படைத்து விதிதவருமல் துய்க்க அருளானதுகிட்டும்

எனவும், மோட்சகாமிகள் நற்புத்திபடைத்தும் பேரின் பம் பெறுவர் எனவும் உணர்த்தப்பட்டன. (191)

## 6. வயிரவிமந்திரம்

வயிரவி - வயிரவசக்தி. இறைவன், மக்களுடைய அச்சத்தைப் போக்கி, அவர்கட்கு ஆனந்தத்தை விளை விக்கத் திருவுள்ளங்கொண்டபோது விரித்த செஞ் சடையும், முக்கண்ணும், சிவந்ததிருமேனியும், சூலம் கபாலம் பாசம் உடுக்கை இவற்றைத்தாங்கிய நான்கு கரங்களும் தாங்கி நாய் வாகனத்தில் ஆடையணியாத வராக எழுந்தருளினர். அவருடைய சத்தி வயிரவி, பகையொழித்து, பயநீக்குவதால் அச்சத்தியும பைரவி எனப்பட்டார். பைரவி என்பது வயிரவி யென்ருயிற்று, அவரை நினைக்குமுறை கூறுதலின் இது வயிரவி மந்திர மாயிற்று.

பன்னிரண் டாங்கலை பாதி பயிரவி
தன்னில் அகாரமு மாயையுங் கற்பித்துப்
பன்னிரண் டாதிபோ டந்தப் பதினலுஞ்
சொன்னிலை சோடச மந்தமென் றேருதிடே 1075

இ-ம் - எனின், வயிரவிமந்திர முணர்த்துதல் நுத லிற்று.

இ - ள் : பன்னிரண்டாம் கலையாக விளங்குகின்ற ஆதிபைரவி மந்திரத்தில், அகாரமும் மாயையாகிய உகார மகாரங்களும் கற்பனைசெய்து, அகாராதியுயிர் களில் பன்னிரண்டாம் எழுத்தாகிய ஐ, என்பதனேடு: அந்த எழுத்துக்களிலேயே பதினலாம் எழுத்தாகிய " ஔ " என்பதனையும், சொல்லப்பெறும் நிலைமையினை

யுடைய பதினாறும் எழுத்தாகிய : ' என்பதனையும் ஈற்றில் ஒதுக என்றாவறு.

ஓம் - அகாரம், உ, ம் — மாயை உ, ம். மாயை சத்திக்கும் மாயைக்கும் பெயராதலின் அதனால் சக்தி எழுத்தாகிய ' உ ' காரத்தையும் மாயாக்ஷரமாகிய ' ம ' காரத்தையும் குறித்தார், அவை மூன்றும் ஆதிபைரவி யென்ற மந்திரத்தோடு கூடுமாயின் ' ஓம் ஆதிபைரவி ' என்றாகும்.

பன்னிரண்டாதியோடு - முதலெழுத்துக்களாகிய உயிர்களில் பன்னிரண்டாம் எழுத்தோடு என்றது ' ஐ என்பதோடு.

அந்தப் பதினாலும் - அந்த எழுத்துக்களில் பதினான்காம் எழுத்தும். பதினான்காம் எழுத்து ' ஔ ' சொன்னிலை சோடசம் அந்தம் - சொன்ன தன்மையான எழுத்துக்களோடு பதினாறும் எழுத்து ஈறுகப் புணர்க்க என்பாதம். அங்ஙனம் புணர்த்தால் ஔ : என ஆகும். ஆகவே ஓம் ஐம் ஔ : ஆதிபயிரவினே நம. என்பது பன்னிரண்டாம் கலைகளோடு ஆதிபயிரவி மந்திரமாகும் என்பதாம்.

இங்ஙனம் அன்றி, பன்னிரண்டு கலை வடிவான பிராணவாயு வடிவான ஆதிபைரவி, தன்னிடமிருந்து. அகாரம், மாயை இவைகளைப் படைத்து, முற்கூறிய பன்னிரு கலைகளின் முதலும் முடிவும் அந்தப் பதினாறு கலைகளும் தேவிக்குச் சொல்லப்பட்ட இடங்களாம். முடிந்த நிலைக்களன் பதினாறு கலைகளையுடையை மதி மண்டலமாம் என்றும் உரைப்பர். இதில் முற்கூறிய

பன்னிருகலைகளின் முடிவும் முதலும் யாவையென அறியப்படாமை உணர்க. அன்றியும் இது மந்திரம் ஓதுவதாகவும் ஆகாமை ஓர்க. இவற்றுள் ஏற்பன கொள்க. (192)

**அந்தப் பதினாலும் அதுவே வயிரவி**
**முந்து நடுவும் முடிவும் முதலாகச்**
**சிந்தைக் கலசத் தெழுகின்ற மாசத்தி**
**அந்தமும் ஆதியு மாகிநின் றாளே.** 1076

இம் - எனின், முற்கூறியவற்றுள் 'ஐம்' என்பதே வயிரவிபீஜம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : அந்தப் பதினாலுமே பைரவியாம். அவளே முதல் நடு இறுதி மூன்றிலும் பொருந்த, சிந்தையாகிய பூர்ணகும்பத்தில் எழுகின்ற பராசத்தியாம். அவளே முதலாய் ஈறுமாய் நின்றாள் என்றவாறு.

இம்மந்திரம் 'ஐம்' என்பதே வயிரவி பீசம் என்பது துணர்த்தியது.

'அந்தம் பதினாலு, சிந்தைக் கமலத்து' எனப் பாடம்கொண்டு, முற்கூறிய பதினாலு கலைகளிலும் வீற்றிருப்பவள் எனவும், சிந்தைக் கமலத்து விளங்கும் பேராற்றல் எனவும் உரைப்பர் சிலர். ஏற்பனகொள்க. (193)

**ஆகின்ற மூவரும் அங்கே அடங்குவர்**
**போகின்ற பூதம் பொருந்து புராதரர்**
**சார்கின்ற சார்வுழிச் சாரார் சதிர்பெறப்**
**போகுந் திரிபுரை புண்ணியத் தோரே.** 1077

இம் - எனின், அருளன்னையின் அன்புடையார் சார்தற்குரிய இடம் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : பிரமன் விஷ்ணுருத்திரன் ஆகிய மூவரும் அங்கே அடங்குவர் ஆகையால். ஆற்றல் பொருந்தச் செல்லும் திரிபுரையைப் பொருந்திய புண்ணியத்தோர்கள் அழியுந்தன்மையவாகிய ஐம்பூதங்களும் பொருந்திய அநாதி நித்யரான ஆன்மாக்கள் பொருந்துகின்ற இடத்தைப் பொருந்தார்கள் என்றவாறு.

பிரமனாதியர் பராசத்தியின் படைப்பாக விளங்கும் மாயைக்கண் படைத்தலாதி அதிகார மலமுடையவர்கள் ஆதலின் மூவரும் அங்கே அடங்குவர் என்றது.

சதிர் பெறப் போகும் திரிபுரை - அருளாற்றலைப் பெற்று விளங்கும் திரிபுரை. புண்ணியத்தோர் - திரி புரையை வழிபடும் புண்ணியமுடையார். திரிபுரை களாவன: தியானிப்பானும், தியானமும், தியானிக்கப் படுபொருளும் ஆகிய இம்மூன்றும் ஒருபுரம். பிரமன் விஷ்ணு ருத்திரர் இவர்கள் ஒருபுரம். இச்சாஞானக் கிரியை சத்திகள் ஒருபுரம். ஆகிய முப்புரங்களும் ஸ்ரீ வித்யா வடிவான திரிபுரைகளாம் என்பது காமகலா விலாசம். இதனைக்கொண்டு திரிபுராதத்துவம் காண்க. இதனையே திரிபுராரகஸ்யம் என்னும் நூலும் விளங்கக் கூறும்.

பூதம்பொருந்து புராதரர் - அழியுந்தன்மையராகிய ஐம்பூதங்களையும் பொருந்துகின்ற புராதரர். முற்கூறிய வண்ணம் திரிபுரையைத் தத்துவார்த்தமாகத் தியானிக் காமல். உலகில், ( பாஹ்யமாக ) வெளியில் உருவாகத்

தியானிக்கு தியானத்திதைத் தரிப்பவர்கள, புராதனர் இல்லாமை ஊன்றி நோக்குக. அவர்கள் உலகியலறி ஞர்கள். அவர்கள் சார்கின்ற சார்வு காமியலோகப் பிராப்தி; ஆதலின் அவற்றையடையார் தத்துவ திரிபு வாதியான பரர்கள் என்றவாறும். (194)

**புண்ணிய நந்தி புனிதன் திருவாகும்**
**எண்ணிய நாட்கள் இருபத்தேழ் சூழ்மதி**
**பண்ணிய வன்னி பகலோன் மதியீறு**
**திண்ணிய சிந்தையன் தென்னனு மாமே 1078**

இம் - எனின், வயிரவியைத் தியானம் செய்பவர் எய்தும் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : புண்ணியனும், நந்தியும், புனிதனுமாகிய சிவபெருமானுடைய திருமனேயாகும் வயிரவி. அந்த அன்னையை இருபத்தேழ் நாட்கள் கொண்ட ஒரு மாதம் அக்னிமண்டலம், சூரியமண்டலம் இவற்றைக் கடந்து, சந்திரமண்டலம் இறுதியாகத் தியானிக்கின்ற திண்ணிய சிந்தையுடையார் தென்னன் ஆவர் என்றவாறு.

புண்ணியன் - புண்ணியமே திருமேனியாகப் பெற்றவர். நந்தி - ஆசாரியனாக வந்து மலநீக்கி ஆட்கொள்பவர். புனிதன் - இயல்பாகவே பாசங்களில் தொடக்கின்றி புனிதமானவர். அத்தகைய சிவபரம் பொருளின் சத்தி வயிரவி. திரு - ஆகுபெயராக திருவுடையாளை உணர்த்திற்று.

எண்ணிய நாட்கள் இருபத்தேழ் - உருச்செபித்த நட்சத்திரங்கள் இருபத்தேழு, சூழ்மதி - இருபத்தேழ்

நட்சத்திரங்கள் சூழ்ந்து ஒரு வட்டமான மாதம்; என்றது சாந்திரமான மாதம, வன்னி பகலோன் மதி யீறு மண்ணிய திண்ணிய சிந்தையன் தென்னனும் ஆம் எனக்கூட்டுக.

வன்னிமுதலியன பிராணுயாமமுறையில் உந்திக்கு மேலுளள அக்கினிமண்டல முதலியவற்றை உணர்த்தின. மதியீறு என்ற சந்திரமண்டலமாகிய சகத்திராரம். ஆகவே சுவாதிட்டானம் முதல் பிரமரந்திரம் வரை வயிரவியைத் தியானிப்பவர்கள். சிவமேயாவர் என்ப தாம். "தென்னன் பெருந்துறையான்" என்பதும் காண்க இம்மந்திரத்திற்கு அதிகாரத்திற்கியைபற்ற உரைகொண்டு இடர்ப்படுவாரும் உளர். **(195)**

**தென்னன் திருநந்தி சேவகன் தன்னெடும்**
**பொன்னங் கிரியிற் பூதலம் போற்றிடும்**
**பன்னும் பரிபிடி யந்தம் பகவனே(டு)**
**உன்னுந் திரிபுரை ஓதிநின் றனுக்கே** 1079

இம் - எனின், திரிபுரையாகிய வயிரவியைத் தியானிப்பவன் சிவத்தோடு ஒக்கப்போற்றப்படுவன் என்பது துணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: வேதங்களால் சொல்லப்படும் பரிவினையுடைய பெண்யானைபோல்பவரும், எல்லாவற்றிற்கும் இறுதியைப் புரிபவராகிய சிவத்தோடு நினைக்கப்படுபவரும் ஆகிய திரிபுரையை ஓதிநிற்கும் அன்பனை, மேருமலையில் வீற்றிருக்கும் தென்னனும் நந்தியும் சேவகனுமாகிய இறைவனோடுவைத்து, பூதலம்போற்றும் என்றவாறு.

தென்னன் - சிவன்; அழகன். தென் - அழகு, சேவகன் - வீரன். பொன்னங்கிரி - மேரு. பரி பிடி - பரிந்த பிடி. அன்புடைய பெண்யானை போல்வார்; அன்மொழித்தொகை. அந்தம் பகவன் - அனைத்துல கையும் சங்காரம் செய்யும் பகவன். உன்னும் - தியா னிக்கப்படும். திரிபுரை - திரிபுராமந்திரம். திரிபுரா மந்திரம் செபிப்பவர் சிவத்தோடு ஒப்பவைத்து வணங் கப்படுபவராவர் என்பது கருத்து. **(196)**

**ஓதிய நந்தி உணருந் திருவருள்**
**நீதியில் வேத நெறிவந் துரைசெய்யும்**
**போதம் இருபத் தெழுநாள் புணர்மதி**
**சோதி வயிரவி சூலம்வந் தாளுமே. 1080**

இம் - எனின், வயிரவி ஞானத்தையும் அருளிக் காத்தருளுவள் எனல் நுதலிற்று.

இ - ள்: உபதேசித்தருளிய குருவாகிய சிவத்தால் உணரப்படும் திருவருட்சத்தி முறைப்படி வேதமார்க்க மாக எழுந்தருளிவந்து போதத்தை விளக்கியருளுவள் இருபத்தேழு நட்சத்திரங்களோடும் புணர்ந்துள்ள நிறைமதிபோலும் ஒளியினையுடையாளாகிய வயிரவி, சூலத்துடன் வந்து காப்பள் என்றவாறு.

சூலம் வந்தாளுதல் - இடர்நீக்கி இரட்சித்தல். போதம் உரைசெய்தல் - ஞானோபதேசம் வழங்குதல். தேவியே ஞானம் வழங்கச் சிவத்தோடு ஒருங்குவைத்து உணரப்படுவதாகிய திருவருளாக வந்தருளுவள் என் பதை ‘நந்தி உணரும் திருவருள் வேதநெறி வந்து போதம் உரைசெய்யும்’ என்பதால் விளக்கியவாறு.

அவளே நிறைமதிச் சோதியான வயிரவியாகச் சூலத்துடன் வந்து இடர்நீக்கிக் காத்து அருள்வள் என்பதை, ' மதி சோதி வயிரவி, சூலம் வந்து ஆளும் ' என்பதால் விளங்கவைத்தவாறு. (197)

**சூலங் கபாலங்கை ஏந்திய சூலிக்கு**
**நாலாங் கரமுள நாகபா சாங்குச**
**மாலங் கயனறி யாத வடிவுக்கு**
**மேலங்க மாய்நின்ற மெல்லிய லாளே.** *1081*

இம் - எனின், வயிரவி சிவத்திற்கு அங்கமானாள் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : சூலத்தையும் கபாலத்தையும் தாங்கிய வயிரவிதேவிக்கு நாலுகரங்கள் உள. ஏனைய இரண்டிலும் நாகபாசமும் அங்குசமும் உள்ளன. மாலும் அயனும் அறியமுடியாத வடிவாகிய சிவபரம்பொருளுக்கு மேலான அங்கமாக நின்ற மென்மையான இயல்புடையாள் இவள் என்றவாறு.

இம்மந்திரம் இறைவிக்கு நான்கு கரமுண்மையையும், அவற்றில் நாகபாசம், அங்குசம், சூலம், கபாலம் தாங்கியிருப்பதும், அவளே சிவமாகிய அங்கிக்கு அங்கமாக இருக்கின்றாள் என்பதும் உணர்த்துகிறது. (198)

**மெல்லியல் வஞ்சி விடமி கலைஞானி**
**சொல்லிய கிஞ்சுக நிறமன்னு சேயிழை**
**கல்லியல் ஒப்பது காணுந் திருமேனி**
**பல்லிய லாடையும் பன்மணி தானே** 1082

இம் - எனின், தேவியின் திருமேனிச் சிறப்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : மெல்லியல், கொடிபோன்றவள், கொடுமையுடையாள், கலைஞானமே வடிவானவள், இலக்கியங்களாற் சொல்லப்பெற்ற முள்முருக்கம் பூப்போலும் சிவந்த நிறத்தோடு கூடிய சேயிழை, காணப்பெறும் அவள் திருமேனி நிலக்கல்போலும் ஒளியுடையது, பலவாகிய இயல்புடைய அவளது ஆடையும் பன்னிற மணிகளே என்றவாறு.

கிஞ்சுகம் - முள்முருக்கம்பூ. விஷமி - விடமி; கொடுமையுடையவள். தன் மாற்றார்க்கும் அன்பரல்லாதார்க்கும் விஷமான அருள்செய்பவள் (199)

**பன்மணி சந்திர கோடி திருமுடி**
**சொன்மணி குண்டலக் காதி யுழைக்கண்ணி**
**நன்மணி சூரிய சோம நயனத்தள்**
**பொன்மணி வன்னியும் பூரிக்கின் றாளே.** 1083

இதுவுமது.

இ - ள் : பலமணிகளான் இயன்ற, கோடி சந்திர ஒளியைப்போலும் முடியை உடையாள். சிறந்தனவாகச் சொல்லப்பெறுகிற இரத்தின குண்டலங்களை அணிந்த காதினையுடையாள் : மான்போலும் கண்களையுடையாள் ; நன்மணியாகிய சூரியனையும் சந்திரனையும் தம் கண்களாக உடையவள் ; பொன்னையும் மணியையும் போன்ற நிறத்தையுடையவள்; அவள் எங்கும் நிறைந்திருக்கின்றாள் என்றவாறு.

திருமுடி என்பதில் வினைமுதற்பொருளைத் தரும் இகரவிகுதி புணர்ந்து கெட்டது. ஆதலின் முடியினையுடையாள் எனப் பொருள் காண்க. (200)

**பூரித்த பூவிதழ் எட்டினுக் குள்ளேயோர்**
**ஆரியத் தாளுண்டங் கெண்மர் கன்னியர்**
**பாரித்த பெண்கள் அறுபத்து நால்வருஞ்**
**சாரித்துச் சத்தியைத் தாங்கள்கண் டாரே. 1084**

இம் - எனின், அம்மை ஏனைச்சத்தியர் புடைசூழ நிற்கும்நிலை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : நிறைந்த எட்டிதழ்த் தாமரைக்குள் பூசிக்கத்தக்கவளாகிய சத்தி எழுந்தருளியுள்ளாள். அங்கு எண்மர் கன்னியரும் அறுபத்துநான்கு பெண்களும் அந்தச்சத்தியைச் சுற்றித் தரிசித்து நிற்கின்றன என்றவாறு.




(201)

சாரித்து - சூழ்ந்து. சரித்தல் - இயங்குதல்.

**சண்டை சிலம்பு வளைசங்கு சக்கரம்**
**எண்டிசை யோகி இறைவி பராசத்தி**
**அண்டமோ டெண்டிசை தாங்கும் அருட்செல்வி**
**புண்டரி கத்தினுட் பூசனை யாளே. 1085**

இம் - எனின், சத்தியைப் பூசிக்குமுறை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: சிலம்பு, வளையல், சங்கு, சக்கரம் இவற்றைத் தரித்த இறைவி. எண்டிசையிலும் பொருந்தி நிற்பவள் பராசத்தி எல்லா அண்டங்களையும் திசைகளையும் துன்பம் சூழாதே காக்கும் திருவருளே செல்வமாகவுடையவள்; மனத்தாமரையுள் வைத்துப் பூசிக்கத் தக்கவள் என்றவாறு.

இது நாராயணி நிலையில் தேவிதியானம் கூறியது. (202)

**பூசனை கந்தம் புனைமலர் மாகோடி**
**யோசனை பஞ்சத் தொலிவந் துரைசெய்யும்**
**வாசமி லாத மணிமந் திரயோகம்**
**தேசந் திகழுந் திரிபுரை காணே. 1086**

இதுவுமது.

இ - ள்: பூசுதலை உடையன களபசந்தனம், புனைவன மலர்கள்; ஸ்ரீம் பீஜமே கோடிவஸ்திரம். யோசனைதூரம் கேட்கும் பாஞ்சசன்யசத்தியொலியே வாத்தியம். இதுதான் சொல்லமுடியாத மணிமந்திர யோகமாம். இதனைச்செய்து ஒளிவடிவாய் விளங்கும் திரிபுரையைத் தரிசிக்க என்றவாறு.

மணிமந்திரயோகம் நல்ல சந்தனம்பூசி மலர்மாலை அணிந்து, கோடிவஸ்திரமுடுத்து, சங்கநாத ஒலி ஒரு காததூரம் கேட்க இயற்றின் தேவியைத் தரிசிக்கலாம் என்பது கருத்து. பஞ்சத்தொலி - பஞ்ச சந்தொனி என்பது விகாரமாயிற்று. யோகிகட்குக் கேட்கும் நவ நாதங்களில் ஒன்ருகிய சங்கொலி தியானகாலத்துக் கேட்கும் என்று தியானசித்தியின் எல்லையறிவித்தவாறு. வாசம் - வசனம் என்பதன் திரிபு; பேச்சு. மணி மந்திரம் - மந்திரங்களுக்குள் மணிபோன்றது. தேசம் - ஒளி. பல கோடியோசனை பஞ்சத்தொலி - மகாரமாகிய பிந்துவை எனக் கொள்ளலுமாம். அது ஓம் என்னும் பிரணவநாதம். அதுவே சங்கொலியாம். (203)

**காணும் பலபல தெய்வங்கள் வெவ்வேறு**
**பூணும் பலபல பொன்போலத் தோற்றிடும்**
**பேணுஞ் சிவனும் பிரமனும் மாயனுங்**
**காணுந் தலைவிநற் காரணி காரணி காணே** 1087

இம் - எனின், வயிரவியின் தரிசனத்தின்போது காணப்படுவன உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: பலபல தெய்வங்கள் வெவ்வேறு தோன்றும்; அணியத்தக்க பலவேறு வகையான பொன்னைப் போன்ற நிறத்தோடு காணப்படும். அவளைப் பிரமன்மால் ருத்திரன் இவர்கள் வழிபடுவர். இவ்வண்ணம் காட்சி தருகிற தலைவி ஜகத்காரணியாம் என்றவாறு.

ஆகவே பல தெய்வங்கள் புடைசூழ, பல அணிகளைத் தரித்துப் பிரமன் மால் சிவன்போற்றத் தலைவி தோன்றுவாள்; அவளே உலககாரணியாம். (204)

**காரண மந்திரம் ஓதுங் கமலத்துப்**
**பூரண கும்ப விரேசம் பொருந்திய**
**நாரணி நந்தி நடுவங் குரைசெய்த**
**ஆரணவேதநூல் அந்தமு மாமே.** 1088

இம் - எனின், இதயத்து எண்ணும் மந்திரத்தால் அம்மை உளத்தில் விற்றிருப்பாள் என்பது நுதலிற்று.

இ - ள் : காரண மந்திரத்தை ஓதுகின்ற இதய கமலத்தில், பூரண கும்பக ரேசகமாகப் பொருந்திய நாராயணி, சிவனோடு நடுவாகிய இதய கமலத்துள் விளங்குவள். இவற்றை விளங்க உரைசெய்தன வேதமும் உபநிடதங்களும் ஆம் என்றவாறு.

காரணமந்திரம் - காரண பஞ்சாக்கரமாகிய 'சிவ சிவ' என்பது. இதனைத் தியானிக்க, பூரண கும்பக ரேசங்களமையும். அங்கே சத்தியாகிய 'வ' சிகாரங்களிரண்டின் நடுவில் 'சிவ சிவ' என ஆம். இது வேத உபநிடதக் கருத்தாம் என்றவாறு. (205)

**அந்த நடுவிரல் ஆதி சிறுவிரல்**
**வந்த வழிமுறை மாறி யுரைசெய்யுஞ்**
**செந்தமி ழாதி தெளிந்து வழிபடு**
**நந்தி இதனை நவமுரைத் தானே.** 1089

இம் - எனின், கரநியாசம் செய்யுமுறை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இரு கையையும் மலர்த்தி இணைத்துச் சிறுவிரல் முதலாக, நடுவில் இறுதியாக, எண்ணிய முறையே மாறி மந்திரங்களைச்சொல்லி நியாசம்செய்க

இவ்வண்ணம் நியசித்து, செந்தமிழ்மொழிக்கு முதல்வி யாகிய வயிரவியை வழிபடுக. என் குருநாதன் எனக்கு இதனைப் புதிதாகப் புகன்றான் என்றவாறு.

அதாவது சிறுவிரல், மோதிரவிரல், சுட்டுவிரல், பெருவிரல், நடுவிரல் இவ்வண்ணம் 'மாறி ஓம்பரதேவ தாயை கனிஷ்டகாப்யாம் நம:, ஓம் பராசக்த்யை தர்ஜனீப்யாம் நம:, ஓம் பராதிரிபுரகர்தர்யை அநாமி காப்யாம் நம: ஓம் பரதேவ்யை அங்குஷ்டாப்யாம் நம: ஓம் பைரவ்யை மத்யமாப்யாம் நம:, என்று கரநியாசம் செய்தல். உரைசெய்யும், வழிபடும் என்பன உரை செய்யுங்கள் வழிபடுங்கள் என முன்னிலை ஏவல் வினை முற்றுக்கள். (206)

**உரைத்த நவசத்தி ஒன்று முடிய**
**நிரைத்த விராசி நெடுமுறை எண்ணிப்**
**பிரைச்சதம் எட்டுமுன் பேசிய நந்தி**
**நிரைத்து நியதி நியமஞ்செய் தானே.** 1090

இ-ம் - எனின், தேவியை அந்தர்யாகமுறையால் பூசிக்குமுறை உணர்த்தல் நுதலிற்று.

இ-ள்: சொல்லப்பெற்ற நவசத்திகளுள், ஒன்றாகிய மனோன்மணியை முடியின் மேல் துவாதசாந்தத்துத் தியானித்து ஏனைய சத்திகளை வரிசையான ஆதாரத் தானங்களில் தியானித்து அட்டாங்கயோக நெறிகளை அறிவித்த ஆசாரியன் இவற்றை ஒழுங்குபடுத்தி விதி செய்து ஏற்படுத்தினான் என்றவாறு.

நந்தி, முடிய எண்ணி, நிரைத்து நியமஞ்செய்தான் என முடித்துப் பொருள்காண்க.

பிராணனியங்கும் சுழிமுனையில் ஆறுதார ஸ்தானங்களிலும் அவற்றுக்குமேலுள்ள நாலு தானங்களிலும் பரவெளியும் துவாதசாந்தத்து மனோன்மணியும் நீங்க ஏனைய சத்திகளை, சிரமேல் பிரமரந்திரம் முதல் மூலம் வரை ஆதாரங்களில் நிறுத்தித் தியானிக்க என விதி செய்தான் நந்தி என்பது கருத்து. ( 207 )

**தாமக் குழலி தயைக்கண்ணி உள்நின்ற**
**சேமத் திருளற வீசும் இளங்கொடி**
**ஓமப் பெருஞ்சுடர் உள்ளெழு நுண்புகை**
**மேவித் தமுதொடு மீண்டது காணே. 1091**

இம் - எனின், தியான அனுபவம் அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : மாலையை யணிந்த கூந்தலையுடையாள் கருணைபொழிகின்ற கண்களையுடையாள், உயிரினிடமாக நின்ற எதனாலும் அழியாத பாதுகாவலோடு கூடிய ஆணவ இருள் அகல ஞான ஒளி வீசுகின்ற இளங்கொடி போல்வாள்; ஆகிய தேவி, மூலாதார குண்டத்தில் எழுகின்ற மூலக்கனலில் உண்டாகின்ற நுண்ணிய புகையாகிற பிராண வாயுவோடு மேல் எழும்பி, மதி மண்டலமாகிய சகஸ்ராரம்வரை சென்று அங்குள்ள அமுதத்தோடு மீண்டதைக் காண்பாயாக என்றவாறு.

குண்டலினி வடிவாகிய பராசத்தி மூலத்தினின்று பிராணனோடு பிரமரந்திரம் வரைசென்று அமுததாரை யோடு மீண்டது காண் என்பது கருத்து. ( 208 )

**காணும் இருதய மந்திர முங்கண்டு**
**பேணு நமவென்று பேசுந் தலைமேலே**
**வேணு நடுவு மிகநின்ற வாகுதி**
**பூணு நடுவென்ற வந்தஞ் சிகையே.** 1092

இம் - எனின், அங்கநியாசம் செய்யும்முறை அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : தியானிக்கும் இதயத்தானத்தில் இருதயாய நம: என்று பேசுக. தலைமேலேயும் சுழுமுனை நாடியின் இறுதியாகவுள்ள பிரமரந்திரத்திலும், சிரசே நம: சிகாய நம: என்றும் கூறித் தியானிக்க என்றவாறு.

இதயம் மந்திரமும் கண்டுபேணு நம என்று பேசும் - இருதயத்தில் இதயாயநம: என்று தியானிக்க.

தலைமேலே பேணும் நம என்று பேசும் - சிரத்தில் சிரஸே நம: என்று சொல்லுக.

வேணு - மூங்கிற்றண்டு; என்றது சுழிமுனை நாடியை. சுழிமுனைநாடியாகிய நடுவிலே, ஆகுதியால் விளையும் அங்கியைப் பூண்கின்ற நடுவென்றது பிரமரந்திரத்தை. அங்கே சிகாய நம: என்று அங்கநியாசம் செய்க என்பதாம். இம்மந்திரம் முன்னர் கரநியாசம் சொன்ன மந்திரத்தை யடுத்திருத்தல் பொருத்தமாதலையும் மாறிக்கிடப்பதையும் காண்க. ( 209 )

**சிகைநின்ற வந்தக் கவசங்கொண் டாதிப்**
**பகைநின்ற வங்கத்தைப் பாரென்று மாறித்**
**தொகைநின்ற நேத்திர முத்திரை சூலம்**
**வகைநின்ற யோனி வருத்தலு மாமே** 1093

இ-ம் - எனின், சிகைமந்திரத்திற்கு மேலுள்ள மந்திரங்களால் அங்கநியாசம் செய்தலை அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : சிகாமந்திரத்தை ஓதி, அதற்கு மேலுள்ள தாகிய அந்த கவசமந்திரத்தைக்கொண்டு, ஆதியே! பகைகளோடு நின்ற அங்கங்களை இரட்சிக்க என்று அஸ்திரமந்திரம் சொல்லி, திரும்பவும் மூன்ருகிய தொகையில் நின்ற சூலமுத்திரையால் நேத்திரமந்திரத் தையும் சொல்லி, ஸ்ரீம் என்று யோனிமுத்திரையும் கொடுத்தால் வருத்தலுமாமே, ஆகாதாம் என்றவாறு.

சிகாயநம : என்பதற்குமேல் கவசாயநம : என்று இரு சுட்டுவிரல்களாலும் உடலைக் கவசம் செய்து, அஸ்திராய ஹூம்பட் என்று அஸ்திரமந்திரத்தால் உடலைக் காப்பாற்றுக எனப் பிரார்த்தித்து, நேத்ரோப் யோநம : என்று சூலமுத்திரை யோனிமுத்திரையையும் கொடுத்து, அங்கங்களைப் பதியங்கமாக்கி வழிபடின் வருத்தம் இல்லையாம் என்பது கருத்து. **(210)**

**வருத்த மிரண்டுஞ் சிறுவிரன் மாறிப்**
**பொருத்தி அணிவிரற் சுட்டிப் பிடித்து**
**நெறித்தொன்ற வைத்து நெடிது நடுவே**
**பெருத்த விரலிரண் டுள்புக்குப் பேசே. 1094**

இ-ம் - எனின், யோனிமுத்திரையின் இலக்கணம் கூறுதல் நுதலிற்று.

இ - ள் : வருத்தப்பட்டு இரு சிறு விரல்களையும் மாறிப்பொருந்தச் செய்து. மோதிரவிரலை நீட்டி, அதனைச் சிறு விரல் பிடிக்கச்செய்து, நெறித்து பொருந்த வைத்து,

பெருவிரலிரண்டையும் நடுவே செலுத்திப் பேசுக என்றவாறு. (211)

**பேசிய மந்திரம் இகாரம் பிரித்துரை**
**கூசமி லாத சகாரத்தை முன்கொண்டு**
**வாசிப் பிராணன் உபதேச மாகைக்குக்**
**கூசிய விந்து வுடன்கொண்டு கூவே** 1095

இம் - எனின், பிராணவாயுவைக் கட்ட மந்திரம் கூறுதல் நுதலிற்று.

இ - ள் : வாசியாகிய பிராணன் உபதேசமாதற்குப் பேசிய மந்திரமாவது, உரைத்தலில் கூச்சமில்லாத 'ச' காரத்தை முன்னிறுத்தி அதனுடன் இகாரத்தைப் பிரித்துக்கூட்டி கூசிய விந்துவையும் உடன்கொண்டு கூவுக என்றவாறு.

அதாவது 'சிம்' என்று கூறின் பிராணன் வயப்படும் என்பதாம். கொண்டுகூட்டு உரைக்கிடையிற் காண்க.

கூசியவிந்து என்றது மகாரம் ஈற்றில் தன் ஒலி முழுதும் பெருதொலித்தலின் என்க.

வாசிப்பிராணன் - வாசியென்னும் யோகநூற் பரி பாஷைப்பெயரோடு கூடிய பிராணவாயு. (212)

**கூவிய சிவன் பிராணன் முதலாகப்**
**பாவிய சவ்வுடன் பண்ணும் யகாரத்தை**
**மேவிய மாயை விரிசங்த முத்திரை**
**தேவி நடுவுள் திகழ்ந்துநின் ருளே.** 1096

இம் - எனின், 'சம்' என்னும் மந்திரப்பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இவ்வண்ணம் செபித்த ஆன்மா. உயிர் முதலாகிய அகரம் உடலாகப் பரவிய இயல்பினையுடைய சகரத்தோடு சேர்க்கப்பெற்ற மகாரத்தைப்பொருந்திய மாயையாக விரிந்த சங்கமுத்திரை நடுவுள் தேவிவிளங்கி நின்றாள் என்றவாறு.

அதாவது 'ஸம்' என்ற பீசத்துள் சங்கமுத்திரை நடுவில் தேவி விளங்குவள் என்பதாம். பிராணன் என்றது பிராணவாயுவை அன்று ; உயிர் எழுத்தை. முதல் - அகரம். ச் + அ + ம் - சம் எனச் சேர்த்தவாறு. (213)

**நின்ற வயிரவி நீலி நிசாசரி**
**ஒன்றும் இரண்டும் ஒருங்கிய உள்ளத்துச்**
**சென்றருள் நாயகி தேவர் பிரானுக்கே**
**நன்றருள் ஞாலத்து நாடுடுஞ் சாற்றியே** **1097**

இம் - எனின், தேவியின் பல்வேறு நிலைகளை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : நிலைபெற்ற வயிரவி, நீலநிறமுடையாள், இரவில் இயங்குபவள். முக்குணங்களும் அடங்கிய உள்ளத்துத் தாமே வலியச்சென்று அருள் வழங்கும் தலைவி; தேவதேவனாகிய சிவபெருமானுக்கு நன்றான திருவருட்சத்தி; ஆதலால் உலகத்து நீங்கள் அவளைப் புகழ்ந்து அன்பு புரியுங்கள் என்றவாறு. (214)

**சாற்றிய வேதஞ் சராசரம் ஐம்பூதம்**
**நாற்றிசை முக்கண்ணி நாடும் இருள்வெளி**
**தோற்றும் உயிர்ப்பன்மை சோதி பராபரை**
**ஆற்றலொ டாய்நிற்கும் ஆதி முதல்வியே** 1098

இம் - எனின், சத்தியே எங்குமாய் எல்லாமுமாய் நிற்பவள் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: இறைவன் கூறிய வேதங்கள், சரம் அசரமாய உலகம், அதன் முதலாகிய ஐம்பூதங்கள், திசைநான்கு இவையாவும் முக்கண்ணியின் வடிவே. மேலும் விரும்பப்பெறுகின்ற இருள் ஒளி, உடலொடு கூடும் எல்லையற்ற ஆன்மாக்கள் இவையாவற்றினும். ஒளியாய் ஆற்றலாய் நிற்கும் ஆதிமுதல்வியாய சோதிப் பராபரை இவளாவள் என்றவாறு. (215)

**ஆதி வயிரவி கன்னித் துறையாள்**
**ஓதி யுணரில் உடலுயிர் ஈசனும்**
**பேதை உலகிற் பிறவிகள் நாசமாம்**
**ஓத வுலவாத கோலமொன் றாகுமே** 1099

இம் - எனின், அவளே ரகசிய பராபரை என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: ஆதிவயிரவி, சத்திலோகத்து வீற்றிருப்பவள், ஞானசாத்திரங்களை ஓதி அதில் கூறியவண்ணம் உணர்ந்தால் உடலும் உயிரும் ஈசனுமாவள். சொல்லி அமையாத அழகுடையவளாகப் பொருந்தியிருக்கும். அவளைத் தியானிக்கின் இந்தப் பேதைமையையுடைய உலகில் ஆன்மாக்களுக்குளதாய் பிறவிகள் நாசமாம் என்றவாறு.

கன்னித்துறை - சத்திலோகமாகிய ஸ்ரீபுரம். மன்னி-நிலைபெற்றவள். உடல் - சகம். உயிர் - ஆன்மா. ஈசன் - பரம். ஆகவே, சத்தியே மாயையாய் உலகு உடல் இவற்றிற்கு முதற்காரணமாயும் உயிர்க்கெல்லாம் போக மோட்சத்தை தந்து உடனுயும் ஒன்றுயும் சிவபரம் பொருளோடு பிரிக்க முடியாத திருவருளாற்றலாயும் இருத்தலின் ' உடலுயிரீசனும் ' என்றருளியது.

ஓத - புகழ்ந்து சொல்ல. உலவாத - வற்ருத. கோலம் - அழகு. **(216)**

**கோலக் குழலி குலாய புருவத்தள்**
**நீலக் குவளை மலரன்ன கண்ணினுள்**
**ஆலிக்கும் இன்னமு தானந்த சுந்தரி**
**மேவிச் சிவத்தை வெளிப்படுத் தாளே** 1100

இப் - ானின், அம்மையின் அவயவ அழகும் அவள் சிவத்தை வெளிப்படுத்திய கருணையும் அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : அழகிய கூந்தலையுடையாள்: விளங்குகிற வளைந்த புருவத்தையுடையாள். நீலமலர் போலும் கண்களை உடையாள் ; களிப்பூட்டுகின்ற இனிய அமுதத்தை ஒத்த ஆனந்த சுந்தரி ; தான் விரும்பி, சிவ பரம்பொருளை வெளிப்படுத்தித் தரிசிக்கச் செய்தாள் என்றவாறு.

குலாய - விளங்கிய ; வளைந்த எனலுமாம். ஆலிக்கும் - களிப்பூட்டும். துளிக்கும் எனலுமாம். சிவத்தை வெளிப்படுத்துதலாவது தான் மேவிநின்று சிவத்தை

அருள்சுரக்கச் செய்தலாம். தாய் மேவித் தந்தையைக் கருணைபாலிக்கச் செய்வதுபோல.

மேவி - சகஸ்ராரத்தை மேவி நின்று சிவநீரை வெளிப்படுத்தினுள் என்று யோகமார்க்க உண்மையும் தோன்ற நிற்றல் காண்க. சிவநீர்-மதி அமுதம். (217)

**வெளிப்படு வித்து விளைவறி வித்துத்**
**தெளிப்படு வித்தென் சிந்தையி னுள்ளே**
**களிப்படு வித்துக் கதிர்ப்படு சோதியை**
**ஒளிப்படு வித்தென்னை உய்யக்கொண் டாளே. 1101**

இம் - எனின், ஆட்கொண்ட திருவருள்திறம் வியந்துரைத்தல் நுதலிற்று.

இ - ள் : சிவத்தை வெளிப்படச் செய்து அதனுலாம் பயனையும் உணர்த்தித் தெளிவு தந்து, சிந்தையினுள்ளே களிப்பூட்டி, கிரணங்களோடு விளங்குகின்ற பரஞ்சோதிப் பெருமானை ஒளி மிகும்படி செய்து, அடியேனை ஆட்கொண்டாள் என்றவாறு.

ஆகவே ஆன்மாக்களோ சிவமோ தாமாகவே ஒன்றும் செய்யகிற்றிலர். எல்லாம் அவள் தர வந்த ஆக்கம் இவ்வாக்கமெல்லாம் என்பது உணர்த்திய வாறும். (218)

**கொண்டனள் கோலங் கோடி அநேகங்கள்**
**கண்டனள் எண்ணெண் கலையின்கண் மாலைகள்**
**விண்டனள் மேலை விரிகதிர் மூன்றையுந்**
**தண்டலை மேல்நின்ற தையல்நல் லாளே 1102**

இம் - எனின், அனைத்தையும் படைத்தவள் அன்னையெனல் நுதலிற்று.

இ - ள் : குளிர்ந்த உச்சிமேல்நின்ற தையலாகிய வயிரவி, பலகோடி வடிவங்களைத் தாங்கினுள்; அறு பத்துநான்கு கலைகளையும் படைத்தாள்; விண்ணில் விரிந்து விளங்குகிற சோமசூரியாக்கினி என்ற மூன்று ஒளிப்பொருள்களையும் படைத்தாள் என்றவாறு.

தண் தலைமேல்நின்ற தையல் - மயிடன் தலையின் மேனின்ற தையல்; மகிடாசுரமர்த்தினி எனலுமாம். உச்சி யென்றது சகஸ்ராரத்தை.

மேலை விரிகதிர் மூன்றையும் விண்டனள் என்ப தற்கு யோகநூற் சார்புபற்றி ஆருதார நிலைகளிலுள்ள சோம சூரிய அக்கினி மண்டலங்களைப் பேதித்து உச்சியை யடைந்தாள் எனலுமாம். ( 219 )

**தையல்நல் லாளைத் தலத்தின் தலைவியை**
**மையலை நோக்கும் மனோன்மணி மங்கையைப்**
**பையநின் றேத்திப் பணிமின் பணிந்தபின்**
**வெய்ய பவமினி மேவகி லாவே. 1103**

இம் - எனின், அம்மை யடிபணியின் பிறவி யில்லையெனல் நுதலிற்று.

இ - ள் : தையனாயகியை. உலகநாயகியை. மயக்கற, அருட்பார்வை வழங்குகின்ற மனோன்மணி மங்கையை, மெதுவாக நின்று தோத்திரம் செய்து பணியுங்கள்: பணிந்தபின் கொடியபிறவி இனி உங்களைப் பொருந்தா என்றவாறு. ( 220 )

**வேயன தோளி விரையுறு மென்மலர்**
**ஏய குழலி இளம்பிறை ஏந்திழை**
**தூய சடைமுடிச் சூலினி சுந்தரி**
**ஏயென துள்ளத் திலிதிருந் தாளே.** 1104

இம் - எனின், அன்னை தம்மகத்து இருந்தமையை வியந்து கூறுதல் நுதலிற்று.

இ - ள் : மூங்கிலையொத்த தோள்களையுடையாள், மணம்பொருந்திய மெல்லிய மலர்கள் நிறைந்த கூந்தலை யுடையாள், இளம்பிறை சூடிய தூய சடை முடியை யுடைய சூலினி, சுந்தரி, பொருந்திய எனதுள்ளத்தை யிடமாகக்கொண்டு வீற்றிருந்தாள் என்றவாறு. ( 221 )

**இனியதென் மூலை இருக்குங் குமரி**
**தனியொரு நாயகி தானே தலைவி**
**தனிப்படு வித்தனள் சார்வு படுத்து**
**நனிப்படு வித்துள்ளம் நாடிநின் றாளே** 1105

இதுவுமது.

இ - ள் : இனிய தெற்குமூலையிலிருக்கும் குமரி, தனித்த ஒப்பற்ற தலைவி, தானே தனக்குத் தலைவி யாவாள், அடியேனுடைய சார்வுகளைக் கெடுத்துத் தனியனுக்கினள், என் மனத்தைத் தம் அடிக்கண் நன்றாக மிகப்படும் வண்ணம் செய்து அடியேனை விரும்பி நின்றாள் என்றவாறு.

தென்மூலையிருக்குங் குமரி, கன்னித்துறை மன்னி (1099) என்பன கன்னியாகுமரியில் இருப்பதைக் குறிக்கலாமோ என்று ஐயம் எழுதலும் கூடும்.

சார்வு - ஆன்மாக்களின் மலச்சார்பு. அவற்றை அழித்து, பதிச்சார்பு விளைவிப்பவள். சார்பற்று லல்லது சார்புணர்ந்து பற்றுது மனம் ஆதலால் மலச்சார்பு கெடுத்து, திருவடிச்சார்பு விளைவித்தனள் என்றது. கனிப்படுவித்து - தைலதாரைபோல் தனதடிக்கண்ணே இடையறாது தோய்ந்து நிற்கச்செய்து, ஆன்மாக்கள் என்றும் சுதந்திர ஈனர்களாதலின் தாமே அவர்கள் உள்ளத்தை நாடி நின்றாள் என்க. **(222)**

**நாடிய கண்மூன்று நடுவெழு ஞானத்துக்**
**கூடி இருந்த குமரி குலக்கன்னி**
**ஆடகச் சீறடிப் பைம்பொற் சிலம்பொலி**
**ஊடக மேவி உறங்குகின் றாளே. 1106**

இ - னின், பரநாத தியானம் செய்யும் மனத்தில் உறங்குவாள் எனல் நுதலிற்று.

இ - ள் : விரும்பிய முக்கண்ணுள் நடுவெழு கண்ணாகிய அங்கிக்கண்ணில் எழுகின்ற ஞானத்திற் கூடியிருந்த குமரியும் குலக்கன்னியும் ஆகிய அவளுடைய திருவடியி லணிந்துள்ள பொற்சிலம்பொலி கேட்கின்ற சிந்தையுள் தான் மேவி உறங்குகின்றாள் என்றவாறு.

நடு - அக்கினி. அக்கினி மலத்தைச் சுட்டெரித்து ஒளியைத்தருதல்போல, நடுவெழு ஞானம் - அக்கினி யால் மலக்ஷயம் செய்து ஞானவிளக்கந் தருவது என அதனியல்பு தெரித்ததாம். குமரி - இளையாள். ஆடகச் சீறடி - பொன்போன்ற சிறிய திருவடி. சிலம்பொலியூடு அகம் மேவி உறங்குகின்றாள் எனப் பிரித்துப் பொருள் கொள்க. **(223)**

**உறங்கு மளவின் மனோன்மணி வந்து**
**கறங்கு வளைக்கைக் கழுத்தாரப் புல்லிப்**
**பிறங்கொளித் தம்பலம் வாயில் உமிழ்ந்திட்**
**டுறங்கலை யாவென் றுபாயஞ்செய் தாளே** 1107

இம் - எனின், தேவி தமக்கு அருள்செய்தமை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: யான் உறங்குமளவில் மனோன்மணி எழுந்தருளிவந்து ஒலிக்கின்ற வளையலை அணிந்த கையால் என் கழுத்தை நன்றாகத்தழுவி, விளங்குகின்ற ஒளியோடு கூடிய தம்பலத்தை என் வாயில் உமிழ்ந்திட்டு உறங்காதே ஐயா என்று உபாயம் அறிவித்தாள் என்றவாறு.

என்றது குண்டலினி சத்தி அநாகதம் முதலான இடங்களைப் பொருந்தி. சங்கநாதம் கேட்கச்செய்து சிவாமுதம் ஊட்டித் தூங்காமற்றூங்கும் சமாதிநிலை அளித்தாள் என்பது. (224)

**உபாயம் அளிக்கும் ஒருத்தியென் உள்ளத்**
**தபாயம் அறக்கெடுத் தன்பு விளைத்துச்**
**சுவாவை விளக்குஞ் சுழியகத் துள்ளே**
**அவாவை அடக்கிவைத் தஞ்சலென் றாளே** 1108

இம் - எனின், அம்மை தனக்குச் செய்த உபாயங்களை யுணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: அடியேனுக்கு உபாயங்களை அளித்தருளும் பராசக்தி, என்னுள்ளத்து எழும் அபாயங்களை அறவே கெடுத்து, இறைவனிடத்து என்றும் நீங்காத

அன்பை விளைவித்து, நாய்போல அலையும் மனத்தை, ஆன்மாவை விளக்கிநிற்கும் சுழிமுனையில் ஆசையை அடக்கிவைத்து அடியேனை அஞ்சலென்று அபயம் அளித்தாள் என்றவாறு.

உபாயம் - இறைவனை அறிந்து அடைதற்குரிய சாதனம். உள்ளத்து அபாயம் - மனத்தின்கண் அபா யங்களாகிய காமாதிகள். அன்பு - இறைவனடிக்கன்பு. சுவா - நாய். நாய் ஒருபயனுமின்றி அலையுமாறுபோல, மனமும் அலைதலின் உவமவாகுபெயராக மனத்தைச் சுவா என்றது.

சுழியகம் - சுழிமுனை; அதாவது புருவநடு. அதுவே ஆன்மா எல்லாத் தத்துவங்களோடு இருந்து சாக்கிரத்தில் ஆட்சிசெய்யும் இடம். ஆதலான் மனத்தையும், அதன் கண்ணெழுகின்ற பற்றையும் அடக்கிவைத்து என்றது. சுழிமுனை ஆன்மாவை விளக்கஞ்செய்தலின் சுவாவை விளக்கும் சுழி என்றது.

அவா என்பது எஞ்ஞான்றும் யார்க்கும், தவாஅப் பிறப்பீனும் வித்து ஆதலின் அது அடங்கவே மனம் அடங்கும் ; மனமடங்க அபாயம் இல்லை ; ஆதலின் அவற்றைமுறையே தன்ஏவல்வழி நடக்கச் செய்தனள் தாய் என்றது. **(225)**

**அஞ்சொல் மொழியாள் அருந்தவப் பெண்பிள்ளை**
**செஞ்சொல் மடமொழி சீருடைச் சேயிழை**
**தஞ்சமென் றெண்ணித்தன் சேவடி போற்றுவார்க்**
**கிஞ்சொல் அளிக்கும் இறைவியென் றாரே 1109**

இம் - எனின், தாயின் கருணையை வியத்தல் நுதலிற்று.

இ - ள்: அழகிய சொல்லையுடையவள்; அரிய தவத்தால் எய்தத் தகும் பெண்பிள்ளை; செவ்வியசொற்களை மிழற்றும் மடமொழியாள்; சிறப்புடைய சிவந்த இழையினையுடையாள்; அவளே நமக்கு அடைக்கலம் என்று சிவந்த திருவடியைத் தொழுவார்க்கு இன்சொல் உதவும் இறைவியாவாள் என்றவாறு.

இன்சொல் எதுகைநோக்கி இஞ்சொல்லாயிற்று. தஞ்சம் - பற்றுக்கோடு. (226)

**ஆருயி ராயும் அருந்தவப் பெண்பிள்ளை**
**காரியல் கோதையள் காரணி நாரணி**
**ஊரும் உயிரும் உலகும் ஒடுக்கிடுங்**
**கோரியென் உள்ளங் குலாவிநின் றாளே.** 1110

இதுவுமது.

இ - ள்: அரிய உயிர்களால் ஆராயப்பெறும் அருந்தவப் பெண்பிள்ளை; மேகம் போலும் கரிய கோதையாள்; அனைத்திற்கும் காரணி, நாராயணி, உடல் உயிர் உலகு மூன்றையும் ஒடுக்கும் கோரசொரூபமானவள்; அவள் அடியேனுள்ளத்தில் விளங்கி நின்றாள் என்றவாறு.

ஆர் உயிர் ஆயும் அருந்தவப் பெண்பிள்ளை - சிவ புண்ணியச் சிறப்புடைய அரிய உயிர்களால் ஆராயப் படும் அருந்தவ முதல்வி. நம் அருளைப்பெறற்கு உரிய அரிய உயிர் யார் என்று ஆராய்கின்ற தவமுதல்வி எனலுமாம்.

காரணி-ஐந்தொழிலாற்றற்குக் காரணமாயிருப்பவள். நாரணி - நாராயணி. ஊர் - புரம்; சரீரம். சரீரத்தை ஊர், புரம் எனவழங்கல் சித்தர்மரபு. இதனைத் திருமந்திரத்துள் பலவிடத்தும் காணலாம்.

உடல் உயிர் உலகம் மூன்றையும் ஒடுக்குபவள் என்றது, உடலையும் உலகத்தையும் காரணமாகிய மாயையினும், உயிரைத் தம்மிடத்தும் ஒடுங்கச் செய்பவள் என்பதை விளக்க. தோன்றிய நிலையே ஒடுக்குதலே நியதி.

கோரம் - கொடுமை. கோரி - கோரத்தையுடையவள். மறக்கருணைசெய்யும் திருமேனியுடையவள் என்பதாம். (227)

**குலாவிய கோலக் குமரியென் னுள்ளம்**
**நிலாவி இருந்து நெடுநாள் அணைந்தும்**
**உலாவி யிருந்துணர்ந் துச்சியி னுள்ளே**
**கலாவி யிருந்த கலைத்தலை யாளே** 1111

இ - னின், அம்மை மனத்திலும் உச்சியிலும் குலவுதலை உணர்த்திற்று,

இ - ள்: விளங்கிய அழகிய குமரி, அடியேன் உள்ளத்து விளங்கியிருந்தும், அடியேனொடு நெடுநாள் அணைந்தும், உச்சியில் உலாவி இருந்து, உணர்ந்து கலந்து விளங்குகின்ற சந்திரகலையைத் தலையிலே உடையவளாவள் என்றவாறு.

உச்சி - பிரமரந்திரம். உச்சியினுள்ளே உலாவி யிருந்து உணர்ந்து கலாவியிருந்த கலைத் தலையாள்

என்க. உணர்தல் - அறியப்படுதல். கலாவி - கலந்து. கலை - பிறை. கலைத்தலையாள் - கலைகளாகிற இடத்தில் விளங்குபவள் எனலுமாம். (228)

**கலைத்தலை நெற்றியோர் கண்ணுடைக் கண்ணுள்**
**முலைத்தலை மங்கை முயங்கி இருக்குஞ்**
**சிலைத்தலை யாய தெரிவினை நோக்கி**
**அலைத்தபூங் கொம்பினள் அங்கிருந் தாளே. 1112**

இம் - எனின், இறைவி இறைவனுடன் கலந்தும், சுழிமுனையுள் விளங்குபவள் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: பிறைச்சந்திரனைச் சிரத்திலும், நெற்றியில் ஓர் கண்ணையும் உடைய கண்போல்வாராகிய பரசிவத்தோடு, முலையோடு கூடிய பெண்ணாகிய சத்தி கலந்து விளங்கும் மேருமலைக்கண்ணாகிய விளக்கத்தைக் கண்டு ஆடுகின்ற பூங்கொம்பை ஒத்த பராசத்தி அவ்விடத்து இருந்தருளினள் என்றவாறு.

கலை - பிறை. கலைத்தலை - பிறைமுடி. நெற்றியோர்கண் - அக்கினிக்கண். கண் என்றது உமாதேவியார்க்குக் கண்போல்பவர் சிவமாதலின் உவமவாகு பெயராயிற்று.

சத்திக்கு, பரஞானம் அபரஞானம் இரண்டும் தனமாகலின் முலைத்தலைமங்கை என்றருளியது.

சிலை - வில். புருவம் - சிலைத்தலையாய தெரிவு. புருவ நடுவில் தெரிவதாகிய சிவம். சிலை - மேரு; என்றது உடலை. சிலைத்தலை - மேருவின் உச்சியாகிற

பிரமரந்திரம். அங்கே விளங்குவதாகிய சிவம் எனலுமாம். அலைத்த பூங்கொம்பு - ஆடுகின்ற பூங்கொடி. அங்கு - புருவநடுவில் அல்லது பிரமரந்திரத்தில். சிவத்தைக் கண்டுகொண்டு, பூங்கொடியாகிற சக்தி இருந்தாள் என்பது. அதாவது சிவகாமியாக இருந்தாள் என்பதாம். (229)

**இருந்தனள் ஏந்திழை என்னுள்ள மேவிப்**
**பொருந்திரு நால்விரல் புக்கனள் புல்கித்**
**திருந்திய தானுவிற் சேர்ந்துடன் ஒன்றி**
**அருந்தவ மெய்தினள் ஆதியி னாளே** 1113

இதுவுமது.

இ - ள்: ஏந்திய இழையினையுடையாளாகிய சிவசத்தி அடியேனுடைய உள்ளத்தை மேவியிருந்தாள்; ஆதியாகிய அவள் பொருந்திய எண்விரல் ஆழ்ந்து அக்னிமண்டலத்துப்பொருந்தி, திருந்திய சிவத்தோடு ஒன்றித் தவநிலையடைந்தாள் என்றவாறு.

இதயத் தானத்தில் எழுந்தருளியுள்ளதேவி, மேலும் எண்விரல் உயர்ந்து கண்டத்தானத்துப் புக்கு, அங்கு உள்ள சோதிவடிவாய சிவத்தோடு கலந்து விளங்குபவள் என அநுபவம் அறிவித்தவாறு. (230)

**ஆதி யனாதி யகாரண காரணி**
**சோதிய சோதி சுகபர சுந்தரி**
**மாது சமாதி மனோன்மணி மங்கலி**
**ஓதியென் னுள்ளத் துடனியைந் தாளே.** 1114

இதுவுமது.

இ - ள் : தான் அனைத்திற்கும் ஆதியாயும், தனக்கு ஓர் ஆதியில்லாதவளாயும், தான் எல்லாவற்றிற்கும் காரணமாயும், தனக்கு ஓர் காரணமில்லாதவளாயும்; ஒளியாயும், பேரொளியாய் விளங்குவதால் காண்பவர் கண் கூசுவதால் ஒளியற்ற இருள்போன்றவளாயும், சுகம் நிறைந்த மேலான சுந்தரியாயும், காதலை விளைவிக்கும் மாதாயும், மனோன்மணியாயும், நித்திய மங்கலையாயும், அடியேற்கு அறிவித்துச் சமாதியாய் என்மனத்து ஒன்றியிருந்தாள் என்றவாறு.

என் உள்ளத்து சமாதி உடனியைந்தாள் என இயைக்க. (231)

**இயைந்தனள் ஏந்திழை என்னுள்ள மேவி**
**நயந்தனள் அங்கே நமசிவ என்னும்**
**அயன்தனை யோரும் பதமது பற்றும்**
**பெயர்ந்தனள் மற்றும் பிதற்றறுத் தாளே** 1115

இம் - எனின், அம்மை பிறவியறுத்தாட்கொண்டு அருள்செய்வள் என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : அருளம்மை அடியேனது மனத்துப் பதிந்தனள். விரும்பி அதனையே இடமாகக்கொண்டு எழுந்தருளினள்; ந ம சி வ என்னும்; அயனை ஆராயும் பதவியைப்பற்றும் நிலையைப்பெயர்த்தனள் ; வேறுள்ள பிதற்றலையும் நீக்கினள் என்றவாறு.

சத்திநிபாதம் வந்தவுடன் ஆன்மாவாகிய என்னை மறந்தேன். அவள் அருள்வழிநின்று 'ந ம சி வ' என்று உபதேசித்தாள். ஆதலால் அடியேனும் அங்ஙனமே ந ம சி வ என நின்று பிறவியறுத்தேன்; அவளருளாட்சியில்

அடங்கியிருந்தமையால் இவர் தேவர் அவர் தேவர் என்னும் பிதற்றலையும், இது இன்பம் அது இன்பம் என்னும் பிதற்றலையும் அவள் நீக்கினுள். நான் நீங்கி யுறுதியுடையன் ஆயினேன் என்பது கருத்து (232)

**பிதற்றிக் கழிந்தனர் பேதை மனிதர்**
**முயற்றியின் முத்தி அருளும் முதல்வி**
**கயற்றிகழ் முக்கண்ணுங் கம்பலைச் செவ்வாய்**
**முகத்தருள் நோக்கமும் முன்னுள்ள தாமே 1116**

இம் - எனின், தேவி தெரிசனம் தந்தும் மக்களறி யாரே என இரங்கல் நுதலிற்று.

இ - ள் : முயற்சியினுல் வீடுபேறு அளிக்கும் முழு முதல் தலைவியின் கயல்மீனைப்போல விளங்குகின்ற மூன்றுகண்களும், ஓங்கார வொலிக்கும் ஒலிவழங்கும் சிவந்த வாயும், திருமுகத்தில் கருணைவழிகின்ற பார்வை யும் நமக்கு முன்னே உள்ளதாம் ; அங்ஙனமிருக்கவும், அறிவற்ற மக்கள் வாயில்வந்தபடி பிதற்றிக் கழிகின் றனரே. இஃதென்னே பேதைமை என்றவாறு.

முயற்றி - முயற்சி. கம்பலை - ஒலி; ஈண்டுப் பர நாத ஒலி, இவையாவும் நம்முன்னே நல்லருள் வழங்க இருக்கவும் பேதைமக்கள் பிதற்றுகின்றனரே என் இரங்கியவாறும். (233)

**உள்ளத் திதயத்து நெஞ்சத் தொருமூன்றுள்**
**பிள்ளைத் தடமுளே பேசப் பிறந்தது**
**வள்ளற் றிருவினை வயிற்றினுள் மாமாயைக்**
**கள்ள, ஒளியின் கருத்தாகுங் கன்னியே. 1117**

இம் - எனின், கன்னியின் பிறப்பிடமும் உறை விடமும் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : கன்னி, மனம் புத்தி சித்தம் ஆகிய மூன்றிடத்துள், பிள்ளைத்தடமாகிய சுழிமுனையுள் பேசப் பிறந்ததாம். வள்ளலாகிய பரசிவத்தின் திருவுள்ளத்து, சுத்த மாயையின் கள்ள ஒளியால் ஞானவடிவாகத் தோன்றுவதாம் என்றவாறு.

உள்ளம் - மனம். இது தைசதாங்காரத்தினின்று தோன்றுவதாய், வாயின் மாத்திரையான் நிருவிகற்பமா யறிந்த விடயப் பொருளில் சங்கற்ப விகற்பம் நிகழ் தற்குக் கருவியாய் நிற்பது.

புத்தி, சாத்துவிதம் மிகுந்த ஏனைய குணங்கள் குறைந்த அவதரம். சித்தம் முக்குணங்களும், தம்முள் சமமாய் நின்ற அவதரம். இந்த மூன்று அவதர பேத மாகிய மனத்துடன் ஆன்மா புருவமத்தியில் நிற்கும் சாக்கிரத்தில் தியானம் சித்திக்கும். அங்கே மூலமாகிய உடனடுவிலிருந்து மேனோக்கிச்சென்ற சத்தி வெளிப் படுவள். ஆதலின் பிள்ளைத்தடமுளே பேசப்பிறந்தது என்றருளினர். தடம் - குளம். பிள்ளைத்தடம் - சிறு குளம். குளம் நெற்றிக்கும் பெயருண்மை ஓர்க. பேசு தல் - தியானித்தல்.

மாமாயை - சுத்தமாயை, மாமாயை கள்ள ஒளி யின் - மாயை மறைக்கும் என்பது பொதுவிலக்கண மாயினும், அது விளக்கும் என்பது உடைமையின் கள்ள ஒளி எனப்பட்டது. ஆகவே மாமாயையின் விளக்கும் ஆற்றலால், கருத்தாகும் - அறிவுருவாகும்,

கன்னி-பராசத்தி, சிவகர்ப்பத்தில் மாயையின் விளக்கும் ஆற்றலால் சக்தி ஞானமே சொரூபமாகத் தோன்றுவள் என்பதாம். (234)

**கன்னியுங் கன்னி அழிந்திலள் காதலி**
**துன்னியங் கைவரைப் பெற்றனள் தூய்மொழி**
**பன்னிய நன்னூற் பகைவரும் அங்குள**
**என்னேஇம் மாயை இருளது தானே. 1118**

இம் - எனின், சத்தியின் ஆற்றலை வியந்தமை நுதலிற்று.

இ - ள்: சத்தி கன்னியாயும் கன்னித்தன்மை அழியாதவளாய், காதலியாய்ச் சிவத்தை பொருந்தி ஐவர் மக்களைப் பெற்றனள். தூயமொழியினையுடைய ளாகிய அவள் அருளிச்செய்த வேத விதிகட்குப் பகை வராகிய அசுரர்களும் அங்குளர்; இம்மாயை இருளாயும் நிற்கின்றது. என்னே வியப்பு என்றவாறு.

கன்னி - அழியாதவள்: அகில சராசரங்களை எல்லாம் ஈன்றும் 'பான்மொழிக் கன்னியாகும் பவன் பிரமசாரி யாகும்' ஆதலால் கன்னி என்றது. ஐவர் - பிரமன், விஷ்ணு, ருத்திரன், மயேச்சுரன், சதாசிவம் என்ற ஐவரை. சத்தி சிவத்தின் சத்தியாயிருந்து நாதத்தையும், நாதத்தினிடம் விந்துசத்தியாய் நின்று சதாசிவம் முதலியவாய்த் தோன்றுதலின் இவ்வண்ணம் கூறியது. தூய் மொழி: அன்மொழித்தொகை. அன்றி, தூய் மொழி பன்னிய நன்னூல் என அடையாக்கி, சுத்த மாயா காரியமாகிய நாதத்தினின்று தோற்றுவிக்கப் பட்டவேதம் எனலுமாம். நன்னூல் என்றது ஆகு பெயராக அதனுல் கூறப்பெற்ற விதிகளை உணர்த்தும்.

பகைவரும் என்றது வேத விரோதிகளான அசுரரை. பகவர் எனப் பாடமோதி, வேதநூலில் வல்ல முனிவர் என்று உரைப்பாரும் உளர்.

இம்மாயை - அம்பிகையாற்றும் இம்மாயை; இருளதுதானே - ஆணவ இருளகற்ற உதவப்பெற்ற மாயையாகிய ஒளி, பரிபாகமற்ற அசுரர்க்கு மயக்கமும் செய்தலின் இருளாயினமை உணர்த்தியது. (235)

**இருளது சத்தி வெளியதெம் அண்ணல்**
**பொருளது புண்ணியர் போகத்துள் இன்பம்**
**தெருளது சிந்தையைத் தெய்வமென் றெண்ணி**
**அருளது செய்யும்எம் ஆதிப் பிரானே.** 1119

இம் - எனின், சிவமும் சத்தியும் இருளும் ஒளியும் போல்வர் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இருள் சத்தி, ஒளி சிவம் : புண்ணியர்க்குப் பொருளாவது சிவத்தோடு கலந்திருப்பதாகிய சிவபோகத்துள் விளைவது இன்பம். இங்ஙனமாகத் தெய்வம் என்றெண்ணித் தெளிந்த சிந்தையை எம் ஆதிப்பிரானாகிய சிவம் இடமாகக்கொண்டு அருள் செய்யும் என்றவாறு.

ஜடசக்தியாய மாயையைத் தொழிற்படுத்தும் அம்மைநிறம் இருளாதலின் 'இருளது சத்தி' என்றது. புண்ணியர் பொருளது போகத்துள் இன்பம் எனக் கூட்டி, சிவபுண்ணியமுடையார்க்குப் பொருளாவது சிவபோகத்துள் விளையும் இன்பமே எனப் பொருள் கொள்க.

தெளிந்த மனமே சிவனுக்கு இருப்பிடமாதலின் தெருளது சிந்தையைத் தெய்வம் என்றெண்ணி என்றது. தெய்வம் தெருளது சிந்தையை ( இடம் ) என்று எண்ணி ஆதிப்பிரான் அருள்செய்யும் எனக்கூட்டுக. **(236)**

**ஆதி அனாதியும் ஆய பராசத்தி**
**பாதி பராபரை மேலுறை பைந்தொடி**
**மாது சமாதி மனோன்மணி மங்கலி**
**ஓதுமென் னுள்ளத் துடன்முகிழ்த் தாளே. 1120**

இம் - எனின், முன் 1114-ம் மந்திரம்போலச் சிவத்துடன் அபின்னமாய் விளங்கும் தன்மை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : ஆதியாயும், அநாதியாயும், வீற்றிருக்கின்ற பராசத்தி, சிவத்தின் பாதித் திருமேனியைக் கொண்ட பராபரை, எல்லாத் தெய்வங்களுக்கும் மேலாக உறைகின்ற பைந்தொடி மாது, அனைத்தையும் தன்னிடத்து நிலைக்கச் செய்பவள்: மனோன்மணி, நித்திய மங்கலி, தன்னைச் செபிக்கின்ற உள்ளத்து உடனே தோன்றியவள் என்றவாறு.

மேல் உறை பைந்தொடி - எல்லாவற்றிற்கும் மேலாக உறைகின்ற பசிய தொடியினை உடையாள். அன்றி உச்சித் தானமாகிய மதிமண்டலத்து உறைகின்றவள் எனினுமாம். துவாதசாந்தத் தானம் எனினுமாம்.

சமாதி : பொறிபுலன்களைத் தன்னகத்து அடக்கியிருத்தல். அதுபோல எல்லாவற்றையும் தனதருள்

வியாபகத்தடக்கியிருப்பவள் என்பதாம். ஓதும் - மான சீகமாக ஓதும். உள்ளத்து - உயிரினிடமாக. (237)

**ஓதிய வெண்ணெண் கலையின் உயர்கலை**
**ஆதியில் வேதமே யாமென் றறிகிலர்**
**சாதியும் பேதமும் தத்துவ மாய்நிற்பள்**
**ஆதியென் றோதினள் ஆவின் கிழத்தியே.** *1121*

இம் - எனின், கலையுட்சிறந்தது வேதம்; சாதி முதலிய எல்லாம் ஆதிசத்தியே எனல் நுதலிற்று.

இ - ள்: சொல்லப் பெற்ற அறுபத்துநான்கு கலைகளுக்குள் உயர்கலை முதன்மையான வேதமேயாம் என்றறிகிலர் உலகவர். பசுக்கள் எல்லாவற்றிற்கும் தலைவியாகிய சத்தி, சாதியும் அவற்றால் விளையும் பேதமும் தத்துவங்களுமாய் ஆதியே நிற்பள் என்று உபதேசித்தாள் என்றவாறு.

வேதமே தனக்கு முதன்மையின்றித் தானே முதலான கலை. பசுபதியின் சத்தியாகிய தேவி வேதத்திற் சொல்லப்படுகின்ற சாதி பேதங்களும் தத்துவங்களும் அனைத்தும் அவளே முதல்வி என்று உபதேசித்தாள் என்பது கருத்து. (238)

**ஆவின் கிழத்திநல் லாவடு தண்டுறை**
**நாவின் கிழத்தி நலம்புகழ்ந் தேத்திடும்**
**தேவின் கிழத்தி திருவாஞ் சிவமங்கை**
**மேவுங் கிழத்தி வினைகடிந் தாளே.** *1122*

இம் - எனின், வினைகடிந்து ஆண்டு அருளியமை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: திருவாவடுதுறைக்கண் உள்ள ஆவின் கிழத்தி, நாவின்கிழத்தி, இவள் அழகைப் புகழ்ந்து துதிக்கும் தேவாகிய சிவத்தின் தலைவி, ஞான சொரூப மாகிய சிவமங்கை, அனைவராலும் விரும்பி வழிபடப் பெறும் கிழத்தி, அடியேனுடைய வினைகளை நீக்கினள் என்றவாறு.

நல்லாவடுதண்துறை ஆவின் கிழத்தி, நல்லாவடு தண்துறை நாவின் கிழத்தியென இடைநிலைத் தீபகமாகப் பொருள்கொள்க. திரு - ஞானத்திரு. 'போகமும் திருவும் புணர்ப்பானை' என்புழியும் இப்பொருளாதல் காண்க.

வினை கடிந்தாள் - இருவினைகள் ஆன்மாக்களைச் சாரமே தடுத்து ஆட்கொண்டவள். (239)

**வினைகடிந் தாருள்ளத் துள்ளொளி மேவித்**
**தனையடைந் தோர்க்கெல்லாந் தத்துவ மாய்நிற்பள்**
**எனையடி மைகொண்ட ஏந்திழை ஈசன்**
**கணவனைக் காண அனாதியு மாமே.** 1123

இம் - எனின், தேவியின் அநாதி நித்தியத்துவம் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: வினைப்பயனைக் கடிந்தார் உள்ளத்து உள்ளொளியாக எழுந்தருளியிருந்து தன்னைச் சரணாக வந்தடைந்த ஆன்மாக்களுக்கெல்லாம் உண்மைப் பொருளாக நிற்பள். அடியேனை வழிவழியாக அடிமை கொண்ட ஏந்திழை. ஈசனும் அவளுக்குக் கணவனுமாகிய சிவத்தைக்காண அநாதியாவள் என்றவாறு.

நாதசிவத்திற்குச் சத்தி தாயாதலின் சிவத்தை நோக்க அவள் அநாதியாவாள் என்றது. "மனைவி த்தாய் தங்கை மகளான நிலைகளில்" தாயானநிலை, அன்றியும் அவரோடொப்ப இவளும் அநாதியாவாள் எனலுமாம். தத்துவம் - உண்மைப் பொருள். (240)

**ஆதி அநாதி அகாரண காரணி**
**வேதம தாய்ந்தனள் வேதியர்க் காய்நின்ற**
**சோதி தனிச்சுடர் சொரூப மாய்நிற்கும்**
**பாதி பராபரை பன்னிரண் டாதியே.** *1124*

இதுவுமது.

இ - ள்: ஆதி, அநாதி அகாரண காரணியாய் நின்ற சிவசத்தி, வேதியர்க்காக அமைந்த வேதங்களை ஆய்ந்தவளாய், ஒப்பற்ற சோதியாய் பரஞ்சுடராகிய சிவத்திற்கு உருவமாய் நிற்பள். பாதி மேனியளாவள், பன்னிரு கலைகளையுடைய ஆதிபரம்பொருளின் சத்தியாகிய பராபரையாவள் என்றவாறு.

'ஆதி...காரணி' என்பன முன் 1114-ம் மந்திரம் முதலடியை ஒத்திருத்தல் உன்னுக.

சொரூபமாய் நிற்கும் பன்னிரண்டாதியின் பாதி பராபரை எனக்கூட்டுக. பன்னிரண்டு - சிவகலைகள் பன்னிரண்டுமாம். (241)

## 7. பூரணசத்தி

ஒலியுலகும், பொருளுலகும், ஒளியுலகுமாய எங்கும் விளங்குகின்ற இயங்குவன நிற்பனவாகிய எல்லாப்

பொருளிடத்தும் பராசத்தி கலந்து நிறைந்திருத்தலை உணர்த்துதலின் இவ்வதிகாரம் பூரணசத்தி எனப்பட்டது. சத்தியின் பூரணம் - பூரண சத்தி. சத்தியின் பூரணத்தை முப்பது மந்திரங்களால் உணர்த்துவான் தொடங்கி முதற்கண் அவளது எங்கும் நிறைந்த தன்மையை உணர்த்துகின்றார்.

**அளந்தேன் அகலிடத் தந்தமு மீறும்**
**அளந்தேன் அகலிடத் தாதிப் பிரானை**
**அளந்தேன் அகலிடத் தாணொடு பெண்ணும்**
**அளந்தேன் அவளருள் ஆய்ந்துணர்ந் தேனே. 1125**

இ - ள் : உலகத் தோற்ற ஒடுக்கங்களை ஆய்ந்தேன் உலகத்திற்கு ஆதி முதல்வனாகிய சிவபரம் பொருளை ஆய்ந்தேன். உலகத்துள்ள ஆண்பெண் வடிவாகிய உயிர்ப்பொருள்களை ஆய்ந்தேன். எல்லாம் அவனருள் என்று ஆராய்ந்து உணர்ந்தேன் என்றவாறு.

அனைத்தையும் ஆய்ந்ததன் முடிவு எல்லாம் சத்தியின் அருளென்று உணர்ந்ததே என்பதாம். (242)

**உணர்ந்திலர் ஈசனை ஊழிசெய் சத்தி**
**புணர்ந்தது பூரணம் புண்ணியர் தங்கள்**
**கணங்களைத் தன்னருள் செய்கின்ற கன்னி**
**கொணர்ந்த வழிகொண்டு கும்பக மாமே. 1126**

இம் - எனின், பூரணத்துவத்தையும். கும்பகஞ் செய்யும் முறையையும் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இதனை உலகவர் உணர்ந்திலர்; சர்வ சங்காரம் செய்யும் பராசத்தியானவள் பரசிவத்தோடு

கூடியிருப்பதே பூரணம். பரிபாக விசேடமுள்ள புண்ணியர்களைத் தனது அருள்வடிவாக்குகின்ற கன்னியை, கொண்டுவந்த வழியே கொணர்ந்து கும்பிக்க அவள் கும்பகமாவள் என்றவாறு,

உணர்ந்திலர் என்பதற்கு உலகவர் என ஒரு எழுவாய் வருவித்து முடிக்க. ஊழிசெய் சத்தியென்றது அவளுக்கு நித்தியத்துவம் விளக்கியது. சிவம் தனித்து இருக்கின் பாதியேயாம்; பரையோடு கூடின் பூரணமாகும் புண்ணியர் தங்கள் கணங்கள் - புண்ணியர் கூட்டங்கள். தன் அருள் செய்தல் - தன் அருட்கண் தங்கச்செய்தல். அருளாகிற வியாபகத்துள் வியாப்பியமாக அடங்கி அருள் அநுபவத்திலேயே திளைக்கச்செய்தல்.

கொண்டுணர்ந்த வழி கொண்டு-கொணர்ந்த வழியே தாமும் கொண்டு. வழியாவன, மூலாதாரம் முதல் ஆஞ்ஞை, துவாதசாந்தம் வரையுள்ள ஆதாரங்கள். கும்பகமாதலாவது ஒட்டற்று நிலைத்தல். (243)

**கும்பக் களிறைந்துங் கோலொடு பாகனும்**
**வம்பில் திகழும் மணிமுடி யண்ணலும்**
**இன்பக் கன்னி இனிதுறை தையலும்**
**அன்பிற் கலவியு ளாயொழிந் தாரே.** 1127

இ - எனின், ஆன்மாவும் சிவமும் சத்தியும் கலந்து வேறுபாடற்றனர் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : மத்தகத்தையுடைய ஆண் யானைகள் ஐந்தும், அவற்றை இயக்குகின்ற அங்குசக் கோலோடு

கூடிய பாகனாகிய ஆன்மாவும், மணத்துடன் விளங்கும் அழகிய கிரீடத்தைத் தாங்கிய அண்ணலாகிய சிவமும், அச்சிவத்தோடு இன்பப் புணர்ச்சியுள் இனிதாகத் தங்குகின்ற தையலாகிய சத்தியும், அன்பினால் கலவியுட்பட்டு வேறுபாடொழிந்தனர் என்றவாறு.

என்றது சிவமும் சத்தியும் ஆன்மாவும், பொருளும் பொருள் தன்மையும் நுகர்பவனுமாகிய வேறுபாடற்று எல்லாம் ஒன்றாய் பரிபூரணத் தன்மை எய்தினர் என்பதாம். களிறு ஐந்து - பஞ்சேந்திரியங்கள். கோல்-மனம். பாகன் - ஆன்மா; உருவகம். (244)

**இன்பக் கலவியில் இட்டெழு கின்றதோர்**
**அன்பிற் புகவல்ல னாம்எங்கள் அப்பனும்**
**துன்பக் குழாயில் துயருறும் பாசத்துள்**
**என்பிற் பராசத்தி என்னம்மை தானே** 1128

இ - னின், சிவசக்திகள் காக்கும் கால வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : துன்பமயமான கருப்பாசய உதிரச்சேற்றுள் கிடந்து வருந்துகின்ற உடம்பின் வீணை தண்டமாகிய பின் எலும்பில் பராசத்தியாகிய என்னம்மை இருந்து காக்கின்றாள். ஆன்மாவாகிய நானும் அவனுமாய் ஏகபோகமாய் இன்பப் புணர்ச்சியில் ஈடுபட்டு எழுகின்ற அன்புக்காலத்தில் உள்ளத்துப் புகவல்லனும் எங்கள் அப்பன் என்றவாறு.

அம்மை துன்பக்காலத்துக் காப்பள்; அப்பன் இன்பக்காலத்து எழும் அன்பு வாயிலாகக் காப்பன் என்பதாம். என்பின் - சுழிமுனைநாடி செல்லுகின்ற என்பாகிய முதுகு

எலும்பு; இதனை வீணாதண்டம் என்பது யோகநூல மரபு. (245)

**என்னம்மை என்னப்பன் என்னுஞ் செருக்கற்று**
**உன்னம்மை ஊழித் தலைவனும் அங்குளன்**
**மன்னம்மை யாகி மருவி யுரைசெய்யும்**
**பின்னம்மை யாய்நின்ற பேர்நந்தி தானே.** *1129*

இ‌ம் - எனின், உண்மைத் தாய் தந்தையர்கள் சிவ சத்திகளே எனல் நுதலிற்று.

இ - ள்: என்னம்மை என்னப்பன் என்று எடுத்து உடலுக்குரியாரை வழங்குவதால் விளையும் செருக்கு நீங்கி அம்மையும் பேரூழித் தலைவனாகிய பெருமானும் அங்கு உள்ளான் என உன்னுக. அம்மையோடு பிணைந்து நிற்கின்ற பெரிய பெருமானே நமக்கெல்லாம் நிலைபேறு உடைய மறுமை யின்பஞ் சித்திக்கும் வண்ணம் நம்மொடு கலந்து உபதேசிக்கும் என்றவாறு.

உடலின் தந்தை தாயாரைக் கொண்டு அடையும் செருக்கை அகற்றி, அம்மையோடு கூடிய ஊழி முதல்வனை உன்னுக. அம்மையோடு அபின்னமாய் நின்ற பெரிய பெருமானே மறுமையின்பம் நிலைக்க அருளுபதேசம் அருள்வன் என்பது கருத்து.

என்னம்மை என்னப்பன் என்பன புறப்பற்றுக் காரணமாக விளையும் செருக்கு. அம்மையும் ஊழித் தலைவனும் அங்குளன் உன் எனப் பிரித்துக் கூட்டுக. செருக்குற்ற காலத்துச் சேய்மைக் கண்ணராக இருத்தலின் அங்குளன் என்று பிரித்துச் சுட்டப்பெற்றது. அம்மையோடு கூடி ஊழித் தலைவன் உளன் என வினை

முடிபறிந்து முடிக்க. உன் - முன்னிலை ஒருமை வினை முற்று.

பின் அம்மையாய் நின்ற பேர் நந்தி - அபின்னமாய்ப் பின்னிக்கிடக்கின்ற அம்மையே வடிவாய்நின்ற பெருமான் இறைவியும் இறைவனும் உடலாயும் உயிராயும் ஒன்றி இருப்பவர்கள் ஆதலின் இங்ஙனம் கூறியது.

மன் அம்மையாகி - நிலைபெற்ற அம்மையின்பம் ஆக. அம்மையின்பம் - மருமையின்பம். ஆகி - ஆக எனத் திரிக்கப்பெற்றது. மருவி ஆன்மாவொடு கலந்து. உறைசெய்யும் உபதேசிக்கும். (246)

**தார்மேல் உறைகின்ற தண்மலர் நான்முகன்**
**பார்மேல் இருப்ப தொருநூறு தானுள**
**பூமேல் உறைகின்ற போதகம் வந்தனள்**
**நாமேல் உறைகின்ற நாயகி ஆணையே.** 1130

இ - னின், அன்னையின் உதவியை அறிந்து பயன்கொள்க என்று அறிவுறுத்தல் நுதலிற்று.

இ - ள் : தண்டின்மேல் தாங்கிய தண்ணிய மலராகிய தாமரையில் வீற்றிருக்கிறவனாகிய பிரமன் படைப்பாகிய பூமியின்மேல் நீங்கள் வாழ்வது ஒரு நூற்றாண்டுகள்தாம் உள்ளன. வாகீசுவரியின் ஆணையால் வெண்டாமரையில் விளங்கும் கலைவாணி எழுந்தருளினள், அறிந்து பயன் கொள்க என்றவாறு.

நீங்கள் வாழும் நாள் நூற்றாண்டுகள்; அதற்குள், வாகீஸ்வரி ஆணையால் வந்த கலைத்தேவியைப் பணிந்து

பயன் கொள்ளுங்கள் என்பதாம். நான்முகன் பார் என்றதும் தோன்றின யாவும் அழியுந் தன்மையன ஆதலின் நான்முகன் படைப்பாகிய பூமியிருப்பதே நிலையன்று; ஆகவே அவ்வுலகில் உங்கள் வாழ்வும் அப்படியே என்பர் 'நான்முகன் பார்மேல் இருப்பது ஒருநூறு' என்றது.

நாமேல் உறைகின்ற நாயகி - வாகீஸ்வரி, அவள் ஆணையாலே கலைமகள் கலைத் தெய்வமாகிய ஆன்மாக் களுக்கு அறிவை ஊட்டுகின்ருள் என்பது உணர்த்திய வாறு. போதகம் - ஞானம்; ஈண்டு ஞானவொளியை உணர்த்தியது. வந்தனள் என்றது குறிப்பெச்சம் அறிந்து பயன் கொள்க என்பது எஞ்சிநின்றது. படிக்கும் மாணவகனைப் பார்த்து ஆசிரியர் வந்தாரெனின் பயன் கொள்க என்பது எஞ்சி நின்றதுபோல. (247)

**ஆணைய மாய்வருந் தாது ளிருந்தவர்**
**மாணைய மாய மனத்தை ஒருக்கிப்பின்**
**பாணைய மாய பரத்தை அறிந்தபின்**
**தாணைய மாய தனுதனன் தானே.** *1131*

இ-ம் - எனின், மனம் ஒருங்கித் தியானிப்பார் திரு வருளுக்கிடமாவர் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : மனம் உண்மையாக வருந்தாது இருந்த வர்கள் மிகச் செருக்கும் ஐயமுங் கொண்ட மனத்தை ஒருமுகப்படுத்தி, பிறகு நாத வடிவாகிய, நுணுகிய சிவபரம்பொருளை அறிந்தபின் திருவடியிடத்தும் பற்றுக் கொண்ட தானே தனக்கு ஆதனமாம் என்றவாறு.

ஆணையம் - உண்மை, உள் ஆணையமாய் வருந் தாது இருந்தவர்கள் எனக்கூட்டி மனம் உண்மையாய் வருந்தாமல் இருந்த மெய்யடியார்கள் எனப் பொருள் கொள்க.

உள் - மனம். ஆணையமாதலாவது நாடகத்தால் உன்னடியார்போல நடிக்காமல் உண்மையாக என்றவாறு. வருந்தாமையாவது, வருத்தம் விளைவது அகப்பற்று புறப்பற்றுக்களால்; அவை அறவே, வருந்த வேண்டாமை யிற் கூறியது. இருந்தவர் - சலனமின்றிச் சித்திர தீபம்போல இருந்த மெய்யடியார்கள்.

மாண் ஐ மாய மனத்தை - மாட்சியோடு சந்தேக மும் பொருந்திய மனத்தை. மாட்சிமை - செருக்கு - ஐயம் - இதுவோ அதுவோ என உறுதி பிறவாது தடுமாறுதல், இவ்விரண்டும் மனத்தின் தன்மை. ஆத லால் மனம் இங்ஙனம் அலையாது ஒருக்கி.

பாண் நையமாய பரத்தை ; பாண் - இசை ; என் றது பரநாதத்தை. நையமாய - நுணுகிய. நைதல் - உள்ளதன் நுணுக்கம். ஆகவே நாதவடிவானதும், நுணுகியதுமான பரசிவத்தை என்க. அறிந்தபின் - அவனையன்றித் தலைவனில்லை என்றும், யோக்கியவஸ்து என்றும் அறிந்தபின்.

தான் தாள் நயமானதன் ஆதனம் - ஆன்மா வாகிய தான் அப்பரம்பொருளின் திருவடிக்கு இதமூட்டக் கூடிய தனக்கு உரிமையான இருக்கையாம் என்பது அதாவது அங்ஙனம் அறிபவனே இறைவன் அநவரதம் எழுந்தருளியிருக்கக்கூடிய இருக்கையாக விளங்குவன் என்பதாம்.

இம்மந்திரத்திற்கு வேறுரைகூறிப் பாடந்திரித்து இடர்ப்படுவாரும் உளர். (248)

**தானே எழுந்தஇத் தத்துவ நாயகி**
**வானோர் எழுந்து மதியை விளக்கினள்**
**தேனேர் எழுகின்ற தீபத் தொளியுடன்**
**மானே நடமுடை மன்றறி யீரே. 1132**

இம் - எனின், சத்தி நடனம் புரியுமிடத்தை அறிக எனல் நுதலிற்று.

இ - ள் : கருணை மிகுதியால் தானே தோன்றிய தத்துவ நாயகியாகிய சத்தி துவாதசாந்தப் பெரு வெளியை நேரேநோக்கி மேலெழுந்து மதிமண்டல மாகிய சகஸ்ராரத்தை விளக்கினள். தேன் ஒழுங்கு போல நேராக எழுந்து பிரகாசிக்கின்ற தீப ஒளியுடன் பராசத்தி நடனம் செய்யும் மன்றமாகிய புருவநடுவை அறியுங்கள் என்றவாறு.

வான் - ஆகாயம். ஆகாய மண்டலமாகிய பிரம ரந்திரமும் அதற்குமேல் பன்னிரண்டு அங்குலமும். குண்டலினி மூலத்தினின்று நடுநாடியின் வழியாக மேலெழுந்து மதிமண்டலம் வரையில் செல்லுதலைக் கூறியதாம்.

தேன் நேர் - தேனொழுக்குக்கு ஒப்பாக அசையாமல். தீப ஒளி அங்ஙனம் எழுவது என்க. புருவமத்தியாகிய கனகமன்றுள் தீப ஒளிபோலச் சிவம் நடனம் புரிகிறது. அங்கே சத்தியும் நடனமிடுவள். அதனை விளக்குவது ‘ மான் நடமுடை மன்று ’ என்பது. (249)

**அறிவான மாயையும் ஐம்புலக் கூட்டத்**
**தறிவான மங்கை அருளது சேரிற்**
**பிறியா அறிவறி வாருள்ளம் பேணும்**
**நெறியாய சித்த நினைந்திருந் தாளே.** **1133**

இம் - எனின், பொறி புலன்களைப் பொருந்தாது திருவருளைச்சாரின் நிலைத்திருக்கலாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: ஞானேந்திரியங்களும், ஐம்புலன்களும் ஆகிய இவற்றை அறியும் சத்தி, திருவருளைச் சாரின், நீங்காத அறிவினை அறிவார் உள்ளத்துப் பேணப்படும் நெறியினையுடைய சித்தத்தில் அருள் வழங்க நினைத்து இருந்தாள் என்றவாறு.

அறிவான மாயை - ஞானேந்திரியங்கள் ஐந்தும் இந்திரியங்கள் மாயேயங்கள் ஆதலின் காரியத்தைக் காரணமாகக் கூறியது.

ஐம்புலக் கூட்டம் - ஐந்து புலன்களின் தொகுதி. புலன் விஷயங்கள்; அவை சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்பன.

அறிவான மங்கை-அவற்றைச் சார்ந்து அவற்றையே அறியும் அறிவான ஆன்மா. ஆன்மாவை மங்கை என்றது ஓர் வழக்கு. 'கையில் காசு இருந்தால்தானே அம்மா மஞ்சள் குளிக்கலாம்' என்ற பழமொழியைப் போல உருவகித்தது. அருளது சேரின் - மங்கையாய ஆன்மா பாசத்தொடர்பை விட்டுத் திருவருளைச் சாரின்.

பிறியா அறிவு அறிவார் - தைலதாரைபோல இடையருப் பேரன்போடும் அறிவோடும் தியானிப்பார். உள்ளம் பேணும் நெறியாய சித்தம் - அவர்கள் உள்ளத்தால் போற்றப்படும் முறைப்பட்ட மனத்தை. நினைத்திருந்தாள்-சத்தி அருள் வழங்கத் திருவுள்ளங் கொண்டிருந்தாள்.

அறிவான மங்கை என்பதற்கு அம்மை எனப் பொருள்கொண்டு, கூட்டமும் (விட்டு) ஆன்மா அருளது சேரின் சித்தம் நினைந்திருந்தாள் எனச் சில சொல் வருவித்து முடித்தலும் ஒன்று. (250)

**இரவும் பகலும் இலாத விடத்தே**
**குரவஞ்செய் கின்ற குழவியை நாடி**
**அரவஞ்செய் யாமல் அருளுடன் தூங்கப்**
**பருவஞ்செய் யாததோர் பாலனு மாமே** 1134

இ - எனின், பாலைத்தியானபயன் அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : இரவு பகலற்ற விடத்தே, விளையாடுகின்ற குழந்தையாகிய பாலையைத் தியானித்துக்கொண்டு, ஓசையின்றியே திருவருளுடன் கலந்துகிடக்க. பருவ வேறுபாட்டை எய்தாத பாலனுகலாம் என்றவாறு.

இரவு பகல் - அஞ்ஞானமும் ஞானமுமாகிய மாறி மாறி அறியுந்தன்மை, அது அற்றவிடத்தே - எஞ்ஞான்றும் ஞானவொளியோடு விளங்குகின்ற அவதரத்திலே.

குரவம் - விளையாட்டு, குரவம்பாவையை வைத்து விளையாடுதல் மகளிர்களுக்கு உரியதொன்றாதலின் குரவம்

என்பது ஈண்டுப் பொதுவகையான விளையாட்டிற்கே பெயராக ஆயிற்று. குழவி என்றது பாலாம்பிகையை. நாடி - தியானித்து.

அரவம் செய்யாமல் - மந்திரோச்சாரணம், கிரியைகள் முதலிய இடம்பமில்லாமல். அருளுடன் தூங்க - அருளிற்றோய்ந்து செயலற்று இருக்க.

பருவம் செய்யாதது ஓர் பாலன் - பாலன், காளை, தருணன், விருத்தன் என்ற பருவ வேறுபாடுகளைச் செய்யாத நித்திய பாலனுதலாம். (251)

**பாலனு மாகும் பராசத்தி தன்னொடு**
**மேலனு காவிந்து நாதங்கள் விட்டிட**
**மூலம தாமெனும் முத்திக்கு நேர்படச்**
**சாலவு மாய்நின்ற தற்பரத் தாளே.** 1135

இம் - எனின், அதற்கு மேலுள்ள நிலையுமாம் என உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : பாலனுமாவன் ; பராசத்தியோடு அணுகுதற்குரியவாகாத விந்து நாதங்களையும் கடந்து முத்தியின் பத்திற்கு மிக எதிராகநின்ற தற்பரசிவத்தாளாகிய சத்தி, மூலமாகிய சிவமாம் என்று அருள்வழங்கும் என்றவாறு.

மாயையாகிற விந்து நாதங்களைக் கடக்க, சத்தி சிவமாம் பேற்றையும் அருளுவள் என்பதாம்.

விட்டிட, நேர்பட, தற்பரத்தாள் மூலமதாம் எனும் என முடிக்க.

விந்து நாதங்கள் சத்தியாகிய திருவருளைச் சார்தற்குத் தடையாவன ஆதலின் 'பராசத்தி தன்னொடு மேல் அணுகா விந்து நாதங்கள் விட்டிட' என்றது. மாயையை விட்ட ஆன்மாக்களைத் தான் வியாபித்து நிற்றலின் 'சாலவுமாய் நின்ற தற்பரத்தாள்' என்று அருளியது. சாலவுமாய் நிற்றல் - மாயையின் வன்மையினைக் கடந்ததால் சத்தியாய தன் வியாபகத்துள் ஆன்மா அடங்கித் தன்னறிவற்று நிற்றல். (252)

**நின்ற பராசத்தி நீள்பரன் தன்னொடு**
**நின்றறி ஞானமும் இச்சையு மாய்நிற்கும்**
**நின்றறி யுங்கிரி யாசத்தி நண்ணவே**
**மன்றன வற்றுள் மருவிடுந் தானே.** 1136

இம் - எனின், சத்தி அறிவிச்சை செயல்களாகக் காரியப்படுமாற்றை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இவ்வண்ணம் கருணையுள்ளத்துடன் நின்ற பராசத்தி சிவத்தோடுநின்று நல்லவற்றை அறியும் ஞானமும் இச்சையுமாக விளங்கும். மேலும் நல்லன வாகச் செயலாற்றும் கிரியாசத்தி தோன்ற, சபேசனாகிய பரசிவம் அச்சத்திகளை மருவிநின்று ஐந்தொழிலாற்றுவன் என்றவாறு.

நின்ற பராசத்தி - ஆன்மாக்களை உய்விக்க எண்ணிச் சிருட்டியுன்முகமாகக் கருணையுள்ளத்துடன் நின்ற பராசத்தி. நீள்பரன் - அநாதி நித்தயனாகிய பரன். அநாதியாயசிவம். பராசத்தி பரன்தன்னொடு ஞானமும் இச்சையுமாய் நிற்கும் என்க. அவற்றுள் - சத்தியுள். மன்றன் - மன்றையுடையவன். (253)

**மருவொத்த மங்கையுந் தானும் உடனே**
**உருவொத்து நின்றமை ஒன்றும் உணரார்**
**கருவொத்து நின்று கலக்கின்ற போது**
**திருவொத்த சிந்தைவைத் தெந்தைநின் றானே.**
**1137**

இப் - எனின், சிவமும் சத்தியும் பூவும் மணமும் போலப் பொருந்துவரென்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: மணம்போன்ற சத்தியும் தானும். உடனாகச் சொரூப வேறுபாடின்றி நின்றமையை ஒன்றும் உணரார் உலகவர்; அவ்விருவரும் கரு ஒத்துநின்று, கலக்கின்ற காலத்து, எந்தையாகிய சிவம் சத்தியோடு ஒத்து விளங்கும் சிந்தையுடன் விளங்கினன் என்றவாறு.

சிவமும் சத்தியுமாக கரு ஒத்துநிற்கக் கலக்கின்ற காலத்து சிவம் சத்தியோடு ஒத்துவிளக்குகின்ற சிந்தையுடன் விளங்குகின்றார் என்பதாம்.

மரு - மணம். மரு ஒத்த மங்கை - பூவண்ணம் பூவின் மணம்போலச் சிவமும் சத்தியும் கலந்திருப்பர். உரு - வடிவம். கரு - உலகைச் சிருட்டிக்க கருக்கொண்ட காலத்து. (254)

**சிந்தையி னுள்ளே திரியுஞ் சிவசத்தி**
**விந்துவும் நாதமு மாயே விரிந்தனள்**
**சந்திர பூமி சடாதரி சாத்தவி**
**அந்தமொ டாதிய தாம்வண்ணத் தாளே. 1138**

இம் - எனின், சத்தி விரியும் முறை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : சிவபெருமானுடைய சிந்தையி லுலாவும் சிவசத்தி விந்து நாதங்களாக விரிந்தனள். அச்சத்தி சந்திரமண்டலத்து விளங்கும் சடாதரி, சாத்தவி, அந்தமும் ஆதியுமாகிய நிறமுடையவள் என்றவாறு.

சிந்தையினுள்ளே திரியும் சிவசத்தி - சிவத்தின் சிந்தையில் உலாவும் சிவசத்தி அல்லது அன்பர்கள் சிந்தையில் உலாவும் சிவசத்தி எனலுமாம். சிவம் சத்தி இரண்டினின்றும் விந்துநாதங்கள் தோன்றின ஆதலின் சத்தி விரிந்தனள் என்றருளியது.

சந்திரபூமி - சந்திரமண்டலம். சடாதரன் சிவன் ஆதலின் சடாதரி - சிவசத்தி. சாத்தவி - சத்துவகுண முடையாள். வண்ணம் - நிறம். எழுத்துமாம். அந்தமொடு ஆதியதாம் வண்ணம் - க்ஷகாராந்தம் அகாராதியாய எழுத்து வடிவானவள். (255)

**ஆறி யிருந்த அமுத பயோதரி**
**மாறி யிருந்த வழியறி வாரில்லை**
**தேறி யிருந்துநல் தீபத் தொளியுடன்**
**ஊறி யிருந்தனள் உள்ளுடை யார்க்கே.** 1139

இம் - எனின், பராசத்தி அமுதமாய் அண்ணிக்கு முறை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : சிவத்துள் அடங்கியிருந்த அமுதமயமான பயோதரங்களை உடையாளாகிய சத்தி மாறியிருந்த வழியை அறிவார் யாருமில்லையாம். உள்ளே தியானிப்பார்க்கு அதனைத் தெளிந்து இருந்து புருவமத்தியில் காணப்பெறும் தீபத்து ஒளியுடன் கலந்திருந்தாள் என்றவாறு.

ஆறியிருந்த - தனது வேகசத்தியை வெளிப்படுத் தாது சிவத்துள் அடங்கியிருந்த. ' அமுத பயோதரி ' என்பதில் அமுதம் பயத்தை விசேடித்தது. பயம் - பால். பயோதரி - தனத்தி. ஆறியிருத்தலாவது ' சிவ ' எனச் சிவம் முற்பட்டுச் சத்தி பின்னதாதல். இது " உடையாள் உன்றன் நடுவிருக்கும் " என்றநிலை.

மாறியிருத்தலாவது ' வசி ' எனத் திருவருள் முற் பட்டு, சிவம் பின்னதாதல். இது " உடையாள் நடுவுள் நீ இருத்தி " என்றநிலை. இம்மந்திரம் தியானிப்பார்க்கு வசியத்தை விளைவிப்பது ஆதலின் இதனை அறிந்து உய்வாரில்லை என்றதாம்.

தேறியிருந்து - சத்தியின் வழி நின்று சிவத்தைத் தெளிந்து இருந்து. நல்தீபத்தொளியுடன் ஊறியிருந் தனள் - புருவமத்தியில் தெரியும் தீப ஒளியுடன் அங்கி யிற் சூடுபோலக் கலந்திருந்தாள் என்பதாம். ஊறுதல் என்ற வினையால் ஒளியுடன் அமுதமாய் ஊறினள் என்றுமாம்.

உள்ளுடையார்க்கு - மனத்தில் இறைவியை வசி மந்திரத்தை உடையார்க்கு ; என்றது தியானிப்பார்க்கு என்பதாம். **(256)**

**உடையவன் அங்கி உருத்திர சோதி**
**விடையவன் ஏறி விளங்கி யிருக்கும்**
**கடையவர் போயிடுங் கண்டவர் நெஞ்சத்**
**தடையது வாகிய சாதகர் தாமே. 1140**

இம் - எனின், இறைவன் விளங்கும் முறைமை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : எம்மை ஆளாகவும் சடப்பொருள்களை உடைமையாகவும் உடையவனும், அக்கினி மண்டலாதிபதியான சோதி வடிவ உருத்திரமூர்த்தியாக விளங்குபவனும், அற வடிவான இடபத்தை வாகனமாக உடையவனுமாகிய இறைவன் மதிமண்டலத்து விளங்கித் தோன்றுவன். இதனை மனத்துட் கண்டவர் ஹடயோக சாதகராவர். காணாதவர்களாகிய கடையவர்களே போங்கள் என்றவாறு.

உடைமை, இருவகை. அடிமையாக உடைமையும் உடைமையாக உடைமையும் என. உடைமை - சடப்பொருள்கள். அடிமை - சித்துப்பொருள்கள். இரண்டினையும் அநாதி நித்யமே உடையன் என்பதாம்.

அங்கி - அக்கினி. உருத்திரசோதி - ருத்திரமூர்த்தியாகிய சோதி. அக்னிமண்டலாபதிபதயே ருத்ராயநம: என்ற மந்திரமும் நோக்குக.

விடையவன் - இடபவூர்தியுடையவன். அவன் விடையேறி விளங்கியிருக்கும் எனலுமாம். ஏறி - மதிமண்டலத்து ஏறி, கண்டவர் - மதிமண்டலத்துப் பேரொளிப் பிழம்பாக இறையைத் தரிசித்தவர். அவர்களே ஹடயோக சாதகராம் என்பது. காணாத கடையவர்களே போங்கள் என்பதாம். "மீண்டு மனத்தவர் போமின்கள் மெய்யடியார்கள் விரைந்து வம்மின்" என்பது ஈண்டு கருதுதற்குரியது.

அடையதுவாகிய சாதகர் - ஹடயோக சாதகர் ; முறைமையாகிய சாதகர் எனலுமாம். (257)

**தாமேல் உறைவிடம் ஆறித ழானது**
**பார்மேல் இதழ்பதி னெட்டிரு நூறுள**
**பூமேல் உறைகின்ற புண்ணியம் வந்தனள்**
**பார்மேல் உறைகின்ற பைந்தொடி யாளே. 1141**

இ-ள் - எனின், பூரணசக்தி இருநூற்றிருபத்து நான்கு புவனங்களிலும் உறைவள் என்ற உண்மை வியாபகம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: சத்தியாகிய தாய் எல்லாவற்றினும் மேலாக உறைகின்றவிடம் ஆறிதழாக அமைந்தது. பூமியின்மேல் ஏனைய இருநூற்றுப் பதினெட்டு இதழ்கள் உள்ளன. உலகை வியாபித்து நிற்பாளாகிய பராசத்தி இவ்வண்ணம் எமது புண்ணியத்தால் பூமியில் தங்கும் கண் கண்ட தெய்வமாக எழுந்தருளி வந்தனள் என்றவாறு.

இறைவன் இருநூற்றிருபத்து நான்கு புவனங்களுக்குத் தலைவனுதலின் இறைவியும் எங்கும் கலந்து விளங்குகின்றுள் என்பது கருத்து. அப்புவனங்களை இதழ்களாக உருவகித்தார். பூ என்பது பூமியையும் பூவையும் உணர்த்துவதோர் பொதுச்சொல் ஆதலின் என்க. (258)

**பைந்தொடி யாளும் பரம னிருந்திடத்**
**திண்கொடி யாகத் திகழ்தரு சோதியாம்**
**விண்கொடி யாகி விளங்கி வருநலாற்**
**பெண்கொடி யாக நடந்த துலகே. 1142**

இ-ள் - எனின், சிவமும் சத்தியும் விளங்குமிடமும் விரியுமுறையும் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : பசிய கொடி போன்ற பூரணசத்தியும், பரசிவம் இருந்த நிலையில் இருக்க, திண்ணிய கொடி போல் விளங்கும் ஒளிபோல்வள். மின்கொடி போல விளங்கித் தோன்றுதலால் உலகு சத்திமயமாக நடந்தது என்றவாறு.

சிவம் இருந்தபடி அசைவற்று இருக்கச் சத்தி ஒளிக்கொடி போல அபின்னமாய் அசைய மின்கொடி போல பிரிந்து தோன்றுதலால் உலகு சத்திமயமாகத் தோற்றம் திதி நாசங்களை அடைந்து இயங்குவதாயிற்று என்பது கருத்து. அதாவது சிவம் அசைவற்று இருக்கச் சத்தி ஒளியாயும் மின்னலாயும் ஒன்றியும் பிரிந்துந் தோன்ற உலகம் முத்தொழிற்பட்டு இயங்குவதாயிற்று என்பதாம்.

திண்கொடியாகத் திகழ்தரு சோதி என்றது சத்தி சிவத்துடன் அறியப்பெற்று வேருகாது ஒன்றியிருக்கின்ற நிலை. விண்கொடியாகி என்றது மின்கொடி போலப் பிரிந்து விளங்கும் நிலை. சத்தி சிருட்டி யுன்முகமானபோது சிவத்தினின்று பிரிந்து தோன்றுதலைக் குறித்தது.

உலகு பெண்கொடியாக நடந்தது என்றது உலகமே பெண்வடிவாக (சத்தி மயமாக) நடைபெற்றது என்பது (259)

**நடந்தது வம்மலர் நாலுடன் அஞ்சாய்**
**இருந்தனர் கன்னிகள் எட்டுடன் ஒன்ருய்ப்**
**படர்ந்தது தன்வழிப் பங்கயத் துள்ளே**
**தொடர்ந்தது உள்வழி சோதி யடுத்தே.** 1143

இம் - எனின், உலகம் நவசத்திகளால் காக்கப் படுவது எனல் நுதலிற்று.

இ - ள்: பரசிவத்துள் விளங்கும் சோதியாகிய சத்தியை அடுத்துத் தொடர்ந்து வருவதும், தனது ஏவலின்வழியே விரிவதுமாகிய ஒன்பதிதழ்த் தாமரையுள், வாமாதி கன்னியர் எண்மரும் தன்னைச்சூழ எழுந்தருளி யிருந்தனர் என்றவாறு.

அம்மலர்: மலர் - பூ, பூ - பூமி, நாலுடன் ஐந்தாய் நடந்தது - நவதளமாக நடைபெற்றது. அதில் வாமை, சேட்டை, ரௌத்திரி, காளி, கலவிகரிணி, பலவிகரிணி, பலப்பிரமதனி, சர்வபூததமனி, மனோன்மணி ஆகியோர் இருப்பர். தன்வழிப் பங்கயத்துள்ளே என்றது மனோன் மணியாகிய தான் எழுந்தருளியுள்ள தாமரையுள் என மனோன்மணியையும் சேர்த்து ஒன்பதென்றவாறு. (260)

**அடுக்குந் தாமரை ஆதி இருப்பிடம்**
**எடுக்குந் தாமரை இலக்கத் துள்ளது**
**மடுக்குந் தாமரை மத்தகத் தேசெல**
**முடுக்குந் தாமரை முச்சது ரத்தே** *1144*

இம் - எனின், ஆருதார சக்கரத்துள்ள தாமரை களை உணர்த்தி, அவை ஒன்றோடொன்று காரியப்படு மாறும் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: இறுதியாகக் குண்டலினிவந்து பொருந் தும் தாமரை மலராகிய ஆஞ்ஞாசக்கரம் முதல்வன் விளங்குமிடமாம். ஆன்மாவைக் கீழ்ப்போகாதவாறு எடுக்கும் தாமரையாகிய விசுத்திசக்கரம் இலட்சியத்

தானமாகிய புருவமத்தியில் இருக்கின்றது; உடலையும் சிரத்தையும் பொருத்தும் தாமரையாகிய அநாகதத்தின் வழியாக பிரமரந்திரத்தை அடைய முடுக்குந் தாமரை யாகிய மூலாதாரம் முக்கோண வடிவாக இருக்கும் என்றவாறு.

முச்சதுரத்து - முச்சதுரத்தினை உடையது எனக் குறிப்புமுற்று. அடுக்குந்தாமரை - எழுந்த குண்டலினி இறுதியாக வந்தடுக்கும் ஆயிரம் இதழ்த் தாமரையாகிய ஆஞ்ஞாசக்கரம். ஆதி - முதல்வன்.

எடுக்கும் தாமரை; சுழிமுனைவரை வந்த பிராணனைக் கீழ்ப் போகாதவாறு உயர்த்துவதாகிய தாமரை; என்றது விசுத்தி சக்கரத்தை; இலக்கம் - லட்சியத் தானம்; என்றது யோகியர் இலக்காகவைத்துத் தியானிக்கும் புருவமத்தியை உணர்த்தியது.

மடுக்கும் தாமரை: மடுத்தல் - பொருத்துதல் மடுக்கும் தாமரை - உடலையும் சிரத்தையும் பொருத்துவதாகிய அநாகதத்தாமரை.

முடுக்கும் தாமரை - மேலுந்தி முடுக்குவதாகிய மூலாதாரம், மூலம்; மூலை, முடுக்கு என்பன ஒரு பொருட் கிளவிகள். முச்சதுரத்து - முக்கோண வடிவினது. நாற்சதுரம் என நாற்கோணம் வழங்குதலின் முச்சதுரம் முக்கோணம் ஆயிற்று.

இலக்கத்துள்ளதென்பதை இல்லகத்து உள்ளது எனப் பாடங்கொண்டு உடலகமாகிய நெஞ்சம் எனப் பொருள்கொள்வாரும் உளர். (261)

**முச்சது ரத்தே எழுந்த முளைச்சுடர்**
**எச்சது ரத்தும் இடம்பெற ஓடிடக்**
**கைச்சது ரத்துக் கடந்துள் ஒளிபெற**
**எச்சது ரத்தும் இருந்தனள் தானே.** 1145

இ-ம் - எனின், சத்தி மூலத்தினின்றும் ஆதாரங்களிற் பொருந்து முறையை அறிவித்தல் நுதலிற்று.

இ-ள்: முச்சதுரமாகிய மூலாதாரத்து எழுந்து முளைபோன்ற சுடராகிய சத்தி, ஆதாரச் சக்கரங்கள் எல்லாவற்றினும் இடம்பெற வியாபிக்க, கைச்சதுரமான பிரமரந்திரத்தைக் கடந்து, பரஞான சித்தி விளையும் வண்ணம் எல்லாச் சக்கரங்களிலும் வியாபித்திருந்தாள் என்றவாறு.

முச்சதுரம் மூலாதாரத்தை உணர்த்தும், முளைச் சுடர் - முளைபோலத் தோன்றியதாகிய ஒளி; என்றது சத்தியை.

எச்சதுரத்தும் - எல்லாச் சக்கரங்களிலும் மூலாதார முதலாகிய ஆருதாரங்கள், பத்தாதாரங்கள் எங்கும். பத்தாதாரங்களின் விளக்கத்தைச் சித்தாந்த சாராவளியிற் காண்க.

கைச்சதுரம் - பிரமரந்திரமாகிய சிரம்; அவரவர் உள்ளங்கைச் சதுரத்தின் அளவே இருத்தலின் அதனைக் கைச்சதுரம் எனக் குறித்தபடி. கடந்து - துவாதசாந்த நிலையை எய்தி, உள் ஒளி கடந்து பெற என இயைத்துப் பொருள் கொள்க. சத்தி பிண்டத்து எங்கும் வியாபித்தனள் என்பதாம். (262)

**இருந்தனள் தன்முகம் ஆறொடு நாலாய்ப்**
**பரந்தன வாயு திசை தோறுங்**
**குவிந்தன முத்தின் முகவொளி நோக்கின்**
**நடந்தது தேறல் அதோமுகம் அம்பே** 1146

இம் - எனின், பார்முதல் அனைத்தும் அவள் அருட் பொலிவேயாதல் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: பூரண சத்தி, பத்துத் திசைகளையும் பத்து முகங்களாகக்கொண்டு எழுந்தருளியிருந்தனள். அதனால் அவளிடமிருந்து திசைகள்தோறும் பிராணவாயு பரவிற்று ஆராயுமிடத்து, அவள் திருமுகத்தினின்று உதிக்கும் ஒளி யானது முத்தைப்போலக் குவிந்தன. அவள் தேறலாகிய நீர் அதோமுகமாக ஓடிப் பரந்தது என்றவாறு.

எட்டுத் திசைகளும், விண்ணும், கீழுமாகத் திசைகள் பத்தாயின. அவை அம்மையின் திருமுகங்கள். அவற்றின் எழும் வாயு பிராணன். அவற்றின் எழும் முத்தொளிபோன்ற ஒளி ஒளியாகிய தேயு. அவள் வாயினின்று எழும் தேன் போல்வதாய வாலெயிறூறிய நீர் கங்கை என்பதாம்.

தீ மேனோக்கி எழுதலும் நீர் கீழ் நோக்கிப்பாய்தலும் இயல்பாதலின் அதோமுகம் அம்பே என்றது. (263)
அம்பு - நீர்

**அம்பன்ன கண்ணி அரிவை மனோன்மணி**
**கொம்பன்ன நுண்ணிடைக் கோதை குலாவிய**
**செம்பொன்செய் யாக்கை செறிகமழ் நாடொறும்**
**நம்பனை நோக்கி நவிலுகின் றாளே.** 1147

இம் - எனின், அம்மை சிவத்தோடிருந்து உயிர்கட்கு உபதேசம் வழங்குதலை உணர்த்திற்று.

இ - ள் : அம்பை ஒத்த கண்களையுடையவளும், அரிவையும், மனோன்மணியும், கோதையும், செம்பொன் திருமேனியிற் செறிந்து, மணம்போல்வாளும் ஆகிய அம்மை உயிர்கள் விளக்கத்தை அடைய இறைவனை நோக்கி உரைத்துக் கொண்டேயிருக்கின்றாள் என்றவாறு.

பிற மாதர்க்காயின் 'அம்பன்ன கண்ணி' என்றது நோக்கினார்க்குக் காமநோக்காக விளைக்கும் எனல் பொருந்தும். அம்மைக்கு ஆன்மாக்களின் மும்மல காரியமாகிய முப்புரங்களை எரிக்கும் அம்புபோலுங்கண் என்க.

அரிவை - மாதர்பருவங்களில் ஒன்று. ஈண்டு அவரவர் பரிபாக நிலைக்கு ஏற்ப அருள்புரியும் ஆற்றலைக் குறிப்பிக்க ஒன்றினைக்கூறி ஏனையவற்றையும் உய்த்துணர வைத்தது.

மனோன்மணி - அருவுருவச்சத்தி. ஞானிகளுக்கு அறிவுருவாய அருட்சத்தியாவள் என்பதை விளக்கிற்று.

கொம்பன்ன நுண்ணிடைக் கோதை ; கோதை - மாலை; இது ஆகுபெயராக மணமும், மென்மையும், மேற்கொள்ளப் பெறுதலும், நித்திய மங்கலமுடைய அம்மையை யுணர்த்தியது. நுண்ணிய கொம்பு அசைந்தாடுவதால் தன்னிருப்பை யுணர்த்துதல்போல, இடை ஒசிவால் தானுண்மை யுணர்த்துதலின் கொம்பன்ன நுண்ணிடை என்றருளியது.

செம்பொன்செய் யாக்கை செறி கமழ் - செம் பொன்போன்ற திருமேனியிற் செறிந்த மணம்போல்வாள். கமழ் என்பது முதனிலைத்தொழிலாகுபெயராக மணத்தை உணர்த்தியது. இறைவன் பூவும் அம்மை மணமும் போல்வராதலின் இங்ஙனம் அருளியவாறும்.

குலாவிய - விளங்க. இது செய்யிய என்னும் வினை யெச்சம். குலாவிய நவிலுகின்ருள் எனக்கூட்டுக. அருளாகிய சத்தி தன் வாயிலாகக் காரியப்படலாமே அன்றி நேரே காரியப்படாமையின் 'நம்பனை நோக்கி நவிலுகின்ருள்' என்றது. (264)

**நவிலும் பெருந்தெய்வம் நான்மறைச் சத்தி**
**துகிலுழை யாடை நிலம்பொதி பாதம்**
**அகிலமும் அண்ட முழுதுஞ்செம் மாந்து**
**புகலுமுச் சோதி புனையநிற் பாளே.** 1148

இம் - எனின், இறைவியின் விசுவரூபத்தை விளக் குதல் நுதலிற்று.

இ - ள் : பெரிய தெய்வத்தன்மை பொருந்திய நான்மறைகளை நவிலும் பராசத்தியானவள், பட்டும் தோலும் ஆடையாக உடுத்து நிலத்தைக் கடந்து நின்ற பாதங்களையும், அகிலாண்டங்களையும் கடந்து இறுமாந்து நிமிர்ந்து, முச்சுடரையும் அணிகளாகப் புனைந்து நிற்பள் என்றவாறு.

வேதங்களை அருளிய சத்தி என்றது, சூக்குமையாதி வாக்குகளாக நின்று வேதமந்திரங்களை அருளிச் செய்த தத்துவத்தை உணர்த்தியது.

துகில் - ஆடை பட்டாடை உழை ஆடை - மான் தோலாடை, உழை - மான். " பட்டுடுத்துத் தோல் பூண்டு " என்னும் திருமுறைப்பகுதி சிந்திக்க. உமையொரு பாதியனுகச் சிவம் விளங்குநிலையை உன்னிப் பொருள்காண்க.

நிலம் பொதி பாதம் - பூமகள் மறைத்திருக்கின்ற பாதம். " பாதாளமேழினும் கீழ்ப் பாதமலர் " என்பதை விளக்கியது.

அகிலமும் அகண்டமுழுதும் செம்மாந்து - உலகம் அண்டங்கள் எல்லாவற்றையும்விடச் செம்மாந்து. செம்மாத்தல் - நிமிர்தல். " அண்டங்கள் ஏழினுக்கும் அப்பால் திருமுடி " என்ற மணிவாசகத்தை நினைக்க.

புகலுமுச்சோதி - சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற சோம சூரியாக்கினியாகிய மூன்று சுடர்கள். புனைய நிற்பாள் என்றது அவை ஆபரணங்களாய் அணி செய்ய விராட்சொரூபமாக நிற்பாள் என்றவாறு, ( 265 )

**புனையவல் லாள்புவ னத்திறை எங்கள்**
**வனையவல் லாள்அண்ட கோடிகள் உள்ளே**
**புனையவல் லாள்மண்ட லத்தொளி தன்னைப்**
**புனையவல் லாளையும் போற்றி யென்பேனே. 149**

இம் - எனின், அம்மையினது அளவிலாற்றலை அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : எமது புவனுதிபதியாகிய இறைவனைத் தன் மேனியின் ஒருபாகத்துப் புனையவல்லாள்; எல்லா அண்டங்களையும் சங்கற்பமாத்திரையானே சிருட்டிக்க

வல்லவள்; எல்லாமண்டலங்களிலுமுள்ள ஒளிகளைத் தனக்கு விரலாழியாக, அரைக்கச்சின் பட்டிகைமணி யாக, முடிமணியாகப் புனையவல்லவள்; அனைத்தையும் அழகுசெய்பவள்; அத்தகைய பேராற்றல் வாய்ந்த பிராட்டியைத் தொழுவேன் என்றவாறு.

உள் - மனம், உள்ளே புனைதலாவது தன் சங்கற்ப மாத்திரையானே விதவிதமாகப் படைத்தல். இறுதிக் கண்ணதாகிய புனையவல்லாள் என்பதற்குச் செயப்படு பொருள் வருவித்துரைக்கப்பட்டது. ( 266 )

**போற்றியென் பேன்புவ னாபதி அம்மையென்**
**ஆற்றலுள் நிற்கும் அருந்தவப் பெண்பிள்ளை**
**சீற்றங் கடிந்த திருநுதற் சேயிழை**
**கூற்றந் துரக்கின்ற கோள்பைந் தொடியே. 1150**

இதுவுமது,

இ - ள் : அடியேனது அன்பிற்கிலக்கான புவனா பதி யம்மையைப்போற்றி என்பேன்; அருந்தவப்பெண் பிள்ளை. அடியேனது வன்மைக்குள் வன்மையாய் விளங்கும்; அடியெனுடைய பொல்லாக்குணமாகிய கோபத்தை நீக்கிய அழகிய நெற்றியுடைய சேயிழை யாகிய பைந்தொடி எமனைவெருட்டுகின்ற வலிமையள் ஆவள் என்றவாறு.

ஆற்றலுள் நிற்கும் - வன்மைக்கு வன்மையாய் விளங்கும். சேயிழைபைந்தொடிகோள் எனக் கூட்டுக, கோள் - வலிமை, ஆவள் என முற்று வருவித்து முடிக்க. ( 267

**தொடியார் தடக்கைச் சுகோதய சுந்தரி**
**வடிவார் திரிபுரை யாமங்கை கங்கைச்**
**செடியார் வினைகெடச் சேர்வரை என்றென்**
**றடியார் வினைகெடுத் தாதியு மாமே 1151**

இம் - எனின், பூரணசத்தியே ஆதி பராசத்தி யெனல் நுதலிற்று.

இ - ள்: தொடி விளங்குகின்ற திருக்கரங்களை யுடை சுகோதய சுந்தரி; அழகு அமைந்த திரிபுரை, அன்பரது தொகுதியான வினைகள் கெட, அழகிய கைகளினின்று கங்கை சேர்கின்ற மலையாவாள்; இத் தகைய சத்தி என்றென்றும் அடியார்களின் வினைகளைப் போக்கி ஆதிபரம்பொருளும் ஆவள் என்றவாறு.

சுகோதயம் - இன்பந்தோன்றுமிடம். வினைகெட அங்கை கங்கை சேர்வரை என்க. வரை - மலை; ஈண்டு இமயம்; இமயம்போல்வாள். தந்தை மலையாதலின் இமயமேயாவாள் எனலுமாம்.

என்றென்றும் என்ற உம்மை தொக்கது. செடி - தொகுதி (புதர்). 'செடியாய வினைதீர்ப்பான்' என்னும் தமிழ் மறையும் உன்னுக. (268)

**மெல்லிசைப் பாவை வியோமத்தின் மென்கொடி**
**பல்லிசைப் பாவை பயன்தரு பைங்கொடி**
**புல்லிசைப் பாவையைப் போகத் துரந்திட்டு**
**வல்லிசைப் பாவை மனம்புகுந் தாளே. 1152**

இம் - எனின், அம்மை தனக்கு அருளியவாற்றை வியத்தல் நுதலிற்று.

இ - ள் : மெல்லிய, இசையையுடைய பாவை பராகாயத்தில் படர்ந்துள்ள மெல்லிய கொடிபோல்வாள்; பலவகையான புகழோடுகூடிய பாவைபோல்வாள் ; அன்போடு வழிபடும் அனைத்துயிர்களுக்கும் அவரவர் பரிபாகநிலைக்கு ஏற்பப் பயன்தருகிற பைங்கொடி ; புல்லிய புகழோடு கூடிய பாவையாகிய உடலை அழியக் கெடுத்து, வலிய இசையோடு கூடிய பாவையாகிய பராசத்தி அடியேன்மனத்தில் புகுந்து ஆண்டு கொண்டாள் என்றவாறு.

வியோமம் - ஆகாயம் ; ஈண்டுச் சிதாகாயத்தை உணர்த்திற்று. இசைப்பாவை என்பன வல்லினம் மிக்கிருத்தலின் வினைத்தொகையாகாமை உணர்க.

மெல்லிசை - மெல்லிய இனிமையான கீதம். பல் இசை - பலவாகிய புகழ் ; என்றது கொடை, காவல், அருளல் முதலிய பலவாற்றான் வரும் புகழ். பயன் தருதல் அவரவர்கள் நிலைக்கேற்ப என அறிக. புல் இசைப்பாவை - புல்லிய கீர்த்தியையே பாவை என உருவகித்தவாறும். அபகீர்த்தியை அகற்றி நற்புகழ் தருவள் என்பதாம். வல் இசைப்பாவை - யாரானும் எவற்றானும் அகற்றமுடியாத இசையையுடைய பராசத்தி. மனம் புகுந்தாள் - மனத்திடை மன்னிய மன்னுக வலிய வந்து புகுந்து ஆட்கொண்டாள். (269)

**தாவித் தவப்பொருள் தானவன் எம்மிறை**
**பாவித் துலகம் படைக்கின்ற காலத்து**
**மேவிப் பராசத்தி மேலொடு கீழ்தொடர்ந்**
**தாவிக்கு மப்பொருள் தானது தானே.** 1153

இ - எனின், சிருட்டிக்காலத்து அதுவேதானுய் நிற்பள் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இறைவியால் தாபிக்கப்பட்ட அப்பொருளாகிய எமது பரசிவம், திருவுள்ளத்துச் சங்கற்பித்து உலகத்தைப் படைக்கின்றகாலத்து பராசத்தி விரும்பி மேலும் கீழுமாக எங்கும் வியாபித்து, அப்பொருளாகவே தானிருந்து உயிராக்குவள் என்றவாறு

தாவித்த-தாபித்த. கம்பையாற்றங்கரையிலும் காவிரியாற்றங்கரையிலும் சத்தியால் தாபிக்கப்பெற்ற இறைவன் என்க.

பாவித்துப் படைத்தலாவது கையாற் படைத்து விகாரி ஆகாமல், சங்கற்பமாத்திரையே படைத்து நிர்விகாரியாய் நிற்றல்.

மேலொடு கீழ் தொடர்ந்து - எங்கும் வியாபித்து. அதுதானே-அச்சிவபரம்பொருள் தானேயாய் நின்று. அப்பொருள்-படைக்கப்படு பொருளாகிய சிதசித்துப் பிரபஞ்சம். ஆவிக்கும் - உயிர்ப்பிக்கும்: என்றது உயிர்க்குயிராய் கலிந்து நிற்கும் என்பதாம். (270)

**அதுவிது என்பார் அவனை அறியார்**
**கதிவர நின்றதோர் காரணங் காணார்**
**மதுவிரி பூங்குழல் மாமங்கை நங்கை**
**திதமது உன்ஞர்கள் தேர்ந்தறி யாரே.** 1154

இம் - எனின், உண்மை ஞானிகளாவர் யாவர் என வரையறுத்தல் நுதலிற்று.

இ - ள்: இவர் தேவர் அவர் தேவர் என்பார்கள் பர சிவத்தை உணராதார்: முத்திப்பேறு கிடைத்தற்கு உரிய மூலகாரணமாய பொருள் இதுவெனக் காணார்: தேன் கொட்டுகின்ற பூவை அணிந்த குழலையுடைய பராசத்தி யின் நிலையையுணரார்: இவர்கள் தெளிந்தவர்களா? என்றவாறு.

ஞானம் பெற்றுத் தெளிந்தவர், திருவடிப்பேற்றிற்கு உரிய காரணம் சத்திநிபாதம் என்பதை உணர்வர். அங்ஙனம் உணராரும் சிவபரத்தைச் சிந்தியாதவரும் எங்ஙனம் சிவஞானத் தெளிவுடையோராவர்? ஆகார் என்பதாம். திதம் - நிலைபேறு. (271)

## 8. ஆதார ஆதேயம்

இது, இடமும் அதன்கண் உள்ள பொருளும் எனப் பொருள்படும். ஆதாரம் - ஸ்தானம். ஆதேயம் - அதி தேவதை. ஆதார ஆதேய சம்பத்தத்தாலேயே யோகம் உண்டாகிறது. யோகம் பலவகையாதலின் ஆதாரங்களும் பலவேறு வகைப்படுகின்றன. இந்த ஆதார ஆதேயமே யோகிகளால் யோகம் என்றும், ஞானம் என்றும் சொல்லப் படுகிறது. ஆசனமுதலான சாதனங்கள் யோகிகளுக்கு மிக இன்றியமையாதன. அவற்றுள் நாடிசக்கரம் ஆதார மாயும் அதில் பராசத்தி குண்டலினி முதலான பேதங் களோடு ஆதேயமாயும் விளங்குவதைக் கூறுவதாலும், சிவசத்திகள் தம்முள் ஒன்றற்கொன்று ஆதார ஆதேய மாக விளங்குவதனைக் கூறுவதாலும் இவ்வதிகாரம் இப் பெயர்த்தாயிற்று. இதன் விரிவை சுப்பிர பேதாகமம் ஆதார ஆதேய விதிப்படலம் 101 சுலோகங்களான் அறிக.

**நாலிதழ் ஆறில் அவிர்ந்தது தொண்ணூறு**
**தானித மானவை நாற்பத்து நாலுள**
**பாலித மானவள் பங்கய மூலமாய்த்**
**தானித மாகித் தரித்திருந் தாளே.** **1155**

இம் - எனின், ஆதாரங்களும் ஆதேயமும் இவை எனல் நுதலிற்று.

இ - ள்: நான்கு இதழ்களையுடைய மூலாதாரம், ஆறும் ஆதாரமாகிய ஆஞ்ஞை இவ்விரண்டெல்லைக்கு உள்ளாக தொண்ணூறு தத்துவங்கள் விரிந்தன. அவற்றுள் முற்கூறப்பெற்ற இரண்டு ஆதாரங்களும் நீங்க இடைப்பட்ட ஆதாரங்களில் இதழாக உள்ளவை முறையே ஆறு. பத்து, பன்னிரண்டு, பதினாறு ஆகிய நாற்பத்து நான்கு இதழ்களைப் பெற்ற தாமரை மலர்கள் உள்ளன. இவ்வண்ணம் ஈரிதழ்கள் உள்ள பங்கஜத்திற்கு மூலமாக, குண்டலினி சத்தியும் ஓரிதழ்போல ஆகி மேலுள்ள ஆதாரங்களை தாங்கி இருந்தாள் என்றவாறு.

நால் இதழ்-மூலாதார சக்கரம். செந்நிறமான நான்கிதழ்த் தாமரையாய், பொன்னிறமான வ ஶ ஷ ஸ என்னும் நான்கு எழுத்துக்களையுடையதாய் இருத்தலின் நாலிதழ் என மூலாதாரம் குறிக்கப் பெற்றது.

ஆறில் என்றது ஆறுவதாகிய ஆஞ்ஞையில் என்னும் பொருளது, எண்ணுகு பெயராக ஆறுவது ஆதாரமாகிய ஆஞ்ஞையை உணர்த்தியது. இங்ஙனமன்றி ஆறு இதழை உடைய சுவாதிட்டானம் எனக்கொண்டு இடர்ப்படுவாரும் உளர்.

தொண்ணூறு அவிர்ந்தது - தொண்ணூறு தத்துவங்களும் விளங்கின. அவிர்தல்-விளங்குதல். தோன்றுதலன்று. தொண்ணூறு, எண்ணுகு பெயராக ஆருதாரம் ஒழிந்த த்த்துவ தாத்துவிகங்கள் ஆகியவற்றை உணர்த்தியது. இவை தொண்ணூறு மனித உருவில் கால் முதல் உச்சி வரை விளங்குவன ஆதலின் நாலிதழ் ஆறில் தொண்ணூறு அவிர்ந்தது என்ருர்.

தானிதழானவை நாற்பத்து நாலுள-முன்னர்க்கூறிய மூலாதாரமும் ஆஞ்ஞையும் நீங்க, இடைக்கண் உள்ள இதழ்கள் நாற்பத்து நான்கு உள்ளன. அவை வருமாறு; சுவாதிட்டானம் ஆறிதழ்த்தாமரை, மணிபூரகம் பத்திதழ்த் தாமரை, அநாகதம் பன்னிரண்டிதழ்த் தாமரை, விசுத்தி பதிஞறிதழ்த் தாமரை ஆக நாற்பத்து நாலிதழ்கள் உள்ளனவாதல் அறிக.

பாலிதழ் - நாலு பகுப்புக்களோடு கூடிய 'தாமரையாகிய மூலாதாரத்திற்கும் மூலமாய் ஆதாரங்களைத்தாங்கி நின்ருள் சத்தி என்க. எனவே ஆதாரங்கள் ஆதேயங்களாக அருளன்னை அவைத்திற்கும் ஆதாரமாகி விளங்குகின்ருள் என்றவாறு. (272)

**தரித்திருந் தாளவள் தன்னெளி நோக்கி**
**விரித்திருந் தாளவள் வேதப் பொருளைக்**
**குறித்திருந் தாளவள் கூறிய ஐந்து**
**மறித்திருந் தாளவள் மாதுநல் லாளே;** *1156*

இம் - எனின், பராசத்தி வேதமுதலாயும் பஞ்சகிருத்திய காரணியாயும் இருத்தலை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இவ்வண்ணம் ஆதாரங்களைத் தாங்கிநிற்கும் சிவசத்தியாகிய அவள் வேதமாகிய பொருள்களனைத்தை யும் விரித்திருந்தாள்; பகுக்கப்பட்ட ஐந்து தொழில்களையு மியற்றத் திருவுளத் தடைத்திருந்தாள்; தோன்றிய முறையே அவற்றைத் தன்னுள் ஒடுக்கியும் இருந்தாள் மாதுநல்லாள் என்றவாறு.

தரித்தல் - ஆதாரமாகத் தாங்குதல். தன் ஒளி நோக்கி - தன்னிற் பிரியாது நிற்கின்ற ஒளியாகிய சிவத் தைக்கண்டு. ஒளியுலகான வேதப்பொருளும், பொருளு லகான பிரபஞ்சமும் உண்டாதல் முதலிய ஐந்து தொழிலை யும் அடைதல் வேண்டும் என்று அங்கியிற் சூடு போன்ற அருளன்னை தனது ஒளியான சிவத்தை வேருக நின்று நோக்கினுள். வேதம் விரிந்தன; ஐந்தொழில்கள் இயன் றன; இயன்ற முறையே ஒடுங்கின; இவை அனைத்திற்கும் ஆதாரமானவள் மாதுநல்லாள் என்பது கருத்து. (273)

**மாதுநல் லாளும் மணாளன் இருந்திடப்**
**பாதிநல் லாளும் பகவனு மானது**
**சோதிநல் லாளைத் துணைப்பெய்ய வல்லிரேல்**
**வேதனை தீர்தரும் வெள்ளடை யாமே.** *1157*

இம் - எனின், அம்மையப்பரான திருமேனியில் அம் மையைத் தியானிக்கின் பிறவி அறும் என்பது உணர்த்து தல் நுதலிற்று.

இ - ள் : இறைவியும் இறைவனும் இருக்க, அவர்கள் திருமேனி ஒரு பாதி உமையும் ஒரு பாதி சிவமுமானது. ஆதலால் ஒளி வடிவினளாகிய அன்னை அவள் துணை

யாகிய சிவத்தோடு சேர்த்துத் தியானிக்கவல்லீராயின் துன்பம் நீங்தும். நீங்கள் மறுவற்ற-முளையாத வெள்ளடை ஆகலாம் என்றவாறு.

சத்தி ஐந்தொழில் ஆற்றத் திருவுள்ளங் கொண்ட போது சத்தியும் சிவமுமாக வேருக நிற்பர் ஆதலால் சத்தியும் சிவமுமாகத் தியானிக்கின் பிறவியறும் என்றவாறும்.

வேதனை - துன்பம் (பிறவித் துன்பம்). வேதன் ஐ - பிரமனுடைய தலைமை எனலுமாம். அஃதாவது பிறப்பிக்கும்போதுதான் பிரமன் தலைமை எய்துகிறன். அந்தப் பிறவி அறவே சிருட்டிகர்த்தா என்ற அவன் தலைமையும் அகலுவதாயிற்று என்பதாம்.

வெள்ளடை - மறுவற்ற பொருள். முளையாத வித்து இரண்டற்கும் பெயர். ஆணவமலம் வலிகுன்றியமையின் வெள்ளடையென்றது. 'குருகாவூர் வெள்ளடை நீயன்றே' என இறைவற்கும் இப்பெயருண்மையின் சிவமாவாய் என்றதாம். (274)

**வெள்ளடை யாலிரு மாமிகு மாமலர்க்**
**கள்ளடை யாரக் கமழ்குழ லார்மனம்**
**அள்ளடை யானும் வகைத்திற மாய்நின்ற**
**பெண்ணொரு பாகம் பிறவிபெண் ணாமே** 1158

இம் - எனின், சிவத்திற்தும் ஆதாரம் சத்தியெனல் நுதலிற்று.

இ - ள் : வெள்ளடையான் - பரமாகாயமாக நின்றவனும், இரு மா - மிகப்பெரிய, மலர்கள் அடையுார

கமழ் குழலார் - பூந்தேனடைதலால் மணம் வீசுகின்ற குழலையுடைய பெண்கள். அள் மனம் அடையான் - செறிந்த மனத்துப் பொருந்தாதவனும் ஆகிய சிவன், ஆம் வகைத்திறமாய்நின்ற பெண் ஒருபாகம் - உலகம் உண்டாகும் வகைநிலை பேறுடையளாகப் பிரிந்துநின்ற உமாதேவியை ஒருபாகம் உடையான் ஆவன். பிறவி பெண்ணும் - தானும் சத்தியினின்று நாதமாய்த் தோன்றுதலின் பிறவி பெண்ணிடத்தாவன் என்றவாறு.

'அநக நாடகற்கும் எம் அன்னை மனைவி தாய் மகள்' என்றமைபோலச் சிவத்திற்குச் சத்தி தாயானமை காண்க.

வெள்ளடையான் - வெள்ளடையாகிய சிவம். வெள்ளடை - வெட்டவெளி; ஈண்டுப் பராகாயம்.

இரு மா மலர்கள் அடை ஆரக் கமழ் குழலார் - மிகப் பெரிய பூவினின்று உண்டான கள்ளடைதலால் மிகக் கமழ்கிற கூந்தலையடைய பெண்கள். இரு மா மலர்-ஒரு பொருட் பன்மொழி. அடை - அடைதலால். அடை - முதனிலைத் தொழிற்பெயர், ஏதுப் பொருண்மைக்குரிய உருபேற்கும் தொகையாயிற்று.

மனம் அள் என்பதனை அள்மனம் என மாறுக. அள் மனம் - செறிந்த மனம்.

அரவகலல்குலார்பால் ஆசை நீத்தவர் மனத்தே உறைபவனுயினும், சிருட்டியைத் திருவுளத்தெண்ணி உமையொருபாகனுகவும் சத்தியிடமிருந்து தோன்றுபவனுக்வும் விளங்குவார் என்பது கருத்து.

பிறவிபெண் ஆம் - பிறவிபெண்ணிடத்து ஆவன் என்க. ஆம் என்னும் செய்யுமென்முற்று அடையான் என்னும் ஆண்பாற்பெயர்க்கு முடிபாயிற்று. (275)

**பெண்ணொரு பெண்ணைப் புணர்ந்திடும் பேதமை**
**பெண்ணிடை ஆணும் பிறந்து கிடந்தது**
**பெண்ணிடை ஆணென் பிறப்பறிந் தீர்க்கின்ற**
**பெண்ணுடை ஆணிடைப் பேச்சற்ற வாறே** 1159

இ-ம் - எனின், நகைச்சுவை தோன்றப் பிறிது மொழிதலாக, சிவம் சத்தியுள்ளும், சத்தி சிவத்துள்ளும் ஒருபாதியாயும் விளங்குதலை விளக்குதல் நுதலிற்று.

இ-ள்: பெண் மற்றொரு பெண்ணைப் புணரும் பேதமையால், பெண்ணிடத்து ஆண் பிறந்து கிடந்த தாம். பெண்ணிடத்துத் தான் ஆணென்கிற பிறவியின் தத்துவத்தை உணர்ந்து, அனைத்தையும் தம்மிடைச் சேர்த்துக்கொள்ளுகின்ற பெண்ணை ஒருபாகமுடைய ஆணிடத்துப் பேசுதலற்ற மௌன நிலை விளைவதாம் என்றவாறு.

பெண் - திருவருட்சத்தி. ஒருபெண் - சிவம். சிவம் திருவருளையே திருமேனியாகக் கொண்டிருத்தலின் பெண்ணாயிற்று. ஆகவே அருளும், அருளுபவனும் கூடுகின்ற கூட்டம் பெண் ஒரு பெண்ணைப் புணர்ந்த தாம். இங்ஙனம் புணர்வது பேதைமையாலாம். பேதமை- அறியாமை. பேதித்து நிற்றல் என இரு பொருள்படும் அறியாமை என நகைப்பொருள் தோன்றினும் உண்மைப் பொருள் உலகத்தைப் பேதித்து நிற்பதற்காகவே என்ப

தாம். சிவம்சத்தியைத் தன்னிற் பிரித்து மீட்டும் கூடுதல் ஐந்தொழிலாற்றற்காக என்பதை உணர்த்தியவாறும்.

பெண்ணிடை - உடையாளாகிய சத்தியினிடத்து. ஆணும் - சிவமும், பிறந்து கிடந்தது - தோன்றி விளங்குவதாயிற்று. " உடையாள் நடுவுள் நீயிருத்தி " யென்றமை காண்க.

சிவமும் சத்தியும் உடையாளுன்றன் நடுவிலும், நீ உடையாள் நடுவுளும் இருக்கின்ற நிலையைப் பெண் ணிடை ஆண் என் பிறப்பறிந்து ஈர்க்கின்ற பெண்ணுடை ஆணிடைப் பேச்சற்றது என்பதால் விளக்கியவாறும். தோற்றக்காலத்துப் பெண்ணிடை ஆணும், ஒடுக்கக் காலத்துப் பெண்ணுடை ஆணுமாக அறிந்து பேச்சற்ற வாறும் என முடிபுகொண்டு பொருள்விரிக்க. ஈர்க்கின்ற - ஏற்கின்ற, பேச்சு அறுதலாவது மனத்தால் தியானிக்கப் படுதலன்றி வாயால் சொல்ல முடியாமை.

இங்ஙனமன்றிப் பெண்ணுடை' ஆணென் பிறப்பு அறிந்தீர்க்கின்ற பெண்ணுடை ஆணிடைப் பேச்சற்ற வாறே எனப் பாடங்கொண்டு 'பிறப்பறிந்து - உயிராகிய எனது பிறப்பை அகற்றும் செவ்வி அறிந்து. ஈர்க்கின்ற - திருவடிக்கு ஆளாக்குகிற. பெண்ணுடை ஆண் (அறிந்தால்) - அருளே திருமேனியாகவுடைய சிவத்தின் உண்மையை உணர்ந்தால், பெண்ணுடை ஆணிடைப் பேச்சு அற்றவாறு - பெண் ஆண் என்ற பாற்பாகுபாடு பற்றிய பேச்சே அற்றுவிடும் என உரைப்பாரும் உளர். அதிகாரம் ஆதார ஆதேயமாக, சிவசத்திகள் ஆதார ஆதேயமாக இருத்தலை முறையே உணர்த்துகின்றார்.

ஆதலின் பரிற்பாகுபாடு பற்றிய பேச்சே ஒழியும் என்ற முடிவுபொருந்துமா என்பதை ஆய்ந்துகொள்க. (276)

**பேச்சற்ற நற்பொருள் காணும் பெருந்தகை**
**மாச்சற்ற சோதி மனோன்மணி மங்கையாங்**
**காச்சற்ற சோதி கடவு ளுடன்புணர்ந்**
**தாச்சென்ற னுட்புகுந் தாலிக்குந் தானே** 1160

இம் - எனின், சிவம் சத்தியுடன் கலந்து என்னுட் புகுந்து மகிழ்வுதரும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: உரைகடந்த நற்பொருளாகக் காணப் படும் குற்றம் அற்ற ஒளிவடிவாகிய பரம்பொருள், மனோன்மணி மங்கையாகிய சினமற்ற ஒளிக்கடவுளுடன் கூடி, அடியேன் மனத்துள் தானே புகுந்து, களிப்பூட்டுவ தாயிற்று என்றவாறு.

நற்பொருள் பெருந்தகை சோதி மங்கையாம் சோதிக்கடவுளுடன் புணர்ந்து என்றன் உள் தானே புகுந்து ஆலிக்கும் ஆச்சு எனக் கூட்டுக.

உரை மனம் கடந்துநின்ற ஒருவனை அனுபவிக்கின்ற பொழுது இங்ஙனமிருந்தது என்று சொல்லி அனுபவிக்க முடியாது. ஆதலான் பேச்சற்ற நற்பொருள் என்றார். அகவின்பமாகிய சிற்றின்பமும் அங்ஙனம் நுகரப்படுவ தாகலின் நற்பொருள் என்றது. காணும் பெருந்தகை - அங்ஙனம் கடந்து நின்றதாயினும், ஆன்மாக்கள் மீது வைத்த கருணையால் அவர்களைக் காணச் செய்து தானும் காணும் எளிவந்த கருணையாகிய பெருந்தகுதியாளன்.

மாசற்றசோதி - பௌதிகச் சோதிகளுக்கெல்லாம் களங்கமும், தேய்தலும், வளர்தலும், மறைதலும் முதலான மாசுகளுள. இறைவற்கு அவையொன்றும் இல்லையென்றவாறு. இவை மூன்றும் இறையை உணர்த்துவன.

மனோன்மணி மங்கையாம் காசு அற்ற சோதிக் கடவுள் - மனோன்மணி சதாசிவசத்தியாய் அறிவே உருவாயவள். காச்சு - சினம். காசு - குற்றம் எனலுமாம். காசு காச்சு ஆயிற்று. சத்தியும் ஒளிவடிவினளாதலின் சோதிக்கடவுள் என்றது.

நீரும்நீரும் கலந்தாற்போல்வது மாசற்ற சோதியும் காச்சற்றசோதியும் கலந்த கலப் பென்க. தானே புகுந்து என்றது கருணைமிகுதியால். ஆச்சு என்பது ஆயிற்று என்பதன் மரூஉ. ஆலிக்கும் - களிப்பிக்கும். (277)

**ஆலிக்குங் கன்னி அரிவை மனோன்மணி**
**பாலித் துலகிற் பரந்துபெண் ணாகும்**
**வேலைத் தலைவியை வேத முதல்வியைப்**
**பாலித் தொருவன் உகந்துநின் றானே.** 1161

இ - ளின், அனைத்திற்கும் ஆதாரமாகநின்ற அம்மையைப் பாலித்து நிற்பன் சிவன் என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இவ்வண்ணம் களிக்கும் கன்னியாகிய அரிய மனோன்மணி அனைத்துயிரையும் பாதுகாத்து, உலகில் எங்கும் பரந்து பெண் வடிவாவள். இங்ஙனமாய பஞ்சகிருத்ய பரமகாரணியை, வேதமுதல்வியைப் போற்றி ஒப்பற்ற சிவம் மகிழ்ந்துநின்றது என்றவாறு.

உலகில் பெண்ணாகப்பரந்தவள் பராசத்தி; அவளே ஐந்தொழிற்கும் அடிப்படையானவள்; அவளே வேத முதல்வி; அவளைக் கலந்து போற்றி நிற்பது பரசிவம் என்பது கருத்து.

கன்னி-அழியாத்தன்மை உடையவள். கடவுளுடன் புணர்ந்தால் இப்பரையினும் கன்னியாவாள் என்பதாம்.

அருமை - ஞானிகட்கன்றிப் பிறரால் எய்துதற்கு அரியவள் என அருமைதோன்ற நின்றது. பாலித்து - பாதுகாத்து, வேலை - பஞ்சகிருத்தியங்கள். உகந்து - மகிழ்ந்து. (278)

**உகந்துநின் றன்நம்பி ஒண்ணுதற் கண்ணோ**
**டுகந்துநின் றன்நம் முழைபுக நோக்கி**
**உகந்துநின் றன்இவ் உலகங்கள் எல்லாம்**
**உகந்துநின் றன்அவ டன்றோ டொகுத்தே.** 1162

இ-ம் - எனின், இறைவன் இறைவியோடு கலந்து உலகம் போற்ற உகந்திருந்த நிலையை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: குணநிறை பொருளாகிய சிவம் ஒளி பொருந்திய நெற்றியோடு கூடிய கண்ணொத்த சத்தியோடு மகிழ்ந்துநின்றான்; ஆன்மாக்களாகிய நம்மிடம் எழுந்தருளத் திருவுளங்கொண்டு அங்ஙனம் மகிழ்ந்திருந்தான்; உலகங்கள் அனைத்தையும் காக்க மகிழ்ந்தனன்; பராசத்தியின் தோள்களைத் தழுவிப் போகியாயிருந்தனன் என்றவாறு.

ஒண்ணுதல் ஆகுபெயர்; சத்தி, கண் - உவம ஆகுபெயர்; சத்தி, ஒண்ணுதற்கண்ணோடு என்பதனை ஒரு தொடர் ஆக்கி நெற்றிக்கண்ணொடு என்பாரும் உளர். ஈண்டு நயம்புணராமை நாடுக. நம் உழை - நம்மிடம்; என்றது பரிபாகமுற்ற ஆன்மாக்களாகிய நம்மிடம். புக - உள்ளத்துறைய.

அவள்தன் தோள் தொகுத்து - சத்தியின் தோள் களைத் தழுவி. 'போகியாயிருந்து உயிர்க்குப் போகத்தைப் புரிந்தான்' என்பதாம். **(279)**

**குத்து முலைச்சி குழைந்த மருங்கினள்**
**துத்தி விரிந்த சுணங்கினள் தூமொழி**
**புத்தகச் சீறடிப் பாவை யுணர்வினைத்**
**தொத்த கருத்துச் சொல்லகி லேனே.** **1163**

இம் - எனின், பராசத்தி உயிர்களுடன் கலந்திருக் கின்ற நிலையை வியத்தல் நுதலிற்று.

இ - ள்: அண்ணாந்து ஏந்திய முலையினையும், குழைந்த இடையினையும், புள்ளிகளோடு பரவிய சுணங் கினையும், தூய்மை மொழியினையும், மயிலிறகு போல மென்மையான சிறிய அடிகளையும் உடைய பாவைபோல் வாள் ஆகிய பராசக்தி எமக்கு உணர்வைத் தொகுத்த திருவுள்ளக் குறிப்பைச் சொல்லமாட்டேனாயினேன் என்ற வாறு.

பராசத்தி எமக்கருளிய ஞானக்குறிப்பை நவிலும் ஆற்றலிலேன் என்பது கருத்து, மருங்கு - இடை. துத்தி - பொறி. சுணங்கு - தேமல். புத்தகம் - மயில் இறகு. தொத்த - தொகுத்த என்பதன் திரிபு. **(280)**

**சொல்லவொண் ணாத அழற்பொதி மண்டலஞ்**
**சொல்லவொண் ணாது திகைத்தங் கிருப்பர்கள்**
**வெல்லவொண் ணாத வினைத்தனி நாயகி**
**மல்லவொண் ணாத மனோன்மணி தானே** 1164

இம் - எனின், அம்மையினாற்றல் அளவற்றதென வியத்தல் நுதலிற்று.

இ - ள் : உரையளவு கடந்துநின்ற சோதிமண்டலமாய் ஞானிகளும் சொல்லமாட்டாது மயங்கி நிற்பார்கள். யாராலும் வெல்லமுடியாத பஞ்சகிருத்ய பரம காரணியாவாள். அவள்தான் இறுகப்பற்ற முடியாத மனோன்மணிச் சத்தியாவாள் என்றவாறு.

மல்ல - கட்ட. மல் - குறுக்காகக் கட்டும்கட்டு. வெற்றிகொள்ள என்பாரும் உளர். முன்னடியில் வெல்லவொண்ணாத என்றிருத்தல் நோக்குக. (281)

**தானே இருநிலந் தாங்கிவிண் ணாய்நிற்குந்**
**தானே சுடுமங்கி ஞாயிறுந் திங்களுந்**
**தானே மழைபொழி தையலு மாய்நிற்குந்**
**தானே வடவரைத் தண்கடற் கண்ணே.** 1165

இம் - எனின், அவளே பார்முதல் அனைத்தும் ஆவள் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : அம்மையே பெரியநிலமுதற் பூதங்களைத் தாங்கி ஆகாயமாய் நிற்பவள்; சோமசூரியாக்கினியாக இருப்பவள்; மழையைப் பொழிவிக்கின்ற பெண்ணாக இருப்பவள்; கடற்கண்ணே குறுக்காக விளங்கும் இமயமாக இலங்குபவள் என்றவாறு.

ஆகாயமே அனைத்துப் பூதங்கட்கும் ஆதாரமாதலின் விண்ணாய் நிற்கும் என்றது. ஒளிப்பொருள்களும், மழையும், மலையும் தானே ஆவள் என்பதாம். டவரை-மேரு; இமயமுமாம். (282)

**கண்ணுடை யாளைக் கலந்தங் கிருந்தவர்**
**மண்ணுடை யாரை மனித்தரிற் கூட்டொணுப்**
**பண்ணுடை யார்கள் பதைப்பற் றிருந்தவர்**
**விண்ணுடை யார்களை மேலுறக் கண்டே. 1166**

இம் - எனின், பராசத்தியை உணர்ந்தவர்கள் மக்களல்லர்; தேவர்களிலும் மிக மேலானவர் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: கருணைக் கண்ணுடைய பராசத்தியைக் கூடி மதிமண்டலத்துக் களித்த ஞானிகள் மண்ணுலகத்தவராயினும் அவர்களை மனிதர்கள் என்றெண்ணற்க, அவர்கள் தேவர்களினும் மேலாகக் கண்டு தெய்வகுணம் படைத்தவர்களாக நடுக்கற்றிருந்தவர் ஆவர் என்றவாறு.

கண் - கருணைக்கண், கலந்திருந்தவர் - தியான வன்மையால் அசையாது மதிமண்டலத்தில் செஞ்சோதியாய்க் கண்டிருந்த ஞானிகள். இருந்தவராகிய மண்ணுடையாரை எனக் கூட்டுக.

பண்-பண்பாடு, தெய்வகுணம், பதைப்பு - நடுக்கம்; என்றது மனத்தின் சலனத்தை, விண்ணுடையார்களை மேலுறக் கண்டு - விண்ணுடையார்களினும் மேலுறக் கண்டு என வேற்றுமை மயக்கம், (283)

**கண்டெண் டிசையுங் கலந்து வருங்கன்னி**
**பண்டெண் டிசையும் பராசத்தி யாய்நிற்கும்**
**விண்டெண் டிசையும் விரைமலர் கைக்கொண்டு**
**தொண்டெண் டிசையுந் தொழநின்ற கன்னியே 1167**

இ-ம் - எனின், பராசத்தி சர்வவியாபி என்பதை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: அன்னை, இவ்வன்னையைக் காணப்பெற்று எண்டிசையும் வியாபித்து நிற்கும் கன்னியாவாள்; அநாதி காலந்தொட்டே, எங்கும் பரவிநிற்கும் பராசத்தியாவாள்; அவளை எட்டுத் திசைக்கண்ணுள்ளாரும் மணமலர்களைத் தாங்கி தோத்தரித்து நின்று தொழுவர் என்றவாறு-

கண்டு - இவ்வண்ணமாக அனைத்துயிர்களையும் கரு விருந்து படைத்து எனலுமாம். கலந்து வருதல் - உயிர்களோடு ஒன்றாயிருத்தல். பண்டு - அநாதியாய். எல்லாவுயிரினும் வேறாக நின்று அவர்கள் செய்யும் வினைகளைக் கண்டு தலைவியாயிருப்பள் என்பதனைப் பராசத்தியாய் நிற்கும் என்பதனு லருளியவாறு. எண்டிசை என்பது இடவாகு பெயராகத் திசைக்கண்ணுள்ளாரை உணர்த்திற்று. எண்டிசையும் விரைமலர்க் கைகொண்டு விண்டு. தொண்டு எண்டிசையுந் தொழநின்ற கன்னி எனக்கூட்டுக. தொண்டு - தொண்டர்களாக. (284)

**கன்னி ஒளியென நின்றவிச் சந்திரன்**
**மன்னி யிருக்கின்ற மாளிகை செந்நிறஞ்**
**சென்னி யிருப்பிடஞ் சேர்பதி னுறுடன்**
**பன்னி யிருப்பப் பராசத்தி யாமே. 1168**

இ - ளலின், அம்மையின் இருப்பிடமும், அவள் பூரணை கலைகளுடன் விளங்குமிடமும் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: ஒளியாக நின்ற இச்சந்திரனுகிய கன்னி நிலைபெற்று எழுந்தருளியிருக்கின்ற மாளிகை செந்நிற முடையதாம்; அவள் இருப்பிடம் சென்னியாகும். அவள் அங்குப் பதினாறு கலைகளுடனும் போற்ற இருக்கப் பராசத்தியானவள் என்றவாறு.

கன்னியாகிய சத்தி வசிக்கும் சந்திரமண்டலத்தை யனாவியுள்ள மாளிகை செந்நிறம் பொருந்தியதாகும். அதன் தலையாகிய இருப்பிடத்திலே பதினாறு கலைகளுடன் பலரும் பன்ன இருக்க பராசத்தியவாள் எனக் கூட்டிப் பொருள் காண்க. கன்னி மாளிகை, ஒளியென நின்ற இச்சந்திரன் மன்னி இருக்கின்ற மாளிகை எனத் தனித் தனிக் கூட்டுக.

கன்னி மாளிகை - நித்திய கன்னியாகிய பராசத்தி யெழுந்தருளியிருக்கும் மாளிகை; என்றது சரீரத்துள்ள மனமாகிய மாளிகையை, ஒளியென நின்ற இச்சந்திரன் மன்னி இருக்கின்ற மாளிகை-ஒளிப்பொருளான சந்திரன் பொருந்திய மாளிகை. பிரமரந்திரத்தை ஒட்டி மதி மண்டலம் இருத்தலானும் அதில் கன்னியாகிய சத்தி உறைதலானும் இங்ஙனம் அருளியது. உடலும் இதயமு மாகிய இவற்றின் நிறம் செம்மையாயிருத்தலிற் செந்நிறம் என்றது.

அந்த மாளிகையிலும் சென்னி இருப்பிடமாம், சென்னி - தலை. மாளிகையிலுறைகிற கன்னி பதினாறு

கலைகளுடன் இருப்ப அவள் பராசத்தியாவள் என்பதாம். தலை - சகஸ்திராரம் என்னும் மதிமண்டலம். பன்னி என்ற செய்தெனெச்சத்தைச் செயவெனெச்சமாக்குக. பன்ன - தோத்திரிக்க. (285)

**பராசத்தி யென்றென்றும் பல்வகை யாலுந்**
**தராசத்தி யான தலைப்பிர மாணி**
**இராசத்தி யாமள வாகமத் தாளாகுங்**
**குராசத்தி கோலம் பலவுணர்ந் தேனே.** 1169

இம் - எனின், சத்தியின் பல கோலங்களை உணர்ந்தமை அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : பராசத்தி, பலவகையிலும் எல்லாவற்றையும் என்றென்றும் தாங்கிநிற்கும் சத்தியாய் முதன்மையான அளவையாயிருப்பவள்; இரவின்கண் விளங்கும் சத்தியாய் உருத்திரயாமளம் என்னும் ஆகமத்தால் உணர்த்தப்பெறுபவள்; குருவாகிய சத்தி அவளது வடிவங்கள் பலவற்றையும் அறிந்தேன் என்றவாறு,

என்றென்றும் பல்வகையாலும் தராசத்தி - அவ்வப் பொருள்களின் நிலைக்கேற்ப அவைகளை என்றைக்கும் தாங்கிநிற்கும் சத்தி. தராசத்தி - தரிக்கும் சத்தி. தரித்தல் - ஆதாரமாதல். பிரமாணம் - அளவை. தலைப்பிரமாணம் - தலையாய அளவை. தலைப்பிரமாணி - தலையாய அளவை வடிவினள். தலையாய அளவை - பிரத்யட்சம் (காட்சியளவை). உலகங்களனைத்தையுந் தாங்கிக் காட்சிக்குப் புலனாக விளங்குபவள் அன்னை. அஃதாவது பிரத்யட்ச சத்தி என்பதாம்.

இரா சத்தி - காளியான நிலையில் நிசாசரியாதலை ஞாபகப்படுத்தியது. ' யாமம் வயிரவர் ஏத்தும்பொழுது ' என்பதும் காண்க. யாமள ஆகமம் - சத்தி வழிபாட்டு முறைகளைக் கூறும் ஆகமம். ஆகமத்தாள் - ஆகமத்தின் கண் விளங்குபவள்.

குராசத்தி. குரு + ஆ + சத்தி - குருவாகிய சத்தி. சத்தியே ஆசாரியனாக எழுந்தருளி அருள் வழங்குதலிற் கூறியது. கோலம் - வடிவம். (286)

**உணர்ந்துல கேழையும் யோகினி சத்தி**
**உணர்ந்துயி ராநிற்கு முன்னதன் ஈசன்**
**புணர்ந்தொரு காலத்துப் போகம தாகி**
**இணைந்து பரமென் றிசைந்தது தானே. 1170**

இம் - எனின், உலகங்களைத் தோற்றுவிக்குமுன் பரத்தோடு இணைந்து பராசத்தியாயிருத்தலை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : திருவுளத்துச் சங்கற்பித்து உலகேழையும் கிரியா சத்தியாக நின்று அறிந்து படைப்பதற்கு முன், அதனை இறைவன் கூடிய ஒருகாலத்துப் போக மூர்த்தியாய் இணைந்து நிற்க, இச்சத்தியே பராசத்தி என்று இசைந்திருந்தது என்றவாறு.

உணர்ந்து - திருவுள்ளத்துச் சங்கற்பித்து. யோகினி சத்தி - கிரியாசத்தி. உலகேழையும் உணர்ந்து உயிரா நிற்குமுன் - உலகனைத்தையும் அவரவர் பரிபாக நிலைக்கேற்பப் படைப்பதற்குமுன். உயிர்த்தல் - தோற்றுவித்தல்.

அதன் ஈசன் - அச் சத்தியின் தலைவனாகிய சிவம் புணர்ந்த ஒருகாலத்துப் போகமது ஆகி - கூடிய ஒரு காலத்துப் போகசத்தியாகி. புணர்ந்த என்பதன் பெய ரெச்சத்தின் அகரம் விகாரத்தால் தொக்கது. இணைந்து - சிவத்தோடு இரண்டறக் கலந்து. பரம் என்றிசைந்தது என்க. (287)

**இதுவப் பெருந்தகை எம்பெரு மானும்**
**பொதுவக் கலவியும் போகமு மாகி**
**மதுவக் குழலி மனோன்மணி மங்கை**
**அதுவக் கலவியுள் ஆயுழி யோகமே** 1171

இம் - எனின், சிவமும் சத்தியும் நிற்குநிலை யுணர்த் துதல் நுதலிற்று.

இ - ள்: ஆராயுமிடத்து சத்தியாகிய இதுவும், பெருந்தகையாகிய எம்பெருமானும் பொதுவாகியும், அக்கலவியும் அதன் பயனுமாகியும், தேன் நிறைந்த கூந்தலை உடையவளாகிய மனோன்மணி மங்கை அச் சிவத்துடன் கலவியுள் ஆயவிடத்து யோகமாக விளங் குவர் என்றவாறு.

இது என்பது சத்தியையும், அது என்பது சிவத்தை யும் உணர்த்தின. இகரம் சத்தியட்சரம், அகரம் சிவாட் சரம் ஆதலால் இது அது என்பன முறையே சத்தி சிவங் களை உணர்த்துவனவாயின. மதுவக்குழலி என்பதில் அகரம் ஆறனுருபு ; சாரியையுமாம். ஆயுழி - ஆராயு மிடத்து.

சத்தியும் சிவமும் கலவியும் அதன் பயனும் போன்று விளங்குவர் என்பதாம். (288)

**யோகநற் சத்தி ஒளிபீடந் தானாகும்**
**யோகநற் சத்தி ஒளிமுகந் தெற்காகும்**
**யோகநற் சத்தி உதர நடுவாகும்**
**யோகநற் சத்திதாள் உத்தரந் தேரே. 1172**

இம் - எனின், யோகசத்தியின் விராட்சொரூப நிலை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : யோகசத்திக்கு ஒளியே பீடமாம்; தெற்கு நோக்கிய முகமாம். வயிறு உலகநடுவாம். திருவடி வடக்கு ஆகும். தேர்வாயாக என்றவாறு.

யோகசத்தியின் காற்பக்கம் வடக்கு ; தலைப்பக்கம் தெற்கு; நடு வயிறு; ஒளி பீடம் என்பது கருத்து. ஒளி - சூரியன் சந்திரன் அக்கினி என்பன. விசுவமே சத்தியின் வடிவென்று தேர்வாயாக என்பாதும். (289)

**தேர்ந்தெழு மேலாஞ் சிவனங்கி யோடுற**
**வார்ந்தெழு மாயையு மந்தம தாய்நிற்கும்**
**ஓர்ந்தெழு விந்துவும் நாதமும் ஓங்கிடக்**
**கூர்ந்தெழு கின்றனள் கோல்வளை தானே 1173**

இம் - எனின், சத்தி முளைத்தெழ நாதவிந்துக்கள் தோன்றுதலை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : எல்லாவற்றினும் மேலாகத் தெளிந்து எழுகின்ற சிவபரம்பொருள் அங்கிபோல்வதாய சத்தி பொருந்த. ஒழுகியெழுகின்ற மாயையும், அதற்கு அந்தமாகிய ஆராய்ந்து எழுகின்ற விந்துநாதங்கள் ஓங்கத் திரண்ட வளையலை அணிந்த பராசத்தி முளைத்தெழுகின்றனள் என்றவாறு.

தோந்து எழும் மேலாம் சிவன்; உலகில் தாமுதல என்பார் பலரின் முதன்மைகளையும் ஆராய்ந்து, அம் முதன்மைக்கு ஒவ்வோராற்ருன் இழுக்குண்மையைப் பிரபல சுருதிகளானும் ஆகமங்களானும் புராணங்க ளானும் தெளிந்து இதுவே முதலென எழும் மேலாகிய சிவன் என்க. அங்கியோடுஉற - அங்கியோடு ஒப்பாகப் பொருந்த; என்றது அக்கினியில் சூடுபோலச் சத்தி பிரிவற்றுச் சமவாயமாய்ப் பொருந்த.

வார்ந்து எழு மாயையும்; வார்தல் - ஒழுகுதல். நெறிப்படுதல். வார்ந்தெழு மாயை - நெறிப்பட்டெழு கின்ற மாயை; என்றது. சிவத்தினின்று சத்தியும் அத னின்றும் நாத விந்துக்களும் அதனின்று மாயையும் தோன்றநிற்றல்.

இம்முறையையே அந்தமதாய் நிற்கும் ஓர்ந்தெழு விந்துவும் நாதமும் ஓங்கிட என்றது. அந்தமதாய் - முற்கூறிய மாயைக்கு ஒடுக்குமிடமாய். இவ்வண்ணம் சிவமாய் ஆதிசக்தியாய் நாதவிந்துவாய் மாயையாய் மிக்கெழுகின்றவள் சத்தியே என்பதுணர்த்தியவாறு. கோல் - திரட்சி. கோள்வளை; அன்மொழித்தொகை, திரண்ட வளையினை உடையாளாகிய சத்தி. (290)

**தானான வாறெட்ட தாம்பரைக் குண்மிசை**
**தானான வாறுமீ ரேழுஞ் சமைகலை**
**தானான விந்து சகமே பரமெனுந்**
**தானும் பரவா தனையெனத் தக்கதே.** 1174

இம் - எனின், அம்மை எழுந்தருளியும், கலந்தும் உள்ள இடங்கள் இவையெனல் நுதலிற்று.

இ - ள்: பராசத்திக்கு, ஆறு ஆதாரங்களும், எட்டு யோகநிலைகளும் உள்ளப்படுகிற இடங்களாம். அங்ஙனமே சத்திமயமான ஆறு வழிகளிலும், பதினான்கு உலகங்களிலும், கலைவடிவாகச் சமைந்த விந்துவிலும், உலகத்திலும், பரத்திலும் தான் கலந்திருப்பள். இங்ஙனம் அவள் கலந்திருக்கும் நிலையே பரவாதனை எனத் தக்கதாம் என்றவாறு.

தானான ஆறு, எட்டு பரைக்கு உள் மிசை ஆம்; சத்தி வடிவான ஆருதாரமும் யோகாங்கள் எட்டும் சத்திக்கு உள்ளப்படுகின்ற இடமாம். மிசை - இடம். ஆறு எட்டு என்பன எண்ணாகுபெயர்கள்; என்றது ஆறு ஆதாரங்களிலும் சத்தி முறையே ஐடாகினி, குண்டலினி, ராகினி, லாகினி, காகினி, ஸாகினி ஆக வீற்றிருக்கிறார். அங்ஙனமே யோகநிலை எட்டிலும் வாமாதி சத்திகள் வீற்றிருக்கிறார்கள். ஆதலால் இங்ஙனம் கூறியதாம். உள்மிசை - தியானிக்கப் படுகின்ற இடம். வினைத்தொகை.

தானான ஆறும் ஈரேழும் சமைகலை - தான் எழுந்தருளியிருக்கின்ற ஆறும், பதினான்கு புவனங்களும் கலையால் சமைந்தவை. ஸ்ரீ வித்தையில் நடுவில் முக்கோணத்தைச் சுற்றியுள்ள சட்கோணமும், அதற்கு வெளியிலுள்ள அந்தர்தசாரம் பகிர்தசாரம் இவற்றையடுத்து விளங்குவதான சதுர்த்தசாரத்தைக் குறிப்பதாம். இது கலையின் காரியமான அநுஸ்வாரம் விஸர்க்கங்களாகிய ஈரொலியும் இல்லாத பதினான்கு ஸ்வரங்களோடு விளங்கும் பதினான்கு உலகங்களுக்கும் காரணமாக இருக்கும். இவையனைத்தும் தேவியின் வியாபகங்களேயாதல் அறிக.

ஆறு - அகம், புறம், அகப்புறம் ஆன நால்வகை அவ்வாறு சமயங்கள். இவையனைத்தும் சத்திமயம்.

பரவாதனை - பரவாசனை. இங்ஙனம் எல்லாம் சத்தி மயமாக உணர்தல் பரவாசனையாம். அபரவாசனை யாகிய உலகம், உடல் யோகம், தரிசனம் என்ற சாமான்ய நிலை நீங்க, எல்லாம் அவள் என்ற வாசனை மேனிலைக்கு வாயிலாம் ஆதலின் இது 'பரவாதனை யெனத்தக்கது' என்றார்கள். வாசனை உபகாரப் படுதலைக் காண்க. இங்ஙனன்றித் தடையெனப் பொருள் கொண்டு இடர்ப் படுவாரும் உளர். (291)

**தக்க பராவித்தை தானிரு பானேழிற்**
**றக்கெழு மோருத் திரஞ்சொல்லச் சொல்லவே**
**மிக்கிடும் எண்சத்தி வெண்ணிற முக்கண்ணி**
**தொக்க கதையோடு தொன்முத்திரை யாளே, 1175**

இம் - எனின், ஸ்ரீ வித்தியாசக்கரத்திற்கும் (1) தேவதைக்கும் அபேதம் சொல்லுதல் நுதலிற்று.

இ - ள்: அனைத்தினும் தக்க பராவித்தையானது இருபத்தேழு கோடுகளில் அமைவதாம். அங்கு எழுகின்ற ஒரு ருத்ரமாகிய மந்திரத்தைச் செபிக்க எண் சத்திகள் வெளிப்படுவர். வெண்ணிற முடைய முக்கண்ணும் கதையும் அபயமுத்திரையுங் கொண்டருளும் பரையின் வடிவமே சக்கரம் என்றவாறு.

பராவித்தை - பராசத்திவடிவாய ஸ்ரீ வித்தை. இரு பான் எழிற்று - இருபத்தேழு கோடுகளைக் கொண்டது;

என்றது ஸ்ரீசக்கரம் ஒன்பது முக்கோணங்கட்கும். ஒவ்வொன்றுக்கு மூன்று கோடுகளாக இருபத்தேழு கோடுகளாகிய வரையால் ஆனது நாற்பத்து முக்கோணமாகிய ஸ்ரீ ச க் க ர ம். ஸ்ரீசக்கரத்தையே பராவித்தை என்று அருளியது. ஸ்ரீ வித்யா சக்கரத்தை அமைத்து, அங்கு எழும் ஓர் ருத்திரத்தைச் சொல்லச் சொல்ல முக்கண்ணி முத்திரையாள் மிக்கிடும் என முடிக்க.

அங்கு எழும் என்பது எதுகை நோக்கி அக்கெழும் என்றாயிற்று. ஓர் ருத்திரம் - ஸ்ரீவித்யாமந்திரம். சொல்லச் சொல்ல - செபிக்க.

ஒளிவடிவான பிந்துவைச் சுற்றியுள்ள திரிகோணத்தையடுத்து விளங்கும் வசுகோணமாகிய எட்டுக் கோண சக்கரத்துள் வசினி, காமேஸ்வரி முதலான வாக் தேவதைகள் எண்மரும் வெளிப்படுவர். சக்கரம் முழுமையும் வெண்ணிறமான முக்கண்களையும் கதை, அபய, வரத முத்திரைகளையும் உடைய பராசக்தியின் வடிவமாகும் என்பதாம். விரிவை வரிவஸ்யாரகசியம் முதலிய நூல்களிற் கண்டு, குருமுகமாக விதிப்படி கேட்டுச் சிந்திக்க. (292)

**முத்திரை மூன்றின் முடிந்தமெய்ஞ் ஞானத்தால்**
**அத்துவ மாயல்ல வாய சகலத்தள்**
**வைத்த பராபர னுய பராபரை**
**சத்தியு மானந்த சத்தியுங் கொங்கே.** 1176

இம் - எனின், சத்தி அத்துவிதமாயும் அல்லவாயும் இருக்கு நிலை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : திரிபுடி ஞானமாகிய அடையாளத்தின் முடிந்த நிலையாகிய உண்மை ஞானத்தால், இரண்டறக் கலந்து அருவாயும் வேருயுள்ள சகலத் திருமேனியாயும் இருப்பவள். தன்னுள்வைத்த சிவமேயாய சிவை. சத்தியும் ஆனந்த சத்தியுமாக மணந்தநிலை அவரது ஆம் என்றவாறு.

முத்திரை மூன்றின் - சுவைப்பானும், சுவைக்கப்படு பொருளும், சுவையும் ஆய அடையாளம் மூன்ருல். முடிந்த மெய்ஞ்ஞானம் - தொடக்கத்து மூன்ருய் நின்று நுகர்ச்சியால் ஒன்றி வேறற்று அழுந்தியபோது ஒன்ருய் முடிந்த மெய்ஞ்ஞானம்.

அத்துவமாய் – சுவைப்பானுகிய ஆன்மாவோடு அத்துவிதமாய், அறிவாய் ஒன்றி. அல்லவாய சகலத்தள் – திரிபுடி முத்திரையால் நுகரும்போது வேருய சகளத் திருமேனியுடையாள். அல்லவாய் அசகலத்தள் எனப் பிரித்து, வேருய் ஹச கல ஹ்ரீம் என்னும் மந்திர வடிவானவள் என்பதே மந்திர நூல் மரபாதல் தெளிக.

வைத்த - சங்காரகாலத்துக் கரந்து தன்னுள்வைத்தும், சிருட்டிக் காலத்துத் தம்மின் வேருகவைத்தும் இருக்கின்ற. பராபரனுய பராபரை - சிவபரம்பொருளாகிய சிவை; என்றது சிவசத்திகளின் ஒன்ருன இயல்பு உரைத்தது.

சத்தி. ஆனந்த சத்தி. சத்தி ஆதாரம்; ஆனந்தம் ஆதேயம்; இரண்டின் சேர்க்கையைக் கொங்கு என்று அருளியது. கொங்கு - மணம். ஈண்டு மூக்கினனுபவமாகிய மணத்தை விட்டுக் குறிப்பாகச் சொல்லோற்றுமையால் கலப்பிற்குப் பெயராயிற்று. சத்தியாகிய

பொருட்டன்மை ஆனந்தமாதலின் அதனையும் ஆனந்த சத்தியெனப் பொருளுக்கும் அதன் தன்மைக்குமுள்ள ஒற்றுமை நயம்பற்றி உரைத்தார். (293)

**கொங்கின்ற கொம்பின் குரும்பைக் குலாங்கன்னி**
**பொங்கிய குங்குமத் தொளிபொ ருந்தினள்**
**அங்குச பாச மெனுமகி லங்கனி**
**தங்கு மவள்மனை தானறி வாயே.** 1177

இம் - எனின், அம்மையினது அருட்டிருமேனி அமைப்பும் விளங்குமிடமும் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : மணத்தைப்பெற்ற பூங்கொம்புபோல, குரும்பையை ஒத்த திருத்தனபாரங்களோடு கூடிய கன்னி, சிறந்துவிளங்கும் குங்குமச்சாந்தின் ஒளிபோலச் சிவந்த ஒளியோடு. அங்குச பாசங்களையும் பொருந்திய வள். கனிவோடு தங்கும் அவளது திருமனை அகிலம் என்றறிவாயாக என்றவாறு.

தேவி பூபுரத்தால் சூழப்பட்ட ஸ்ரீசக்கரத்துள் உறைவதால் அவள் மனை அகிலம் என்றருளியவாறு. அகிலம் - பூமி ; என்றது பூ புரத்தை. (294)

**வாயு மனமுங் கடந்த மனோன்மணி**
**பேயுங் கணமும் பெரிதுடைப் பெண்பிள்ளை**
**ஆயும் அறிவுங் கடந்த அரனுக்குத்**
**தாயும் மகளுநல் தாரமு மாமே.** 1178

இம் - எனின், சத்திக்கும் சிவத்திற்கும் உள்ள பல்வேறு முறையை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : உரையையும் மனத்தையும் கடந்து விளங்கும் மனோன்மணி; பேய்களையும் பூதகணங்களையும் பெரிதும் தமக்கு ஏவலராகப்பெற்ற பெண்பிள்ளை; எதனையும் தம்மளவிற் கொண்டு நுணுகி ஆராய்கின்ற பசுபோதத்திற்கு அப்பாற்பட்ட சிவபரம் பொருட்குத் தாயும் மகளும் நல்ல மனைவியுமாவள் என்றவாறு.

தாயானது : சத்திதத்துவத்தினின்றும் சாதாக்கிய தத்துவவாசியாகிய சதாசிவம் தோன்றுதலின். மக ளானது ; சிவ தத்துவத்தினின்றும் சத்தி தத்துவம் தோன்றுதலின். 'நல்தாரமானது : ஆதிசத்தியாய் சதா சிவத்தோடு கூடியிருந்து உலகுயிர்களைத் தோற்று வித்தலின். (295)

**தாரமு மாதுவள் தத்துவ மாய்நிற்பள்**
**காரண காரிய மாகுங் கலப்பினள்**
**பூரண விந்து பொதிந்த புராதனி**
**பாரள வாந்திசை பத்துடை யாளே.** 1179

இம் - எனின், சத்தி உலகெலாம் தாயாய் நிற்கும் வியாபகநிலை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : பராசத்தி சிவத்திற்கு மனைவியும் ஆவள் ; சக்திதத்துவமாய் நின்று நாதவிந்துக்களைத் தோற்று விக்கவும் செய்வள் : சிவத்தோடு ஒன்றியநிலையில் அனைத்திற்கும் பரமகாரணி ஆவள் ; சிருட்டிமுறையுன்னிப் பிரிந்தபோது சிவத்தின் காரியமுமாவள். இத்தகைய புணர்ப்பினையுடையாள், நிறைந்த விந்துசத்தி பொதிந்துள்ள பழைமைக்கெல்லாம் பழைமையானவள். அண்டங்களின் அளவாகப் பிரிந்துள்ள திசை பத்தும் உடைமையாகக் கொண்டவள் என்றவாறு.

இவ்வண்ணம் சர்வவியாபியாவாள் பராசத்தி என்பதாம். (296)

**பத்து முகமுடை யாள்நம் பராசத்தி**
**வைத்தனள் ஆறங்க நாலுடன் முன்வேதம்**
**ஒத்தனள் ஆதாரம் ஒன்றுடன் ஓங்கியே**
**நித்தமாய் நின்றுளெம் நேரிழை கூறே 1180**

இதுவுமது.

இ - ள்: திசைபத்தையும் முகமாக உடையாள். நம்மை உய்விக்கும் பராசத்தி. ஆறங்கம் நால்வேதங்களை நமக்காக அருளினள்; அனைத்திற்கும் ஆதாரமாகிய பரசிவத்தோடு ஒன்றிச் சிறந்து விளங்குவாள்; எமது நேரிழையாகிய அவள் அநாதி நித்தப்பொருளாவாள். இங்ஙனம் கூர்ந்து அறிவாயாக என்றவாறு. (297)

**கூரிய கண்ணி குலாய புருவத்தள்**
**சீரிய ளாயுல கேழுந் திகழ்ந்தவள்**
**ஆரிய நங்கை யமுத பயோதரி**
**பேருயி ராளி பிறிவறுத் தாளே *1181***

இதுவுமது.

இ - ள்: கூர்மைபொருந்திய கண்களையுடையாள், விளங்குகின்ற புருவத்தள், சிறந்தவளாக ஏழுலகும் விளங்குபவள், ஆரியாதேவி, அமுதம் நிறைந்த தனங்களை யுடையாள், பிரமத்தையாளுபவள், அநந்யமாக விளங்குபவள் என்றவாறு.

பேருயிர் - பிரமம்; என்றது சிவத்தை. (298)

**பிறிவின்றி நின்ற பெருந்தகை பேதை**
**குறியொன்றி நின்றிடுங் கோமளக் கொம்பு**
**பொறியொன்றி நின்று புணர்ச்சிசெய் தாங்கே**
**அறிவொன்ற நின்றனள் ஆருயி ருள்ளே** *1182*

இ - ள்: சிவத்தோடு இரண்டறக் கலந்து நின்ற பெருந்தகுதியோடு கூடிய பேதை; இலட்சியத்திற் பொருந்தி விளங்கும் அழகிய கொம்புபோல்வாள்; அறிவினுள் அறிவாகப் பொருந்திநின்று உயிருக்குள்ளாக அறிவாகக் கலந்து நின்ருள் என்றவாறு.

அம்மை ஆன்மாவோடு ஒன்றியிருக்கும் நிலை அறிவாக என்பதாம். குறி - இலட்சியம். அதாவது தியானலட்சியம். பொறி - ஞானம். (299)

**உள்ளத்தி னுள்ளே யுடனிருந் தைவர்தங்**
**கள்ளத்தை நீக்கிக் கலந்துட னேபுல்கிக்**
**கொள்ளத் தவநெறி கூடிய இன்பத்து**
**வள்ளற் றலைவி மருட்டிப் புரிந்தே** 1183

இம் - எனின், அம்மை செய்கின்ற அருளுபகாரம் உரைத்தல் நுதலிற்று.

இ - ள்: வள்ளல் தலைவியாகிய சத்தி மனத்துள் உடனுயிருந்து, ஐம்பொறிகளாற்றுங் கள்ளத்தனத்தை யொழித்து, உயிரோடு கலந்து, தவநெறியை மேற் கொள்ளக் கூட்டிய இன்பத்தில் அடியேனை மயக்கிச் செய்தது இதுவாம் என்றவாறு.

பொறிகள் புலன் வழிச்செல்லாது தடுத்து உயிர்க் குயிராய் ஒன்றிநின்று தவநெறி காட்டி நிரதிசயானந்த

இன்பத்துள்ளே மயங்கச்செய்தாள் அன்னை என்பதாம். இதற்கேற்ப சொற்களைக் கொண்டு கூட்டிப் பொருள் கொள்க. (300)

**புரிந்தருள் செய்கின்ற போகமா சத்தி**
**இருந்தருள் செய்கின்ற இன்பம் அறியார்**
**பொருந்தி யிருந்த புதல்விபூ வண்ணத்**
**திருந்த விலக்கில் இனிதிருந் தாளே** 1184

இம் - எனின், அன்னை தானிருந்த நிலையிலிருந்து அருள்செய்கின்றளாயினும் அதனை அறியார் உலகவர் என இரங்கியுரைத்தல் நுதலிற்று.

இ - ள் : விரும்பி அருள்செய்கின்ற போகசக்தி. அவள் மனத்துள் இருந்து இன்பமளிப்பதை யாரும் அறியார். எம் மனத்தாமரைமலரில் பொருந்தியிருந்த புதல்வியாகிய சத்தி, பூவும் அதன் வண்ணமும்போலத் தானிருந்த இலட்சியப் பொருளாகிய சிவத்தினிடமே இனிதிருந்தாள் என்றவாறு.

போகமா சத்தி - போகசிவமாகிய சதாசிவத்தின் சத்தியாகிய மனோன்மணி. பூ வண்ணத்து; உம்மைத் தொகை. இருந்த இலக்கு - அவள் அருவமாகக் கரந்து நிற்கும் சிவமாகிய இலட்சியம். (301)

**இருந்தனள் ஏந்திழை என்னுள மேவித்**
**திருந்து புணர்ச்சியில் தேர்ந்துணர்ந் துன்னி**
**நிரந்தர மாகிய நிரதி சயமொடு**
**பொருந்த விலக்கிற் புணர்ச்சி அதுவே.** 1185

இம் - எனின், அவளைச் சிந்திக்குமுறை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : ஏந்திழையாகிய அம்மை எனது உள்ளத்தை இடமாகக் கொண்டு விரும்பி இருந்தாள். திருத்தமாகிய கலப்பில் தெளிந்து, அறிந்து தியானித்து, இடையீடில்லாத வியப்பற்ற நிலையில் பொருந்தியிருக்க, இடையூறுகளை விலக்கினால் அதுவே அம்மையோடு கலப்பதாம் என்றவாறு.

திருந்து புணர்ச்சி - நினைந்து மறந்து நினைந்து மறந்துபோகாமல் என்றும் தைலதாரைபோல இடையறாது கலத்தல். நிரந்தரம் - இடையீடில்லாமல். அந்தரம் - இடையீடு. அதிசயம் - வியப்பு. வியப்பு நிலையில் அம்மையைத் தன்னின் வேறாக நினைக்கும் தன்மை விளைதலின் உண்மைக் கலப்பு இலதாகும். அஃதின்றி 'நீயும் நானுமாய் ஏகபோகமாய்' இருக்க வியப்பு அகற்ற வேண்டும். ஆதலால் நிரதிசயமொடு என்றது. பொருந்த - கலக்க. விலக்கின் என்பதற்கு செயப்படுபொருள் வருவித்து உரைக்கப்பட்டது. அதுவே புணர்ச்சி - அதுவே அருளம்மையைக் கூடும் நெறியாம் என்பது. (302)

**அதுஇது என்னும் அவாவினை நீக்கித்**
**துதியது செய்து சுழியுற நோக்கில்**
**விதியது தன்னையும் வென்றிட லாகும்**
**மதிவல ராள்சொன்ன மண்டல மூன்றே.** 1186

இம் - எனின், விருப்பற்றுப் போற்றுக என்கின்றது.

இ - ள் : அது இது என்கின்ற ஆசையை விட்டு, புகழ்ந்து, சுழிமுனையாகிற புருவமத்தியில் வைத்துத் தியானிக்கின், பிராரத்த வினைகளையும் வெல்லலாம்.

சந்திரமண்டல வாசியாகிய அம்மை சொன்ன மண்டலங்கள் மூன்றும் என்றவாறு.

எனக்கு அவ்வரம் வேண்டும் என்ற காரியப் பயனைக் கருதாமல் நுதிக்க என்றது. குழியுறநோக்கல் - புருவ மத்தியாகிய அநாகதத் தானத்தில் அம்மையின் அருள் வடிவினை வைத்துத் தியானித்தல். வென்றிடலாகும் என்றது வெல்லுதற்கரிய விதியையும் வெல்லலாம் என்ற அம்மையின் அருளாற்றற் சிறப்புணர நின்றது, மதி மலராள் - சந்திரமண்டலத்தில் உள்ள ஆயிரம் இதழ்த் தாமரையாகிய பீடத்து எழுந்தருளியுள்ளவள்.

மண்டலம் மூன்று - வாக்பவ கூடமாகிய அக்னி மண்டலம்; காமராஜ கூடமாகிய சூரியமண்டலம்; சத்தி கூடமாகிய சோமமண்டலம். இம்மூன்று மண்டலங்களிலும் படைத்தல், காத்தல், அழித்தலாகிய முத்தொழில்களைப் புரிந்துகொண்டு அம்மை விளங்குவள். இதனையே வருகின்ற திருமந்திரத்திலும் அநுவதித்து உரைக்கின்றார் ஆசிரியர். **(303)**

**மூன்றுள மண்டல மோகினி சேரிடம்**
**என்றுள ஈரா றெழுகலை உச்சியில்**
**தோன்று மிலக்குற வாகுதல் மாமாயை**
**என்றனள் ஏழிரண் டிந்துவொ டீறே** 1187

இ - ளின், பிண்டத்துள்ள மண்டலங்களில் அம்மை எழுந்தருளுமுறை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : மோகினியாகிய சத்தி சேரும் இடமாக மூன்று மண்டலங்கள் உள்ளன. பொருந்தியனவாகிய

பன்னிரண்டாக எழுகின்ற கலைகளின் உச்சியிலே தோன்றும் குறியிடத்தில் பொருந்துதலையுடைய சுத்த மாயா சத்தி, மதியை யிருகக்கொண்டு பதினான்கு கலை களில் பொருந்தி விளங்கினள் என்றவாறு.

மோகினி - அசுத்த மாயை, மோகினி சேர்வு இடம் - அசுத்தமாயா காரியமான உடல். மண்டலம் மூன்றுதல் - காலும், உடலும், சிரமுமாக மூன்றுதல். எழு கலை ஈராறு- மேதாகலை முதல் உன்மநாகலை யீருக எழுகின்ற கலைகள் பன்னிரண்டு.

மேதாகலை: நாபிக்குமேல் பன்னிரண்டு அங்குல முடிவில், நான்கு அங்குல அளவுள்ள இதயம் உள்ளது. அங்குத் தீயொளியொத்த மூன்று மாத்திரை அளவு உள்ள மேதாகலை ஸ்வரவடிவாக உள்ளது. இதற்கு இருபத்து நான்கு தத்துவங்களோடு கூடிய பிரமன் அதிதேவதை.

உகாரகலை: இதயத்திற்குமேல் கழுத்தில் எட்டு அங்குலத்தில் சூரிய சந்திரர்களை ஒத்த ஒளியுடன் இரு மாத்திரை அளவினதாக உகாரகலை உள்ளது. ஆறு தத்துவங்களோடு கூடிய விஷ்ணு அதிதேவதை.

மகாரகலை: அதற்குமேலே தாலுவில் நான்கு அங்கு லத்தில் ஒருமாத்திரை அளவினதான மின்னற் கொடி போன்ற மகார கலையானது விளங்குகின்றது. மாயா தத்துவத்துடன் கூடிய உருத்திரன் அதற்கு அதிதெய்வ மாவார்.

விந்துகலை; அதற்குமேல் புருவமத்தியில், இரண்டு அங்குலத்தில் விளக்கின் ஒளிபோல வட்டவடிவான




பரசிவம்



உன்மநாகலை



சமநாகலை



வியாபினிகலை



சக்திகலை



நாதாந்தகலை



நாதகலை



நிரோதினிகலை



அர்த்தசந்திரகலை



மகாரகலை



உகாரகலை



விந்துகலை



மேதாகலை

இவை நூல் வேறுபாட்டால், இட் முதலியன வேறுபட்டிருக்கக் காண்கிறோம்.

அரைமாத்திரை அளவினதான விந்துகலை உள்ளது. சுத்தவித்தியாதத்துவம் இரண்டுடன் கூடிய மகேசன் அதிதெய்வமாவார்.

அர்த்தசந்திரகலை : இது அதற்குமேல் நெற்றியில் இரண்டேமுக்கால் அளவில் அரை வட்டவடிவான பிறைமதியொளியுடன் கால்மாத்திரை அளவினதாக விளங்குகிறது. அநந்தர் அதிதேவதை.

நிரோதினிகலை: அதற்குமேல் 2¾அங்குல அளவில், பிறைமதி ஒளிபோலப் பிறைவடிவாக எட்டுமாத்திரை அளவினதாக நிரோதினிகலை விளங்குகிறது.

நாதகலை ; அதற்குமேல் 2¾ அங்குல அளவில், தண்ட வடிவான மணி ஒளிபோல இருபக்கமும் விந்துவோடு கூடிய கலப்பை வடிவில் வீசமாத்திரை அளவில் இது விளங்குகிறது.

நாதாந்தகலை : அதற்குமேல் 2 ¾ அங்குல அளவில் பிரமரந்திரத்தில், மேருவில், ஒளியுச்சியில் உண்டான கற்பூர ஒளிபோல, வலது பக்கத்தில் மட்டும் விந்துவோடுகூடிய கலப்பை வடிவில் அரைவீச மாத்திரையோடு கூடிய நாதாந்தகலை விளங்குகிறது. சாதாக்கிய தத்துவத்துடன் கூடிய சதாசிவமூர்த்தி அதிதெய்வம்.

சக்திகலை : உச்சியில் ஒரு அங்குல அளவில், கோடிசூரிய ஒளியுடன், இடது பக்கத்தில் விந்துவுடன் கூடிய கலப்பை வடிவில் $\frac{1}{64}$ மாத்திரை அளவினதான சக்திகலையுள்ளது.

வியாபினிகலை : அதற்குமேல் மூன்றங்குலத்தில் கோடிசூர்ய காந்தியுடன், வலப்பக்கத்தே பிந்துவோடு

கூடிய முவிலேச்சூல வடிவில் $\frac{1}{128}$ மாத்திரை அளவின தான வியாபினிகலேயுள்ளது.

சமநாகலே : அதற்குமேல் நாலங்குலத்தில், முன் கூறிய ஒளியுடன் இரண்டு பிம்பங்களோடு கூடிய இரண்டு சமகோடுகளின் வடிவாக, $\frac{1}{256}$ மாத்திரை அளவினதான சமநாகலே இருக்கிறது.

உன்மநாகலே: அதற்குமேலே நாலங்குலத்தில், முன் கூறிய ஒளியுடன் இருபிம்பங்களுடன் கூடிய இரு வளை கோடு வடிவாக. மனமாத்திரை அளவினதான உன்மநா கலே உள்ளது. சத்தி, நாதம், பிந்து, மாயை என்ற நான்கு தத்துவங்களுடன்கூடிய அநாகதசிவம் அதி தேவதை.

இவை பன்னிரண்டும் மேதாதி சக்திகளின் கலேகள். இதற்குமேல் உள்ளும் புறம்பும் மேலும் கீழும் வியாபித்த அகண்டாகார சச்சிதாநந்த வடிவாயிருப்பதால் நுகர்ச் சிக்குமட்டுமுரிய பரசிவம் விளங்குகின்றது. உச்சி - பிரமரந்திரத்திற்கு மேலுள்ள பகுதி. உச்சிமிற்றேன்றும் இலக்கு  இங்ஙனம் தோன்றுகின்ற சத்திகலே.

அதனேடு உறவாகுதல் - அதனைத் தியானித்தல். அதற்குமேலுள்ள சிவகலேயோடு இலயித்தலே பதினுன் காவது கலேயில் சத்தி அபின்னையாகப் பொருந்தி யிருத்தல். இவ்வாறு சத்தியிருக்கின்ருள் என்க. (304)

**இந்துவி னின்றெழு நாதம் இரவிபோல்**
**வந்துபின் நாக்கின் மதித்தெழுங் கண்டத்தில்**
**உந்திய சோதி இதயத் தெழும்ஒலி**
**இந்துவின் மேலுற்ற ஈறது தானே.** *1188*

இ-ள். வைகரியாதி வாக்குகளின் தோற்றம் உரைத்தல் நுதலிற்று.

இ-ள்: இந்துவினின்று தோன்றும் நாதமானது சூரிய ஒளிபோல வந்து நாக்கினால் கடையப்பெற்று வெளிப்படும். சோதியாய் இதயத்தினின்று எழும் ஒலி கழுத்திடத்தில் உந்தப்படுவதாய், சுத்தமாயையை பிறருக வற்ற சிறப்பினையுடையது என்றவாறு.

இந்து என்றது பிறைமதி வடிவான அர்த்தசந்திரகலை, நிரோதினிகலை என்ற இரண்டையும். அதினின்று நாத கலை தோன்றுதலின் இந்துவினின்றெழும் நாதம் என்றது. நாதம் சூரியன்போல ஒளியுடன் விளங்குவது. அது நாவி னடியாகிய தாலுத்தானத்தில் பொருந்தும்போது, பல வேறு வடிவான வர்ணங்களாக ஆகின்றது. வைகரிவாக்கு பிறக்கிறது. நாக்கில் மதிக்கப்படுவதற்கு முன்பு கண்டத் தில் ஒலியாக உந்தப்படுகிறது. அதற்கு மூலமான ஒலி இயத்தானத்தில் விளங்குவதாம். இங்கு அதற்குப் பைசந்தி என்று பெயர். கண்டத்தில் மத்திமை. இந்து விற்கு மேலும் அவ்வொலி உண்டு. அது சூக்குமை எனப்படும். இவ்வண்ணம் சூக்குமையாக இருக்கும் பெருமையினை உடையது இது எனப் பாராட்டுகிறார்கள். 'இந்துவின் மேலுற்ற சுறநுதானே' என்பதால், இந்து என்பதற்குச் சுத்தமாயை என்று உரை கூறுவாரும் உளர். (305)

ஈறது தான்முதல் எண்ணிரண் டாயிர
மாறுதல் இன்றி மனோவச மாமொழில்
தூறது செய்யுஞ் சுகந்தச் சுழியது
பேறது செய்து பிறந்திருந் தானே 1189

இம் - எனின், ஒலியுலகு அனைத்திற்கும் காரணம் விந்துசத்தியே என உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: இந்துவின் மேலுற்ற ஈருகிய சூக்குமை வாக்கே ஒலிகளுக்கெல்லாம் முதலாம். அதுவே, முரணின்றி, மனத்தை வசப்படுத்துவதான பதினாறு ஆயிரம் நூறுகளைச் செய்யும் மணமுளள சுழிவடிவாய விந்து. அதனையே பெற்று அங்கே தோன்றியிருந்தாள் சத்தி என்றவாறு.

இதன் கருத்து, சூக்குமை வாக்கு பரசரீரத்து நாத மாத்திரையாக விளங்குவதாய் ஞானமாத்திரைக்கு ஏது வாலும் உடையதாய் பைசந்தியாதிய வாக்குக்களையும், வேதம் ஆகமம் புராணம் முதலான பல ஒலிக் கூட்டங்களையும் தோற்றுவிப்பதாய் இருத்தலின் அதுவே முதலாயிற்று. சங்காரக் கிரமத்தில் ஈருக இருக்கும் சூக்குமை, சிருட்டிகாலத்து வித்தாக இருத்தலின் 'ஈறதுதான் முதல்' என்றது.

மாறுதலின்றி, மனோவசமாய், எண்ணிரண்டாயிரம் - முரணின்றி மனத்தை வசப்படுத்துவதாய், 16 ஆயிரமாக என்பதாம். முரணுவது ஒலியுலகப் படைப்புக்களான நூல்கள் ஒன்றோடொன்று மாறுபடுதல். அங்ஙனமின்றி என்றது எல்லாம் ஒருமுதலினின்று, ஒருமுதல்வனால் உண்டாக்கப்பட்டமையின் அதிகாரபேதம்பற்றி முறை சிறிது மாறுபட்டாலும் முடிவு ஒன்றேயாம் என்பது உணர்த்தியவாறு. மனோ வசம் ஆய் - மனோலயம் விளைவிப்பதாய். ஞானநூல்களை ஓதின் மனம் ஒருவழிப்படுதல் இயற்கையாதலின் மனோவசமாய் என்றது.

எழில் தூறு ( அது ) செய்யும் சுகந்தச் சுழி அது - அழகின் குவியலைச் செய்யும் நற்புணர்ப்பாகிய விந்து அதுவாம் என்றவாறு. தூறு - புதர், மிகுதி குவியல் என்பன ஒருபொருட் கிளவிகள். சுகந்தம் - நல்ல புணர்ப்பு. கந்தம் - கூட்டம் அல்லது புணர்ப்பு. நல் வாசனையும் ஆம் சுகந்தச் சுழியென்றது மாயையை. சுழி - விந்துவாகவே ஈண்டு சுத்தமாயையைக் குறிப்பிட்டதாம்.

பேறது செய்து - சிவமும் சத்தியுமாகிய தாமிருவரும் விந்து சத்திகளாகிய சுத்தமாயையைத் தோற்றுவித்து. பிறந்திருந்தாள் - அந்த விந்துசத்தியினின்றும் உமாசக்தி தோன்றினாள் என்பதாம். **(306)**

**இருந்தனள் ஏந்திழை ஈறதி லாகத்**
**திருந்திய ஆனந்தஞ் செந்நெறி நண்ணிப்**
**பொருந்து புவனங்கள் போற்றிசெய் தேத்தி**
**வருந்த இருந்தனள் மங்கைநல் லாளே. 1190**

இ - எனின், சத்தி எழுந்தருளுகின்ற இடம் இது வென்றல் நுதலிற்று.

இ - ள் : ஏந்திழையாகிய அன்னை, ஈறுகிய பரசரீரத்தின் சந்திர மண்டலத்தில் எழுந்தருளி யிருந்தாள். வேறொரு வகையானும் அடையமுடியாத ஆனந்தத்தை யடையும் நெறிகளை அடைவதற்காக. பொருந்திய உலக மனைத்தும் துதித்து வருந்த மங்கைநல்லாளாகிய அன்னை இருந்தாள் என்றவாறு,

ஆகவே உலகனைத்தும் ஆனந்தமடையும் வழிகளைப் பெறுவதற்குத் தோத்திரித்து வருந்த, பரசரீரத்து உச்சி

யில் விளங்கும் மதிமண்டலத்து வீற்றிருந்தாள் அன்னை என்பது கருத்து. ஈறதில்-ஈற்றில். ஈறு-உச்சி. அதன் கண் விளங்கும் மதிமண்டலமாகிய சகஸ்ராரம்.

திருந்திய ஆனந்தம் - விடயானந்தம், வாசனானந்தம், ஆன்மானந்தம், பிரமானந்தம் என ஏனையோர் கூறும் ஆனந்தங்களனைத்தும் திருந்திய ஆனந்தங்கள்; அன்னை அருளாற்பெறும் இவ்வானந்தமே அநாதியே நாப்தான் என்பார் இங்ஙனம் அருளினர்.

போற்றி செய்து ஏத்தி - துதித்து வணங்கி, விருந்து-முயற்சிக்க, இருந்தனள் - மதிமண்டலத்து ஆனந்தவடி வினளாக இருந்தாள் என்பதாம். (307)

**மங்கையும் மாரனுந் தம்மொடு கூடிநின்**
**றங்குலி கூடி அகம்புறம் பார்த்தனர்**
**கொங்கைநல் லாளுங் குமரரர்கள் ஐவரும்**
**தங்களின் மேவிச் சடங்குசெய் தாரே** 1191

இம் - எனின், உலகு விரிந்த முறையை உணர்த்து தல் நுதலிற்று.

இ - ள் : சத்தியும் சிவமும் தம்முட்கூடிநின்று, மகத தத்துவத்தைப் பொருந்தி. உள்ளும் புறம்பும் நோக்கினர். அதனால் சதாசிவம், மயேச்சுரன், உருத்திரன், விஷ்ணு, பிரமன் என்பார். ஐவரும், அவர்களின் சக்திகளாகிய மனோன்மணி, மகேஸ்வரி, ரௌத்ரி, லட்சுமி, சரஸ்வதி என்ற ஐவரும் தம்முட்பொருந்தி அவரவர்கட்குரிய சடங்கு களாகிய சிருட்டியாதிகளைச் செய்தனர் என்றவாறு.

மாரன் - அழகால் மாரனைஒத்த சிவம், அங்குலி - மகத்தத்துவம். அகம்புறம் பார்த்தனர் என்றது தமது எல்லையினும். அதிகார எல்லையினும் சிருட்டியுன்முகமாகப் பார்த்தனர்; அதனால் நவந்தருபேதங்களுள் சதாசிவர் முதலான ஐவரும், மனோன்மணி முதலான ஐவகைச் சத்திகளும் நம்முட்கலந்து உலகம் விரிந்தது என்பது கருத்து. ( 308 )

**சடங்கது செய்து தவம்புரி வார்கள்**
**கடந்தனி னுள்ளே கருதுவ ராகில்**
**தொடர்ந்தெழு சோதி துணைவழி ஏறி**
**அடங்கிடும் அன்பின தாயிழை பாலே. 1192**

இம் - எனின், கும்பகஞ்செய்யச் சோதி பராசத்தியுடன் கூடும் என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : சடங்குகளைச்செய்து தவத்தைப் புரிகின்ற மக்கள் கும்பகஞ்செய்து தியானிப்பார்களாயின் மூலத்தினின்று தொடர்ந்தெழுகிற மூலாக்கினி ஆறு ஆதாரங்களாகிய துணை வழியில் உயர்ந்து, அன்புடைய சத்தியினிடத்து அடங்கும் என்றவாறு

சடங்கு - இயம நியமாதிச் சடங்குகள். கடம் - கும்பம். கும்பகமாகிய பிராணாயாம நிரோதனத்தை சுண்டுணர்த்திற்று. அன்பினது ஆயிழை - அன்பினது உடைய அன்னை; திருவருட்சத்தி. ( 309 )

**பாலித் திருக்கும் பனிமல ராறினும்**
**ஆலித் திருக்கும் அவற்றின் அகம்படி**
**சீலத்தை நீக்கத் திகழ்ந்தெழு மந்திர**
**மூலத்து மேலது முத்தது வாமே. 1193**

இ-ம் - எனின். ஆறுதாரங்களை பேதித்து மதி மண்டலத்து மூலாக்கினியைச் செலுத்துவதின் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: குளிர்ந்த தாமரை மலர் ஆறினும் விளங்கியிருக்கும். இவ்வண்ணம் ஒலித்துக்கொண்டிருக்கும் ஆதாரங்களில் உறைகின்ற தன்மையை அகற்ற மூலாதாரத்திலுள்ளது மதிமண்டலமாகிய மேலிடத்ததாகத் திகழ்ந்தெழுகின்ற மந்திரம் முத்துப் போன்றதாம் என்றவாறு.

பனி மலர் ஆறு - ஆதாரங்கள் ஆறினும் உள்ள நாலிதழ் முதல் ஆயிரம் இதழ்வரையுள்ள தாமரை மலர். பனி மலர் என்றது தாமரை என்பதையுணர்த்த.

ஆறுதாரங்களிலும் தங்கிவிடாதபடி ஒன்றைக் கடந்து ஒன்றில் உறைவதாக மேல்நோக்கிச் செல்லப் பேதித்து ஆயிரம் இதழ்த்தாமரைவரை சென்று தங்கியது சத்தியுடன் சோதி என்றவாறு.

மூலாதாரத்திலுள்ள குண்டலினிசக்தியும், சோதியும் பிரமரந்திரம்வரையில் செல்ல உதவும் மந்திரம் திருவைந்தெழுத்தாம். அன்றி ஸ்ரீம், ஹ்ரீம் என்பாரும் ஹும் ஸம் என்பாரும் உளர். முத்ததுவாம் என்றதற்கு முத்துப்போல்வதாம் எனல் சாமான்யார்த்தம். அதன் உட்பொருள் ஊர்த்துவரேதஸாம் என்பது. அஃதாவது இங்ஙனம் பயிற்சியுடையார்க்கு விந்து கீழ் நோக்காது முத்துப்போல் திரண்டு மேலே நோக்கிச் செல்வதாம். இவர்களே ரஸமணி கட்டினராவர் என்பதைக் குறித்தவாறு.

**முத்து வதனத்தி முகந்தொறு முக்கண்ணி**
**சத்தி சதிரி சகளி சடாதரி**
**பத்துக் கரத்தி பராபரன் பைந்தொடி**
**வித்தகி என்னுள்ள மேவிநின் றாளே.** 1194

இ-ம் - எனின், மனத்துள் மன்னிய சத்தியை வியந்து உரைத்தல் நுதலிற்று.

இ - ள் : முத்துப்போலும் வெண்மையான பற்கள் பொருந்திய முகத்தினையுடையாள். முகங்கள்தோறும் மூன்று கண்களையுடையாள். சத்தி, சதுரப் பாடுடையாள். உருவுடையாள், சடைகளைத் தரித்தவள், பத்துக் கரங் களையுடையாள், பராபரனாகிய சிவத்திற்குத் தேவி, வித்தகமுடையாள், இவள் எனது உள்ளத்துப் பொருந்தி நின்றாள் என்றவாறு.

சகளம் - வடிவம். சகளி - உருவமுடையாள். வித்தகம் - மேன்மையான வியக்கத்தக்க பேரறிவு. அதனை யுடையாள் வித்தகி. **(311)**

**மேவிய மண்டலம் மூன்றுடன் கீழெரி**
**தாவிய நற்பதத் தண்மதி யங்கதிர்**
**மூவருங் கூடி முதல்வியா முன்னிற்பார்**
**ஓவினு மேவிடும் உள்ளொளி யாமே.** 1195

இ-ம் - எனின், மும்மண்டலங்களிலும் பரந்து நிற்பவள் பாரசத்தி என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ - ள : பொருந்திய மூன்று மண்டலங்களுள், கீழேயுள்ளதாகிய அக்கினிமண்டலத்துள் பொருந்திய திருவடியுடையாள். மதியும் கதிருங்கூடி முதல்வியாக

முன்னிற்பார், நாம் விலக்கினும் நம்மை விலகாது உள்ளொளியாய்ப் பொருந்துவள் என்றவாறு.

அக்கினிமண்டலத்துள் திருவடியும், செங்கதிர் மண்டலத்துள் உடலும், மதிமண்டலத்துள் முகமுமாக ஒளிப்பிழம்பாய் நாம் மறந்தாலும், நம்மைவிட்டு விலகாத வண்ணம் விளங்குவள் என்பது கருத்து.

மண்டலம் மூன்றுள் துன்கீழ் எரிதாவிய நற்பதத்தள் எனவும் மூவருந்தொழ நிற்பதை 'ஆதித்தன் அங்கி அம்புலி போற்றுவர் நம் தையலையே' என்பதனும் உணர்க. (312)

**உள்ளொளி மூவிரண் டோங்கிய அங்கங்கள்**
**வெள்ளொளி அங்கியின் மேவி அவரொடுங்**
**கள்ளவிழ் கோதைக் கலந்துட னேநிற்குங்**
**கொள்ள விசுத்திக் கொடியமு தாமே.** *1196*

இம் - எனின், ஆதாரங்களில் வெள்ளொளியாய் மேவிய அம்மை, விசுத்தித்தானத்து விளங்கும் முறை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: உள்ளொளியாய் ஆறுதாரங்களாகிய அங்கங்களில், வெண்ணிற ஒளியோடு கூடிய அக்கினி யாய்ப் பொருந்தி, அந்தந்த ஆதாரங்களுக்குள்ள அதி தெய்வங்களுடன், இறைவனைக்கலந்து அவனுடனாய் நிற்பள்; மிக்க விசுத்தித்தானம் வரை கொடியாகவும் அதற்குமேலே அமுதாகவும் விளங்கும் அருட்சத்தி என்றவாறு.

சத்தி மூலமுதல் விசுத்தி வரையில் சோதிக்கொடி போலவும், அதற்குமேல் மதிமண்டலம் வரை அமுத

மாயும் விளங்கும் நிலைவேறுபாடு உணர்த்தக் 'கொள்ள விசுத்திகொடி அமுதாம்' என்றது. விசுத்தித்தானம் வரை அறிவுக்காட்சியாகவும் அதற்குமேல் அநுபவக் காட்சியாகவும் விளங்குவள் என்பதாம்.

உள்ளொளி - குண்டலினி. அங்கங்கள் - ஆதாரங்கள். அங்கியின் மேனி - 'அங்கியைப்போல வெப்பமும், ஒளியுந்தோன்றஎழுந்து' என்று அநுபவ அடையாளம் கூறியது.

அவரோடும் என்றதுட்டு ஆதார தெய்வங்களாகிய பிரமன் முதலியோரை உணர்த்திற்று. கள் அவிழ் கோன் - தேன்விரியும் கொன்றை முதலிய பூவையணிந்த தலைவன். கலந்து - வேறற நின்று. உடனே நிற்கும் - தியானிக்கின்ற சிவயோகியின் உடனுய் நிற்கும். **(313)**

**கொடிய திரேகை குருவுள் இருப்பப்**
**படியது வாருணைப் பைங்கழ லீசன்**
**வடிவது வானந்தம் வந்து முறையே**
**இடுமுதல் ஆறங்கம் ஏந்திழை யாளே.** ***1197***

இம் - எனின், சத்தி பதிமண்டலத்திருப்ப நேரும் அநுபவம் அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : ஒளிக்கொடிபோன்ற சத்தி குருவாகிய பிரமரந்திரத்தில் இருப்ப, படிதலையுடையதாக வெளிப்படுவது வாருணையாம். அதனை நுகரும்போது விளையும் ஆனந்தமே இறைவன் வடிவாம்' இவ்வாருணையையும் ஆனந்தத்தையும் பராசத்தி உச்சி முதல் மூலம்வரை ஆறங்கங்களிலும் வந்து படைப்பாள் என்றவாறு.

கொடி உவமையாகுபெயராக அம்மையை உணர நின்றது. ரேகை என்பது மின்னொளியைப் போன்ற அம்மையின் ஒளியுரு. குரு - உத்தர குருவாகப் பிண்டத்துள் குறிக்கப்பெறும் உச்சி. குருவை அண்டத்துள்ளே பிரமகபாலம் எனவும் உத்தர குருவெனவும் வழங்குவர். அதுபோலப் பிண்டத்துள் உச்சியைக் குறிப்பர் யோகிகள்.

வாருணை - மதிமண்டலத்தூறும் அமுதம், இது வாருணி, அமுதம், கங்கை என்ற பல குறியீட்டு மொழிகளால் யோகியருலகத்து வழங்கப்பெறுவதை யோகசிகோபநிடதம் கொண்டு தெளிக.

அவ்வாருணி உச்சி முதல் ஆருதாரங்களிலும் பாய்கின்றபோது ஆனந்தம் விளையும்; அவ்வானந்தம் வியாபகமாய் ஆன்மாவைத் தன்னுள் அடக்கி நிற்கும்; அத்தகைய ஆனந்தமே சிவமாம் என்பது.

இவ்வானந்த வாருணியாகிய அமுதத்தைப் பராசத்தி அங்கங்கள்தோறும் வந்து வந்து அன்னம் பரிமாறும் தாய் போலப் பரிமாறுவாள் என்பதனை 'இடும்' என்று அருளியவாறு. (314)

**ஏந்திழை யாளும் இறைவர்கள் மூவருங்**
**காந்தார மாறுங் கலைமுதல் ஈரெட்டும்**
**ஆந்த குளத்தியு மந்திர ராயுவுஞ்**
**சார்ந்தனர் ஏத்த இருந்தனள் சத்தியே.** 1198

இ-ம் - எனின், பராசத்தியை ஏத்துவாரின் இயல்பு அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : சத்தியும், அயன் முதலான மூன்றுஇறைவர்களும், அறுவகை ஒலிகளும், பதினறு கலைகளும் பொருந்திய ஆஞ்ஞாசக்கரத்தில் உள்ள சத்தியும், மந்திரப்பேரரசும் சார்ந்த அன்பர் வழிபடப் பராசத்தி எழுந்தருளியிருந்தனள் என்றவாறு.

ஏந்திழையாள் முதல் மந்திரராயு வரை சொல்லப் பெற்ற நிலைகளைச்சார்ந்து வழிபடும் அன்பர்கள் ஏத்தப் பராசத்தி விளங்கினுள் என்க.

இறைவர்கள் மூவர் - அயன் அரி உருத்திரன் என்ற மூவரும். காந்தாரம் - ஓசை. காந்தாரம் ஒரு வகைப்பண்ணின் பெயராய் ஈண்டு ஓசைக்குப்பொதுப் பெயராயிற்று. கலைமுதல் ஈரெட்டு - பதினறுகலைகள். பேதாகலை முதலிய பதினறுகலைகள் மேலே உரைக்கப் பெற்றன. முதல் - கருதப்படுகின்ற.

ஆந்த குளத்தி - ஆர்ந்த குளத்தி, ஆர்ந்த என்பது எதுகைநோக்கி ஆந்த என நின்றது. குளத்தி - ஆஞ்ஞை ஆஞ்ஞா என்றவடசொல் பெண்பாலாதலின் ஆஞ்ஞா சக்கரத்தைக் குளத்தியெனப் பெண்பாலாகக்கூறியது. குளம் - நெற்றி, குளத்தி - நெற்றியாகிய புருவநடுவில் விளங்கும் ஆஞ்ஞை.

மந்திர ராயு - மந்திர ராஜு, எட்டேயவ்வும்' என்ற விதிப்படி ராஜு என்ற வடமொழிச் சிதை சொல் ராயு என ஆயிற்று. மந்திர ராயு - மகாமந்தி ரேஸ்வரர், அன்றி மந்திரங்களினரசாகிய திருவைந் தெழுத்துமாம். சார்ந்தனர் - இவற்றைச்சார்ந்த அன்பர் ஏத்த சத்தி யிருந்தனள் என்க. (315)

**சத்தியென் பாளொரு சாதகப் பெண்பிள்ளை**
**முத்திக்கும் நாயகி என்ப தறிகிலர்**
**பத்தியைப் பாழில் உகுத்தஅப் பாவிகள்**
**கத்திய நாய்போற் கதறுகின் றாரே.** 1199

இ - ெனின், சத்தியின் உண்மையை அறியாமை இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : பராசத்தி சாதகர்க்குச் சாதகமான பாலை யாவாள். அவளே முத்திக்கும் தலைவி; இதனை அறியாராய், அன்பைப் பாழான களர்நிலத்தில் சிந்திய பாவிகள் கத்துகின்ற நாய்போலக் கதறுகின்றார்களே; என்ன அறியாமை என்றவாறு.

சாதகப் பெண் பிள்ளை - அன்பர்க்கு அருள்செய் வதையே குறிக்கோளாகக்கொண்ட பாலையாவாள். பெண்பிள்ளை - பாலை. இது அம்மையின் மூன்று நிலைகளில் ஒன்று.

முத்திக்கும் நாயகி – சித்திகளாகிய இம்மை இன்பத்திற்கு மட்டுமன்றி முத்திக்கும் தலைவி. உம்மை எச்சவும்மை. அறிகிலராய பாவிகள் எனக் கூட்டுக. பாழ் - பாழான (பயன்படாத களர் களர்போன்ற) பூமி, விளைபுலமாகிய சத்தி சிவத்தினிடத்தில் பத்திசெலுத்த வேண்டியிருக்க, பாழான புலனின்பங்களிற் சிந்தி என்க.

கத்திய நாய்போல் கதறுகின்றரே - அடிபட்டுக் கத்திய நாய் மேலும் ஓலமிடுவதுபோலக் கதறுகின் றார்கள் என்பதாம். பயனற்ற, அன்பொடு பொருந்தாத தோத்திர பாராயணங்களால் பயனில்லை எனக்குறிப் பித்தவாறு.

**ஆரே திருவின் திருவடி காண்பார்கள்**
**நேரேநின் றோதி நினையவல் லார்க்குக்**
**காரேய் குழலி கமல மலரன்ன**
**சீரேயுஞ் சேவடி சிந்தைவைத் தாளே 1200**

இ - னின், அன்பர்களுக்கு அம்மை திருவடி சூட்டுவள் என அறிவித்தல் நுதலிற்று.

இ - ள்: ஞானமே வடிவாய அம்மையின் திருவுருவைக் காண்பவர்கள் ஆர்? நேராக நின்று தியானிக்க வல்லவர்களுக்கு, மேகத்தை ஒத்த கூந்தலையுடையாளாகிய பராசத்தி செந்தாமரை மலரை ஒத்த திருவடியைச் சிந்தையுள் வைத்து அருள் செய்வள் என்றவாறு.

திருவின் திருவடி காண்பார்கள் ஆர் - திருவாகிய பராசத்தியின் திருவடியைக் காண்பவர்கள் யார்? திருவடியை அவளாகத் தந்தாலன்றி, அன்பு நெறியானும், யோக முயற்சியானும் தானே காண்பேன் என்று ஆன்மபோதத்தால் அகங்கரித்து முயல்பவர்களுக்கு அரியள என்பது உணர்த்தியவாறு. திரு - ஞானம். கண்டு ஞானசொரூபியாகிய அருளன்னை, பசுபோதம் கழன்ற நிலையிலே காணத் தருவள் என்பது கருத்து.

நேரே நின்று - உடலை அசையாமல், உளத்தைக் கோணாமல் நிலைபெற்று நின்று. "கோணா மனத்தொடு குறிக்கொண்டு கீழ்க்கட்டி, வீணாத்தண்டூடே வெளியுறத் தானோக்கிக், காணாக்கண் கேளாச் செவி யென்றிருப் பார்க்கு" என்பதாம்.

ஓதி - மந்திரங்களை ஓதி. நினைய வல்லார்க்கு - தியானிக்க வல்லவர்களுக்கு.

காரேய் குழலி - மேகத்தை ஒத்த கரிய கூந்தலை உடையாள். அம்மையது கூந்தலின் அழகு கூறிற்று. காரேய் என்ற அடையை அம்மைக்கு அடையாக்கி மேகத்தையொத்த வரையாத வள்ளன்மையுடையாள் எனலுமாம் அப்போது காரேய் என்ற வினைத்தொகை உடையாளை விசேடித்து வந்ததாகக் கொள்க.

கமலமலரன்ன சேவடி, சீரேயும் சேவடி என்க. இவை மென்மையும் பெருமையும் உணர்த்தின. சிந்தை வைத்தாள் - கருணைமிக்குச் சிந்தைக்கண்தானே திருவடியை வைத்தாள் என்று ஆன்மாக்கட்கு என்றும் சுதந்திரமின்மையும் இறைவிக்குள்ள கருணையும் அநாதிநித்த சுதந்திரமுண்மையும் தோற்றுவித்தவாறு. (317)

**சிந்தையில் வைத்துச் சிராதியி லேவைத்து**
**முந்தையில் வைத்துத்தம் மூலத்தி லேவைத்து**
**நிந்தையில் வையா நினைவதி லேவைத்துச்**
**சந்தையில் வைத்துச் சமாதிசெய் வீரே.** *1201*

இம் - எனின், சமாதி செய்யும் முறை தெரிவித்தல் நுதலிற்று.

இ - ள் : மனத்திலும், சிரம் முதலான இடங்களிலும் தனக்கு முன்னிலும், மூலாதாரத்திலும் வைத்து குற்றப்படாத நினைவை அந்த இடங்களில் பதியப்பண்ணி, சந்த சுவடியான மந்திரங்களை (நாவில்) வைத்து நிட்டை கூடுவாயாக என்றவாறு.

சிந்தை - மனத்தின் சிந்திக்கின்ற நிலை. சிராதி - சிரம் முதலான ஆதாரங்கள், முந்தையில் வைத்தல் -

முன்னிலையில் உள்ள மூர்த்திகளிலும், பாவனையாலும் இருத்துதல, மூலத்திலே - மூலாதாரத்திலே. அதிலே - அந்த பராசக்தியினிடத்திலே. நிந்தை செய்யா நினைவு - தெய்வநிந்தை வேதநிந்தை செய்யாத நினைவு, குற்றம் செய்யாத நினைவு, இத்தகைய நினைவை அதிலேவைத்து என்க. சந்தை - சந்தசு; என்பது மந்திரம். சமாதி - தியானம். (318)

**சமாதிசெய் வார்கட்குத் தான்முத லாகிச்**
**சிவாதியி லாருஞ் சிலைநுத லாளை**
**நவாதியி லாத நயந்தது ஓதில்**
**உவாதி அவளுக் குறைவில தாமே. 1202**

இம் - எனின், நவந்தரு பேதங்களுள் எதனை வழிபடினும் அம்மை அருள்செய்வள் என அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : தியானிப்பவர்களுக்குத் தான் முதற்பொருளாகி, சிவம் முதலான நவந்தரு பேதங்களிலும் பொருந்துகின்ற வில்போன்ற நெற்றியையுடைய அம்மையை நவாக்கரங்களுள் ஆவதைச் செபிக்கின், அவளுக்கு, உபாசியானயோகி உறையுமில்லமாவான் என்றவாறு.

தான் முதல் ஆகி - தானே முதற்பொருளாகி; முன்னர்த் தான்தோன்றி எனலுமாம். சிவம், நாதம், சதாசிவம், மயேச்சுரம், உருத்திரன், மால், அயன் என்ற இவ்வெழுவருக்கும் சத்தி விந்து மனோன்மணி மகேசை உமை திருவாணி ஆகிநிற்றல். இதனை, சத்தியாய் விந்து சத்தியாய் மனோன்மனி தானாகி, ஒத்துறு மகேசை யாகி உமைதிரு வாணி யாகி, வைத்துறும்

சிவாதிக் கிங்ஙன் வருஞ்சத்தி ஒருத்தியாகும், எத்திறம் நின்றான் ஈசன் அத்திறம் அவளும் நிற்பள்'' என்ற சிவஞானசித்தித் திருவிருத்தத்தான் அறிக.

நவாதியிலாத நயந்தது ஓதில் - சிவம் முதலாகிய நவந்தரு பேதங்களில் விரும்பியதைப் போற்றின். உவாதி - உபாசி; தியானிப்பவன். அவனுக்கு உபாதி உறைவு இ(ல்)லது ஆம் எனப் பிரித்துக் கூட்டி, தியானிப்பவன் அம்மையின் ஆலயமாவான் என்க. (319)

**உறைபதி தோறும் முறைமுறை மேவி**
**நறைகமழ் கோதையை நாடொறு நண்ணின்**
**மறையுட னேநிற்கு மற்றுள்ள நான்கும்**
**இறைதினைப் போதினில் எய்திட லாமே.** *1203*

இ - ம் - எனின், அம்மையைத் தியானிக்கின் எல்லாக் கலைகளையும் எய்தலாம் எனல் நுதலிற்று.

இ - ள் : அம்மை எழுந்தருளியிருக்கின்ற இடங்கள் தோறும் முறைமுறையாக விரும்பி, தேன் மணக்கும் கோதை போல்வாளை நாடோறும் அடையின் வேதத்தோடு ஒருங்கெண்ணப்படும் கலைகள் நான்கும் ஓரிறைப் பொழுதில் தினைப்பொழுதில் அடையலாம் என்றவாறு.

பதி - தலங்கள்; சத்தி பீடங்களாகிய தலங்கள். முறைமுறை மேவி என்றது பௌர்ணமி, வெள்ளி, செவ்வாய் முதலிய நாட்களில் விரதங்களை மேற்கொண்டு, ஆசார சீலனுகச் செல்லுதலைக் குறித்தது.

மறையுடனே நிற்கும் மற்றுள்ள நான்கு - வேதம் ...ஆகமம் உபநிடதம் மிருதி புராணங்கள். அம்மையருள் ...றின் கலைஞானங்கள் எல்லாம் கைவரப்பெறும் என்ற ...ரும். (320)

**எய்திடலாகும் இருவினை யிப்பயன்**
**கொய்தளிர் மேனிக் குமரி குலாங்கன்னி**
**மைதவழ் கண்ணிநன் மாரிதுர்க் கையொடு**
**கைதவம் இன்றிக் கருத்துறும் வாறே.** 1204

இம் - னின், அம்மை அருளால் நல்வினைப் பயனை ...ந்தலாம் என்றல் நுதலிற்று.

இ - ள்: பெரிய நல்வினைப் பயனை எய்திடலாம், ...குலம் கொய்யப் பெற்ற தளிர்போலும் திருமேனி ...டைய குமரியும், விளங்குகின்ற கன்னியும், மை பூசிய ...கண்களுடையவளும், நல்ல மாரியம்மையும், துர்க்கையு ...ாகிய சத்திகளோடு வஞ்சனை யில்லாமல் தியானிக்கு ...றை இதுவாம் என்றவாறு. (321)

**கருத்துறுங் காலங் கருநு மனமுந்**
**திருத்தி யிருந்தவை சேரு நிலத்து**
**ஒருத்தியை உன்னி உணர்ந்திடு மன்மேல்**
**இருத்திநி எண்குணம் எய்தலும் ஆமே.** 1205

இம் - னின், அம்மையினருளால் எண்குணம் எய்த ...ம் என்றல் நுதலிற்று.

இ - ள்: அவளைக் கருத்தில் உறுங்காலத்தில் ...மனத்தால் தியானிக்க. இருந்த தூய்மையான நிலத்திற் ...சேருக. பராசத்தியை எண்ணித் தியானிக்க. அவள்

உலகில் நீடு வாழவைப்பள். அவளருளால் எண்குணங்க
எய்தலாம் என்றவாறு.

கருத்து உறுங்காலம் மனமும் திருந்திக் கருது -
அம்மை இரங்கி உன் கருத்தைப் பொருந்துகின்ற
காலத்தில் உன்மனத்தில் காமாதி பகைகள் இன்றித்
திருத்தித் தியானிக்க. கருது; முன்னிலையொருமை ஏவல்
வினைமுற்று.

சேரும் நிலத்து இருந்த வை - தியான பூமியில்
அவளை இருத்த வைப்பாயாக. ஒருத்தியை உன்னி
உணர்ந்திடு - தன்னிகரற்ற சத்தியைத் தியானித்தறிக.
மற்றவை வெளிப்படை. (322)

**ஆமையொன் றேறி அகம்படி யானென**
**ஓமஎன் றோதிஎம் உள்ளொளி யாய்நிற்கும்**
**நாம நறுங்குழல் தையலைக் கண்டபின்**
**சோம நறுமலர் சூடிநின் றாளே.** 1206

இம் - எனின், பொறி புலன்களையடக்கிப் பிரணவத்தைத் தியானிக்கின் மதிமண்டலம் வரை சத்தி வியாபித்துக் காட்சிவழங்குவள் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : ஓர் ஆமையில் ஏறி யான் அகம்படித் தொண்டன் என்று ஓம் என்றுச்சரித்து எமக்கு உள ளொளியாய் நிற்கும் மாலையையணிந்த நல்ல கூந்தலை யுடையவளாகிய பராசத்தியைக் கண்டபின் அவள் சந்திரப் பூவைச்சூடி நின்ருள் என்பதை உணரலாம் என்றவாறு.

ஆமை ஒன்று ஏறி ஆமைபோல ஐந்து பொறிகளையும் அடமுசுமாக அடக்கி, அதாவது பொறிகளை வென்று.

யான் அகம்படி என - யான் அகம்படித்தொண்டன் என்ன. அகம்படித் தொண்டன் - அணுக்கத் தொண்டன். ஓம என்று ஓதி - ஓம் என்று ஓதி, அகரம் சாரியை.

சோம நறு மலர்-மதிமண்டலத்துள்ள ஆயிர இதழ்த் தாமரை மலர். ஆடிநின்றாள் - அம்மண்டலம் வரை வியாபித்திருந்தாள் என்பதாம். (323)

**சூடிடும் அங்குச பாசந் துணைவழி**
**கூடும் இருவளைக் கோலக்கைக் குண்டிகை**
**நாடும் இருபது நன்னெடு ருத்திரம்**
**ஆடிடுஞ் சீர்புனை ஆடக மாமே** 1207

இம் - எனின், அம்மை பொன்மன்றுள் நாடகம் ஆடுமுறை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : அங்குசம் பாசம் சூடும் அழகிய கைகளில், பெரிய சங்கமும் குண்டிகையாகிய அமுத கலசமும் பொருந்தியிருக்கும் ; இருபதங்களாகிய நல்ல நெடிய மந்திரத்தை விரும்பும், சிறப்புப்புனைந்த பொன்மன்றுள் ஆடும் என்றவாறு.

அம்மையின் திருவுருவில் ஒருகையில் பாசமும், ஒருகையில் அங்குசமும், ஒருகையில் அமுதகலசமும், ஒருகையில் சங்கமும் தாங்கியிருக்கின்ற கோலம் அறிவிக்கப்படுகின்றது. இஃதறியாதார் துணைவழியைத்

தொலைவழியாக்கி, வினை - வினையல் எனப் பொருள் கொண்டு இடர்ப்படுவர்.

துணைவழி அங்குசப் பாசம் சூடிடும் - அடியார்களுக்கு வழித்துணையாக ஆயுதங்களைத் தாங்கும். சிவ சத்திகள் ஆயுதந்தாங்குதல் சங்கார கிருத்தியத்துக்கும். அல்லாரைக் கொன்று அன்பரைக்காத்தலாகிய அருளலுக்கும் ஆமென்பது சாத்திரத் துணிபு.

கோலம் கை இரு வளை குண்டிகை கூடும் - அழகிய திருக்கையில் பெரிய சங்கமும் குண்டிகையும் பொருந்தும். 'சிவ' என்னும் ஸ்ரீருத்ரத்துள்ள இருபதங்களை விரும்பும். 'சி' சிவத்தையும், 'வ' சத்தியையும் விளக்குவன ஆதலால் இருபதம்(சொல்) என்றது.

சிர்புனை ஆடகம் ஆடிடும் ஆம் - அழகு புனைந்த பொன்மன்றுள் திருநடனம் புரியும்; இறைவியின் சிர் கனைப் புனைகின்ற அசைகின்ற இதயத்தில் திருநடனம் புரியும் என்றுமாம். (324)

**ஆமயன் மாலரன் ஈசன் சதாசிவன்**
**தாமடி சூடிநின் றெய்தினர் தம்பதங்**
**காமனுஞ் சாமன் இரவி கனலுடன்**
**சோமனும் வந்தடி சூடநின் றுளே.** 1208

இம் - எனின், அம்மை அனைவரும் வணங்க நின்றமை அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : பிரமன் திருமால் மகேசுரன் சதாசிவன் இவர்கள் அம்மையின் திருவடியைச் சூடித் தத்தம்

பதவியைப் பெற்றனர். காமனும் அவன் தம்பியாகிய சாமனும்; சூரியனும் அங்கியும், சோமனும் வந்து திருவடியைத் தாம்சூடி அவர்கள் உய்ய விளங்கினள் பராசத்தி என்றவாறு.

'ஆதித்தனம்புலி அங்கி குபேரன் அமரர்தங்கோன், போதிற் பிரமன் புராரி பொதியமுனி, காதிப்பொரு படை கந்தன் கணபதி காமன் முதல், சாதித்த புண்ணியர் எண்ணிலர் போற்றுவர் தையலையே என்றது காண்க. (225)

சூடும் இளம்பிறை சூலி கபாலினி
நீடும் இளங்கொடி நின்மலி நேரிழை
நாடும் நடுவிடை ஞான முருவநின்
றாடு மருள்வழி அண்ட முதல்வியே. 1209

இம் - எனின், அம்மை சுழிமுனையாகிய உச்சியிற் சென்று விளங்குதலை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: இளம்பிறையைச் சூடுகின்ற சூலியும், கபாலத்தையணிந்தவளும் நீடிய இளங்கொடிபோல்பவளும், இயல்பாகவே நின்மலமானவளும். நேரிழையும் ஆகிய அண்டத் தலைவி நடுநாடியின் வழியாக ஞானம் விளங்க நின்று திருநடம்புரிவள் என்றவாறு

நடுநாடியின் வழியாக ஞானம் உருவுருவி விளங்க உச்சியில் விளங்குவாள் என்பது கருத்து. (326)

அண்ட முதலாய் அவனி பரியந்தங்
கண்டதொன் றில்லைக் கனங்குழை யல்லது
கண்டனுங் கண்டியு மாகிய காரணங்
குண்டிகை கோளிகை கண்டது ஞாலே 1210

இம் - எனின், எல்லாம் சத்திமயம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: அண்டம் முதலாக பூமிவரை சத்தியையல்லது கண்டதோரு பொருள் இல்லையாம், அவள் சிவமும் சத்தியுமாகிய காரணம் பெண்ணும் ஆணுமாகப் படைப்பதற்காக என்றவாறு.

அண்டமுதல் அவனிபரியந்தம் பராசத்தி வியாபித்திருத்தலால் அவளையன்றிக் கண்டபொருள் ஒன்றும் இல்லையாம். கண்டன் - சிவன். கண்டி - சத்தி குண்டிகை - பெண். கோளிகை - ஆண். இவை அளையல் கிளவியாய் இருபாலாரையும் உணர்த்தின. உலகத்து ஆணும் பெண்ணுமாக உடலைத் தோற்றுவிப்பதற்காகச் சிவமும் சத்தியுமாக வேறு பிரிந்தது என்பதாம். (327)

**ஆலமுண் டானமு தாங்கவர் தம்பதஞ்**
**சாலவந் தெய்துந் தவத்தின்பந் தான்வருங்**
**கோலிவந் தெய்துங் குவிந்த பதவையோ**
**டேலவந் தீண்டி இருந்தனள் மேலே.** *1211*

இம் - எனின், மூலமுதல் பிரமரந்திரம் வரை சத்தி வியாபித்த நிலை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: அம்மை ஆலகாலமுண்ட சிவத்திற்கு அமுது ஆவள்; அவர் அடையும் பதவியாவள்; மிக வந்தடையும் தவத்தால் வரும் இன்பமாகத் தானே வருவாள். அத்தகைய அம்மை ஆதாரங்கள்தோறும் கோலி வந்து அடையப்பெறும் குவிந்த வழியாகிய

சுழிமுனையோடு பொருந்த வந்து செறிந்து உச்சியின் மேலே விளங்கினள் என்றவாறு.

சுழிமுனையாகிய நடுநாடி. ஆறு ஆதாரக்கிரந்திகளில் பொருந்தி உச்சியை அடைதலின் அம்மையும் மூலாதாரத்தினின்று பிரமரந்திரம் வரை நடுநாடியின் வழியாக வியாபித்திருக்கின்றாள் என்பதாம். (328)

**மேலாம் அருந்தவம் மேன்மேலும் வந்தெய்தக்**
**காலால் வருந்திக் கழிவார் கணத்திடை**
**நாலா நளினநின் றேத்திநட் டுச்சிதன்**
**மேலா மெழுத்தின ளாமத்தி னாளே** 1212

இம் - எனின், அம்மை கருணையால் வந்தடைவதைக் குறிக்கொண்டு காக்க எனல் நுதலிற்று.

இ - ள் : மேலாம் அரிய தவம் மேன்மேலும் வந்தடையவும், பிராணவாயுவால் வருந்திக் கணத்துட் கழிவார் அறியார். அமுதமேயாய அன்னை நாலிதழ்த் தாமரையினின்று வழிபடப்பெற்று, உச்சி நடுவில் மேலாகிய எழுத்தாக விளங்குவள் என்றவாறு.

ஆமம் - உணவு, ஈண்டு அமுதத்தையுணர்த்தியது. ஆமத்தினாள் - அமுதமயமானவள்: நீராக விளங்குபவள் என்றுமாம் அப்பு சத்தியம்சம் ஆதலின், எய்தவும் என்ற உம்மை குறைந்து நின்றது. கால் - பிராணவாயு. பிராணனை வீணாக அழித்தலால் வருந்திக் கணத்திடை அழிவர் என்றது. பிராணனைக் கட்டுப்படுத்தினவர்களே இன்புடன் நீண்டகாலம் இறப்பின்றி வாழ்பவர்; அங்ஙனம் கட்டுப்படுத்தாதவர் வீணேகழிவர் என்றருளினார்.

நாலாம் நளினம் - நாலிதழ்த்தாமரை. மூலாதாரத் தாமரை. அதில் சத்தி நிற்க அதனை வழிபாடு எனப் பொருள் கொள்க. நட்டுச்சி - பிரமரந்திரம். நடுஉச்சி நட்டுச்சி. மேலாம் எழுத்து - பரநாத ஒலி. (329)

**ஆமத் தினிதிருந் தன்ன மயத்தினள்**
**ஓமத்தி லேயும் ஒருத்தி பொருந்தினள்**
**நாம நமசிவ என்றிருப் பார்க்கு**
**நேமத் துணைவி நிலாவிநின் றாளே.** 1213

இம் - எனின், பராசத்தியின் மந்திரமும் இதுவெ மெனல் நுதலிற்று.

இ - ள் : ஆமாசயமாகிய சீரணத்தானத்தில் அன்னமயமாக விளங்குபவள்; ஓமத்தில் ஒளிவடிவாக விளங்குபவள்; அவள் நாமமாகிய 'நம சிவ' என்று தியானிப்பார்களுக்கு நியமத்தின் துணைவியாகிய அவள் விளங்கி நிற்பாள் என்றவாறு.

ஆமாம் - ஆமாசயம் சீரணிக்கும் தானமாகிய குடலில் அன்னமயமாக உபகரிப்பவள்.

ஓமத்தில் ஏயும் ஒருத்தி பொருந்தினள்; ஓமம்-ஓமகுண்டமாகப் பிண்டத்தில் விளங்கும் உந்திச்சுழி. சுவாதிட்டானசக்கரம் அங்கே விளங்குதலானது ஓம குண்டத்தில் சிவாக்கினியாக விளங்குதல். (330)

**நிலாமய மாகிய நீள்படி கத்தின்**
**சிலாமய மாகுஞ் செழுந்தர ளத்தின்**
**சுலாமய மாகுஞ் சுரிகுழற் கோதை**
**கலாமய மாகக் கலந்துநின் றாளே.** 1214

இ-ம் - எனின், தேவி கலாமயமாகக் கலந்திருக்கும் தன்மை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : நிலவின் வடிவாகிய நீண்ட வெண்பளிங்குக் கல்லின் தன்மையளாவள்; செழுமையான முத்தில் விளங்கும் தன்மையளாவள்; அங்ஙனமாய சுருண்டகுழலை யுடைய பேதையாகிய அன்னை கலைகளின் வடிவமாக உயிர்களோடு ஒன்றியிருந்தாள் என்றவாறு.

சிலா - கல். சுலாமயம் - ஒளிசூழுந்தன்மை. கலாமயம் - கலைகளின்வடிவு, கலை - சத்திக்குரிய பதினாறு கலைகளும், உயிர்களுக்கு உணர்வு ஊட்டுவதாகிய அறுபத்துநான்கு கலைகளும் ஆம். **(331)**

**கலந்துநின் றுள்கன்னி காதல னோடுங்**
**கலந்துநின் றுளுயிர் கற்பனை எல்லாங்**
**கலந்துநின் றுள்கலை ஞானங்கள் எல்லாங்**
**கலந்துநின் றுள்கன்னி காலமு மாயே. 1215**

இ-ம் - எனின், இதுவும் அம்மை பரிபாகத்திற்கு ஏற்ப கலந்தமை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : கன்னியாய பராசத்தி தன்காதலனாகிய சிவத்தோடும் கலந்திருந்தாள். உயிர்களாகிய படைப்புக்கடோறும் கலந்து நின்றுள். கலைஞானங்களிலும், காலங்களிலும் கலந்து விளங்கினள் என்றவாறு.

காதலன் - பரசிவம். உயிர் கற்பனை - உயிர்கள் உடம்பொடு கூட்டப்படுதலாகிய சிருட்டி, அன்றிக் கற்பனையால் கற்பிக்கப்பட்டனவாகிய உயிர்கடோறும்

எனலுமாம். கலைஞானம் - பாசஞானம். காலம் - கால தத்துவம், ஆகவே காதலனோடும் என்பது பதிஞானமாகக் கலந்திருப்பதையும், கற்பனையெல்லாம் என்றது பசுஞான மாகக் கலந்திருப்பதையும், கலை ஞானங்கள் எல்லாம் என்றது பாசஞானமாகக் கலந்திருத்தலையும் உணர்த்தின. அவரவர் பரிபாகத்திற்கேற்ப அம்மை கலந்து அருள் செய்யுமுறை அறிவித்தவாறு. (332)

**காலவி எங்குங் கருத்தும் அருத்தியுங்**
**கூலவி ஒன்றுகுங் கூடல் இழைத்தனள்**
**மாலினி மாகுலி மந்திர சண்டிகை**
**பாலினி பாலவன் பாகம தாமே.** 1216

இதுவுமது,

இ - ள்: காலவடிவானவள்; எவ்விடத்திலும் கருத்தும் விருப்பமுமாகக் கலந்து அநுகூலமாக இருப்பவள்; அநந்யமாய் விளங்கும் கலப்பினைச் செய்தனள்; அவள் யாரெனின் மாலினி, மாகுலி, மந்திரசண்டிகை பாலினி, இறையொருபாகமானவள் என்றவாறு.

காலவி - காலவடிவானவள். ஆன்மாக்களுக்குக் காலதத்துவமாயிருந்து சுகதுக்கங்களை நுகர்த்துபவள்.

கருத்து - உயிர்களுடைய எண்ணம். அருத்தி - அவர்களுடைய ஆசை. இவையனைத்தையும் அவரவர் பரிபாகத்திற்கு ஏற்ப அருத்துதலின் அதற்கு அநுகூலவி என்றார். அநுகூலவி என்பது முதல் குறைந்து கூலவி என்றாயது. கூலம்-கூட்டம். கூட்டமானவள் எனலுமாம்.

ஒன்றுகும் கூடல் இழைத்தனள் - தன்னைத் தியா னிக்கும் உயிர்களோடு ஒன்றித்து நிற்கும் கலப்பினைச் செய்தாள் ; என்றது அறிவானும் அறியப்படுபொருளு மாயிராது ஒன்றுனுள் என்பதாம்

மாலினி - பரமாலினி என்னும் நாமத்தின் ஒரு பகுதி. மாகுலி - குலா - மூலாதாரம் முதலியவற்றை இடமாகக் கொண்டவள். மந்திர சண்டிகை - நினைப் பவர்களைக் காக்கின்ற சண்டிகாதேவி. சண்டிகா - அடியார்களின் பாவங்களாகிற காட்டுக்குப் பெருங் காற்றுப்போல்பவள். பாலினி - காப்பவள். பாலவன்- பாலிப்பவனுகிய சிவன். அம்மையின் பாலவனுகிய சிவன் எனலுமாம். (333)

**பாகம் பராசத்தி பைம்பொன் சடைமுடி**
**ஏகம் இருதயம் ஈரைந்து திண்புயம்**
**மோக முகமைந்து முக்கண் முகந்தொறும்**
**நாகம் உரித்து நடஞ்செய்யும் நாதர்க்கே** 1217

இம் - எனின், யானையுரித்துப் போர்த்தி வீரநடம் செய்கின்ற பெருமானுக்குப் பக்கமுள்ள சத்தியெனல் நுதலிற்று.

இ - ள் : பசிய பொன்போலும் சடைமுடியையும், ஒரே இருதயத்துடன் பத்துக்கரங்களும் ஐந்துமுகங் களும் முகங்கள்தோறும் மூன்று கண்களும் தாங்கி யானையையுரித்து நடம்செய்யும் நாதர்க்கு இடப்பாகத் துள்ள பராசத்தியாவாள் என்றவாறு.

ஏகம் இருதயம் என்றது உடலொன்றுதலை உணர்த்திற்று. நாகம் - யானை. (334)

**நாதனு நாலொன் பதின்மருங் கூடிநின்**
**ஞேதிடுங் கூட்டங்கள் ஓரைந் துளஅவை**
**வேதனும் ஈரொன்ப தின்மரும் மேவிநின்**
**றாதியும் அந்தமு மாகிநின் றாளே** *1218*

இம் - எனின், தத்துவங்களும் பிரமாதிதேவர்களும் அனைத்தும் அன்னையே எனல் நுதலிற்று.

இ - ள் : புருஷனாகிய ஆன்மாவும் முப்பத்தாறு தத்துவங்களும் சேர்ந்து உடலாக நின்றது. அதிலே சொல்லப்படுகின்ற கூட்டமாகிய பஞ்சேந்திரியங்கள் உள்ளன. அவ்வுடலாகிய பிரமனும், பதினெட்டுத் தேவகணங்களும் விரும்பித் துதிக்க அவற்றிற்கு எல்லாம் முதலும் முடிவுமாகி நின்றாள் அன்னையார் என்றவாறு.

உடல் உயிரோடு கூடிய முப்பத்தாறு தத்துவக் கூட்டம். அதில் பஞ்சேந்திரியங்கள் உள்ளன. அந்த உடலே வேதன் தேவக்கணங்கள் முதலிய அனைத்தும். அவைகள் விரும்ப அம்மை அவற்றிற்கு முதலும் முடிவுமாக விளங்கினாள் என்பது கருத்து. (335)

**ஆகின்ற நாள்கலை ஐம்பத் தொருவர்கள்**
**ஆகிநின் றார்களில் ஆருயி ராமவள்**
**ஆகிநின் றாளுட னாகிய சக்கரத்**
**தாகிநின் றானவன் ஆயிழை பாடே** 1219

இம் - எனின், சக்கரமாகச் சிவமும், அக்கரமாக அன்னையும் இருக்குமுறை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : எல்லாம் படைக்கப்படுகின்ற சிருட்டிக காலத்து, காலதத்துவத்தின் காரியமான ஐம்பத்தொரு அக்கர வடிவினர்களாக இருந்தவர்களுள் அரிய உயி ராகக் கலந்து நின்றாள் அன்னை; சிவம் அன்னையின் பக்கத்து அவளுடன் ஆவதற்காகச் சக்கரத்து ஆகி நின்றான் என்றவாறு.

ஆகின்றநாள் - சிருட்டிக்காலம். அகாராதி க்ஷகா ராந்தமான ஐம்பத்தொரு அக்கரங்களுக்கும் உயிர் போலக் கலந்திருப்பவள் அன்னை. அப்போது மாலா மந்திரங்களாகிய அக்கரங்கள் விளங்கும் சக்கரத்துள் இறைவன் அவளுடன் ஆவதற்காக நின்றான் என்பது.

ஆகிநின்றார்களில் ஆருயிராமவள் ஆகி நின்றாள்; அவன் (அவள்) உடனாகிய, சக்கரத்து ஆயிழைபாடே ஆகிநின்றான் எனக்கூட்டுக. (336)

**ஆயிழை யாளொடு மாதிப் பராபிடம்**
**ஆயதொ ரண்டவை யாறும் இரண்டுள**
**வாய மனந்தொ றறுமுக மவைதனில்**
**ஏயவார் குழலி இனிதுநின் றாளே.** 1220

இதுவுமது.

இ - ள் : சத்தியோடு சிவத்திற்கு இடமான சக்கரம் ஆறும் இரண்டுமாக உள்ளன. அவற்றுள் மனம்சென்று வாய்ப்பதான ஆறு இடங்களில் அன்னை விளங்கி நின்றாள் என்றவாறு.

அண்டவை - அண்டவடிவான இடம்; என்றது சக்கரத்தை. வை - வைப்பிடம். ஆறும் இரண்டும்

உள என நிற்கும் எண்ணும்மை ஓரிடத்துக்கெட்டது. இங்ஙனம் பிரித்தோதியது மூலாதாரமுதல் பிரமரந்திரம் வரையுள்ள ஆறு சக்கரங்களும் பிண்டத்தினுள்ளாக விளங்குதலானும், அவற்றிற்கு மேற்பட்ட உச்சியும் துவாதசாந்தமும் உடலைக்கடந்து விளங்குதலானும் என்க. இந்த ஆருதாரச் சக்கரங்களிலும் மனம்பாயும். ஆதலால் வாய மனந்தொறு அறுமுகம் அவைதனில் என்றது. வாய - வாய்த்த தியானமூலமாக ஆருதாரங்களிலேதான் மனம் சென்றுபற்ற இயலும். அதுவரை அம்மையும் வேருய் விளங்குவள். அதற்கு மேலனவாகிய ஈரிடமும் மனமிறந்த நிலை; அங்கு அருளம்மை இறைவனோடு ஒன்றி ஒளிப்பிழம்பாகக் காட்சி வழங்குவள். ஆதலின் இங்ஙனம் கூறியது. இனிது நின்ருள் என்பதையும் நோக்குக. (337)

**நின்றனள் நேரிழை யோடுடல் நேர்பட**
**இன்றெ னகம்படி ஏழும் உயிர்ப்பெய்தும்**
**துன்றிய வோரொன் பதின்மருஞ் சூழலுள்**
**ஒன்றுயர் வோதி யுணர்ந்துநின் ருளே.** 1221

இம் - எனின், என்னை அறிவித்து எனக்குள் அம்மை எழுந்தருளியிருந்தாள் எனல் நுதலிற்று.

இ - ள்: நேரிழையாகிய பராசத்தி என்னுள்ளே நின்ருள்; உடல் நான்று விழாமல் நேர்பட, இன்று என் அகத்துள் படிவதான பிராணன் ஆருதாரங்களையும் கடந்த ஏழாநிலையை எய்தும். உட்லுட் பொருந்திய ஒன்றும் ஒன்பதுமாகிய வாயுக்களின் சூழலில் பிராணனுகிய ஒன்றே உயர்வானது என்றறிவித்துத் தானும் யானுணர விளங்கினுள் என்றவாறு.

நேரிழை நின்றனள்; (அவள்) ஓடு உடல் நேர்பட இன்று என் அகம்படி உயிர்ப்பு ஏழும் எய்தும்; துன்றிய ஓர் ஒன்பதின்மரும் சூழலுள் ஒன்று உயர்வு ஓதி உணர்ந்து நின்றாள் எனக் கூட்டுக.

நேரிழை நின்றனள் என்றது தமக்கு அருள் வழங்க அம்மை வெளிப்பட்டு நின்றதை வியந்து விரைந்து கூறியது.

அவளோடு என் உடல் கீழ்நான்று விழாமல் நேரே நட்டமாக இருக்க என் அகத்துள்ளே படிவதாகிய பிராணன் ஆறுதாரங்களையும் கடந்து ஏழாம்நிலையாகிய சிரமேற்றானத்தைச் சேரும்;

ஒரொன்பதின்மர் என்பதை உம்மைத் தொகையாகக் கொள்க, ஒருவரும் ஒன்பதின்மரும் என. அவர்கள் தச வாயுக்கள். அவர்கள் சூழல் - அவர்களுறை விடமாகிய உடம்பு. ஒன்று - பிராண வாயு. அதுவே சிறந்தது உயர்ந்தது என்று அறிவித்து அதனோடு தானும் அடியேன் உணர வெளிநின்றாள் என்றவாறு. உணர்ந்து என்னும் செய்தெனெச்சத்தைச் செயவெனெச்சமாக்குக. (338)

**உணர்ந்தெழு மந்திரம் ஓமெனும் உள்ளே**
**மணந்தெழு மாங்கதி யாகிய தாகுங்**
**குணர்ந்தெழு சூதனுஞ் சூதியுங் கூடிக்**
**கணந்தெழுங் காணுமக் காமுகை யாமே.** **1222**

இ-ம் - எனின், பிரணவசெபத்தால் விளையும் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : அறிந்து உணர்ந்து எழுகின்ற மந்திரம் ஓம் என்பதாகும். அங்ஙனம் ஓமென்பதற்குள்ளாக, கலந்தெழுகின்ற கதி விளைவதாகும். கொணர்ந்து எழுவ தாய சூதானவனும் சூதானவளும் கூடிக் கலந்தெழுவர். காணப்பெறும் அவள் காமுகையாம் என்றவாறு.

பிரணவம் சிவம் சத்தி, இருள் மலம், சுத்தமாயை உயிர் ஐந்தும் பொருந்தியதாக இருத்தலை அநுபவத்தில் கண்டு. எழுகின்ற மந்திரமாம். அதனை உச்சரிப்பதற் குள்ளாக ஆன்மா மாயையினின்றும் மலத்தினின்றும் விலகி. சிவசத்திகளோடு கூடியிருத்தலாகிய கதி விளை வதாம். இவ்வண்ணம் ஆன்மாவைக் கொணர்ந்து மேலெழுவதாகிய நாதமும் விந்துவும். அப்பிரணவத் துடன் எழுவர் என்றது ஆன்மாநுபவமாவர் என்ப தாம். சூதன்—நாதம். சூதி - விந்து சத்தி. அக்காமுகை காணும் ஆம் - அக்காமியான சத்தி வெளிப்பட்டு அருள்வள் என்பதாம். சத்தியைக் காமுகை என்றது சிவத்தோடிணைபிரியாது சிவகாமியாயிருத்தலின். (339)

**ஆமது வங்கியும் ஆதியும் ஈசனும்**
**ஆமது மண்டல மாருத மாதியும்**
**ஏமது சீவன் சிகைபங் கிருணைடிடக்**
**கோமலர்க் கோதையுங் கோதண்ட மாகுமே. 1223**

இம் - எனின், சத்தி சீவனைப் பாதுகாப்பவள் என உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : அச்சத்தி அங்கியும், ஆதிசத்தியும், மகேச னும் ஆம். சூரிய மண்டலம் சந்திர மண்டலங்களும் காற்று முதலிய பூதங்களும் ஆம். . தியானிக்கின்ற

ஆன்மாவின் சிகையாகிய பங்கி இருண்டிட, சிறந்த வேராலாகிய கோதைபோல்வாளாகிய சத்தியும் சுழி முனை நாடியில் சீவனுக்குப் பாதுகாவலாக இருக்கும் என்றவாறு.

பிருதிவி முதலியபூதங்களாகவும், சூரியன் சந்திரன் அக்கினி முதலிய ஒளிகளாகவும் விளங்குவள் சத்தி. மேலும், கோமலர்க்கோதையாகியசத்தி நடுநாடியாகிய கோதண்டத்தில் ஆகி, சிகைநறுக்க சீவனுக்கு ஏமமது ஆகும் என்க.

கோ தண்டம் - சிறந்த முதுகந்தண்டம்; என்றது நடுநாடியை. நடுநாடி வாயிலாகச் சத்தியுச்சியைப் பொருந்தின் உறுப்புச் சிவக்கும், உரோமம் கறுக்கும் ஆதலின் 'சிகை பங்கு இருண்டிட' என்றது. ஏமமது எனற்பாலது ஏமது என எதுகைநோக்கி தொகுத்தல் விகாரமாயிற்று. (340)

**ஆகிய கோதண்டத் தாகு மனோன்மணி**
**ஆகிய ஐம்ப துடனே அடங்கிடும்**
**ஆகும் பராபரை யோடப் பரையவள்**
**ஆகு மலனைக் கருமத்தள் தானே** 1224

இ-ம் - எனின், சத்தியே பஞ்சகிருத்திய பரம காரணி என்றல் நுதலிற்று.

இ-ள்: அங்ஙனமாகிய சுழிமுனையில் அமர்ந்த மனோன்மணி சத்தியிடம் சுத்தமாயையினது காரியமாகிய ஐம்பது அக்கரங்களும் ஒருசேர அடங்கும். அங்ஙனம் அவளே பராபரையும் பரையும் ஆவள். அவளே பஞ்ச கிருத்தியம் பண்ணுபவள் என்றவாறு.

எத்திறம் நின்றான் ஈசன் அத்திறம் அவளும் நிற்ப ளாதலானும், சிவமெனும் பொருளும் ஆதிசத்தியொடு புணரின் எத்தொழிலும் வல்லதாம் ஆதலானும், பஞ்ச கிருத்தியம் பண்ணுவாள் என்றதாம், ஐம்பத்தொரு அக்கரங்களுக்கும் மூலமான பரா வாக்கைப் பரை என்றும், பைசந்தி வாக்கைப் பராபரை என்றும் வழங்குதல் மந்திர நூற்றுணிபாதலின் அதனை உணர்த்த 'பராபரையோடப் பரையவள்' என்றது. (341)

**தானிகழ் மோகினி சார்வான யோகினி**
**போன மயமுடை யாரடி போற்றுவர்**
**ஆனவ ராவியி னாகிய வச்சிவந்**
**தானும் பரசிவ மேலது தானே.** *1225*

இம் - எனின், அம்மையே சிவமும் பரசிவமுமாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: தானே நிகழ்வதாய மோகினி, அதனைச் சார்ந்துள்ள யோகினி சத்திகள் இவற்றைக் கடந்து சென்ற திருவருட்சத்திமயமுடையாராய் அவளது திரு வடியைப் போற்றுபவர்களின் உயிரினிடமாக விளங்கும் சிவம்; அதுதானே மேற்பரசிவமாம் என்றவாறு.

மோகினி பரிவாரசத்திகளுள் ஒன்று. இது தன் அதிகார எல்லைவரை தானே இயங்கும் ஆற்றலுடையது. யோகினி அதனைச்சார்ந்து ஆணைவழி நடப்பது. இவ் வியோகினி கூட்டமான ஆவரண சத்திகள் இவர்களால் காக்கப்படுகின்ற எல்லையைக்கடந்து சென்றால் விளங்கு வது சத்தி ஆகும். அந்த மயமுடையாராக அவள் அடி போற்றுபவர்களே சிவமாவர்; பரசிவமுமாவர் என்பது கருத்து. (342)

**தானந்த மேலே தருஞ்சிகை தன்னுடன்**
**ஆனந்த மோகினி யாம்பொற் றிருவொடு**
**மோனையில் வைத்து மொழிதரு கூறது**
**வானவை யோமெனும் அவ்வுயிர் மார்க்கமே. 1226**

இம் - எனின், வியட்டிப் பிரணவநிலையை விளக்குதல் நுதலிற்று.

இ - ள் : தானாகிய சிவம் அதன் இறுதிக்கண்ணதாகிய சத்தி, அடுத்துத்தரப்படும் நாதம். அதனுடன் விளங்கும் ஆனந்த மோகினியான மாயை. செம்பொற்றிருவாகிய மலம் இவை முதலாக வைத்துச் சொல்லப்படுகின்ற பகுப்பினையுடையதானவை 'ஓம்' என்னும் அவ்வுயிர் வரும் மார்க்கமாம் என்றவாறு.

தான் என்பது வேற்று முதல்வனில்லாத சிவத்தைக் குறிப்பது; ஆகவே சிவம். சிவம் என்பது அகாரம். அந்தம் - இறுதி. சிவபரம்பொருளை இறுதியாகவுடையது சத்தி. சத்தி சிவத்துள் ஒடுங்குதலின் சத்தி சிவத்தை இறுதியாகவுடைய அந்தம் என அழைக்கப்பட்டது. ஆகவே சத்தியக்கரமாகிய உகரம். மேலே தரும் சிகை - அடுத்து நிற்கின்ற செம்பொற்றிருவாகிய மலத்திற்கு மேலுள்ளதாகிய நாதம். சிகை - நாதம். ஆனந்த மோகினி - ஆனந்த வடிவான விந்து. ஆனந்தம் - சர்வானந்தகரமான திரிகோணசக்கரம். அதன் நடுவில் விளங்கும் மோகினி என்றது விந்துவை. ஆகவே சிவம், சத்தி, நாதம், விந்து, மலம் என்ற ஐந்தாகிய கூறுகளையுடைய பிரணவம் என்பதாம். அகார உகார நாத விந்து மகாரங்கள் பிரணவ வியட்டியாம் என அறிக.

**மார்க்கங்கள் ஈன்ற மனோன்மணி மங்கலி**
**யார்க்கும் அறிய வரியா ளவளாகும்**
**வாக்கு மனமும் மருவியொன் றாய்விட்ட**
**நோக்கும் பெருமைக்கு நுண்ணறி வாமே.** 1227

இம் - எனின், பராசத்தியின் அருமையையும் எளிமையையும் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: சமயநெறிகள் அனைத்தையும் பெற்ற மனோன்மணி, நித்தியமங்கலை, யார்க்கும் அறிதற்கு அரியவள், வாக்கும் மனமும் பொருந்தி ஒன்றான நோக்கப் படும் பெருமைக்கு நுண்ணறிவாக விளங்குபவள் என்றவாறு.

அறுவகைச்சமயத்தையும் படைத்த சமயமுதல்வி சத்தியாதலின் மார்க்கங்கள் ஈன்ற மனோன்மணியென்றது. வாக்கும் மனமும் மருவி ஒன்றாய்விட்ட நோக்கும் பெருமைக்கு - திரிகரணமும் ஒன்றோடொன்று கலந்து ஒன்றாய் விட்ட நோக்கும் பெருமைக்கு. (344)

**நுண்ணறி வாகும் நுழைபுலன் மாந்தர்க்குப்**
**பின்னறி வாகும் பிரானறி வத்தடஞ்**
**சென்னெறி யாகுஞ் சிவகதி சேர்வார்க்குத்**
**தன்னெறி யாவது சன்மார்க்க மாமே** 1228

இம் - எனின், பசுபோதம் பதிபோதம் இவற்றின் இயல்புணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: மக்கட்கு மிகக்கூரிய புலனுடைமை நுண்ணறிவாகும். அவ்வறிவிற்குப் பின்னிருந்து நுண் ணறிவை யியக்குமறிவு இறைவனை யறியும். இறைவன்

அருளிய ஞானமாகும். அத்தடமே உயிர்கள் செல்லும் நெறியாகும். சிவகதி சேர்வார்க்குரிய நெறி சன்மார்க்க நெறியாம் என்றவாறு.

நுண்ணறிவு - பசுபோதம். பிரானறிவு - பதி போதம். ஆன்மாக்களின் அறிவு காரியப்படுவது பிரானறிவு உண்ணின்று இயக்குதலின் பின்னறிவாகும் என்றது. தடம் - அடிப்பட்ட நெறி, சன்மார்க்கம் - ஞானநெறி. (345)

**சன்மார்க்க மாகச் சமைதரு மார்க்கமுந்**
**துன்மார்க்க மானவை எல்லாம் துரந்திடும்**
**நன்மார்க்கத் தேவரும் நன்னெறி யாவதுஞ்**
**சன்மார்க்கத் தேவியுஞ் சத்தியென் பாளே.** 1229

இம் - எனின், சன்மார்க்கப் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: சன்மார்க்கமாக அமைந்த நெறிகள் தீய நெறிகளை அகற்றிவிடும். நன்மார்க்கத்தால் நல்லொழுக்கம் ஆம், அச் சன்மார்க்கத்தைக் காட்டிய தேவியும் சத்தியே என்றவாறு.

சன்மார்க்கம் துன்மார்க்கத்தைத் துரத்தி, நல்ல ஒழுக்கத்தை விளைவிக்கும்; அதனையருளியவள் சத்தி என்பதாம். (346)

**சத்தியும் நானுஞ் சயம்புவும் அல்லது**
**முத்தியை யாரும் முதலறி வாரில்லை**
**அத்திமேல் வித்திடில் அத்தி பழுத்தக்கால்**
**மத்தியி லேற வழியது வாமே.** 1230

இம் - எனின், பிறிது மொழிதலணியாக பிரணவத் தியானப்பயனை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : முத்தியை முதலில் அறிந்தவர்கள் அம்மையும், நானும், சுயம்புவாகிய சிவமுமே. வேறு யாரும் இல்லையாம். அத்திமேல் வித்திட்டால், அத்தி பழுத்திட்டால். மத்தியாகிய ஆஞ்ஞா சக்கரத்தை யடைய அதுவே வழியாம் என்றவாறு.

சயம்பு - சுயம்பு என்பதன் திரிபு, அத்தி - யானை யானை என்றது விநாயகக் கடவுளை, ஈண்டு ஓ என்பதனை யுணர்த்திற்று. வித்து - விந்து என்பதன் வலித்தல் விகாரம், வித்திடலாவது 'ஓ' என்பதன்மேல் 'O' இடல். அப்போது 'ஓம்' என்றாகும்.

அத்தி - பிரணவம். பழுத்தக்கால் - தீயால் இரும்பு பழுத்தாற்போலப் பிரணவமானது குண்டலியினியால் வெதுப்புற்றபோது.

மத்தியில் - சுழிமுனையின் இறுதியாகிய ஆஞ்ஞா சக்கரத்தில், ஏற - உயர. அதுவே வழியாகும் - அதுவே பிரமரந்திர வழியாகும்.

'ஓம்' என்று பிரணவத் தியானம் பண்ண, அது சித்தியாங்கால் ஆஞ்ஞா சக்கரத்தையடைய வழி திறக்கும் என்பதாம். (347)

**அதுவிது வென்றவ மேகழி யாதே**
**மதுவிரி பூங்குழல் மங்கைநல் லாளைப்**
**பதிமது மேவிய் பணியவல் லார்க்கு**
**விதிவழி தன்னையும் வென்றிட லாமே.** 1231

இ-ம் - எனின், விதியையும் வெல்லும் ஆற்றல் விளை யும் எனல் நுதலிற்று.

இ - ள் : அது இது என்று வீணாகக் கழிக்காமல், தேன் விரியப்பெற்ற பூவையணிந்த கூந்தலையுடைய பராசத்தியை, சந்திரமண்டலத்து அமுது பொருந்தப் பணிய வல்லார்க்கு, விதியையும் அது பயனூட்டவரும் வழியையும் வெல்லலாம் என்றவாறு.

ஒன்றிலும் துணிவு பிறவாமல் காலத்தைக் கழித்து வீண் போக்காமல், பராசத்தியை மதிமண்டலத்திலே வைத்து வணங்க வல்லார்க்கு விதியையும் வெல்லும் ஆற்றல் விளையும் என்பதாம், (348)

**வென்றிட லாகும் விதிவழி தன்னையும்**
**வென்றிட லாகும் வினைப்பெரும் பாசத்தை**
**வென்றிட லாகும் விழைபுலன் தன்னையும்**
**வென்றிடு மங்கைதன் மெய்யுணர் வோர்க்கே** 1232

இ-ம் - எனின், பராசத்தியை உண்மையினுணர் வார்க்கு விதி முதலாயவற்றை வெல்லுமாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : அனைத்தையும், அனைவரையும் வெல்லும் ஆற்றலாகிய பராசத்தியை உண்மையான் உணர்வார்க்கு விதிவழியை வெல்லலாம்; வினையாகிய பெரிய பாசத்தை வெல்லலாம்; பொறிகளால் விழையப்படுகின்ற புலன்களை வெல்லலாம் என்றவாறு.

விதிவழி; உம்மைத்தொகை, விழைபுலன் - விழையப் படுகின்ற புலன். (34

**ஓரைம் பதின்மருள் ஒன்றியே நின்றது**
**பாரம் பரியத்து வந்த பரமிது**
**மாரங் குழலாளும் அப்பதி தானுமுன்**
**சாரும் பதமிது சத்திய மாமே.** 1233

இம் - எனின், மாலாமந்திர சொரூபமானவர் சிவமும் சத்தியும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: ஐம்பத்தொரு அக்கரங்களிலும் பொருந்தியது. மரபு வந்த பரம்பொருளிது; கோடக மலரை யணிந்த கூந்தலையுடைய அன்னையும், அவள் பதியாகிய சிவமும் முதலாகச் சாரும் இடம் இதுவாம். இது உண்மை என்றவாறு.

மாரம் - கோடகமலர். (350)

**சத்தியி னோடு சயம்புவும் நேர்படில்**
**வித்தது வின்றியே எல்லாம் விளைந்தன**
**அத்தகை யாகிய ஐம்பத் தொருவருஞ்**
**சித்தது மேவித் திருந்திடு வாரே.** 1234

இம் - எனின், சிவசத்திகள் நேர்படின், எல்லாம் திருந்தும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: சிவமும் சத்தியும் ஒருவரையொருவர் நேர்படில், வித்தின்றி எல்லாம் விளைந்தன. அத்தகைய ஐம்பத்தோரக்கரத் தேவர்களும், ஞானத்தையடைந்து திருந்துவர் என்றவாறு.

சித்து - ஞானம்; அட்டமா சித்திகள் எனலுமாம், அது ஞானத்திற் சிறந்தனவல்ல ஆகலின் முன்னதே

பொருளாம். வித்தது இன்றியே யெல்லாம் விளைந்தன என்றது "வித்ததின்றியே விளைவு செய்குவாய்" என்பதனை நினைவூட்டுகிறது. (351)

**திருந்து சிவனுஞ் சிலைநுத லாளும்**
**பொருந்திய வானவர் போற்றிசெய் தேத்த**
**அருந்திட அவ்விடம் ஆரமு தாக**
**இருந்தனள் தானங் கிளம்பிறை என்றே** 1235

இம் - எனின், மதிமண்டலத்திலே இளம்பிறை வடிவாகச் சத்தியெழுந்தருளுதல் நுதலிற்று.

இ - ள் : திருந்திய சிவனும் வில்லினைப் போன்ற நெற்றியையுடைய சத்தியும், வந்தடைந்த வானவர் வணங்க, அவ்விடத்து அருந்தப்படும் அரிய அமுதம் ஊற இளம்பிறையே போன்று அம்மை எழுந்தருளியிருந்தனள் என்றவாறு.

திருந்து சிவன் - அருள் வழங்க. அம்மையோடு கூடிக் கருணைமேனி கொண்ட சிவம்.

சிலை நுதலாள் - அம்மை, சிலை - வில், பொருந்திய வானவர்-பொறியின்பத்துப் பொருந்தாமல் தம் திருவுருவிற் பொருந்திய தேவர்கள்.

அவ்விடம் அருந்திட ஆர் அமுதாக இருந்தனள் எனச் சிவத்திற்கு இயைக்க. அவ்விடம் ஆரமுதாக அருந்திட என மக்களுக்கு இயைக்க. இளம்பிறை என்று தான் அங்கு இருந்தனள் எனக்கூட்டிப் பொருள்கொள்க. (352)

**என்றும் எழுகின்ற ஏரினை எய்தினர்**
**அன்றது வாகுவர் தார்குழ லாளொடு**
**மன்றரு கங்கை மதியொடு மாதவர்**
**துன்றிய தாரகை சோதிநின் றாளே.** 1236

இ - ம் - எனின், அம்மையைத் தியானிப்பவர்கள் அம்மையே யாவர் என்பது உணர்த்துதல் நுதலிற்று,

இ - ள் : மாலையை அணிந்த கூந்தலையுடைய பராசத்தியோடு, என்றும் எழுகின்ற எழுச்சியைப் பொருந்தினவராவர். மணம் பொருந்திய கங்கை, மதியம் இவைகளோடு முனிவர்களிடம் பொருந்திய நட்சத்திரமாய், சோதியாய் நின்றாள் அன்னை என்றவாறு.

ஏர் - எழுச்சி; அழகும் ஆம். குண்டலினியோடு மேலெழுகின்ற எழுச்சியை நாடோறும் பொருந்தியவர்கள் சத்தியே யாவர். "பாவனை முற்றிய பாவகப் பயனில் மேவரப் பெறுதல்" என்பதால் இதனை அறிக. அன்று அது ஆகுவர் - வேறன்றாகிய அது ஆகுவர் என்பதாம்.

மன்றல் என்பது அல்கெட்டு மன்றென நின்றது. மணம் மன் தரு கங்கை எனக்கொண்டு நிலைபேறு உடைய கங்கையெனலுமாம், கங்கையில் தண்மையும் தூய்மையுமாகவும், மதியில் ஒளியாகவும் தாரகையாகவும் சோதியாகவும் நின்றாள் என்க. அன்றி யோகபரிபாஷையின் வண்ணம். இடைகலையைக் கங்கையாகவும், பிங்கலையை யமுனையாகவும் வழங்குதலும் பிரமரந்திரமாகிய உச்சியை மதிமண்டலமாக வழங்குதலும் மரபாதலின் இடைகலை வழியாக குண்டலினியோடு

பிராணனை மதிமண்டலம் சென்ற மாதவர்க்குப் புருவ மத்தியில் பொருந்திய நட்சத்திரமாகவும், மதிமண்டலத்துச் சோதியாகவும் நின்றாள் பராசத்தி என்று கோடலே மிகப் பொருந்துவதாம் (353)

**நின்றனள் நேரிழை யாளொடு நேர்பட**
**ஒன்றிய வுள்ளொளி யாலே யுணர்ந்தது**
**சென்ற பிராணிகள் சிந்தையில் வேண்டிய**
**துன்றிடு ஞானங்கள் தோன்றிடுந் தானே. 1237**

இம் - ஏனின். நினைத்தவெல்லாம் கைகூடும் என உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : அங்ஙனம் நின்றவளாகிய பராசத்தியோடு நேரே பொருந்திய ஞானத்தால் உணர்ந்து அதிற்சென்ற உயிர்களின் மனத்தில் நினைத்தவெல்லாம் பொருந்தும்; பரஞானம் பொருந்தும் என்றவாறு.

உள்ளொளி - ஞானம். பிராணி - பிராணனை உடையவர்கள்; என்றது ஆன்மாக்களை. ஆயின் பொதுமையின் அனைவரையும் அன்று; பிராணாயாமச் சிறப்பினையுடையாரையே கண்டு உணர்த்துவதாம். வேண்டிய - விரும்பிய அனைத்தும். ஆசையற்றவனுக்கு விளைவது ஞானமாதலின் முதற்கண் காமியப்பலனைக் கைகூடச்செய்து வேட்கை தணிவித்துப் பின் ஞானத்தையும் வழங்கும் என்பதாம். (354)

**தோன்றிடும் வேண்டுரு வாகிய தூய்நெறி**
**ஈன்றிடு மாங்கவள் எய்திய பல்கலை**
**மான்றரு கண்ணியும் மாரனும் வந்தெதிர்**
**சான்றது வாகுவர் தாமவ ளாயுமே. 1238**

இம் - எனின், சிவசத்திகள் வெளிநின்று அருள் வழங்குவர் எனல் நுதலிற்று.

இ - ள் : விரும்பிய வடிவை எய்துதற்கு ஏற்ற தூயமார்க்கம் தோன்றுவதாம் ; பராசத்தியைப் பெறுவதற்கேற்ற பல கலைஞானங்களைப் பெறும் ; சிவமும் சத்தியும் வேறாகாதொன்றியிருப்பினும், மானை ஒத்த கண்களையுடைய பராசத்தியும் மன்மதனை ஒத்த பரசிவமும் எதிரில் வெளிப்பட்டு வந்து சாட்சியாய் நிற்பர் என்றவாறு.

வேண்டுருவாகிய தூய்நெறி தோன்றிடும் - தாம் வேண்டிய உருவினைப் பெறுதற்குரிய யோகசித்திநெறி விளையும் என்பதாம். ஆகிய என்பது செய்யிய என்னும் வினையெச்சம்.

ஆங்கு அவள் எய்திய பல்கலை எய்திடும் - அன்னை நம்மைவந்து சார்தற்கு ஏற்ற பலகலைகளும் பொருந்தும். அன்றி, அம்மைபொருந்திய பலகலைகளும் அவளருளால் நம்மை வந்தடையும் எனலுமாம்.

தாம் அவளாயும் மான்றந கண்ணியும் மாரனும் வந்து எதிர் சான்றது ஆகுவர் என இயைத்துப் பொருள் கொள்க. அபேதமாய் உள்ள சிவசத்திகள் வேறாக வந்து சாட்சியாக நிற்பர் என்பதாம். (355)

**ஆயும் அறிவுங் கடந்தணு வாரணி**
**மாயம தாகி மதோமறி யாயிடுஞ்**
**சேய அரிவை சிவானந்த சுந்தரி**
**நேயம தாநெறி யாகிநின் றாளே. 1239**

இம் - எனின், அநுபூதிநிலை அறிவித்தல் நுதலிற்று,

இ - ள் : இவ்வண்ணம் ஆராயப்படுகின்ற அறிவி னெல்லையுங்கடந்து அறுவடிவாய வேதமந்திர சொரு பமாக பராசத்தி, மாயமாய் மதோன்மத்தையாக நிற்கும். சிவந்த பெண்ணாகிய சிவானந்தசுந்தரி அறியப் படுபொருளாக, அறியப்படுநெறியாக நின்றருளினாள் என்றவாறு.

ஆரணி - வேதவடிவி, மதோமதி - மதோன் மத்தை. அமிருந்தவாருணியை அருந்தியதால் மதக்களிப் பால் செருக்கிய நிலையிலிருப்பாள் என்பதாம். மனோன் மணியாய் எனவும் பாடம். நேயம் - ஞேயம் என்பதன் திரிபு. **( 356 )**

**நெறியது வாய்நின்ற நேரிழை யாளைப்**
**பிறிவது செய்யாது பிஞ்ஞக னோடுக்**
**குறியது கூடிக் குறிக்கொண்டு நோக்கும்**
**அறிவொடு ஆங்கே அடங்கிட லாமே** **1240**

இ-து - என்னின், சிவசத்தியை அபேதமாகத் தியா னிக்க என்றல் நுதலிற்று.

இ - ள் : அங்ஙனம் நெறியாகநின்ற பராசத்தியை கணமும் பிரியாமல் சிவத்தோடு சேர்த்து, குறிக்கு மிடத்தில் வைத்துத் தியானிக்கும் அறிவோடு சமாதி யாகலாம் என்றவாறு.

சிவசத்திகளைச் சேரத் தியானித்துச் சமாதிகூடுக என்பதாம். பிஞ்ஞகன் - மயிற்பீலியை அணிந்த சிவம். குறியது கூடி - குறித்த ஆதாரங்களில் கூடி. குறிக் கொண்டு நோக்கும் - உறுதியாகத் தியானிக்கும். அறிவொடு - ஞானத்தோடு, அடங்குதல் - சமாதி

கூடுதல், தியானத்தில் மனமும் அடங்கித் தியானப் பொருளின் வேருகாத நிலை சமாதியென உணர்க. (357)

**ஆமயன் மாலரன் ஈசன்மா லாங்கதி**
**ஓமய மாகிய ஒன்பதும் ஒன்றிடத்**
**தேமய ளுைந் தெனுதென என்றிடும்**
**மாமய மானது வந்தெய்த லாமே.** *1241*

இம் - எனின், பராசத்தியினிடம் அன்பு பூண்டவர்கள் இன்பமே வடிவாக விளங்குவார்கள் என்பதை நுதலிற்று.

இ - ள் : ஆகிய பிரமன், மால், உருத்திரன், மகேசன் இவர்கள் விரும்பும் கதிமுதல் ஓமயமாகிய ஒன்பது நிலைகளும் பொருந்த இன்பமயனுன ஆன்மா, தெனுதெனு எனப் பாடும் வண்டின் வடிவத்தை வந்தெய்தல் ஆகும் என்றவாறு.

பிரமன் மூலாதாரத்தும், மால் சுவாதிட்டானத்தும், உருத்திரன் மணிபூரகத்தும், மகேசன் விசுத்தியிலும் உறைவார்கள். ஆதலின் அவ்விடங்களை 'ஆம் அயன் மால் அரன் ஈசன் மாலாம் கதி' என்ருர். மாலாதல் - மிக்க பற்றுக்கொள்ளுதல்; மயங்குதல் என்பதாம். ஓம் மயமாகிய ஒன்பதும் - முற்கூறிய கதி முதல் பிரணவவடிவாய ஒன்பது நிலைகளும்; என்றது மூலாதார முதல் துவாதசாந்தம் வரையுள்ள நிலைகள். ஒன்றிட - பொருந்த. தேம் - இனிமை. தேமயன் - இன்பமயனுன. ஒன்பது நிலைகளிலும் பிராணனேடு குண்டலினி நிலைபெற இன்பமயனுகத் தேன் உண்டு களிக்கும் வண்டுபோல ரீங்கார நாதத்துடன் ஆன்மா விளங்குவன் என்பதாம். ( 358 )

**வந்தடி போற்றுவர் வானவர் தானவர்**
**இந்து முதலாக எண்டிசை யோர்களுங்**
**கொந்தணி யுங்குழ லாளொடு கோனையும்**
**வந்தனை செய்யும் வழிநவில் வீரே.** **1242**

இ - ம் - எனின், சத்தியையும் சிவத்தையும் வழிபடுபவர் எய்தும் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: பூங்கொத்தை யணியும் கூந்தலையுடைய அம்மையோடு, தலைவனாகிய சிவத்தையும் வணங்கும் வழியினைச் சிந்தித்துச் சொல்லுங்கள்; உங்களை இந்து முதலான எட்டுத்திசைக் காவலர்களும் ஏனைய வானவர்களும் தானவர்களும் வந்து அடிகளை வணங்குவார்கள் என்றவாறு.

இந்து - இந்திரன் என்ற சொற்குறை. இந்து முதலான எண்டிசையோர்கள் இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் என்ற எண்மர். வழி நவில்தலாவது உபாசனுமார்க்கங்களைப் பயிலுதல். **(359)**

**நவிற்றுநன் மந்திரம் நன்மலர் தூபங்**
**கவற்றிய கந்தங் கவர்ந்தெரி தீபம்**
**பயிற்றும் உலகினில் பார்ப்பதி பூசை**
**அவிக்கொண்ட சோதிக்கோர் அர்ச்சனை தானே.** **1243**

இ - ம் - எனின், பார்ப்பதி பூசைக்குரிய சாதனங்களும் அதன் பயனும் அறிவித்தல் நுதலிற்று.

இ - ள்: பயிலச்செய்யும் உலகில், பார்வதிபூசை யாவது, இடைவிடாது சொல்லுகின்ற நல்லமந்திரமும்

நல்மணமுள்ள மலர்களும், தூபமும், மிக்க கந்தமும், தீபமும். அவிசும்கொண்ட ஒளிவடிவாகிய இறைக்குச் செய்யப்பெறும் ஓரர்ச்சனையேயாம் என்றவாறு.

நவிற்று நல் மந்திரம் - இடைவிடாது சொல்லப் பெறுகின்ற நல்ல மந்திரம்; அது சிவாயநம என்னும் திருவைந்தெழுத்து.

நன்மலர் - மணமுள்ள மல்லிகை முதலியபூக்கள். தூபம் கவற்றிய கந்தம் - தூபமிடுவதால் அலைத்தையும் அகத்திடும் கந்தம். கவர்ந்தெரி தீபம் - அனைத்தையும் கவர்ந்து விளங்கும் விளக்கு. பயிற்றும் உலகு - வினைப் போகத்தை உண்டு பயிலச்செய்யும் உலகு. அவி - வேள்வியிற் கொடுக்கப்பெறும் உணவு. சோதி - ஒளி வடிவ இறை. பார்ப்பதி பூசை சோதிக்கு ஓர் அர்ச்சனை யாதலாவது சக்தனுக்குச் செய்யப்பெறும் பூசை சக்திக்கும் ஆதலின் தென்பக்க வாமம்பற்றிக் கூறியதாம் என்க. (360)

**தாங்கி உலகில் தரித்த பராபரன்**
**ஓங்கிய காலத் தொருவன் உலப்பிலி**
**பூங்கிளி தங்கும் புரிகுழ லாளன்று**
**பாங்குடன் ஏற்பப் பராசத்தி போற்றே.** 1244

இம் - எனின், பராபரன் ஏற்பப் பராசத்தி யிருத்தலை அறிந்து போற்றுக எனல் நுதலிற்று.

இ - ள்: அழகிய கிளி தங்கப்பெற்ற திருக்கரத் தையும், பின்னிய கூந்தலையும் உடைய அம்மை, அன்றே பராபரனாகிய சிவத்தை ஒருபக்கமாக உடன் ஏற்றுக்கொண்டமையால் அண்டங்கள் அனைத்தையும்

அவள் தாங்கியும் உலகில் தான் தரித்தும் பராபர ரையினர். மேலும் நீண்டகாலத் தொருவனேயாய் அழி யாமலும் விளங்கினார்; ஆதலால் அப்பராசத்தியை அறிந்து வணங்குவாயாக என்றவாறு.

பூங்கிளி தங்குமுலையாள் அன்று பராபரன் ஏற்ப, உலகில் தரித்த, ஒருவன் உலப்பிலி (ஆதலால்) பராசத்தி போற்று எனக்கூட்டிப் பொருள்கொள்க.

தாங்கி – அண்டங்கள் அனைத்தையும் தத்தம் கால எல்லைக்குள் கேடு புகுதாதே காத்து. தரித்தல் - தான் ஆதாரமாதல். ‘ தரா ’ என்ற பூமியின் பெயருக்கும். இப் பொருட்டாதல் தெரிக. உலகில்தரித்த - உலகில் நிலை பெற்ற அண்டங்களுக்கு ஆதாரமாயிருந்து தாங்கும் இறைவனே அண்டங்களை இடமாகக்கொண்டும் விளங்குவன் என ஆதார ஆதேயம் கூறப்பட்டது.

ஓங்கிய காலம் - நீண்டகாலம்; பேருழிக்காலம். காலத்தொருவன் என்றது காலாதீதன் என்பதனை உணர்த்தியது. காலாதீதனே நித்யனாக முடியுமாதலின் உலப்பிலி என்றது. உலப்பிலி - அழிவில்லாதவன்.

வேதங்கள் கிளி உருவமாக வந்து இறைவியிடம் அமர்ந்து பயில்கின்றன. ஆதலின் பூங்கிளி தங்கும் குழலாள் என்றருளியவாறு, பாங்கு - ஒருபக்கம்; மேனியிற்பாதி. பராசத்திபோற்றே என உபாசகனுக்கு உண்மை உணர்த்தியவாறு. உமை ஆதாரமாக, பரா பரன் ஆதேயமாக விளங்குவதால் பராபரன் பேருழிக் காலத்தையும் கடந்து எல்லாவுலகையும் தான் தாங்கி விளங்குவார் என்பது கருத்து. ( 361 )

**பொற்கொடி மாதர் புனைகழல் ஏத்துவர்**
**அற்கொடி மாதுமை யார்வத் தலைமகள்**
**நற்கொடி மாதை நயனங்கள் மூன்றுடை**
**விற்கொடி மாதை விரும்பி விளங்கே** 1245

இம் - எனின், பராசத்தியைப் போற்றுபவர்கள் எய்தும் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : கரிய கொடிபோலும் மாது; உமை; அன்பிற்கே யுரிய தலைவி; நல்ல கொடிபோன்ற அழகி; முக்கண்களை உடைய வில்போன்ற புருவங்களையுடையாள் ஆகிய உமாதேவியை விரும்பி விளங்குவாயாக; அங்ஙனம் விளங்கின் பொற்கொடிபோலும் மாதர்கள் உமது அழகிய அடிகளை வணங்குவர் என்றவாறு.

நீர் அம்மையை விரும்பி வழிபடின் பொற்கொடி மாதர்கள் உம் அடியை வணங்குவர் என்பதாம்.

எவன் பாதரிச்சையை வென்று அம்மையின் அடியை விரும்பி விளங்குகிறானோ அவனை மாதர்கள் விரும்புவர் என்பது. அல் - இரவு ( கருமை ). விற்கொடி என்றது வில்போலும் வளைந்த புருவம். ( 362 )

**விளங்கொளி யாய விரிசுடர் மாலை**
**துளங்கு பராசத்தி தூங்கிருள் நீங்கக்**
**களங்கொள் மணியுடன் காம விநோதம்**
**உளங்கொ ளிலம்பியம் ஒன்று தொடரே.** 1146

இம் - எனின், விசுத்தி ஸ்தானத்தில் விளங்கும் பராசத்தியின் இயல்புணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : விளங்குகின்ற ஒளியுருவான - சுடர் விரியப்பெற்ற மணிமாலைகள் கிடந்து அசைகின்ற பரா சத்தி, மிக்க ஆணவ இருள் அகன்றொழிய நீலகண்டத்தைக்கொண்ட மணியாகிய பரசிவத்துடன் காமவிநோதத்தைத் திருவுளம்பற்றிய இலம்பியமாவள். அவளைப் பொருந்து ; அந்தப் பயிற்சியையே தொடர்வாயாக என்றவாறு.

விரிசுடர் மாலை - இரத்தினமாலை எனப் பெயரளவாய், விளங்கு ஒளியாய மாலை என இயல்படுத்து நின்றது. துளங்குதல் - அசைதல். தூங்கிருள் - மிக்க இருள். களம் - கண்டம். களங்கொள் மணி - நீலகண்டராகிய சிவம். காமவிநோதம் உளங்கொள் இலம்பியம் - காதன்மையாகிற விளையாட்டைத் திருவுளம்பற்றிய எமது பேறாளள். இலம்பியம் - இலப்பியம் ; அடையத்தக்கது. அதாவது பேறு; அது இலம்பியம் என மெலிந்தது.

பராசத்தி மணியுடன் காமவிநோதம் உளங்கொண்டது ஆன்மாக்களுடைய மிக்க ஆணவ இருள் நீங்குதற்காக என்பதாம். அத்தகைய பேருகிய பராசத்தியைப் பொருந்துக - தொடர்க என்பதாம்.

உளங்கொளில் அம்பியம் எனப்பிரித்துப் புணையாந்தன்மை என்பாரும். உபதேசமொழி என்பாரும் ஆகச் சொற்பொருள் வாளா கண்டு மரபு அறியாதே வழுவுவர். கண்டத்தானத்தில் பராசத்தி கட்கேஸ்வரியாக மாலைமந்திரமாகக் கழுத்துமுதல் நாபிவரை ஒளிவடிவாய் விளங்குகின்றமையானும். அவளுருக்கொள்ளும்பொழுது ஸாகினிதேவியாய இலம்பியான ( கீழே

தொங்குவதான ) பிறைமதி அணிந்து பதினாறிதழுத் தாமரைமேல் விளங்குகின்றுளாதலானும் அவ்வாறு பவப்பொருள் செறிய ஒளியாய சுடர்மாலை துளங்கு பராசத்தி மணியுடன் இலம்பியமாக விளங்குவள் ; அவளை ஒன்று; தொடர் - என்று பணித்தார். (363)

**தொடங்கி உலகினிற் சோதி மணாளன்**
**அடங்கி இருப்பதென் அன்பின் பெருமை**
**விடங்கொள் பெருஞ்சடை மேல்வரு கங்கை**
**ஒடுங்கி யுமையொடும் ஒருரு வாமே.** 1247

இ - எனின் ; என்னுள் இறைவன் அடங்கி யிருப்பது எனது அன்பின் பெருமையினுதல்போல, இறைவியும் இறைவனும் ஒருருவேயாவர் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : உலகினில் தொடங்கி. சோதி மணாளனாகிய சிவம் கலந்தொன்றாய் நிற்பது அடியேனது அன்பின் பெருமையினாலாம். பாம்புகள் உறைகின்ற பெரியசடையில் வான்வழிவரு கங்கை ஒடுங்கியாகிய இறையவன் உமாதேவியோடும் ஒருருவம் ஆவன் என்றவாறு.

உலகினில்தொடங்கி எனத் தொடக்கங் கூறவே ஆன்மாக்கள்தோறும் • என்பது பெறப்பட்டது. சோதி - ஒளிவடிவான அம்மை. சோதிமணாளன் : இருபொருட் ரொட்டுப் பண்புமாம். அடங்கியிருப்பது - ஒன்றாய்க் கலந்திருப்பது. சடம் சித்தாகிய பொருள்களனைத்தி லும் உள்ளும்புறம்பும் இறைவன் நிற்றல்.

கங்கை ஒடுங்கி - கங்கையொடுங்குதற்குக் காரணமாகிய சிவன். ஒடுங்கி; பெயர். உமையொடும் ஒருருவாமே - சத்தியும் சத்தனும் ஒளியும் சூடும்போல ஒரே வடிவாம் என்பதாம். **(364)**

**உருவம் பலவுயி ராய்வல்ல நந்தி**
**தெருவம் புகுந்தமை தேர்வுற நாடிற்**
**புரிவளைக் கைச்சியெம் பொன்னணி மாதை**
**மருவி இறைவன் மகிழ்வன மாயமே.** *1248*

இம் - எனின், சிவமும் சத்தியும் சிருட்டி யுன்முகமாகக் கலந்து மாயையைக் கலக்குவர் எனல் நுதலிற்று.

இ - ள்: வடிவால் பலவுயிர்களாக விளங்குகின்ற சிவம், உலாப்போந்தமையைத் தெளிவுற ஆராயின், முறுக்கிய வளையை அணிந்த கைகளை யுடையவளும், எமது பொன் ஆபரணங்களை அணிந்த மாதும் ஆகிய உமையைக் கலந்து, இறைவன் களிப்பன எல்லாம் மாயமேயாம் என்றவாறு.

இறைவன் அனைத்து உயிர்களையும் வடிவாகக் கொண்டு விளங்குவதை ஆராயின் அவன் உமையோடு கூடிக் களிப்பன யாவும் மாயமாம் என்பது. அவனே உயிர்கள் யாவுமாக இருக்க உமையோடு களிப்பதற்கு ஒன்றுமில்லை என்பதாம்.

உமையோடு கூடிக் களிப்பன மாயை என்றது, இருவரும் கூடி மாயையைக் கலக்க அதனின்று சொல்லும் பொருளுமாகிய பிரபஞ்சம் உண்டாயின என்பதைக் குறிப்பான் உணர்த்தியவாறு. **(365)**

**மாயம் புணர்க்கும் வளர்சடை யானடி**
**தாயம் புணர்க்குஞ் சலநதி அமலனைக்**
**காயம் புணர்க்குங் கலவியுள் மாசத்தி**
**ஆயம் புணர்க்குமவ் வியோனியு மாமே.** 1249

இ-ள்: மாயையைக்கொண்டு உலகைச் சிருட்டிக்கத் திருவுளங்கொண்ட இறைவனும் சத்தியும் சிருட்டியுள் நிற்கு நிலை வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மாயையைக் கூட்டுவிக்கும் வளர் சடையானாகிய சிவம் தன் திருவடியோடு சம்பந்தம் உண்டுபண்ணும் கங்காதர மூர்த்தியைச் சத்தி தமது கலவியினால் திருமேனி கொள்ளச்செய்வர். அவரே கூட்டத்தை விளைவிக்கும் யோனியும் ஆம் என்றவாறு.

மாயம் புணர்க்கும் வளர்சடையான் - ஆன்மாக்கள் வினைக்கீடாக உடலொடு பொருந்த மாயையாகிய முதற் காரணத்தோடு கூட்டுவிக்கும் இறைவன்.

அங்ஙனம் மாயையொடு கூட்டி ஆன்மாக்களுக்குச் செய்வன திருவடிச் சேர்க்கையாகிய அருளலேயாதலின், தன் திருவடிச்சேர்க்கையூட்டவும் வல்லான் என்பது 'அடிதாயம் புணர்க்கும் சலநதியமலன்' என்றது. தாயம் – உரிமை; சம்பந்தம். அமலனைக் கலவியுள் காயம் புணர்க்கும் மாசத்தி - பரசிவத்தைத் தம் புணர்ச்சியால் திருமேனி கூட்டுவிப்பள் பராசத்தி என்பதாம்.

ஆயம் - கூட்டம். யோனி - விந்து. பராசத்தி விந்துசத்தியுமாவள் என்பதாம். (366)

**உணர்ந்தொழிந் தேனவ னுமெங்கள் ஈசனைப்**
**புணர்ந்தொழிந் தேன்புல னுமதி யாரை**
**அணைந்தொழிந் தேனெங்கள் ஆதிதன் பாதம்**
**பிணைந்தொழிந் தேன்றன் அருள்பெற்ற வாறே 1250**

இம் - மனின் யோபானக் கிரமமாக விளைந்ததன் அநுபவம் கூறுதல் நுதலிற்று.

இ - ள் : அவன் நாம் என்பனவற்றை உணர்ந்து நாம் என்பதனை ஒழிந்தேன். எங்களீசனைக்கூடி அவன் வசமாயினேன்; புலனுமதியாரை அணைந்து பரவசனானேன்; எங்கள் ஆதிதன் சீபாதங்களைச் சேர்ந்து தாடலையாயினேன்; சிவனருள் பெற்றவாறு இதுவாம் என்றவாறு.

அவன் நாம் உணர்ந்து ஒழிந்தேன் - அறியப்படு பொருளாகிய சிவத்தையும் அறிபவர்களாகிய நம்மை யும் உணர்ந்து, சிவபரம்பொருளின் மேலான நிலையை யும், ஆன்மாக்களினுடைய இழிதகைமையையும் அவனருள் உணர்த்த உணர்ந்து அவனது அருள் வியா பகத்துள் நாம் ஏகதேசியாக இருத்தலைத் தெளிந்து, நாம் என்னும் முனைப்பையே ஒழிந்தேன் என்பதாம்.

ஈசன் - உடைமையாகவுடையன். எங்கள் ஈசன் - எங்களனைவரையும் அநாதியே உடைமையாகவுடைய இறைவன். புணர்ந்து - கூடி. கருத்திற்கு இயைந்த தலைவியைக்கூடித் தன்னுணர்விழந்த தலைமகன் போல நானிவளாய்பகுதிப் பொற்பு ஆரறிவார் என்ற நிலையில் புணர்ந்தோம் என்னும் உணர்ச்சியும் அற்றேன் என்க.

இப்படியே அனைத்தொழிந்தேன் என்பதற்குங் கருத்துக்கொள்க.

பிணைதல் - துணையாகக் கோடல். (367)

**பெற்றாள் பெருமை பெரிய மனோன்மணி**
**நற்றாள் இறைவனே நற்பயன் என்பர்**
**கற்றான் அறியுங் கருத்தறி வார்கட்குப்**
**பொற்றாள் உலகம் புகல்தனி யாமே** 1251

இ - எனின். புகலிடமிதுவென்றல் நுதலிற்று.

இ - ள் : பெரிய மனோன்மணி பெருமை பெற்றாள். நல்ல தாளினையுடைய இறைவனை நற்பயன் என்பர். திருவடி ஞானத்தைக் கற்றான் அறியும் கருத்தினை அறிவார்கட்கு, திருவடியாகிய முத்தியுலகமே அவர் புகலமாதற்குரிய தனித்த இடமாம் என்றவாறு.

மனோன்மணியும் இறைவனுமே பயனவர். ஆதலால் அவளது உலகத்தை அடைக்கலத்தானமாக அடைதலே ஒப்பற்றநிலையாம் என்பது கருத்து.

கற்றான் - திருவடி சம்பந்தமான கல்வி கற்றவன். அவன் அறியும் கருத்தாவது தன்செயலாவதொன்றும் இன்றென்றும், எல்லாம் இறைவன் செயலே என்றும் அறிதல். தனிப்புகலாம் எனக்கூட்டி ஒப்பற்ற புகலிடமாம் எனப் பொருள்கொள்க. (368)

**தனிநா யகன்றனோ டென்னெஞ்சம் நாடி**
**இனியார் இருப்பிடம் ஏழுல கென்பர்**
**பனியான் மலர்ந்தபைம் போதுகை ஏந்திக்**
**கனியாய் நினைவதென் காரணம் அம்மையே** 1252

இம் - ரனின், சிவம் சர்வவியாபியாக இருப்பது அம்மை கனியாக நினைவதன் காரணமாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : பராசத்தி, குளிர்ச்சியோடு மலர்ந்த தாமரைப் போதுகளைக் கரத்திலே ஏந்திக்கொண்டு, ஒப்பற்ற சிவபரம்பொருளோடு அடியேன் மனத்தையும் விரும்பி இனியராய் இருக்கும் இறைவன் இருப்பிடம் ஏழுலகும் அதற்கப்பாலும் என்பர். அத்தகைய கனியாகக் கருதுவது என்ன காரணமோ அருளுக என்றவாறு.

அம்மை, போது கையேந்தி, நாயகனோடு என் நெஞ்சம்நாட, இனியார் இருப்பிடம் ஏழுலகு என்பர்; அங்ஙனமாகக் கனியாய் நினைவது என்காரணம் எனக் கேட்டுக.

பனியான் என்பது தாங்குகையான் என்புழிப் போல உடனிகழ்ச்சிப் பொருளதாகக் குளிர்ச்சியோடு என்னும் பொருள் தந்தது. ஏழு உலகும் இனிக்கக் கனியாய் இருப்பவர்களைத் தமக்குமட்டும் கனியாய் நினைவதன் காரணம் என் என வினவியவாறும். ( 369 )

**அம்மனே அம்மை அரிவை மனோன்மணி**
**செம்மனே செய்து திருமங்கை யாய்நிற்கும்**
**இம்மனே செய்த இருநில மங்கையும்**
**அம்மனே யாகி அமர்ந்து நின்றளே.** 1253

இம் - ரனின், பராசத்தியே மாயாசத்தியாக உதவு நிலை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : அம்மனை முதலான பலவேறு நிலைகளை யுடைய பராசத்தி. செம்மையாகிய வீட்டுலகைச் செய்து ஞானச் செல்வியாய் விளங்குபவள். இவ்வுடலை நமக்குத்தந்த பெரியமாயாசத்தியும் அந்தத் தனுவாகிய உடலுக்கு முதற்காரணமாக அமர்ந்திருந்தாள் எ - று.

ஆன்மாக்கள் வீடு அடைய ஞானச்செல்வியாக விளங்கும் பராசத்தியே, அவர்கள் பிராரத்த கன்மங்களை நுகர்ந்து மலவாதனைவிடத் தனுகரணாதிகளுக்கு மூலமான மாயையாகவும் இருப்பள் என்பது கருத்து,

அம்மன் என்பது ஐகாரச்சாரியை பெற்று அம்மனை என நின்றது. செம்மையாகிய வீடு என்றது முத்தி யுலகை. திருமங்கை - ஞானச்செல்வி. ( 370 )

**அம்மையும் அத்தனும் அன்புற்ற தல்லது**
**அம்மையும் அத்தனு மாரறி வாரென்னை**
**அம்மையொ டத்தனும் யானும் உடனிருந்**
**தம்மையொ டத்தனை யான்புரிந் தேனே** 1254

இம் - எனின், சிவபரம்பொருள் அடியேனை அறியாது, அடியேன் அவர்களை விரும்பினேன் என்ப துணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : அம்மையும் அத்தனும் ஒருவரையொருவர் அன்புற்றிருப்பர் அல்லது, அடியேனை அவர்களில் ஆரறிவார் ? அவர்களிருவருடனும் அடியேன் இருந்து அவர்களிருவரையும் யான் விரும்பினேன் என்றவாறு.

அவர்கள் ஒருவரையொருவர் அன்புசெய்யவே அனைத்துயிர்களும் அவ்வன்பினுள் அடங்கின. ஆகவே

அவர்களில் யார் என்னை அறிவார்கள்? என்றது இருவரும் இடையிடின்றிக் கருணைசெய்வதை உணர்த்திற்று. உடனிருந்து யான் புரிந்தேன் என்றது அவர்களிருவரும் கருணைநோக்குடன் கனிந்திருக்க அடியேனும் அவர்கள் திருமுன் அகலாதிருந்து தெளிந்தேன் என்பதாம். ஆகவே உலகுயிர்களுக்கெல்லாம் சிவம் ஆதாரம்; அவருக்குச் சத்தி ஆதாரம்; அவருக்குச் சிவம் ஆதாரம்; இவ்வண்ணமாக அவரிருவரும் ஆதார ஆதேயமாவர் என்பது விளக்கியவாறும்; (371)

## 9. ஏரொளிச் சக்கரம்

சக்கரங்களாகப் புறத்தே தாமிரமாதி தகடுகளில் இயற்றப்படுவன யாவையும் அகத்தே ஆதாரங்களில் இயன்றனவாகிய ஆதாரசக்கரங்களை அறிவிப்பனவே. சக்கரபூசை அங்கங்கே பீசங்களையும், அதிதெய்வங்களையும், மந்திரங்களையும் வைத்துத் தியானிக்க உதவும் புறப்பூசை போல்வனவேயாதலின், அகப் பூசையாகிய ஆதார தியானத்தையே ஈண்டும் விளக்கக் கருதிய திருமூலதேவ சித்தநாதப்பெருமான், மூலாதாரம் முதலான சக்கரங்களில் பிருதிவியாதி பஞ்சபூத பீசங்களும் அவையனைத்தும் ஒரே ஒளிமயமாக மேல் நோக்கி வழங்கும் காட்சியும் உணர்த்தத்தொடங்கி, 'ஏரொளி' என்பதன் பெயர்க் காரணத்தைப் பின்னர் இவ்வதிகாரத்து 20 - ம் திருமந்திரத்து விளக்குகின்றார் ஆதலின், அதற்கங்கமாக ஒவ்வோராதாரசக்கரத்தின் இயல்பையும், அக்கரத்தையும், பீசத்தையும், அதி தேவதையையும், அவை எல்லாவற்றினும் பராசத்தி வியாபித்துநிற்கும் நிலையினையும் முறையே உணர்த்துகின்றார்கள். ஏர் - எழுச்சி அல்லது அழகு. ஏரொளிச் சக்கரம் – மேல்நோக்கிய ஒளிவடிவான

சக்கரம். மூலக் கனல் எங்கும் வியாபித்து அனைத்தையும் தம்முள் அடக்கி வேறொன்றும் தோன்றாமல் தானொன்றே யாகித் தோன்றநிற்கும் அநுபவத்தை அறிவிப்பது என்பது கருத்து.

**ஏரொளி யுள்ளெழு தாமரை நாலிதழ்**
**ஏரொளி விந்துவி னாலெழு நாதமாம்**
**ஏரொளி யக்கலை எங்கும் நிறைந்தபின்**
**ஏரொளிச் சக்கர மந்நடு வன்னியே.** 1255

இம் - எனின், இதுமுதல் 'சொல்லிய விந்துவும்' (1257) என்பது ஈறாக ஏரொளிச்சக்கரத்தின் இயல்பை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: மூலாதாரத்துள் முளைத்து எழுகின்ற தாமரை நாலிதழ் உள்ளதாய்த் தனியொளியினதாய். அது விந்துசத்தியினால் எழுகின்ற நாதத்தை உடையதாம்; நிவிருத்திகலை அந்தமான வன்னிமண்டலம் முழுதும் அது நிறைந்த பின்னர் நடுவே வன்னியை முடையதாக விளங்கும் என்றவாறு.

தாமரை நாலிதழ் - மூலாதாரத்திலுள்ள தாமரை நான்கு இதழ்களையுடையது. விந்துவின் எழுநாதம் நாலாம். - வம் சம் ஷம் ஸம் என்னும் ஒலிகளாம். விந்து-அநுஸ்வாரமாகிய ம் என்பது.

அக்கலை - மூலாதாரம் அந்தமாகத் திருமூலர் கிரமத்தில் வைத்துப் பேசப்படுகின்ற நிவிருத்தி, பிரதிஷ்டை கலைகள். வன்னி - குண்டலினியோடு கூடிய மூலாக்கினி. (372)

**வன்னி யெழுத்தவை மாபலம் உள்ளன**
**வன்னி யெழுத்தவை வானுற ஓங்கின**
**வன்னி யெழுத்தவை மாபெருஞ் சக்கரம்**
**வன்னி யெழுத்திடு மாறது சொல்லுமே** 1256

இ-ள் - எனின். வன்னிபீசத்தின் வலிமை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : மிகுந்த வன்மை பொருந்தியனவும், வானுறச் சிறந்தோங்கியனவும், மிகப்பெரிய சக்கர மாவனவும் வன்னிபீசமாகிய ரம் என்பது. அதனை அமைக்குமுறை சொல்வாம் என்றவாறு. (373)

**சொல்லிய விந்துவும் ஈராறு நாதமாஞ்**
**சொல்லிடு மப்பதி யவ்வெழுத் தாவன**
**சொல்லிடு நூறொடு நாற்பத்து நாலுரு**
**சொல்லிடு சக்கர மாய்வரு மேலதே** 1257

இ-ள் - எனின், விந்து பன்னிரண்டு ஒலிகளாக அவற்றை 124 அறைகளில் அமைத்து சக்கரம் அமைக்குமுறை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : விந்து பன்னிரண்டு ஒலிகளாம். இறை யெழுத்து அகாரமாவன; நூற்று நாற்பத்து நான்கு அறைகள் சக்கரமாகவரும் என்றவாறு.

விந்து ஈராறு நாதம் ஆம் என்றது அவையைய. அத்தெய்வங்களைப்பற்றி ஒரோவொன்று மும்மூன்றாய் நிளமிள மாறி ஒரோவொன்றாய்ப் பரிணமித்து இடை யிடையே அறுவகைச் சூனியங்களுடைய பன்னிரு பிராசாத மந்திரமாதலை உணர்த்திற்று.

சக்கரம் அமையுமுறையும், அதனுள் அகாரக் கலைகளை அமைக்கும் முறையும் இன்னபடியென்று விளங்கவில்லை. ( 374 )

**மேல்வரும் விந்துவு மவ்வெழுத் தாய்விடும்**
**மேல்வரு நாத மோங்கு மெழுத்துடன்**
**மேல்வரு மப்பதி யவ்வெழுத் தேவரின்**
**மேல்வரு சக்கர மாய்வரு ஞாலமே.** 1258

இம் - எனின், இதுவுமது.

இ - ள் : மேல்வரும் விந்துவும் 'ம்' என்னும் ஒலியுடையதாகும். அதன்மேல் வரும் நாதம் ஓங்கும் எழுத்துடன் கூடி பதிக்குரிய அவ்வெழுத்துக்களே வரின் பூமி சக்கர வடிவாகும் என்றவாறு.

'அகாரம் உகாரம் மகாரம் நாதம் விந்து' என்று வியட்டிப் பிரணவத்துள் விந்து ஒற்றொலியதாம். ஓங்கும் எழுத்துடன் நாதம் என்றது உச்சியிற்றோன் றும் எழுத்தாகிய 'ஸௌ' என்பதுடன் கூடிய என்பது. அப்போது ஸௌ: என ஆகும். அப்பதி அவ்வெழுத்து - பதிக்கு உரிய எழுத்தாகிய சிவயநம. ஆகவே ஓம் ஸௌ : சிவயநம என்ற எழுத்துக்கள் வரின் நாற்கோண வடிவாய சக்கரமாம் என்றவாறு. சக்கரமாய் வரும் ஞாலமே என்றதில் சக்கரமாகத் தன்னைத்தானே சுழலும் உலகம் எனவும் ஒருபொருள் தோன்ற நிற்றல் காண்க.

அவ்வெழுத்தாய்விடும் என்பதனை அகாரமாகிய சிவ எழுத்தாகும் என்றும், மேல்வரும் என்பதனைச் சென்னி அளவும் சென்ற எனவும் உரைகோடலும் ஒன்று. ( 375 )

**ஞாலம தாக விரிந்தது சக்கரம்**
**ஞாலம தாயிடும் விந்துவும் நாதமும்**
**ஞாலம தாயிடு மப்பதி யோசனை**
**ஞாலம தாக விரிந்த தெழுத்தே** 1259

இ-ம் - எனின், 'இந்தச் சக்கரமே ஞாலமுழுதும் அனைத்துமென' அதனுடையபெருமை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : சக்கரம் உலகமாக விரிந்தது. அதனுள் விளங்கும் விந்துவும் நாதமும் உலகமாக விரிந்தது. அதனுள் விளங்கும் அவ்விறைவனின் சேர்க்கையே உலகம் யாவும், இவ்வண்ணம் எழுத்தே உலகமாக விரிந்தது என்றவாறு.

**விரிந்த எழுத்தது விந்துவும் நாதமும்**
**விரிந்த எழுத்தது சக்கர மாக**
**விரிந்த எழுத்தது மேல்வரும் பூமி**
**விரிந்த எழுத்தினில் அப்புறம் அப்பே** 1260

இம் - எனின், இதுவும் மேலதனை விளக்குதல் நுதலிற்று.

இ - ள் : விரிந்த எழுத்து விந்துவும் நாதமுமாகிய சிவசத்திகளிட மிருந்தேயாம். அதுவே சக்கரமாக, அதுவே பூமியாக, அதன்புறமாகவுள்ள நீராக விரிந்தன என்றவாறு.

விந்து வானிலிருந்து பஞ்சபூதங்களும், பௌதிகங்களும் தோன்றுவன என்று அறிவித்தவாறு. (377)

**அப்பது வாக விரிந்தது சக்கரம்**
**அப்பினில் அப்புறம் அவ்வன லாயிடும்**
**அப்பினில் அப்புறம் மாருத மாயெழ**
**அப்பினில் அப்புறம் ஆகாச மாமே** 1261

இம் - எனின், இதுவுமது.

இ - ள்: நீர்மண்டலமாக விரிந்ததாகிய சக்கரம் அப்புறம் அனல் மண்டலமாகும். அப்புறம் காற்றாய், அப்புரம் ஆகாசமாம் என்றவாறு.

**ஆகாச அக்கர மாவது சொல்லிடில்**
**ஆகாச அக்கரத் துள்ளே எழுத்தவை**
**ஆகாச அவ்வெழுத் தாகிச் சிவானந்தம்**
**ஆகாச அக்கர மாவ தறிமினே.** 1262

இம் - எனின், இதுவுமது.

இ - ள்: ஆகாச அக்கரமாவது, சிவானந்தம் ஆவதாம்.

ஹ என்பது தமிழொலி நோக்கி 'அ' எனத் திரிந்தது. ஹம் என்பது ஆகாசபீசம். (379)

**அறிந்திடுஞ் சக்கரம் ஐயஞ்சு விந்து**
**அறிந்திடுஞ் சக்கர நாத முதலா**
**அறிந்திடும் அவ்வெழுத் தப்பதி யோர்க்கும்**
**அறிந்திடும் அப்பக லோனிலை யாமே.** 1263

இம்-எனின், சக்கரவடிவம் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : அறியப்பட்ட இந்தச் சக்கரம் இருபத்தைந்து புள்ளிகளையுடையதாம். இதற்கு நாதமாகிய நேர்கோடு முதலாக, அப்பதிகளில் அறியப்பட்ட எழுத்தாகிய திருவைந்தெழுத்தை ஆராய்கிறபேருக்குச் சிவசூரிய தரிசனம் ஆம் என்றவாறு.

இருபத்தைந்து பதமுள்ள கட்டங்களை வகுக்கும்போது இருபத்தைந்து புள்ளிகளைவைத்து ஒரு புள்ளியோடு ஒருபுள்ளியைத் தண்டாகார நாதவடிவான கோட்டால் இணைப்பதே மந்திர சாஸ்திர முறையாதலின் அதனையொட்டி அமைக்க என்றது. அதனுள் சிவயநம என்னும் திருவைந்தெழுத்தைத் தலைமுதலாக மாறி அமைத்துத் தியானிக்கின் சிவசூரிய தரிசனம் சித்திக்கும் என்பதாம். **(380)**

**அம்முதல் ஆறுமவ் வாதி எழுத்தாகும்**
**அம்முதல் ஆறுமவ் வம்மை எழுத்தாகும்**
**அம்முதல் நாலும் இருநடு வன்னியே** 1264
**இம்முத லாகும் எழுத்தவை எல்லாம்.**

இ-ம் - எனின், சிவம், சத்தி, வன்னி முதலியவற்றின் எழுத்துக்கள் இவையெனல் நுதலிற்று.

இ - ள் : அகாரமுதல் விந்துவரையுள்ள ஐந்தும், அதற்கு மேலதாகிய சிகாரமும் சிவபெருமானுக்குரிய எழுத்தாகும். அதன் வழித்தாகிய வகரம் சத்தியட்சரமாம். அம்முதல் நாலாம் எழுத்து வன்னி எழுத்தாகும். எழுத்துக்கள் யாவும் இவ்வண்ணம் முதன்மை பெறும் என்றவாறு.

அம்முதல் ஆறு – அகார முதலாகவுள்ள ஆறு எழுத்து என்றது அகார, உகார, மகார, நாத, பிந்துக்களாகிய ஐந்தும், சிகாரமும் ஆகிய ஆறு எழுத்துக்களும் சிவாக்கரங்களாம். பிரணவமும், சிகாரமும் சிவாக்கரங்களாம் என்பது.

அம்முதல் ஆறு - அம்முதல்ஆறுக்குரிய எழுத்தினை ஒழித்தாகிய எழுத்து; என்றது மகாரத்தை. அது சத்தியட்சரமாம்.

அம்முதல நாலும் - அம்முதல்வன் எழுத்தாகிய ஓம் சிவய என்பதில் நாலாம் எழுத்தாகிய 'ய' கரம். வன்னி - உயிராம், ஒளியாம். இரு நடு என்றது தனியே (பிரணவத்தோடு) இரண்டு இரண்டெழுத்துக்களின் நடுவணதாகிய எழுத்து என இடஞ்சுட்டி விளக்கந்தந்து அருளியவாறு.

**(381)**

**எழுத்தவை நூறொடு நாற்பத்து நாலும்**
**எழுத்தவை யாறது வந்நடு வன்னி**
**எழுத்தவை யந்நடு வச்சுட ராகி**
**எழுத்தவை தான்முதல் அந்தமு மாமே.** 1265

இம் - எனின், இதுவுமது.

இ - ள்: எழுத்துக்கள் நூற்றுநாற்பத்து நான்கு, இவ்வண்ணம் நூற்று நாற்பத்துநான்கான எழுத்துக்கள் ஆறும். ஆறின் நடுவெழுத்து வன்னிவடிவாம்; அதன் நடுவாகிய இருதயகமலத்துச் சோதிவடிவாகி எழுந்த இறையே இவ்வுலகு அனைத்திற்கும் முதலும் அந்தமுமாம் என்றவாறு.

எழுந்த ஐ தான் என்பது எதுகைநோக்கி எழுத்தை தான் என நின்றது. ஒலியுலகும் பொருளுலகு மாகிய அனைத்திற்கும் முதலும் இறுதியும் ஆவது அவ்விறைவோயாம் என்பது கருத்து. ( 382 )

**அந்தமும் ஈறு முதலா னவையற**
**அந்தமும் அப்பதி னெட்டுடன் ஆதலால்**
**அந்தமும் அப்பதின் மூன்றில் அமர்ந்தபின்**
**அந்தமும் இந்துகை யாருட மானதே** **1266**

இம் - என்னின், இதுவுமது.

இ - ள் : அடியும், மேலீறும் நீங்க, எஞ்சி நின்ற அந்தம் பதினாறும் இரண்டும் ஆகிய பதினெட்டெழுத்துடனுதலால், பதின்மூன்றாகிய துவாதசாந்தத்தில் ஏறி அமர்ந்தபின்னர் முடிவாக சந்திரமண்டலத்தின்கண் ஏறிக் கடந்ததாகும் என்றவாறு.

அஃதாவது விசுத்தி ஆஞ்ஞை சக்கரங்கள் கூ முதல் கூ முடிய பதினாறு எழுத்தும். ஹ க்ஷ என்னும் இரண்டு எழுத்தும் ஆகப் பதினெட்டெழுத்துடன் விளங்குவதால், இச்சக்கரங்களைக் கடந்து மேலும் துவாதசாந்தத்தை எய்தியபின் சந்திர மண்டலத்தைக் கடந்தநிலை சித்திக்கும் என்பதாம்.

அந்தமும் - அடியாகிய மூலமும், ஈறும் - உடலினிறுகிய உச்சியும் நீங்க. அந்தம் - இறுதியாகவுள்ளன அப்பதினெட்டுடன் ஆதலால் - அந்தப்பதினெட்டு அக்கரங்கள் ஆதலால். துவாதசாந்தம் என்பதன் மொழி பெயர்ப்பு பதின்மூன்றில் என்றது. இந்துகை - சந்திர மண்டலம். ஆருடம் - ஏறுதல் அல்லது கடத்தல். ( 383 )

**ஆவின மானவை முந்நூற் றறுபது**
**மாவின மப்பதி னெந்தின மாயுறு**
**மாவின மப்பதி னெட்டுட னுயுரு**
**மாவின மக்கதி ரோன்வர வந்ததே.** 1267

இம் - எனின், இவ்வண்ணம் நடக்கின்ற காலமே காலதேவதையாய் ஆண்டு இருது மதி நாள் முதலிய காலமாயிற்று என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: அவ்வண்ணமான காலமாகிய முந்நூற் றறுபது நாட்களும், பட்டாங்களும், இருதுவும், மாதமுமாகிய பதினெட்டும், ஆயுளுமாகிய இன்னவை அசிவசூரியன்வர வந்ததாம் என்றவாறு.

ஆவினம் - அவ்வினம் என்பதன் திரிபு. அதன் வகை என்பது பொருள். ஆயுரு என்பது வடசொல்; விஸர்க்க மறு 'ரு' காரமாகி ஆயுரு என் றயிற்று. பயஸ் என்பது பாயுரு என வழங்குதல்போலக் கொள்க. ( 384 )
ஆயுரு - ஆயுள்.

**வந்திடும் ஆகாசம் ஆறது நாழிகை**
**வந்திடும் அக்கரம் முப்பதி ராசியும்**
**வந்திடு நாளது முந்நூற் றறுபதும்**
**வந்திடு ஆண்டு வருத்துரை பவ்வியே.** 1268

இம் - எனின், இதுவுமது.

இ - ள் : வான் வழியாக வரும், அழிவின்றி மாறி வருகின்ற முப்பது நாழிகையும், பன்னிரண்டு ராசியும், முந்நூற்றறுபது நாட்களும் ஆண்டுகளும் முறைப்படி வந்திடும் என்றவாறு.

அவ்விதியே எனற்பாலது செய்யுளின்பம் நோக்கி அவ்வியே என நின்றது என்பர். அம்முறைப்படி என்பது பொருள். **(385)**

**அவ்வின மூன்றுமவ் வாடது வாய்வரும்**
**செவ்வின மூன்றுங் கிளர்தரு வேரதாம்**
**எவ்வின மூன்றுந் தழைத்திடுந் தண்டதாம்**
**இவ்வின மூன்றும் இராசிக ளெல்லாம்.** 1269

இ-ம் - எனின், பன்னிரண்டு இராசியும் மூன்று வீதிகளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: அவ்வினமாகிய மூன்றும் மேட வீதியாய் வரும்; மேலோங்கிய மூன்றும் விளங்குகின்ற ஏராகிய இடப வீதியாம்; செம்மையான மூன்றும் தழைக்கின்ற தண்டோடுகூடிய மிதுன வீதியாம். இராசிகள் எல்லாம் இவ்வகையான மூன்றினமாம் என்றவாறு.

பன்னிரண்டு இராசிகளும் மூன்று வீதிகளாம். அவை மேட வீதி, இடப வீதி, மிதுன வீதி என்பன. அவற்றுள், இடபம் சிங்கம் மிதுனம் கடகம் இனைய நான்கும் மேடவீதி மீனம் மேடம் கன்னி துலாமும்மான இடபவீதிக்கவை ... தன. ''வில்லுமகரம் குடமே விருச்சிகம் சொல்லிய மிதுன வீதித் துறையே'' என்ற பிங்கலந்தை கொண்டும் துணிக.

அவ்வின மூன்று, செவ்வின மூன்று, எவ்வின மூன்று என்பன அதுவும் அதற்கினமான மூன்றும் ஆக நான்கு என்னும் பொருளது. இவ்வண்ணமே ஏனையவற்றிற்கும் கொள்க. ஆடு - மேடம். ஏர் - இடபம். தண்டு - மிதுனம்,

| I | II | 1 | 2 |
| --- | --- | --- | --- |
| மீனம் | மேடம் | இடபம் | மிதுனம் |
| க<br>கும்பம் | | | 3<br>கடகம் |
| உ<br>மகரம் | | | 4<br>சிம்மம் |
| ரு<br>தனுசு | சு<br>விருச்சிகம் | III<br>துலாம் | IV<br>கன்னி |

இராசிகள் பன்னிரண்டிலும் சூரியகதி இயங்கும் முறையை உணர்த்தும் இவ்வுரையே சிறத்தல் காண்க. இவ்வுரை சித்தாந்தப் பேராசிரியர் ப. இராமநாதபிள்ளை அவர்களுடையது. (386)

இராசியுட் சக்கரம் எங்கும் நிறைந்தபின்
இராசியுட் சக்கர மென்றறி விந்துவாம்
இராசியுட் சக்கர நாதமும் ஒத்தபின்
இராசியுட் சக்கரம் நின்றிடு மாறே. 1270

இம் - எனின், பன்னிரு இராசிகளும் ஆராதாரங்களில் இயங்குமுறை இயம்புதல் நுதலிற்று.

இ - ள் : நமக்குள் ஆராதாரங்களிலும் விந்தொளி சிறந்தபின் இராசிச்சக்கரமாம். விந்தொளியை இராசியுட்

சக்கரம் என்றறியொயாக; அச்சக்கரத்துள் நாதமாகிய ஒலியும் ஒத்தபின் இராசிச் சக்கரம் அகத்துள் நிலைபெறும் விதம் இப்படியாம் என்றவாறு.

இராசி - பன்னிரண்டு ராசி. சக்கரம் - ஆறுதாரச் சக்கரம். ஆறுதாரங்களிலும் இராசிச் சக்கரம் பொருந்தத் தியானிக்க, ஒளியும் ஒலியும் நிறைந்து தோன்றும். இதுவே அகமுகத்தியானத்தில் இராசிச்சக்கரம் நிலைபெறும் வழியாம் என்பது கருத்து. ( 387 )

**நின்றிடு விந்துவென் றுள்ள எழுத்தெலாம்**
**நின்றிடு நாதம் ஓங்கும் எழுத்துடன்**
**நின்றிடு மப்பதி யவ்வெழுத் தேவில்**
**நின்றிடு மப்புறந் தாரகை யானதே.** 127

இம் - எனின், ஆறுதாரங்களிலும் பன்னிரண்டு இராசியும், இருபத்தேழு நட்சத்திராங்களும் நிற்குமுறை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : நிலைபெற்ற விந்து முதலாக உள்ள எழுத்தெல்லாம், நாதம் ஒலிப்பிக்க ஒலித்து நிற்கும். அந்த எழுத்துக்கள் அந்தந்த இராசியுட் பொருந்தியின் அப்புறம் நட்சத்திரங்கள் நிலைபெறும் என்றவாறு.

எனவே ஆறுதாரங்களிலும், ஆதாரம் ஒன்றுக்கு இரண்டு இராசியும் நாலரை நட்சத்திரமுமாகப் பிரித்தமைக்க என்கிறது பழைய குறிப்புரை. அதற்கேற்ற சொற்றொடரமைப்பு கொண்டுகூட்டு வகையானும் கொள்ளக் கிடைத்திலது. ஆகவே இம்மந்திரம் மிகச் சிந்தித்தற்குரியதொன்றும். ( 388 )

**தாரகை யாகச் சமைந்தது சக்கரந்**
**தாரகை மேலோர் தழைத்தது பேரொளி**
**தாரகை சந்திரன் நற்பக லோன்வரத்**
**தாரகை தாரகை தாரகை கண்டதே.** 1272

இம் - எனின் ; தாரகைகள் ஒளி ஒலி வடிவான எழுத்தாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இவ்வண்ணம் நட்சத்திர சக்கரமாகப் பொருந்தியது; தாரகையின்மேல் ஓர் பேரொளிப் பிழம்பாகிய சிவம் தழைத்து விளங்கியது. அதனுல் நட்சத்திர மண்டலத்தில் சூரியனும் சந்திரனும் வர நட்சத்திர மண்டலமானது நட்சத்திர ஒழுங்குபோன்ற அக்கர வடிவாகக் காணப்பட்டதாம் என்றவாறு.

சிவ ஒளி பரவிய தாரகைகள் வெறும் ஒளியாயிராது ஒலியோடும் கூடிய எழுத்துருவாம் என்பது கருத்து. (389)

**கண்டிடு சக்கரம் விந்து வளர்வதாம்**
**கண்டிடு நாதமுந் தன்மேல் எழுந்திடக்**
**கண்டிடு வன்னிக் கொழுந்தன வொத்தபின்**
**கண்டிடு மப்புறங் காரொளி யானதே.** 1273

இம் - எனின், தாரகைச் சக்கரம் இதுவெனவும், இதன்மேல் விளங்குவனவும் உணர்த்துதல் நுதலிற்று,

இ - ள் : இவ்வண்ணம் காணப்பட்ட சக்கரம் விந்து வளர்ந்தானதாம். காணப்பெற்ற நாதமும் அவ்விந்துவின் மேல் எழுந்திட, தோன்றுகின்ற நெருப்புக் கொழுந்து தீப்போல ஒத்து விளங்கியபின், அப்புறம் கரிய ஒளியொன்று காணப்படுவதாம் என்றவாறு.

தாரகா மண்டல சக்கரம், விந்துவில் நாதமாகிய நேர்கோடு பொருந்த அமைவது. சக்கரங்களை நேர் கோடாக இழுக்காமல் விந்து அதாவது புள்ளிகளை வைத்து ஒரு புள்ளிக்கும் மற்றொரு புள்ளிக்கும் இடையே தண்ட வடிவான நாதத்தை யிழுத்து அமைத்தலே மந்திர நூற் றுணிபு. சக்கரம் அனைத்துமே விந்து நாதவடிவம் எனத் தெளிக. தியானிக்கின்ற போது சக்கரத்தினிடமாகத் தோன்றுகின்ற சோதி மண்டலம் சிவம்; சோதிக்குமேல் காணப்பெறுகின்ற காரொளி மண்டலம் சக்தி என்றுணர்க என்றவாறும். விளக்கொளி சிவம். அதனுள் இருக்கும் கரிய ஒளி சக்தி. இவையிரண்டும் கூடிய ஒளி சிவம். விளக்கொளியி னுனியிலிருக்கும் புகைமண்டலம் சத்தி, இங்ஙனம் யோகதத்துவசாரத்திலும் குறிப்பிடப் பெற் றுள்ளமை காண்க. (390)

**காரொளி அண்டம் பொதிந்துல கெங்கும்**
**பாரொளி நீரொளி சாரொளி காலொளி**
**வாளொளி ஒக்க வளர்ந்து கிடந்துபின்**
**நேரொளி ஒன்றாய் நிறைந்தங்கு நின்றதே. 1274**

இ - ளின், காரொளியாகிய சக்தியாலேயே பஞ்சபூதங்களும் தோன்றின என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் ; கரிய ஒளியானது, அண்ட வடிவான பேருலகை மூடி, உலகங்கள் எங்கும் மண், நீர், தீ, காற்று, வான் ஆகிய ஒளிகளாக ஒக்கவளர்ந்து கிடந்து பிறகு ஒரே ஏரொளியாக நிறைந்து பரந்து நின்றது என்றவாறு.

சக்தியின் ஆற்றலாலே ஐம்பெரும்பூதங்களும் ஒளிவடிவாகத் தோன்றின ; அவை அனைத்தும் ஒரே வடிவாக ஏரொளியாகத் திகழ்ந்தது என்றவாறும்.

சார் ஒளி - சேர்ந்தாரைக்கொல்லி என்று நெருப்புக்குப் பெயராதல்போல், சார்தலையுடையது. சார் எனத் தீக்குப் பெயராயிற்று. சாரொளி - தீயொளி. கால் ஒளி - காற்றுகிய ஒளி. ஒவ்வொரு பூதங்களும் ஒன்றினின்று நோக்க ஒன்று ஒளிப்பொருளாய்த் தோன்றுவன ஆதலால் பாரொளி சாரொளி காலொளி என ஒளியாக ஓதப்பெற்றன. இவ்வனைத்தும் கூடிய, வியாபகப்படுத்த முடியாத பேரொளி ஏரொளியாம் என அறிக. **(391)**

**நின்றது அண்டமும் நீளும் புவியெலாம்**
**நின்றவிவ் வண்டம் நிலைபெறக் கண்டிட**
**நின்றவிவ் வண்டமு மூல மலமொக்கும்**
**நின்றவிவ் வண்டம் பலமது விந்துவே.** **1275**

இம் - என்னின், விந்துவின் காரியமே அண்டம் எனல் நுதலிற்று.

இ - ள் : இவ்வண்ணம் பௌதிகமாய் நின்ற அண்டம் பெரிய உலகமனைத்தையும் தன்னகத்தடக்கி நின்றது. இந்த அண்டமே ஆன்மாக்கள் நிலைபெறச் செய்யுமிடமாம் ; ஆதலால் இவ்வண்டம் உயிர்கட்கு மூலமலம் போல்வதாம். இவ்வண்டம் பலமான விந்துவின் விளைவாக நின்றதாம் என்றவாறு.

அண்டமும் நீளும் புவியெலாம் நின்றது ; நின்ற இவ்வண்டம் நிலைபெறக்கண்ட இடம் ; அண்டமும்

மூலமலமொக்கும். இவ்வண்டம் பலமது விந்து (ஆம்) என முடிவுசெய்க.

பல உலகங்களைத் தன்னகத்து அடக்கி நிற்பது அண்டம். உயிர்கள் தம் கன்மப் பொசிப்பின் கால எல்லைவரை நிலைபெறும்படியாகச் செய்த இடமும் இவ்வண்டமே. பரிபாகமுறும் வரையில் வலியோடு விளங்கி. பரிபாகமுற்றகாலத்துச் செயலற்றுப் போகும் ஆணவமலம்போல்வதாம். இவ்வண்டத்திற்கு வன்மையாவது விந்துசக்தியாம். விந்து - மாயை. (392)

விந்துவும் நாதமும் ஒக்க விழுந்திடில்
விந்துவும் நாதமும் ஒக்க விரையதாம்
விந்திற் குறைந்திடு நாதம் எழுந்திடில்
விந்துவை எண்மடி கொண்டது வீசமே. 1276

இம் - எனின், அண்டவித்தும், மந்திரவித்தும் இதுவாம் என வேறுபடுத்து உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : விந்துவும் நாதமும் சமமாக விழுந்து சமமாகக் கலந்தால் அண்டமாகிய பொருட்பிரபஞ்சத்திற்கு வித்தாம். விந்து குறைந்து நாதம் எண்மடங்கு மிகின் அது மந்திரபீசமாம் என்றவாறு.

மந்திரபீசம் சப்தப்பிரபஞ்சத்திற்கு வித்து; ஒத்த அண்டபீசம் பொருட்பிரபஞ்சத்திற்கு வித்து என்று அறிவித்ததாம். (393)

வீசம் இரண்டுள நாதத் தெழுவன
வீசமும் ஒன்று விரைந்திடு மேலுற
வீசமும் நாதமும் எழுந்துடன் ஒத்தபின்
வீசமும் விந்து விரிந்தது காணுமே. 1277

இம் - எனின், பீசமந்திரத்தின் இயல்பும் - பயனும் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : சிவத்தால் எழுவனவாகிய பீஜங்கள் இரண்டுளவாம். அப்பீஜத்துள் ஒன்று மேலேறிச் செல்ல விரையும் வீசமும் நாதமும் தம்முள் எழுந்து ஒத்தபின் வீசமும் விந்துவுமாக விரிவதைக் காணுங்கள் என்றவாறு.

நாதம் - சிவம் என்பதுபோல மகரவிருக நின்றது. ஆன்மாக்கள்மீது வைத்த தடையிலாக் கருணையினால் சிவம் குடிலையின் ஒருபகுதியைக் கலக்க நாதமும் பிந்துவு மாகிய இருபீஜங்கள் தோன்றின. இவ்விரண்டும் இடியும் மின்னலும் போல்வனவாம். சிவசூரியனது ஒளி மாயையில் வந்து பொருந்தியவுடன் உண்டாகிற தொனியே நாதம். இத்தொனியானது ஆகாயத்தில் பரவும்போது உண்டாகும் வட்டவடிவே பிந்து. நாதபிந்துகள் சமமாய்க்கூடிய போது சாதாக்கியம் தோன்றும். இதுவே சதாசிவம் என்று பெயர்பெறும். விந்துவாகிய செயல் மிகுந்து நாதமாகிய ஞானம் குறைந்த போது மகேச்சுரம் தோன்றும், இங்ஙனமே ஒன்றிலிருந்து ஒன்று பீஜமும், பிந்துவுமாக இருவகை உலகமும் தோன்றும் என்பதாம்.

இங்ஙனம் அன்றி, மூலாதாரத்துள்ள பிரணவப் பிரிவில் ஒன்றான நாதத்திலிருந்து ஹம் ஸம் என்னும் இரண்டு பீஜமந்திரங்கள் எழுவன. அவற்றுள் ஹம் என்பதைக்காட்டிலும் ஸம் என்பது கபாலரந்திரத்தை அடைய முற்படும். அங்ஙனம் முற்படுமாயினும் அவ் விருபீஜங்களும் அவற்றுடன் கலந்துள்ள நாதமும்

பிரமரந்திரத்தில் எழுந்து ஒத்து விளங்கிய பிறகு விந்து பீஜம் விளங்கித் தோன்றும்; அதனைக் காணுக என்று உரைப்பாரும் உள்ளர். (394)

**விரிந்தது விந்துவுங் கெட்டது வீசம்**
**விரிந்தது விந்துவும் நாதத் தளவினில்**
**விரிந்தது வுட்கட்ட எட்டெட்டு மாகில்**
**விரிந்தது விந்து விரையது வாமே** 1278

இ-ம் - எனின், விந்துவே அனைத்திற்கும் வித்தாம் என உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : விந்து சத்தியாகிய மாயை விரிந்தது. அதனாற்றலால் விதை மறைந்தது. அவ்விந்து நாதத்தளவாக விரிந்தது. அங்ஙனம் விரிந்த அதனை அறுபத்து நான்கு மாத்திரைக் காலம் உள்ளே தம்பனஞ் செய்து கும்பிக்கவைத்தால், விரிந்த விந்துவே அனைத்திற்கும் பீஜமாம் என்றவாறு.

விதையினுள்ள பருப்பாகிய விந்து விரிந்தால் விதை கெடுமாறுபோல, சுத்தமாயை விரிய அச்சுத்த மாயை தொன்ற இடந்தரும் குடிலையாகிற பீஜம் கலக்குண்டு பரிணாமத்தை அடைவதாதலின் அதனைக் கெட்டது என்றருளியது.

நாதத்தளவினில் விரிந்தது விந்துவும் என்றது, விந்து எத்துணை விரியும் என்பார்க்கு நாதத்தினளவு எவ்வளவோ அவ்வளவு அதனை ஏற்கும் விந்துவும் விரிந்தது என்றவாறும். நாதவிந்து கலப்பே அனைத்துமாதலின் நாதத்தின் அளவிற்கேற்பவே விந்து விரியும் என்பது.

அங்ஙனம் விரிந்த விந்துவை அறுபத்துநான்கு மாத்திரைக் காலம் விந்து வெளிப்படாதவாறு உள்ளேயே தம்பிக்கும் ஆற்றல் விளையுமாயின் அதுவே வித்தாகித் தோற்றத்துக்குப் பீஜமாம் என்பது. இதற்குமேல் விரிவும் விளக்கமும் வேண்டுவார் கருப்போபநிடதத்துக் காண்க. விந்து நாதங்கள் அண்டத்தின் உற்பத்திக்குக் காரணமாதல்போல பிண்டத்தின் உற்பத்திக்குக் காரணம் என்பதனை விளக்கியவாறு. (395)

விரையது விந்து விளைந்தன எல்லாம்
விரையது விந்து விளைந்த உயிரும்
விரையது விந்து விளைந்தவிஞ் ஞானம்
விரையது விந்து விளைந்தவன் தாளே. 1279

இ-ம் - எனின், எல்லாம் விந்து பீஜத்தின் விளைவே எனல் நுதலிற்று.

இ-ள்: பீஜமாகிய விந்துவினின்று விளைந்தனவே அனைத்துலகும், அனைத்துப் பொருளும், அனைத்துயிர்களும். சிறந்த ஞானம் அனைத்தும் ஆகிய எல்லாம்; அவ்விந்து பரசிவத்தின் திருவடியினின்று தோன்றின என்றவாறு.

எல்லாவற்றையும் தோன்றச் செய்தது விந்து; அதன் வித்து இறைவன் திருவடியாகிய திருவருட் சத்தி என்பது கருத்து. (396)

விளைந்த எழுத்தது விந்துவும் நாதமும்
விளைந்த எழுத்தது சக்கர மாக
விளைந்த எழுத்தவை மெய்யினுள் நிற்கும்
விளைந்த எழுத்தவை மந்திர மாமே. 1280

இம் - எனின். விந்து நாதங்களே சக்கரங்களாக - சக்கரத்துள் அமைந்த மாலாமந்திரங்களாகத் தனுவில் நிற்பனவாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : விந்துவும் நாதமுமாகிய எழுத்துக்களே சக்கரமாகும். அவை உடம்பினுள் நிலைபெறுவனவாம்; அவையே மந்திரமாம் என்றவாறு.

விந்து நாதங்களின் விளைவே ஐம்பத்தோரக்கரங் களாக ஆறுதாரங்களிலும் உடலினுள் அங்கங்கே நிற்பன ; அவையே மாலாமந்திரங்கள் என்றழைக்கப் படுவன என்பது கருத்து, (397)

**மந்திரஞ் சக்கர மானவை சொல்லிடில்**
**தந்திரத் துள்ளெழு தோன்றெறி வட்டமாங்**
**கந்திரத் துள்ளுமி ரேகையில் ஒன்றில்லை**
**பந்தம தாகும் பிரணவம் உன்னிடே.** 1281

இம் - எனின், மந்திரம் உச்சரிப்பதாலும், சக்கரம் ரேகைகள் கீறுவதாலும் மட்டும் பயன் தரா ; பிரண வத்தை முன்னிட்டு அகமுகத்தில் தியானிக்க என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : மந்திரம் சக்கரம் இவைகளைப்பற்றிக் கூறின் உபாயங்களான் உள்ளே ஆதாரங்களிலெழுந்து காணப்படும் கொள்ளிவட்டம் போல்வதாம். கண் டத்தில் வைகரியாக வைத்து எண்ணுவதிலும், தகடு களில் ரேகை கீறிப் பார்ப்பதிலும் பயன் ஒன்றும் இல்லையாம். ஆதலால் இயற்கையே பந்தமாக உள்ள பிரணவத்தை முதன்மையாகக் கொண்டு தியானிக்க என்றவாறு.

யந்திர மந்திரங்கள் ரேகைகளிலும் உச்சரிப்பிலும் இல்லை : ஆதார சக்கரங்களில் வைத்துப் பிரணவ முதலாகத் தியானித்து, சோதிவடிவாகத் தரிசிக்க என்பதாம்.

கந்தரம் - கழுத்து ; என்றது, வைகரிவாக்காம் நிலையை. விசுத்தி என்றுகொண்டு இடர்ப்படுவாரும் உளர். (398)

**உன்னிட்ட வட்டத்தில் ஒத்தெழு மந்திரம்**
**பின்னிட்ட ரேகை பிழைப்பது தானில்லை**
**தன்னிட் டெழுந்த தகைப்பறப் பின்னிற்கப்**
**பன்னிட்ட மந்திரம் பார்க்கலு மாமே** 1282

இம் - எனின், யந்திர மந்திரங்களின் இயைபு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : அங்ஙனம் தியானிக்கப்பெற்ற பிரணவ வட்டத்தில் தியானமாத்திரையாக ஒத்து எழுகின்ற மந்திரம் பின்னர் அமைக்கப் பெறும் யந்திரக்கோடுகளை விட்டுத் தவறுவதில்லையாம். உயிராகிய தன்னிடத்து அநாதியாக உள்ள தடையாகிய அஞ்ஞானம் நீங்க - மந்திரப்பொருளாகிய பதியை முன்னிட்டுத் தான் பிற்பட்டுநிற்க, தியானிக்கின்ற மந்திரப்பொருளைத் தரிசிக்கலாம் என்றவாறு.

உன்னிட்ட - தியானித்த. வட்டம் - பிரணவ வட்டம். மந்திரம் - ஓம் என்பது. ரேகை - சக்கரத்தில் அமைந்த முக்கோணம், அறுகோணம், எண்கோணம், நட்சத்திர சக்கரம் முதலிய கோடுகள். அதன் எல்லையைக் கடவாமை சக்கரத்துள் அடங்கியதாகத் தியானிக்கப்

பிருதல். பின்னிட்டரேகை - பிறகு புறத்தே யிடப்பட்டனவாகிய வரிகள்.

தன் என்றது ஆன்மாவை. தகைப்பு - ஆணவமலத்தான் விளைந்த அஞ்ஞானமாகிய மறைப்பு. பின்னிற்க என்றது பசுபோதம் அடங்கிப் பதிபோதம் முற்பட்டு நிற்க என்பதாம். மந்திரம் பார்க்கலுமாம் என்றது மந்திர வடிவினனாகிய சிவத்தைத் தரிசிக்கலாம் என்பதாம். (399)

**பார்க்கலு மாகும் பகையறு சக்கரங்**
**காக்கலு மாகுங் கருத்தில் தடமெங்கும்**
**நோக்கலு மாகும் நுணுக்கற்ற நுண்பொருள்**
**ஆக்கலு மாகும் அறிந்துகொள் வார்கே. 1283**

இ - எனின், சக்கரத்தை உள்ளவாறு உணர்தலின் பயன் இதுவாம் எனல் நுதலிற்று.

இ - ள்: பிறப்பு இறப்பாகிய பகைகளை நீக்குகின்ற சக்கரத்தைத் தரிசிக்கலாம்; எங்கும் மனத்தகத்துத் தியானிக்கலாம். மிக நுண்ணியவற்றிற்கெல்லாம் நுண்ணிய பொருளாகிய சிவத்தைப் பார்க்கலாம். இதனை உள்ளவாறு உணர்வார்க்கு அதனை அடைதலுமாகும் என்றவாறு.

பகையறுசக்கரம் - பிறப்பும் இறப்புமாகிய பகைகள் நீங்கிய சக்கரம். பார்க்கலும் ஆகும்-அழியாத வெண்ணம் யஞ்ஞான்றும் காணலாம்.

கருத்தில் தடம் எங்கும் - மனவிடம் எங்கும். காக்கலும் ஆகும் - அநவரதமும் இடையீடின்றித் தியானித்துக் காக்கலாம்.

நுணுக்கற்ற நுண்பொருள் - தன்னைக்காட்டினும் வேறான நுணுக்கம் அற்ற நுண்பொருள். என்றது "நோக்கரிய நோக்கே நுணுக்கற்ற நுண்ணறிவே" என்பதனை நினைவூட்டுவது.

ஆக்கல் - அடைதல். அறிந்து கொள்வார்க்கு - அந்த நுண்பொருளே பரம் என்று அளவைகளானும் அநுபவத்தானும் அறிந்து, அதுவே சரண் என உறுதி (400)
பூண்பவர்க்கு.

**அறிந்திடுஞ் சக்கர மாதி யெழுத்து**
**விரிந்திடுஞ் சக்கர மேலெழுத் தம்மை**
**பரிந்திடுஞ் சக்கரம் பாரங்கி நாலும்** 1284
**குவிந்திடுஞ் சக்கரங் கூறலு மாமே**

இம் - எனின், ஏரொளிச்சக்கரம் பார்முதல் நான்கு பூதங்களுமாம்; அதன்கண் உள்ள மந்திர எழுத்து சிவ என்பதாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று,

இ - ள் : அறியப்படும் சக்கரத்துள்ள எழுத்து ஆதியாகிய சிவாக்கரமாகும். அனைத்தும் சிருட்டிக் காலத்து விரிதற்கேற்ப விளங்கும் எழுத்து ககாரமாகிய சக்தியெழுத்தாகும். இவ்வெழுத்துக்களுக்கு ஆதாரமா யிருந்து தாங்கும் சக்கரம் பூமியும் நீரும் தீயும் காற்றும் ஆகிய நான்கும். இவ்வண்ணம் அனைத்தும் கூடி விளங்கும் சக்கரத்தைப்பற்றிக் கூறலுமாமே என்றவாறு.

ஆதி எழுத்து அகரம், அம்மை எழுத்து உகரம் எனக்கோடலும் உண்டு. பரிந்திடும் - ஆதாரமாகத்

தாங்கும், குவிந்திடும் - கூடிய. ஆமே என்றது ஆகாது என மாட்டாமை உணர்த்தி நின்றது. (401)

**கூறிய சக்கரத் துள்ளெழு மந்திரம்**
**மாறியல் பாக அமைந்து விரிந்திடுந்**
**தேறிய அஞ்சுடன் சேர்ந்தெழு மாரண**
**மாறியல் பாக மதித்துக்கொள் வார்க்கே** 1285

இம் - எனின், இம்மந்திரம் ஷட்கன்ம வித்தையு மாமென உணர்த்துதல நுதலிற்று.

இ - ள் : சொல்லப்பட்ட சக்கரத்துள் எழுகின்ற மந்திரம் ஆறு செயல்களைப் புரிவனவாக அமைந்து விரியும். தெளிந்த ஐந்துடன் சேர்ந்து தோன்றுகின்ற மாரணத்தை மாறுபட்ட இயல்பினதாக மதித்துக் கொள்வார்க்கு என்றவாறு.

மதித்துக் கொள்வார்க்கு ஆறியல்பாக அமைந்து விரிந்திடும் எனக் கூட்டுக.

ஆறுவன : தம்பனம், மோகனம், உச்சாடனம், வித்வேஷணம், மாரணம், வசியம் என்பன. அவற்றுள் மாரணம் பிறரைக் கொல்வதாகலின் அது மாறுன தன்மையது எனக்கூறப்பட்டது. (402)

**மதித்திடும் அம்மையும் மாமாது மாகும்**
**பதித்திடும் அம்மையு மங்கனல் ஒக்கும்**
**மதித்தங் கெழுந்தவை காரண மாகில்**
**கொதித்தங் கெழுந்தவை கூடகி லாவே.** 1286

இம் - எனின், ஏரொளிச் சக்கரத்தையும் அதன் மந்திரங்களையும் ஷட்கன்ம வித்தையாகிய காமியங்

களுக்குப் பயன்படுத்தின் அது ஏரொளியாகாது என்று உண்மை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இச்சக்கரத்தை உள்ளவாறு உணர்ந்து தியானிக்கும் அன்பர்களை ஞானசத்தியாகிய பராசத்தியும், கிரியா இச்சா சத்திகளாகிற திருமகளும் மதித்துச சேருமுன்னர் எண்ணிச் சொல்லப்பெற்ற ஷட்கன்ம வித்தைக்குக் காரணமாயின், பஞ்சபூதங்களும் தம்முள் சினந்து ஒன்றோடொன்று மாறுபட்டு அவை யாவும் ஒருங்கு கூடுதலாகிய ஏரொளியாகாது என்றவாறு.

இம்மந்திரங்கள் தம்பனமாதிய காரியங்களைச் செய்யுமாயினும் அவற்றிற்குப் பயன்படுத்தின் பஞ்ச பூதப் பிணக்கற்ற ஏரொளியாக எழுச்சி விளக்காது என்பதாம்.

மதித்திடும் - உபாசகனை ஒரு பொருளாகத் திருவுளங்கொள்ளும். அம்மை - ஞானசத்தியாகிய பரை. மாமாது - திருமகள். இவள் இம்மைக்கு வேண்டிய போக யோகங்களைப் பயப்பிப்பவள். ஆகவே போகம் முத்தியென்ற இரண்டுபயனும் விளைவதாம். அம்மையாகிய ஞானசத்தி ஒளிபோலக் காட்சி வழங்குவள்.

மதித்து - முன் நினைக்கப்பட்டு, எழுந்த அவை - உண்டான அந்த ஆறு கன்மங்களுக்கும். காரணம் அவை - ஆகில் - இம்மந்திரங்கள் காரணமாயின். அவை - பஞ்சபூதங்களும் ஆறுகன்மங்களும். கொதித்து அங்கு எழுந்து - சினந்து எழுந்து. கூடகிலா - ஒன்றுசேர்ந்து ஏரொளி யாகமாட்டா என்க.

கூடிய தம்பனம் மாரணம் வசியம்
மாடியல் பாக அமைந்து செறிந்திடும்
பாடியுள் ளாகப் பகைவரும் வந்துறார்
தேடியுள் ளாகத் தெளிந்துகொள் வார்க்கே. 1287

இம் - ஏனின், சக்கரப்பயன் உணர்த்துத னுதலிற்று.

இ - ள் : சேர்ந்த தம்பனம் வசியம் மாரணம் இவைகள் விளையாட்டாகவே வந்து பொருந்தும். இவர்கள் இருப்பிடத்தின்கண் பகைவர்களும் வந்து சேரார். தனக்குள்ளேயே தேடித் தெளிந்து கொண்ட மெய்யன்பர்க்கு என்றவாறு. (404)

தெளிந்திடுஞ் சக்கர மூலத்தி னுள்ளே
அளிந்த வகாரத்தை யந்நடு வாக்கிக்
குளிந்த வரவினைக் கூடியுள் வைத்து
வளிந்தவை யங்கெழு நாடிய காலே. 1288

காலரை முக்கால் முழுதெனும் மந்திரம்
ஆலித் தெழுந்தமைந் தூறி எழுந்ததாய்ப்
பாலித் தெழுந்து பகையற நின்றபின்
மாலுற்ற மந்திர மாறிக்கொள் வார்க்கே 1289

கொண்டவிம் மந்திரங் கூத்தன் எழுத்ததாய்ப்
பண்டையுள் நாவிற் பகையற விண்டபின்
மன்றுள் நிறைந்த மணிவிளக் காயிடும்
இன்றும் இதயத் தெழுந்து நமவெனே. 1290

இம் - ஏனின், குண்டலியை எழுப்பும் முறை உணர்த்துதல் நுதலின.

இ-ள்: தெளிந்த சக்கரமாகிய மூலாதாரத்துள் அளியோடு கூடிய அகாரத்தை நடுவாக வைத்து, குளிர்ந்த அரவு வடிவாய குண்டலினியைக்கூடி மூலத்தின் நடுவிலே வைத்து, பிராணனாகிய வளியோடுகூடிய அவற்றை ஆராயுங்காலத்து, கால், அரை, முக்கால் ஒன்றாகிய மாத்திரைகளைப்பெற்ற மந்திரம் ஒலித்து, வைகரியாக மனத்தில் ஊறியெழுந்ததாக, காப்பாற்றுவதற்காகத் தோன்றி காமாதி பகைகளும், சலனமும் அற நிலைபெற்ற பின், அதன்வயமாக்கிய மந்திரத்தை மாறிக்கொள்வார்க்கு, இம்மந்திரம் கூத்தப்பெருமான் எழுத்தாக, நாக்கினுள் மாறுபாடற உச்சரித்தபின்பு கனகமன்றுள் தோன்றிய சாதனதீபமாக இறைவன் காட்சிவழங்குவர். ஆதலால் இன்றும் எழுந்து இதயத்தாலே நாம என வணங்குக என்றவாறு.

சக்கரமூலம் - மூலசக்கரம். அளிந்த அகாரம் - ஓம் என்றாகக் கனிந்து குழைந்து உகார மகாரங்களோடு கிடக்கின்ற அகாரம். அங்நடு ஆக்கி - மூல நடுவில் அமைத்து. குளிர்ந்த அரவு - குளிர்ந்த குண்டலினியாகிற பாம்பு. குண்டலினி அரவுபோல மூலத்துட் சுருண்டு கிடத்தலானும், சுழுமுனைவழியாக எழுப்பப் படுகின்ற போது அடியுண்ட நாகம்போலச் சீறி யெழுதலானும் அரவு என யோக நூல்கள் வழங்குவவாயின.

வளிந்தவை - பிராணவாயுவோடு கூடியவை; வளி என்னும் பெயரடியாகப் பிறந்த வினைப்பெயர். அந்த எழு நாடியகாலே-மூலமாகிய அங்கு எழுதலை ஆய்ந்த காலத்து என்க. எழு - முதனிலைத் தொழிற் பெயர்.

அகார உகாரங்கள் முழுமாத்திரை. மகாரம் அரை மாத்திரை. நாதம் முக்கால் மாத்திரை. பிந்து கால் மாத்திரை. எல்லாம் சேர்ந்து இரண்டரை மாத்திரை பெறுகின்ற பிரணவ எழுத்தாயின. ஆதலால், ஆலித்து என்றது அதனை உச்சரித்து என்பதாம்.

எழுந்து அமைந்து ஊறி எழுந்ததாய் பாலித்து என்ற பகுதி பிரணவ தியான அனுபவம் கூறியது.

பகையற நின்றபின் - மனம் மந்திரத்தில் நிலைக்காதவண்ணம் புறம்பேயிழுத்துச் செல்லும் காமம் முதலிய பகைவர்க்கம் ஆறும் வந்து தாக்காதவாறு நிலைத்து நின்றபின்.

மால் உற்ற மந்திரம் - மந்திரமும் செபிப்பானும் வேறுகாது தன்வயமாக்கி ஆன்மபோதத்தையும் அடங்கச்செய்த மந்திரம். மாறிக்கொள்வார்க்கு - மாறி உச்சரிப்பவர்களுக்கு.

கொண்ட இம்மந்திரம் கூத்தன் எழுத்ததாய் : கூத்தன் - பிராணன் : என்றது ஆன்மா. அதன் எழுத்து ஹம் ஸ என்பதாம். பண்டை உள் நாவில் பகையற விண்டபின் - பழமையாக நாப்புடை பெயராதவாறு நாவினிடமாகப் பயின்றபின்.

பன்று - புருவநடு. மணிவிளக்கு - இரத்தினதீபம் போன்ற அசையாத ஒளிப்பிழம்பு. அவ்வனுபவம் கிட்டியதும், இதயத்தெழுந்து - மனத்தால் அவ்வனுபவத்தினின்றும் பிரிந்து வேறாகி. நம என் - வணக்கம் என்று சொல்லுக. ஒன்றியிருக்கின்ற நிலையில் உணர்வு

காரியப்படாமையின் ' நப ' எனல் முடியாது ஆகை யால் அவ்வநுபவத்தினின்றும் பிரிந்தபின் ' நப எ[illegible] ' என்றது. (405, 406, 407)

## 10. வயிரவச் சக்கரம்

வயிரவர் சிவபெருமானுடைய கோலமூர்த்தங் களில் ஒன்று. பகை முதலியன வெல்ல இவரை உபா சிப்பது மரபு. பைரவர் என்ற சொற்குப் பயம் விளை விப்பவர் என்பது பொருள். அவரை வழிபடுதற்குரிய சக்கரமும் இவ்வதிகாரத்து ஓதப்படுதலின் இது வயிர வச் சக்கரம் எனப் பெயர் பெற்றது. நாலாம் தந்திரத்து ஏனைய அதிகாரங்களைப் போலச் சக்கரம் அமைக்கும் முறையை வெளிப்படையாகக் கூறாது திதிகளின்மேல் வைத்துக் கூறியிருப்பது சிந்தித்தற்குரியது.

**அறிந்த பிரதமையோ டாறு மறிஞ்சு**
**அறிந்தவச் சத்தமி மேலிவை குற்றம்**
**அறிந்தவை யொன்றுவிட் டொன்றுபத் தாக**
**அறிந்த வலமது வாக நடவே** 1291

இம் - எனின், சக்கரம் கீறுகின்ற முறைமையினை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : தெரிந்த முதற்கோட்டோடு ஆறுரேகை களை மறித்து எழுதி, அதற்குமேல் ஏழுவரைகளைக் கீறி, மீட்டும் ஒன்றுவிட்டொன்றான அறைகளில் ' ய ' உருவம்வர அறிந்து வலப்பக்கமாக என்றவாறு.

பிரதமை முதலியன திதிகளை உணர்த்தாது ஒன்று முதலான எண்ணளவாக உணர்த்தின. பத்து என்ற

...ண்ணின் வடிவு ω எனச் சூலம்போலிருத்தலின் ஒன்றை விட்டு ஒருகோட்டில் சூலம் கீறுக என்றதாம். அங்ஙனம் கீறும்போது வலமாக நடக்க என்றதாம்.



இங்ஙனம் கீறிப் பைரவ மூலமந்திரத்தைக் குருமூலமாகக்கேட்டு இந்தச் சக்கரத்தின் முப்பத்தாறு பதங்களிலும் அமைக்க இம்மந்திரத்திற்கு முதல்தானமாகிய மூலாதாரத்தோடு ஆஞ்ஞையாகிற ஆருதாரங்களையும் அறிந்து, அதற்கு மேல் அறியப்பட்ட ஏழாமிடமாகிய உச்சிக்குமேல், இவைகளை ஒழித்துநின்ற மேல் மூன்று தானங்களுள் ஒன்றைவிட்டு ஒன்றில் பிராணனுனது பொருந்த அறிந்து, பிங்கலைவழியாக நடப்பாயாக என்று பிராணுயாமத்துடன் தியானிக்கின்ற முறையை உணர்த்தியதுமாக இரண்டையும் கொள்க.

மூலாதாரம். சுவாதிட்டானம், மணிபூரகம், விசுத்தி அநாகதம், தாலு என்பனவற்றைப் பிரதமை முதல் சஷ்டியீருகச் சொல்லிக் குறிப்பித்தவாறு. சத்தமி என்றது ஆஞ்ஞையை. ஒன்றைவிட்டு ஒன்று - ஒன்பதாம் ஆதாரமாகிய சிரசுக்கு மேலுள்ள இடம். பத்தாவது துவாதசாந்தம் எனப் பிந்தியவுரைக்கு விளக்கம் கொள்க. இது சக்கரமுணர்த்தும் பகுதியாதலின் சக்கர அமைப்புக்கூறும் முந்திய உரையும், உபாசிக்குமுறை கூறும் பிந்தியஉரையும் ஆகிய இரண்டையும் இரட்டுற மொழிதலாக ஒரு சேரக்கொள்க.

இங்ஙனன்றி வளர்பிறை பிரதமைமுதல் சஷ்டி வரையிலும் அதற்குமேல் சத்தமிவிட்டு அட்டமி, நவமி விட்டு தசமி, ஏகாதசிவிட்டு துவாதசி, திரயோதசி விட்டு சதுர்த்தசி ஆகிய பத்துநாட்களிலும் சரம் வலப் பக்கம் இருக்க நட எனச் சரநிலை யொத்துப் பொருள் கூறுவாரும் உண்டு. ஏற்பன ஆய்ந்து கொள்க. (408

**நடந்த வயிரவன் சூல கபாலி**
**கடந்து பகைவனைக் கண்ணாது போக்கித்**
**தொடர்ந்த வுயிரது வுண்ணும் பொழுது**
**படர்ந்த உடல்கொடு பந்தாட லாமே.** 1292

இம் - எனின், வயிரவ உபாசனையின் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : : தியானிப்பவர் மனத்தில் நடந்த வயிரவன் சூலத்தையும் கபாலத்தையும் தாங்கியவராக, பகைவனை வென்று அவன்மேல் கருணையற்று, தொடர்ந்து உயிரைத் தோண்டி உண்கின்றபோது, கிடந்த பகைவனுடலத்தைப் பந்தாடலாம் என்றவாறு.

வயிரவர் பகைவனை யழிப்பார் : அவன் உடலை நாம் பந்துபோலக்கொண்டு எற்றி விளையாடலாம் எனப் பகைவெல்லுதல் உணர்த்தியவாறு. (409)

**ஆமேவப் பூண்டரு ளாதி வயிரவன்**
**ஆமே கபாலமுஞ் சூலமுங் கைக்கொண்டங்**
**காமே தமருக பாசமுங் கையது**
**வாமே சிரத்தொடு வாளது கையே.** 1293

**கையது வாறுங் கருத்துற நோக்கிடு**
**மெய்யது செம்மை விளங்கு வயிரவன்**
**துய்யரு ளத்தில் துளங்குமெய் யுற்றதாய்ப்**
**பொய்வகை விட்டுநீ பூசனை செய்யே.** 1294

இம் - எனின், வயிரவருடைய உருவத்தியானம் உணர்த்துதல் நுதலின.

இ - ள் : ஆன்மாக்கள் விரும்பத் திருவருள் சுரக்கின்ற ஆதிவயிரவன் திருக்கரங்களில் கபாலமும், சூலமும், தமருகமும், பாசமும், வெட்டுண்ட தலையும், வாளும் ஏந்தி விளங்கும். அத்திருக்கரங்களில் அமைந்துள்ள ஆயுதங்கள் ஆறையும் மனம் பொருந்தத் தியானிக்க. அவன் திருமேனி செம்மைநிறமாக விளங்கும் : அவன் மிகத்தூயருளத்தில் விளங்குவன். மெய்ம்மையுற்று, பொய்களைநீக்கி வழிபடுக என்பதாம். (410, 411)

**பூசனை செய்யப் பொருந்தியோ ராயிரம்**
**பூசனை செய்ய மதுவுட னுடுமால்**
**பூசனை சாந்து சவாது புழுகுநெய்**
**பூசனை செய்துநீர் பூசலை வேண்டுமே.** 1295

இம் - எனின், பூசைக்கு உரிய சாதனங்களைப் புகலுதல் நுதலிற்று.

இ - ள் : ஓராயிரம் உருச்செபித்துப் பூசிக்க. நல்ல தேனை நிவேதித்துப் பூசிக்கின் வெளிப்பட்டுத் தோன்றி ஆடுவான். சாந்து, சவ்வாது, புனுகுச் சட்டம் பிழிந்த எண்ணெய் இவற்றைச் சாத்திப் பூசிக்க. அவற்றைப் பூசைக்குப்பின்பு நீவிர் பூசிக்கொள்க என்றவாறு. **(412)**

**வேண்டிய வாறு கலகமு மாயிடும்**
**வேண்டிய வாறினுண் மெய்யது பெற்றபின்**
**வேண்டிய வாறு வரும்வழி நீநட** 1296
**வேண்டிய வாறது வாகுங் கருத்தே**

இம் - எனின், வழிபடுதலின் பயன் வகுத்துணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : நாம் விரும்பியவண்ணம் பகைவருக்குள் கலகம் உண்டாம். விரும்பிய வெட்கருமவித்தைகளை உண்மையாகப் பெற்றபின். விரும்பிய வழிகள் யாவும் சித்திக்க நீ நட. அப்போது உனக்கு வேண்டியன எல்லாம் விளையும் என்றவாறு. **(413)**

## 11. சாம்பவிமண்டலச் சக்கரம்

அம்மையப்பராக விளங்கும் ஆற்றலே சாம்பவி. அம்பயா சஹவர்த்ததே இதி சாம்ப:. சாம்ப : - சிவன். சாம்பவி - சிவசக்தி. அதனை அமைத்துக் காட்டுகின்ற சக்கரம் இது. சிவலிங்கத் திருமேனியில் பாணமாகிய சிவமும் பீடசத்தியுமாக விளங்குதலின் அவ்விரண்டும்

கடமை சிவலிங்கத் திருமேனி நிறைந்துள்ள சக்கரம் சாம்பவி சக்கரம். இதனை இவ்வதிகாரத்து **1299, 1300** மந்திரங்கள் நன்கு விளக்குவனவாம். அதனை அமைக்கும் முறையை உணர்த்துதலின் இவ்வதிகாரம் இப்பெயர்த் தாயிற்று.

**சாம்பவி மண்டலச் சக்கரஞ் சொல்லிடில்**
**ஆம்பதம் எட்டாக விட்டிடின் மேலதாம்**
**காண்பதந் தத்துவ நாலுள் நயனமும்**
**நாம்பதங் கண்டபின் நாடறிந் தோமே.** 1297

இ-ள்: சாம்பவி மண்டலச் சக்கரம் அமைக்குமுறைகளில் ஒன்றுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: சாம்பவி மண்டலச் சக்கரத்தைப்பற்றிச் சொல்லின், எட்டுவரைகள் கீறிக் காணப்படுகின்ற பதங்களில், சிவம் சத்தி நாதம் பிந்துவாகிய தத்துவங்கள் நான்கனுள், பிந்துவை நயனமாக நாமறிந்தோமாயின் நாம் நாடனைத்தாலும் அறியப்பட்டவர்கள் ஆவோம் என்றவாறு. (414)

**நாடறி மண்டலம் நல்லவிக் குண்டத்துக்**
**கோடற வீதியுங் கொணர்ந்துள் இரண்டழி**
**பாடறி பத்துடன் ஆறு நடுவீதி**
**ஏடற நாலந் திடவகை யாமே.** 1298

இ-ள்: நாடறிந்த மண்டலமாகிய சாம்பவி சக்கரத்துக் கோடுதலின்றி வீதிகளைக் கொணர்ந்து, நடுவில் இரண்டு குறைந்த பெருமையோடு கூடிய பத்தோடு, பதினாறு பதங்களில் இதழ் நீங்க இருபது பதங்களை வகுக்கச் சக்கரம் ஆம் என்றவாறு.

இரண்டழி பத்து, பத்துடனாறு எனத் தனித்தனி இயைக்க, இரண்டழி பத்து - எட்டு, பத்துடனாறு - பதினாறு. எட்டுவரை கீறி ஏழு பதமுள்ள சக்கரம் அமைக்குங்கால் பிந்துவாகிய நயனத்தானம் நடுவில் உள்ள ஒருபதமாகவும், அதனைச் சுற்றியுள்ள முதல் வீதி எட்டு பதமாகவும், அதனைச் சுற்றியுள்ள இரண்டாம் வீதி பதினாறு பதமாகவும் அமைந்துள்ளமை காண்க. பதம் என்பது ஒரு கட்டமாதலை மந்திர சாத்திரங்களிலும், அகோர சிவ பத்ததியிலும், சாராவளியிலும் காணலாம்.
(415)

**நாலந் திடவகை யுள்ளதோர் மண்டலம்**
**நாலுநல் வீதியுள் நல்ல இலிங்கமாய்**
**நாலுநற் கோணமும் நந்நாலி லிங்கமாய்**
**நாலுநற் பூநடு நண்ணலவ் வாறே.** 1299

**ஆறிரு பத்துநா லஞ்செழுத் தஞ்சையும்**
**வேறுரு வாக விளைந்து கிடந்தது**
**தேறு நிருமல சிவாய நமமென்று**
**கூறுமின் கூறிற் குறைகளும் இல்லையே.** 1300

இம் - எனின், இருபது பதங்களில் சக்கரம் அமைக்கும்முறை அறிவித்தல் நுதலின.

இ - ள் : இருபது பதமுள்ள மண்டலம். அதில் நடுவிலுள்ள நாலு வீதியில் நல்ல இலிங்க வடிவாயும், நாலு நற்கோணங்களிலும் நந்நான்கு இலிங்கமாயும் அவற்றின் இடைவெளியாகிய நற்கோணங்களிலும் நாலு பூக்களும், நடுவிலுமவ்வாறே பூவும் பொருத்துக. கீலக்கோட்டுள் ஒருபதத்தில் ககாரம் முதல் க்ஷகாரம்





சத்யோசாதாதி முகங்களுக்கு ஏற்ப இம்முறை,

1299-வது திருமந்திர விளக்கம்




*1298—1300 திருமந்திரங்களின் விளக்கம்*

வரையுள்ள முப்பத்தைந்து மெய்யெழுத்துக்களையும் சிவயநம என்பதையும் வலமாக எழுதுக என்றவாறு.

**குறைவதும் இல்லை குரைகழற் கூடும்**
**அறைவது மாரண மவ்வெழுத் தாகித்**
**திறமது வாகத் தெளியவல் லார்க்கு**
**இறவில்லை என்றென் றியம்பினர் காணே. 1301**

இம் - எனின், சாம்பவிமந்திரப் பயனுணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : குறைவதும் இல்லை. ஒலிக்கின்ற வீரக் கழலை அணிந்த திருவடியைச் சேரும். வேதத்திற் சொல்லப்பட்ட அந்த எழுத்தாகி உறுதியாக உணர வல்லாருக்கு இறப்பில்லையென்று பெரியோர்கள் கூறினார்கள் ; இதனை அறிவாயாக என்றவாறு.

ஆரணம் அவ்வெழுத்தாகி அறைவது திறமது வாகத் தெளியவல்லார்க்கு எனக்கூட்டுக. இறவு - இறப்பு ' இறவியை யார்க்கும் ' என்ற திருக்கோவையார்க்குப் பேராசிரியர் தந்த குறிப்பாலும் உணர்க. (418)

**காணும் பொருளும் கருதிய தெய்வமும்**
**பேணும் பதியும் பெருகிய தீர்த்தமும்**
**ஊணும் உணர்வும் உறக்கமுந் தானாகக்**
**காணும் கனகமும் காரிகை யாமே. 1302**

இம் - எனின், இதுவுமது.

இ - ள் : காணப்படும் பொருளும், தியானித்த தெய்வமும், போற்றும் நகரமும், பெருகிய புண்ணிய

தீர்த்தங்களும், நல்ல உணவும், உறக்கமும், முயற்சியின்றித் தானாகவே வந்தெய்தும் போன்றும் எல்லாம் இந்த இயந்திரத் தெய்வமாகிய பராசக்தியாலேயாம் என்றவாறு. (419)

**ஆமே எழுத்தஞ்சு மாம்வழி யேயாகப்**
**போமே யதுதானும் போம்வழி யேபோனால்**
**நாமே நினைத்தன செய்யலு மாகும்**
**பார்மேல் ஒருவர் பகையில்லை தானே.** 1303

இம் - எனின், நாதமார்க்கத்து ஒழுகின் எய்தும் பயனுணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : திருவைந்தெழுத்துத் தோன்றும் வழியாகவே போம்; அது செல்லும் வழியில் நீங்களும் செல்லின் நினைத்த காரியங்களைச் செய்யலாம்; பூமியில் ஒருவர் பகையும் இல்லையாம் என்றவாறு.

திருவைந்தெழுத்தும் போம் வழியாவது ஆதாரங்களில் நிலைபெறுத்தி, ஒவ்வோராதாரமாகக் கடந்து, துவாதசாந்தத்தை அடையும் வகையில் தியானித்தல். அங்ஙனமே உங்கள் தியானமும் மேலேறிச் செல்லின் நினைத்த யாவும் முடியும்; பகையுமில்லையாம் என்பது கருத்து. (420)

**பகையில்லை என்றும் பணிந்தவர் தம்பால்**
**நகையில்லை நாளும் நன்மைக ளாகும்**
**வினையில்லை என்றும் விருத்தமும் இல்லை**
**தகைவில்லை தானுஞ் சலமது வாமே.** 1304

இம் - எனின், இதுவுமது.

இ - ள் : சாம்பவிமண்டலத்தைப் பணிந்தவர்க ளிடம் பகையில்லையாம். நகைப்பிற்கு உரிய நிகழ்ச்சி களும் உளவாகா. நாடோறும் நன்மைகள் உளவாம். வினைகளும் அவற்றால் விளையும் மாறுபாடுகளும் இல்லை யாம். தடை போதுமில்லை. தானும் சலம்போலத் தண்ணி தாம் என்றவாறு.

நகைவு - தடை. சலம் - தண்மைபற்றி உவமிக்கப் பட்டது. மணமுடையதாம் என்று உரைப்பாரும் உளர். **(421)**

**ஆரும் உரைசெய்ய லாமஞ் செழுத்தாலே**
**யாரும் அறியாத ஆனந்த ரூபமாம்**
**பாரும் விசும்பும் பகலும் மதியதி** 1305
**ஊனும் உயிரும் உணர்வது வாமே**

இம் - எனின், இதுவுமது.

இ - ள் : யாரும் செபிக்கலாம் ; திருவைந்தெழுத் தாலே எவரும் அறியாத ஆனந்த வடிவம் உண்டாம். விண்ணும் மண்ணும் பகலும் மதிக்கக்கூடியதாக மேலான உடலும், உயிரும் ஞானவடிவாம் எ - று.

சாம்பவிமந்திரத்தைச் செபிக்கத்தக்கார் தகாதார் என வேறுபாடு இல்லை. யாரும் செபிக்கலாம்; அதனால் விளைவது ஆனந்த வடிவாம்; உயிரும் உடலும் ஞான மாம் என்பது கருத்து.

பகலும் மதி உணர்வது ஆம் எனக்கூட்டுக, மதி - மதிக்கத்தக்க. மதியுணர்வு - வினைத்தொகை. அதி ஊன் - சிறந்த உடல் : ஆகுபெயர். **(422)**

உணர்ந்தெழு மந்திரம் ஓமெனும் உள்ளே
அணைந்தெழு மாங்கத னாதிய தாகுங்
குணர்ந்தெழு சூதனுஞ் சூதியுங் கூடிக்
கணந்தெழுங் காணுமக் காமுகை யாலே. 1306

இம் - எனின், மந்திரத்தலைவரும், மந்திரமும் இவரெனக் குறிப்பித்தல் நுதலிற்று.

இ - ள்: சிவகாமியாகிய பராசத்தியால். ஆகமங்களில் அறிந்தெழுகின்ற ஓம் என்னும் அது மனத்துப் பொருந்தி எழுவதாகிய சிபஞ்சாக்கரத்தின் முதலாகும். அதனைச் சூதனாகிய சிவமும், சூதியாகிய சத்தியும் கூடிக் கலந்துவெளிப்படும். இதனைக் காணுங்கள் என்றவாறு.

'ஓம் சிவாயநம' என்பது சாம்பவிமந்திரமாதலின் 'உள்ளே அணைந்தெழும் ஆங்கு அதன் ஆதி ஓம் எனும் அது ஆகும்' எனக்கூட்டிப் பொருள்காண்க.

சூதன் சூதியென்பன இறைவனையும் இறைவியையும் உணர்த்தினமை காண்க. கணந்து - கலந்து. (423)

## 12. புவனாபதி சக்கரம்

அம்மை புவனை, பாலை, திரிபுரையெனப் பரிபாகிகளின் தகுதிக்கேற்ப நின்று அருள்வழங்குவள். அவ்வம்மை நிலவும் சக்கரம் உணர்த்துதலின் இவ்வதிகாரம் புவனாபதி சக்கரம் என்னும் இப்பெயர்த்தாயிற்று. உதிக்கின்ற செங்கதிரை ஒத்த ஒளியும், வென்றடக்கிய புது ஜப மாலையும், பிறைமதிபோல வளைந்து கிடக்கின்ற ஒளிவிடும் பாலையும், முக்கண்ணும், பன்னிறமணிகளிழைக்கப்பட்ட

குண்டலமும், தாமரையும், கழுத்தில் மாலை காஞ்சி இரத்தின வளையல்கள் இவைகளும் ஆடையும், பாசம், அங்குசம், அபயம், வரதம் இவைகளைத்தாங்கிய கரமும் உடையவளாகச் சிவந்த நிறத்துடன் தாமரைப்பூவில் எழுந்தருளியிருப்பவளாகப் புவனையைத் தியானிப்பர். புவனை மந்திரமும், சக்கரமும், உபாசனையும், பூசையும் உணர்த்துகிறது இவ்வதிகாரம்.

**ககராதி யோரைந்துங் காணிய பொன்மை**
**அகராதி யோரா றரத்தமே மேலும்**
**சகராதி யோர்நான்குந் தான்சுத்த வெண்மை**
**ககராதி மூவித்தை காமிய முத்தியே. 1307**

இம் - எனின், காதிவித்யை அறிவித்தல் நுதலிற்று.

இ - ள்: ககாரமுதலான ஐந்து எழுத்துக்களும் பொன்னிறமாம். ஹகாராதி ஒராறு எழுத்துக்களும் செந்நிறமாம், சகாரமுதலான நான்கு எழுத்துக்களும் சுத்தவெண்மையாம். காதிவித்யையான இம்மூன்றும் காமியப்பயன் மோட்சம் இரண்டையும் தருவனவாம் என்றவாறு.

ககராதி ஐந்தெழுத்துக்களை லலிதா திரிசதியின் நூறு பெயர்களின் முதலெழுத்துக்களைச் சேர்த்து எண்ணி அறிக. அவ்வாறே அடுத்து நூற்றிருபது பெயர்களைக் கொண்டு ஹகராதி ஆறையும், அடுத்த எண்பது நாமங்களைக் கொண்டு சகராதி நான்கையும் தொகுத்தறிக. இது குருமுகமாகக் கேட்டுத் தெளிய வேண்டிய பராவித்யையாகும்.

இம்மூன்றும் முறையே வாக்பவகூடம், காமராஜ கூடம், சக்தி கூடம் என்றழைக்கப்பெறும். ஸ்ரீ பஞ்ச தசாக்ஷரி வித்தை தெரிந்தவனுக்கு இம்மையிற் காமிய பயன்களும் மறுமையில் மோட்சமும் சித்திக்கும்,

**मोक्षैक हेतुविद्या श्रीविद्या नात्र संशयः।**

என்ற மேற்கோள் ஸ்ரீ வித்யைபோல மோட்சத்திற்குத் துணை செய்வதொன்றில்லை என்று அறிவிக்கிறது. இம் மரபு அறியார் தமக்குத் தோன்றியவாறு அட்சரங்களை அமைப்பர். ஈண்டுப் பொருந்தாமை அறிக. (424)

**ஓரில் இதுவே உரையும்இத் தெய்வத்தைத்**
**தேரிற் பிறிதில்லை யானென்று செப்பக்கோள்**
**வாரித் திரிகோண மனமின்ப முத்தியுந்**
**தேரில் அறியுஞ் சிவகாயந் தானே.** 1308

இ - ள் - எனின், திரிகோணமே சிவன் மேனியென்பது உணர்த்திற்று.

இ - ள் : ஆயுமிடத்து, யானுரைக்கும் உரையும் இதுவேயாம். தேருமிடத்து இந்த மந்திர வடிவான தெய்வமாகிய புவனையைத் தவிர தெய்வம் பிறிதில்லை; நானென்று சொல்லக் கேட்பாயாக. திரிகோணம் கீறி அதனை ஆராயின், மனம் இன்பம் முத்தி இவற்றை அறிய அருளுவதாகிய சிவமேனியாம் என்றவாறு.

வாரி - வருவித்து: அதாவது கீறி என்பதாம். (425)

**ஏக பராசத்தி ஈசற்காம் அங்கமே**
**ஆகம் பராவித்தை யாமுத்தி சித்தியே**
**ஏகம் பராசத்தி யாகச் சிவகுரு**
**யோகம் பராசத்தி உண்மை எட்டாமே.** 1309

இ-ம் - எனின் ; சத்திக்கும் சிவத்திற்கும் உள்ள சம்பந்தம் அங்காங்கிபாவமென அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் ; ஒன்றாய பராசத்தியே இறைவனுக்கு அங்கமானாள்; அவளது திருமேனி பராவித்யையாம். அது முத்தியையும் சித்தியையும் தருவதாம். பராசத்தி ஒருத்தியேயானும் சிவகுருவோடு யோகம் உண்மையான் எட்டானவள் என்றவாறு.

எத்திறம் நின்றான் ஈசன் அத்திறம் அவளும் நிற்பள் ஆதலின், பராசத்தி, ஆதிசத்தி, பிந்துசத்தி, மனோன்மணி, மகேசை, உமை, லட்சுமி, சரஸ்வதியாக நிற்கும்நிலை உணர்த்தியவாறு. ஏழுபேதமே உளவாயினும்; பரசிவத்திற்குப் பராசத்தியாய் நிற்கு நிலையையுங் காட்டி எட்டு என்றவாறு. (426)

**எட்டா கியசத்தி எட்டாகும் யோகத்துக்**
**கட்டாகு நாதாந்தத் தெட்டுங் கலப்பித்த**
**தொட்டாத விந்துவுந் தானற் றொழிந்தது**
**இட்டா தொழிந்தது கீழான மூடர்க்கே.** 1310

இ-ம் - எனின், அம்மையின் அருளநுபவத்தின் அடைதற்கருமை விளக்குதல் நுதலிற்று.

இ - ள் : அட்டமாசித்திகளும் அட்டாங்க யோகத்துறு பயனும்; இந்த எட்டுவகை யோகமும் நாதாந்தத்தில் ஒன்றாகக் கலப்பித்தது ஒன்றொடுமொட்டாத விந்து சத்தியாம். அதுவும் நீங்கிற்று. இவ்வநுபவங்கள் பரிபாகமில்லாத கீழான மூடர்களுக்கு அடையவொண்ணாதாயிற்று என்றவாறு.

கட்டு ஆகும் - உறுயான பயனும். அட்டாங்க யோகத்தையும் நாதாந்தத்தில் ஒன்றுகக் கலக்கச் செய்தது விந்து சத்தியாம். அங்ஙனம் உபகரித்த அதுவும் அநுபவ முதிர்ச்சிக்கண் அற்றுப் போயிற்று என்றது திரிபுடிஞானம் தேய்ந்தொன்றுயினமை விளக்கியதாம். பேதஞானம் படைத்து, அநுபவமுதிர்வு இல்லாத கீழோர்க்கு அறிவநுபவத்திற்குப் புலனுகாதாயிற்று என்பது கருத்து. (427)

ஏதும் பலமா மியந்திரா சன்னடி
ஓதிக் குருவின் உபதேசம் உட்கொண்டு
நீதங்கும் அங்க நியாசந் தனைப்பண்ணிச்
சாதங்கெடச் செய்பிற் சட்கோணந் தானிடே. 1311

சட்கோணந் தன்னில் ஸ்ரீம்ஹ்ரீம் தானிட்டு
அக்கோண மாறின் தலையில்ரீங் காரமிட்டு
எக்கோண முஞ்சூழ எழில்வட்டம் இட்டுப்பின்
மிக்கிரேட் டக்கர மம்முதன் மேலிடே. 1312

இட்ட இதழ்கள் இடையந் தரத்திலே
அட்டஹவ் விட்டதின் மேலே உவ்விட்டுக்
கிட்ட இதழ்களின் மேலே கிரோம்சிரோம்
இட்டுவா மத்தாங் கிரோங்கென்று மேவிடே. 1313

மேவிய சக்கர மீது வலத்திலே
கோவை யடைவே குரோங்சிரோங் கென்றிட்டுத்
தாவில்ரீங் காரத்தாற் சக்கரஞ் சூழ்ந்து
பூவைப் புவனு பதியைப்பின் பூசியே. 1314

இம் - எனின், சக்கரம் அமைக்குமுறை அறிவித்தல் நுதலின.

இ - ள் : எல்லாப் பயனையும் தருகின்ற யந்திர ராசனாகிய புவனாபதிச் சக்கரத்தின் திருவடியை அறிந்து, குருபதேசமும் கேட்டு, உபாசகனாகிய ஆன்மா தங்கியிருக்கின்ற அங்கங்களைச் சிவாங்கங்களாக நியசித்து. உன் பிறவிவேர் கெட செப்புத்தகட்டில் அறுகோணம் இடுவாயாக ;

அச்சட்கோணத்தில் ஸ்ரீம் ஹ்ரீம் என்ற பீசங்களை எழுதி, அக்கோணம் ஆறின் உச்சியிலும் 'ரீம்' என் பதனை எழுதி, எல்லாக் கோணங்களையும் சூழ அழகிய வட்டம் எழுதி, அதன்மேல் பதினாறுயிர்களையும் அகர முதலாக எழுதுக ;

எழுதிய தாமரையிதழ்களின் நடுவிலுள்ள வெளியில் செய்யப்பட்ட 'ஹ' என்னும் எழுத்தையும் 'உ' என்னும் எழுத்தையும் சேர்த்து எழுதி, அணுக. இதழ்களுக்கு மேலே க்ரோம் ஸ்ரோம் என்பவற்றை எழுதி, அதன் இடப்பக்கத்தில் க்ஷம் க்ரோம் என்று விரும்பி எழுதுக ;

விரும்பியெழுதிய சக்கரத்தின்மீது, வலப்பாகத்திலே மாலை மாதிரியாக க்ரோம் ஸ்ரோம் என்றிட்டு, குற்றமற்ற 'ரீம்' என்னும் பீசத்தால் சக்கரத்தைச் சூழ்ந்து புவனாபதி சக்தியைப் பூசிப்பாயாக என்றவாறு.

யந்திரராசன் - யந்திரங்களுட் சிறந்தது. பின்னும் (1318) 'இயந்திரராசனை' என அநுவதித்தல் கொண்டு உணர்க. இந்திராசன்னடி எனத் தவறான பாடங்கொண்டு இந்துராசன் - மதிமண்டல வாசியாகிய இறைவன் எனப் பொருள்கொண்டு இடர்ப்படுவாரும் உளர்.

அங்கநியாசம் என்பது நமது அங்கத்தைச் சிவாங்க மாகப் பாவித்தல். அதற்குரிய இருதயாதி மந்திரங்களைச் சொல்லிக் கரநியாசம் செய்து சுத்தியான கரத்தால் தொட்டுத் தனக்குள்ள மாயேயமான அங்கம் கழிந்ததாகவும் அது அருள்வடிவான சிவாங்கமானதாகவும் பாவித்தல். சாதம் - பிறப்பு, செப்புத்தகட்டில் சட்கோணம் இடுக என்பது. ( 428 - 431 )

**பூசிக்கும் போது புவனு பதிதன்னை**
**ஆசற் றகத்தினில் ஆவா கனம்பண்ணிப்**
**பேசிய பிராணப் பிரதிட்டை யதுசெய்து**
**தேசுற் றிடவே தியான மதுசெய்யே** 1315

இம் - எனின், பூசிக்குமுறை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : பூசிக்கும்போது புவனபதியைக் குற்ற மற்ற மனத்தில் ஆவாகனப்பண்ணி பிராணப் பிரதிட்டையும் செய்து, ஒளிமிகத் தியானிக்க என்றவாறு.

ஆசு அற்ற அகம் - காமாதி குற்றமற்ற மனம். ஆவாகனம் - நிலைபெறும்படி வேண்டிக்கோடல். பேசி - அதற்குரிய மந்திரங்களைச் சொல்லி. பிராணப் பிரதிட்டை - உயிர் கொடுத்து நிறுத்துதல். (432)

**செய்ய திருமேனி செம்பட் டுடைதானுங்**
**கையில் படையங் குசபாசத் தோடபயம்**
**மெய்யில் அணிகலம் இரத்தின மாமேனி**
**துய்ய முடியும் அவயவத்தில் தோற்றமே.** 1316

இம் - எனின், உருவத்தியானம் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : சிவந்த மேனியளாய், செம்பட்டுடை யுடுத்து, கையில் அங்குசம் பாசம் ஆகிய படைகளையும், அபய வரதத்தையும் தாங்கி, திருமேனியில் அணிகலன் களையும் இரத்தினுபரணங்களையும் தாங்கி, தூய கிரீடத் தோடு வடிவு கொண்டு தோன்றுவள் என்றவாறு.

இதனை மகாலட்சுமி ரத்னகோச தியான சுலோகத் தான் அறிக. (433)

**தோற்போர்வை நீக்கித் துதித்தடைவிற் பூசித்துப்**
**பாற்போ னகமந் திரத்தாற் பயின்றேத்தி**
**நாற்பால நாரதா யாசுவா காஎன்று**
**சிர்ப்பாகச் சேடத்தை மாற்றிப்பின் சீவியே. 1317**

இம் - எனின், பூசைக்குரிய நியமங்கள் உணர்த் துதல் நுதலிற்று.

இ - ள் : மேலாடையின்றித் தோத்திரித்து, நூல் விதிப்படியே பூசித்து, பாலன்னத்தை மந்திரத்தோடு செபித்து நிவேதித்து, நான்கு திசைகளிலும் நாரதாய சுவாகா என்று நிவேதித்து, சிறப்பாக நிர்மாலியத்தை அகற்றி, பிறகு அதனையுண்ணுக என்றவாறு.

தோற்போர்வை - சட்டை, மேலாடை முதலியன. அடைவு - முறை; என்றது, ஆகமவிதிப்படி என்றவாறு. சீவி - உட்கொண்டு சீவிப்பாயாக. (434)

**சீவிப் பதன்முன்னே தேவியையுத் வாகனத்தாற்**
**பாவித் திதய கமலம் பதிவித்தங்**
**கியாவர்க்கும் எட்டா இயந்திர ராசனை**
**நீவைத்துச் சேமி நினைந்தது தருமே. 1318**

இம் - எனின், உத்வாகனக் கிரமம் உரைத்தல் நுதலிற்று.

இ - ள் : நைவேத்ய பேடத்தை உண்பதற்கு முன், புவனுபதியை உத்வாகனமந்திரத்தால் பாவித்து இதயத் தொடுக்கிக் கொண்டு, யாவர்க்கும் அறிய வொண்ணுத இயந்திரராசனை நீ மனத்துள் வைத்து வழிபடுவாயாக; பின் அந்த இயந்திரம் நீ நினைத்த அனைத்தையும் தரும் என்றவாறு. (435)

## 13. நவாக்கிரி சக்கரம்

இவ்வதிகாரம் ஒன்பதெழுத்துக்களைப் பீசமாகக் கொண்ட தேவிமந்திரம் அமைந்த சக்கரத்தினியல்பு உணர்த்துவது. ஓரெழுத்தே ஒன்பதெழுத்தாய், அது மாறி அமையும்வகை எண்பத்தொருவகையாய் விளங்குவது. இம்மந்திரத்தை ஓதும் முறையும், அதனுல் அடையும் சித்தி முத்திகளும், இம்மந்திரத் தெய்வமாகிய சக்தியின் உருவத்தியானமும், அகப்பூசை புறப்பூசை வழிகளும், பிறவும் உணர்த்தப்பெறுகின்றன.

**நவாக்கரி சக்கர நானுரை செய்யின்**
**நவாக்கரி ஒன்று நவாக்கரி யாக**
**நவாக்கரி எண்பத் தொருவகை யாக**
**நவாக்கரி யக்கிலீ சௌமுத லீறே.** *1319*

இம் - எனின், நவாக்கரியின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : நவாக்கரி சக்கரத்தை நான் உரைசெய்யின், புதியதான ஏகாட்சரியே ஒன்பது எழுத்துக்

கொண்ட தேவி மந்திரமாக, அதுவே எண்பத்தொரு வகையாக, க்லீம் முதலும், சௌம் இறுதியுமாகக் கொண்டு விளங்குவதாம் என்றவாறு.

இரண்டாம் அடிக்கண் உள்ள நவ அக்கரி யொன்று-புதிதான வியக்கத்தக்க ஏகாட்சரியே. ஏகாட்சரி ஹ்ரீம் என்பது இதுவே புவனே பீஜமுமாம். இதில் ஹ, ர, ஈ, ம் ஆகிய நான்கெழுத்துக்கள் கலந்துள்ளன. இம்மந்திரம் பதினாறுகலை வடிவமானது. இந்நான்கும் வேருகநின்ற வியட்டிநிலையில் ஹ 8, ர 2, ஈ 4, விந்துவாகிய o 1 ஆகப் பதினைந்து கலைகளும், சமட்டி நிலையில் பதினாறு கலைகளும் உடையன. இந்த ஏகாட்சரியே ஹ - தத்பதம் ர - துவம்பதம், ஈம் (o) அசிபதம். ஆகவே தத்துவமசி யென்னும் மகாவாக்கியமுமாம். ஆகவே இந்த ஏகாட்சரி யும் ஸ்ரீ வித்யையே. நவாக்கரியும் அங்ஙனமேயாதல் காமகலாவிலாசத்தில் காண்க. நவாக்கரியில் ஒவ்வொன் றையும் முதலாக வைத்து மாறிவர எண்பத்தொரு வகையாம். (436)

**சௌமுதல் அவ்வொடு ஹௌவுட ஞங்கிரீம்**
**கௌவு ளுமையுளுங் கலந்திரீம் சிரீமென்று**
**ஒவ்வில் எழுங்கிலீ மந்திர பாதமாச்**
**செவ்வுள் எழுந்து சிவாய நமவெனே. 1320**

இம் - எனின், நவாக்கரி மந்திரபாதம் இவையென உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: ஸௌம், ஔம், ஹௌம், ஆம், க்ரீம், கௌம், ஐம், ரீம், ஸ்ரீம் என்று இவை ஒத்து வருவதால்

விளையும் க்லீம் என்பதை மந்திர முதலாகக் கொண்டு சிவாயநம எனக்கூறுக என்றவாறு.

இவை திருமூலதேவநாயனார் அருளிய சுத்த நவாக்கரியாகும். சாக்தேய தந்திர முறைபற்றிச் சிலர் ஓம் க்லீம், ஸ்ரீம் சாமுண்டாயை விச்சே என்பது நவாக்கரியென்பர். அது சாமுண்டீஸ்வரியை மந்திர தெய்வமாகக்கொண்டு காமியப்பயன் ஒன்றையே தர வல்லதாய் இந்திரசால வேலைசெய்யப் பயன்படுமேயன்றி புத்தி முத்திகளைத் தாராது. பின்வரும் மந்திரங்களில் திருமூலதேவ சித்தநாதர் அருளிச்செய்வதை நோக்குக. ஆதலின் துறவிகளும், ஞானபீடாதிபதிகளும், சுத்தாத்துவித சைவ சித்தாந்திகளும் பஞ்சாக்கரக் கலப்பில்லாத நவாக்கரியை யோதின் மகாநரகங்களை எய்துவர் என்று உணர்க. (437)

**நவாக்கரி யாவது நானறி வித்தை**
**நவாக்கரி யுள்ளெழும் நன்மைகள் எல்லாம்**
**நவாக்கரி மந்திர நாவுளே ஓத**
**நவாக்கரி சத்தி நலந்தருந் தானே** 1321

இம் - எனின், நவாக்கரியின் பயனுணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: நவாக்கரி நானறிந்த ஸ்ரீவித்தையாகும். இதில் நன்மைகளனைத்தும் விளையும். இதனை நாவுள் வைத்துப் பிறர் செவிக்கும் தன் செவிக்கும் கேட்காமல் ஓத நவாக்கரி சக்தி நன்மைகளை அருளுவள், என்றவாறு. (438)

**நலந்தரு ஞானமுங் கல்வியும் எல்லாம்**
**உரந்தரு வல்வினை யும்மைவிட் டோடும்**
**சிரந்தரு தீவினை செய்வ தகற்றி**
**வரந்தரு சோதியும் வாய்த்திடுங் காணே.** 1322

இ-ம் - எனின், இதுவுமது.

இ-ள்: ஞானம் கல்வி முதலாகிய நலமெலாம் தரும்; வன்மை மிக்க பிராரத்த சஞ்சித ஆகாமிய வினைகள் யாவும் உம்மைவிட்டு நீங்கும்; இப்பிறவியில் அறியாமையால் கட்டப்படும் தலையான தீவினைகளை நீக்கி வரங்களை அருளும்; ஒளிக்காட்சியும் உண்டாம்; இதனை உம் அநுபவத்திற்காண்க என்றவாறு.

வல்வினையெனவே உரந்தருதல் பெறப்படுமாயினும் அதன் கொடுமையை நன்கு விளக்க 'உரம் தரும் வல்வினை' எனப்பட்டது. உரம் - வலிமை. ஞானம் என்றும் கொள்க. **(439)**

**கண்டிடுஞ் சக்கரம் வெள்ளிபொன் செம்பிடை**
**கொண்டிடும் உள்ளே குறித்த வினைகளை**
**வென்றிடு மண்டலம் வெற்றி தருவிக்கும்**
**நின்றிடுஞ் சக்கரம் நினைக்கு மளவே** 1323

இ-ம் - எனின், இதுவுமது.

இ-ள்: சக்கரத்தை வெள்ளி, பொன், செம்புத் தகடுகளில் சமைக்க; மனத்திலும் தியானியுங்கள்; உங்களைக் குறித்த வினைகளை வெல்லுங்கள்; இம்மண்டலம் வெற்றிதரச் செய்யும்; இச்சக்கரத்தை நினைக்குமளவிலேயே மனத்தில் நிலைபெறும் என்றவாறு.

பலபயன்களைத் தருதலேயன்றி நினைக்குமளவில் மனத்திலும் நிலைபெறும் எளிமையது என்பது கருத்து. 'நினைக்குமளவே நின்றிடும்' என்பதற்கு நீ தியானிக்கு மளவாகவே நிலைபெறுமென்றும் உரைக்கலாம். (440)

**நினைத்திடு மச்சிரீ மக்கிலீ மீறு**
**நினைத்திடுஞ் சக்கர மாதியு மீறு**
**நினைத்திடு நெல்லொடு புல்லினை யுள்ளே**
**நினைத்திடும் அருச்சனை நேர்தரு வாளே.** 1324

இம் - எனின், புல்லும் நெல்லும்கொண்டு அர்ச்சிக்க வெளிப்படுவள் என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: ஸ்ரீம் க்லீம் ஈருகத் தியானியுங்கள். சக்கரத்திற்கு முதலும் ஈறும் அந்தப்பீசங்களே. சம்பா நெல்லும் அறுகம்புல்லுங்கொண்டு தியானித்து அர்ச்சனை செய்ய எண்ணுங்கள்; பராசத்தி எதிர்ப்படுவாள் என்றவாறு. (441)

**நேர்தரு மத்திரு நாயகி யானவள்**
**யாதொரு வண்ணம் அறிந்திடும் பொற்பூவை**
**கார்தரு வண்ணங் கருதின கைவரும்**
**நார்தரு வண்ணம் நடந்திடு நீயே.** 1325

இம் - எனின், அம்மையின் நிறமும், அன்புடன் வழிபடுமுறையும் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: வெளிப்பட்டு அருள் வழங்கும் அச்செல் வங்களனைத்திற்கும் பரமகாரணியான தேவி, எவ்வித நிறமுடையாள் என அறிய விரும்பின், அவள்நிறம் அழகிய காயாம்பூவின் கருமை நிறமாம். நீ அவள்

கருணையோடு வெளிப்படும் வண்ணம் அன்புடன் நடக்க நினைத்தன கைகூடும் என்றவாறு. ( 442 )

**நடந்திடும் பாரினில் நன்மைகள் எல்லாங்**
**கடந்திடுங் காலனும் எண்ணிய நாளும்**
**படர்ந்திடு நாமமும் பாய்கதிர் போல**
**அடைந்திடு வண்ணம் அடைந்திடு நீயே.** 1326

இ-ம் - எனின், பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இந்த உலகில் எல்லா நன்மைகளும் நடக்கும்; காலன் நமக்குரிய ஆயுளாக எண்ணிய நாட்களும் கடக்கும்; எங்கும் பாய்ந்து செல்லும் சூரிய கதிரைப்போல புகழானது எங்கும் பரவும்; ஆதலால் பராசத்தியே கருணையோடு எழுந்தருளும் வண்ணம் நீ நட என்றவாறு.

காலன் எண்ணிய நாளும் கடந்திடும் என்பதற்குக் காலனே இவருக்கு வரையறுத்த நாளைக் கடப்பான். அம்மையின் அருள்பெற்றோர் முன் வருவதற்கு அஞ்சி எனவும், இவர்கள் அம்மையி னருளாற்றலால் இவர்களது உயிரைக் கவர நாட்களையே எண்ணிக் கொண்டிருக்கும் யமனையும் வெல்லலாம் எனவும் இருவகையாகவும் பொருள் கொள்ளலாம். ( 443 )

**அடைந்திடும் பொன்வெள்ளி கல்லுடன் எல்லாம்**
**அடைந்திடு மாதி யருளுந் திருவும்**
**அடைந்திடும் அண்டத் தமரர்கள் வாழ்வும்**
**அடைந்திடும் வண்ணம் அறிந்திடு நீயே.** 1327

இ-ம் - எனின், இதுவுமது.

இ - ள் : பொன் வெள்ளி மாணிக்கம் முதலிய கற்கள் எல்லாம் தாமேவந்து சேரும். பராசத்தியின் அருளும் ஞானமும் வரும்; தேவர்கள் வாழ்வு சித்திக்கும்; ஆதலால் பராசத்தியாகப் பரிந்து உன்னை வந்து அடையுமாறு ஒழுகிக்கொள் என்றவாறு. ( 444 )

**அறிந்திடு வார்கள் அமரர்க ளாகத்**
**தெரிந்திடு வானோர் தேவர்கள் தேவன்**
**பரிந்திடும் வானவன் பாய்புனல் சூடி**
**முரிந்திடு வானை முயன்றிடு நீரே.** 1328

இம் - எனின், இதுவுமது.

இ - ள் : நவாக்கரிசக்தியை அமரர்களாவதற்காக மக்கள் அறிவார்கள்: அவளையறிந்த தேவர்களைத் தேவ தேவனாகிய சீபரமேசுவரன் அன்புசெய்யும். தேவ லோகத்திலிருந்துவந்த வலிமையுடன் பாய்கின்ற தேவ கங்கையைத் திருமுடியிற்சூடிச் செருக்கடக்கும் பரமே சுரனை அடைய நீ முயல்வாயாக என்றவாறு.

' வான வன்பாய் புனல் ' எனப் பிரித்துப் பொருள் கொள்க. ( 445 )

**நீர்பணி சக்கரம் நேர்தரு வண்ணங்கள்**
**பாரணி யும்ஹிரீ முன்ஸ்ரீ மீருந்**
**தாரணி யும்புகழ்த் தையல்நல் லாள்தனைக்**
**காரணி யும்பொழிற் கண்டுகொள் ளீரே.** 1329

இம் - எனின், நவாக்கரி மாறலில் ஒருவகையினை உபாசிக்குமுறையும் பயனும் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : நீங்கள் வணங்குவதற்குரிய சக்கரத்தில் பொருந்திய எழுத்துக்கள் உலகம் புகழ்ந்து பேசுகின்ற ஹ்ரீம் முதலாக ஸ்ரீம் ஈறாக உள்ளதாம். இதனைச் செபித்து எல்லையை அணிந்த புகழோடு கூடிய பராசத்தியை மோகம் வந்து தங்கப்பெற்ற பொழிலிடத்துத் தரிசியுங்கள் என்றவாறு. **(446)**

**கண்டுகொள் ளுந்தலி நாயகி தன்னையும்**
**மொண்டுகொ ளும்முக வசியம தாயிடும்**
**பண்டுகொ ளும்பர மாய பரஞ்சுடர்**
**நின்றுகொ ளும்நிலை பேறுடை யானையே.** 1330

இம் - எனின், இதுவுமது.

இ - ள் : ஒப்பற்ற நாயகியாகிய சத்தியைத் தரிசியுங்கள். அள்ளிப் பருகக்கூடிய அளவாக முகவசியம் உண்டாம். பரமான பரஞ்சோதியைத் தான்நிலைநிற்கும் ஞ்சமாகிய தானமாக உடைய சத்தியைப் பழமையாகப் போற்றி மனத்துக்கொள்ளுங்கள் என்றவாறு.

பரசிவமாகிய மஞ்சத்தில் பராசத்தி வீற்றிருப்பாளாதலின், இவளை மகேஸ்வரனுடைய மடியாகிய மஞ்சத்தில் வீற்றிருப்பவள் என்றும், சதாசிவமூர்த்தியாகிய பலகையில் வீற்றிருப்பவள் என்றும் லலிதா சகஸ்ரநாமம் கூறும். **(447)**

**பேறுடை யாள்தன் பெருமையை எண்ணிடில்**
**நாடுடை யார்களும் நம்வச மாகுவர்**
**மாறுடை யார்களும் வாழ்வது தானிலை**
**கூறுடை யாளையுங் கூறுமின் நீரே.** 1331

இம் - எனின், சர்வஜனவசியம் உண்டாம் என்வ நுதலிற்று.

இ - ள் : நீங்கள் எய்தும் பேருக விளங்குபவள பெருமையை எண்ணின், நாட்டுமக்களும் நாடுடை யார்களாகிய மன்னர்களும் நம்வசமாகுவர். பகைவர் வாழ்வதுமில்லை. ஆதலால் இறைவனை ஒரு கூற்றிலே உடையாளைத் தோத்திரியுங்கள் என்றவாறு.

கூறுமின் - மந்திரங்களைச் சொல்லாமற் சொல்லி எண்ணுங்கள் என்பதாம். (448)

**கூறுமின் எட்டுத் திசைக்குந் தலைவியை**
**யாறுமின் அண்டத் தமரர்கள் வாழ்வென**
**மாறுமின் வையம் வரும்வழி தன்னையுந்**
**தேறுமின் நாயகி சேவடி சேர்ந்தே.** 1332

இம் - எனின், இதுவுமது.

இ - ள் : எட்டுத்திசைக்கும் தலைவியாகிய நவாக்கரியைத் தோத்திரியுங்கள் ; பல அண்டங்களிலும் வாழ்கிற அமரர்கள் வாழ்வு எம்மாத்திரம் என, அதில் வைத்த ஆசையை அறுங்கள்; மீட்டும் பிறந்து இப் பூமியில் வரும்வழியை மாறுங்கள்; நாயகியின் சிவந்த திருவடித்துணையைப் பற்றித் தெளிவு அடையுங்கள் என்றவாறு. (449)

**சேவடி சேரச் செறிய இருந்தவர்**
**நாவடி யுள்ளே நவின்றுநின் றேத்துவர்**
**பூவடி யிட்டுப் பொலிய இருந்தவர்**
**மாவடி காணும் வகையறி வாரே.** 1333

இம் - எனின், அடிபோற்றுவாரும் பூசிப்பாரும் எய்தும் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : அம்மையின் சேவடியை இடைவிடாது தியானித்துச் செறிய இருந்தவர்கள், நாவினடியால் அவள் மந்திரத்தை இடைவிடாது நவின்று நின்று வழிபடுவர். பூக்களைத் திருவடிக்கண்சாத்திப் பொலிய இருந்தார். பெருமை தங்கிய திருவடியைக் காணும் வகையினை அறிந்தார் ஆவார்கள் என்றவாறு.

சேர - தியானிக்க ; நாவடியுள் ஏத்துதலாவது வைகரியாகாது எண்ணுதல் மௌனஜெபம் என்றவாறு. மா அடி - பெருமை பொருந்திய திருவடி (450)

**ஐம்முத லாக வளர்ந்தெழு சக்கரம்**
**ஐம்முத லாக அமர்ந்திரீ மீருகும்**
**அம்முத லாகி யவர்க்குதடை யாடனை**
**ஐம்முத லாக வழுத்திடு நீயே.** 1334

இம் - எனின், ஐம் முதலாகிய சக்கரத்தியானம் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : ஐம் என்பது முதலாக வளர்ந்து தோன்றும் சக்கரம் ஐம் முதல் ரீம் ஈருகும். அகார வாச்சியனை சீபரமேசுரனுக்கு உடையளாகிய சத்தியை, ஐம் முதலாகக் கொண்டு நீ வழுத்துக என்றவாறு.

மைம் முதலாக வழுத்திடு எனக் கொண்டு மாயைக்குத் தலைவியாகப் போற்றுக எனவும் உரைப்பர். (451)

**வழுத்திடு நாவுக் கரசிவள் தன்னைப்**
**பகுத்திடும் வேதமெய் யாகம மெல்லாந்**
**தொகுத்தொரு நாவிடை சொல்லவல் லாளை**
**முகத்துளும் முன்னெழக் கண்டுகொ ளீரே.** 1335

இ-ம் - எனின், இதுவுமது.

இ - ள் : வணங்கப்பெறும் வாகீசுவரியான இச் சக்தியை வேதாகமங்கள் யாவும் பகுத்தோதும் அவை யனைத்தையும் தொகுத்து நம் நாவாற் பயில அதற்கு எளிமையாக வல்லவளை வாக்கிலும், கண்ணுக்கெதி ராகவும் தோன்றக் காணுங்கள் என்றவாறு. (452)

**கண்டஇச் சக்கரம் நாவில் எழுதிடில்**
**கொண்டஇம் மந்திரங் கூத்தன் குறியதாம்**
**மன்றினுள் வித்தையு மானுடர் கையதாம்**
**வென்றிடும் வையக மெல்லியல் மேவியே.** 1336

இ-ம் - எனின், இதுவுமது.

இ - ள் : கண்டஇச்சக்கரத்தை நாக்கில் ஒருவன் எழுதிடின், கொண்ட இம்மந்திரம் கூத்தப்பெருமான் வடிவமாம். பொன்மன்றில் நிலவும் வித்தையும் மக்கள் கையதாகி, மெல்லியலாளாகிய அம்மை கருணைசெய்த லால் உலகத்தையே வெல்லுவன் என்றவாறு.

நாவில் எழுதிடில் என்றது மௌனமாகச் செபித் தலை. மன்று – கனக மன்று. மன்றினுள் வித்தை - சிற்சபைக்கண்ணே விளங்கும் ஸ்ரீ வித்யை. மானுடர் கையதாய் - மக்களுக்கு எளிவந்ததாகி. மெல்லியல் - உமாதேவியாகிய நவாக்கரி. மேவி - விரும்பி, வையகம்

வென்றிடும் - உலகை வென்று அடிப்படுத்துவான் என்பதாம். (453)

**மெல்லிய லாகிய மெய்ப்பொரு ளாள்தனைச்**
**சொல்லிய லாலே தொடர்ந்தங் கிருந்திடும்**
**பல்லியல் பாகப் பரந்தெழு நாட்பல**
**நல்லியல் பாலே நடந்திடுந் தானே. 1337**

இம் - எனின், உபதேசமுறைப்படி அம்மையை ஆடபணியின் எல்லா நாளும் இன்ப நாளாகும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : மென்மையாகிய இயல்பினை உடையா ளாகிய நித்தியப்பொருளாகிய பராசத்தியை ஆசாரியன் சொல்லிக்கொடுத்த இயல்பின்படி, விடாது பற்றி தியானித்து இருங்கள். பல பல இயல்புகளை உடையதாகப் பரந்தெழுகின்ற நாட்கள் பலவும் நல்ல இன்ப இயல்பாகவே நடக்கும் என்றவாறு.

பல்லியல்பாக நடந்திடும்நாள் என்றது இன்பமும் துன்பமும் கலந்து, புண்ணிய பாவங்களைச் செய்தற்கு உரியதாக நடக்கின்ற காலமெல்லாம் என்றவாறும், நல்லியல்பாலே நடந்திடும் - புண்ணியம் நிறைந்து இன்பநாட்களாவே நடக்கும் என்பதாம். (454)

**நடந்திடு நாளினுள் நன்மைகள் எல்லாந்**
**தொடர்ந்திடுஞ் சொல்லொடு சொற்பொருள் தானும்**
**கடந்திடுங் கல்விக் கரசிவ ளாகப்**
**படர்ந்திடும் பாரிற் பகையில்லை தானே. 1338**

இம் - எனின், இதுவுமது,

இ - ள் : நன்மைகள் யாவும் இவன் நாவில் நடக்கும் ; சொல்லொடு சொற்பொருள் தொடர்ந்தே வரும் : வாகீசுவரியாகிய அம்மை விளங்குதலால் உலகத்தில் எல்லாக் கலைகளையும் கடப்பன் ; படர்ந்த இவ்வுலகில் பகையில்லை என்றவாறு.

இவன் நாவசைந்தால் நன்மைகளனைத்தும் நடக்கும் என்பார் நாவினுள் நன்மைகள் எல்லாம் நடந்திடும் என்றார்.

சொல்லொடு சொற்பொருள் தொடர்தலாவது அம்மையின் அருளிருந்தால் அருள்பெற்றவன் பேசும் சொல்லைப் பொருள் பின்பற்றிச்செல்லும் என்பதாம்.

வித்யைக்கு அரசியாகிய பராசத்தி இவனுக்கு விருப்புடையளாதலால் எல்லாக்கலைகளையும் வென்று விளங்குவன் என்பதைக் 'கல்விக்கரசு இவள் ஆகக் கடந்திடும்' என்பதாற் குறித்தவாறு. (455)

**பகையில்லை கௌமுத லையது வீரு**
**நகையில்லை சக்கர நன்றறி வார்க்கு**
**மிகையில்லை சொல்லிய பல்லுரு வெல்லாம்**
**வகையில்லை யாக வணங்கிடுந் தானே.** 1339

இம் - எனின், கௌம் முதல் ஐம் ஈருகிய சக்கரத்தை அறிவார்கள் எய்தும் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : கௌம்முதல் ஐம் ஈருன சக்கரத்தை நன்ருக அறிபவர்களுக்குப் பகையில்லை. நகைத்தலும் இல்லையாம். உடலெடுத்த பலவுயிர்களெல்லாம் இவனை

வெல்வதொரு வகையின்மையால் இவனைத் தெய்வமாக எண்ணி வணங்கும். யாம் சொல்லுமிது மிகையில்லை என்றவாறு.

நகை - பரிகசித்து நகைத்தல். பல்லுரு என்றது இயற்கையாகவே இறைவனது படைப்புப்பட்ட மனிதன் முதல் எறும்பீருன உருவங்களும், இரணியனைக் கொல்வதற்காகவே வந்த நரசிங்கவடிவம் போன்ற கிருத்திரிய வடிவங்களும் இவனை வணங்கும் என்பது உணர்த்தியவாறு, (456)

**வணங்கிடுந் தத்துவ நாயகி தன்னை**
**நலங்கிடு நல்லுயி ரானவை யெல்லாங்**
**கலங்கிடுங் காம வெகுளி மயக்கந்**
**தொடங்கிடுஞ் சொல்லிய சூழ்வினை தானே. 1340**

இம் - எனின், இதுவுமது.

இ - ள் : எல்லாரானும் வணங்கப்படும் தத்துவத் தலைவியாகிய சத்தியிடம் நல்லபரிபாகமுற்ற உயிர்கள் யாவும் அடங்கும்; காம வெகுளி மயக்கங்களும் தம் பயனை நுகர்விக்கத் தொடங்கும் வலிய வினைகளும் கலங்கி அழியும் என்றவாறு.

தத்துவம்-பிருதிவிமுதல் குடிலையீருன தத்துவங்கள். நலங்கிடுதல் - அடங்குதல் அல்லது ஒடுங்குதல். தொடங்கிடும் வினை, சொல்லிய வினை எனக் கூட்டுக. (457)

**தானே கழறித் தணியவும் வல்லனுய்த்**
**தானே நினைத்ததை சொல்லவும் வல்லனுய்த்**
**தானே தனிநடங் கண்டவன் தன்னையுந்**
**தானே வணங்கித் தலைவனு மாமே. 1341**

இ-ள்: - எனின், இதுவுமது.

இ-ள்: தானே பிறரை இடித்துரைத்துத் தனக்கு மேல் பேசுவோர் இல்லாமையான் தணியவும் வல்லனாகி, நினைத்தன யாவற்றையும் சொல்லவும் வல்லனாகி, தானே ஒப்பற்ற ஆனந்தக்கூத்தினைக் கண்ட பராசத்தியையும் தானே வணங்கித் தலைவனுமாவான் என்றவாறு.

இவனை வெல்வார் பிறரின்மையின் தானாகித் தலைவனாக விளங்குவான் என்பது கருத்து.

தானே தனிநடங்கண்டவள் - இறைவன் பேருழிக் காலத்து எல்லாவற்றையும் தன்னகத்தொடுக்கித் தனி நின்று ஊழிக்கூத்தாடுகிறபோது அதனைக் காண்பவள் பராசத்தி யொருத்தியே என்பதறிவித்தவாறு. (458)

**ஆமே யனைத்துயி ராகிய அம்மையுந்**
**தாமே சகலமும் ஈன்றஅத் தையலும்**
**ஆமே யவளடி போற்றி வணங்கிடிற்**
**போமே வினைகளும் புண்ணிய னாகுமே.** 1342

இம் - எனின், இதுவுமது.

இ-ள்: எல்லாவுயிர்களுமாகியவள் அம்மையே யாம்; எல்லாவற்றையும் கரு வாயாதே பெற்ற பேரழகியும் அம்மையேயாம். அவள் திருவடியைப் புகழ்ந்து போற்றி வணங்கினால், நம்முடைய வினைகள் அகலும்; புண்ணியன் ஆம் என்றவாறு.

'ஸர்வம் சக்திமயம் ஜகத்' என்பாராகலின் எல்லா உயிராயும் இருப்பவள் அம்மையே என்றது.

சராசரமாகிய அனைத்தையும் தாயாகிப் பெற்றவள் அம்மையே என்பது. தையல் - அழகு. ஆகுபெயராக அழகுடைய அன்னையை உணர்த்திற்று. ( 459 )

**புண்ணிய ளுகிப் பொருந்தி உலகெங்கும்**
**கண்ணிய ளுகிக் கலந்தங் கிருந்திடுந்**
**தண்ணிய ளுகித் தரணி முழுதுக்கும்**
**அண்ணிய ளுகி அமர்ந்திருந் தானே.** 1343

இம் - எனின், இதுவுமது.

இ - ள் : உலகமெங்கும் பொருந்திப் புண்ணியனுகி, எல்லாராலும் கண்ணியமாகப் பாராட்டத்தக்கவனுகி, அனைவருடனும் கலந்து விளங்குவன். கருணைக் குணமுடையவனுகி, பூமிமுழுதும் மிக இனிப்பவனுகி அமர்ந்திருந்தான் என்றவாறு.

அண்ணியன் - இனிமையுடையன். நெருங்கியவன் எனலும் ஆம். ( 460 )

**தானது கிரீம் கௌவது ஈறும்**
**நானது சக்கர நன்றறி வார்க்கெலாம்**
**கானது கன்னி கலந்த பராசத்தி**
**கேளது வையங் கிளரொளி யானதே.** 1344

இம் - எனின், இதுவுமது.

இ - ள் : க்ரீம் முதல் கௌம் ஈருகும் நான் அறிந்துள்ள நவாக்கரிசக்கரம். இதனை நன்கு அறிபவர்

அனைவர்களுக்கும் கடம்பாடவியில் வசிக்கும் கன்னி யாகிய, எல்லாவுயிர்களிடத்தும் கலந்துள்ள பராசத்தி உறவாவள்; அதனுல் உலகமே ஒளிமயமாக விளங் கிற்று என்றவாறு.

பராசத்தி உறவு ஆயிற்று என உறவு என்ற எழு வாய்க்கேற்ப ஒருமைவினை கொண்டது. பராசத்தியின் துறவு எனக்கிழமைப் பொருட்டாக்கு ந. கான் - காடு கடம்பவனம். 'கதம்பவனவாசினி' என்பது அம்மை யின் நாமங்களுள் ஒன்று. மணமுமாம் (461)

**ஒளிக்கும் பராசத்தி உள்ளே அமரிற்**
**களிக்கும்இச் சிந்தையிற் காரணங் காட்டித்**
**தெளிக்கும் மழையுடன் செல்வமுண் டாக்கும்**
**அளிக்கும் இவளை அறிந்துகொள் வார்க்கே.** 1345

இம் - எனின், இதுவுமது

இ - ள் : கருணைபுரியும் அம்பிகையை அறிந்து கொள்வார்க்கு ஒளிசெய்கின்ற பராசத்தி மனத்துள் எழுந்தருளின், களிக்கின்ற இம்மனத்தில் காரணத் தைக்காட்டித் தெளிவுறுத்தும்; மழையுடன் செல் வத்தையும் உண்டாக்கும் என்றவாறு.

ஒளிமயமான பராசத்தி மனத்துள் எழுந்தருளின், களிக்கின்ற மனத்தைக் காரணம் காட்டித் தெளிவுறுத் தும்; மழை செல்வம் இவற்றையுண்டாக்கும் என்ப தாம். மழையும் செல்வமும் சுக்கிரனது ஆணையின்படி நடப்பன ஆதலின் சுக்கிரப்பார்வை உண்டாம் என்று அறிவித்தவாறு. (462)

**அறிந்திடுஞ் சக்கரம் அருச்சனை யோடே**
**எறிந்திடும் வையத் திடரவை காணல்**
**மறிந்திடு மன்னனும் வந்தனை செய்யும்**
**பொறிந்திடுஞ் சிந்தை புகையில்லை தானே. 1346**

இம் - எனின், இதுவுமது.

இ - ள்: சக்கரத்தை அருச்சனையோடு அறிந்திடுக. உலகத் துன்பங்கள் யாவையும் வீழ்த்தும். சிறைப்படுத்தும் மன்னனும் வணங்குவான். கலங்குகின்ற மனத்தில் துன்பமில்லையாம் என்றவாறு.

பொறிந்திடும் - கலங்குகின்ற. புகை - துன்பம். மறிந்திடும் - தடுத்துநிறுத்தும். எறிந்திடும் - அழிக்கும்.

**புகையில்லை சொல்லிய பொன்னொளி யுண்டாங்**
**குகையில்லை கொல்வ திலாமையி னாலே**
**வகையில்லை வாழ்கின்ற மன்னுயிர்க் கெல்லாஞ்**
**சிகையில்லை சக்கரஞ் சேர்ந்தவர் தாமே. 1347**

இம் - எனின், இதுவுமது.

இ - ள்: சக்கரத்தைத் தியானிப்பவராகிய சத்தியருள்பெற்ற அன்பர்களுக்குத் துக்கம் இல்லையாம்; யோகிகட்கு உண்டாம் எனச்சொல்லிய பொன்னொளி இவர்களது மேனியிலும் உண்டாம். பிறவுயிர்களைச் சிறிதும் வருத்தாமையால் நரகம் இல்லையாம். வாழ எண்ணுகிற உயிர்கட்கெல்லாம் இதனைக்காட்டிலும் சிறந்த வகை யில்லையாம்; முடிவுமில்லையாம் எ - று.

சிகை - முடிவு. வகை - வழி, வாழ எண்ணுபவர்களுக்கு ஸ்ரீ சக்கர தியானத்தைக்காட்டிலும் சிறந்த

வழியும், முடிவும் இல்லையாம். அங்ஙனம் சேர்ந்தவ யாரையும் கொல்லாமையினால் நரகம் இல்லை; துக்கம் இல்லை; பொன்னொத்த ஒளிமேனியுண்டாம் என்பது கருத்து. (464)

**சேர்ந்தவர் என்றுந் திசையொளி யானவர்**
**காய்ந்தெழு மேல்வினை காணகி லாதவர்**
**பாய்ந்தெழும் உள்ளொளி பாரிற் பரந்தது**
**மாய்ந்தது காரிருள் மாற்றொளி தானே** 1348

இ - எனின், இதுவுமது.

இ - ள் : தியானித்தவர்கள் என்றும் திசைகளை விளக்கும் ஒளிமயமாவர். சினந்து சீறியெழுகின்ற பண்டைய வினைகளைக் காணாதவர் ஆவர். இவர்கள் பரவியெழுகின்ற உள்ளொளியாகிய ஞானம் எங்கும் உலகிற் பரவிற்று. கரிய இருள்போலும் ஆணவமும், ஆணவத்தால் விளையும் மயக்க அறிவும் கெட்டொழிந்தது என்றவாறு. (465)

**ஒளியது ஹௌமுன் கிரீமது ஈறுங்**
**களியது சக்கரங் கண்டறி வார்க்குத்**
**தெளிவது ஞானமுஞ் சிந்தையுந் தேறப்**
**பணிவது பஞ்சாக் கரமது வாமே.** 1349

இம்மந்திரம் முதல் ஐந்து மந்திரங்களால் ஹௌ முதல் க்ரீம் ஈறான சக்கரத்தியானமும் அதன் பயனும் உணர்த்துதல் நுதலிற்று

இ - ள்: ஒளியுடைய ஹௌ முதல் க்ரீம் இறுதியான பீசங்களையுடைய மகிழ்ச்சி தருவதான சக்கரம்.

கன்று அறிவார்க்குத் தெளிவான மனமும் ஞானமும் தெளிவுடைய பணிசெய்வது பஞ்சாக்கரமாகிய நவாக்கரியே என்றவாறு. (466)

ஆமே சதாசிவ நாயகியானவள்
ஆமே அதோமுகத் துள்ளறி வானவள்
ஆமே சுவையொளி யூறோசை கண்டவள்
ஆமே யனைத்துயிர் தன்னுளு மாமே. 1350

இ - ளின், முற்கூறிய சக்கரத் தெய்வமான சத்தியின் பெருமை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: சதாசிவசத்தியாகிய சாதாக்கிய சிவத்திற்குச் சத்தியாக விளங்குபவள் இவளே. அதோமுக மாயையின் உள்ளார்க்கும் உள்ளறிவாயிருந்து ஊக்குபவள் இவளே. சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற பஞ்ச தன்மாத்திரைகளைக் கண்டவள் இவளே. எல்லா உயிர்களுக்கும் உயிராக இருந்து அருள்செய்பவளும் இவளேயாம் என்றவாறு.

சதாசிவநாயகி - மனோன்மணி. அதோமுகத்துள் அறிவானவள் என்பதற்குக் கீழ்நோக்கிய முகமுள்ள விலங்கு முதலானவற்றிற்கும் உயிருக்குள் உயிராக விளங்குபவள் எனலுமாம். அதோமுகமாயை என்றது அசுத்தமாயையை. அசுத்தமாயாப் பிரபஞ்சவாசிகட்கும் அறிவாக விளங்குவள் என்பதாம். (467)

தன்னுளு மாகித் தரணி முழுதுங்கொண்
டென்னுளு மாகி இடப்பெற நின்றவள்
மண்ணுளும் நீரனல் காலுளும் வானுளுங்
கண்ணுளும் மெய்யுளுங் காணலு மாமே. 1351

இம் - எனின், இதுவுமது,

இ - ள்: சத்தியாகிய தனக்குள்ளும் உலகம் அனைத்தையும் ஒடுக்கி நிற்பவள் ஆகி, அடியேனுக் குள்ளும் உணர்வாய் இடமாகக்கொண்டு விளங்குபவள். பஞ்சபூதங்களிலும் என் கண்ணுள்ளும் என் உடலிலும் அவளைக்காணலாம் என்றவாறு.

பஞ்சபூதங்கள் முதலியவற்றில் காணலாம் என்றது அங்கங்கே கலந்து நிற்பாள் என்பது. கண்ணுள் கலத் தல் - கருமணியாய், மணியாடு பாவையாய்க் கலந்திருத் தல்; அல்லது காணுங்கண்ணுக்குக்காட்டும் உளமாகக் கலந்திருத்தல். (468)

**காணலு மாகுங் கலந்துயிர் செய்வன**
**காணலு மாகுங் கருத்து ளிருந்திடிற்**
**காணலு மாகுங் கலந்து வழிசெயக்**
**காணலு மாகுங் கருத்துற நில்லே.** 1352

இம் - எனின், இதுவுமது,

இ - ள்: சக்தி உயிர்களோடு கலந்துநின்று உயிர் கட்குச்செய்யும் உபகாரங்களைக் காணலாம். எங்ஙனம் எனின், அவ்வுபகாரங்களை நாம் காணவேண்டும் என்ற திருவுள்ளக்குறிப்போடு அவள் நமது கருத்துள் இருந் திடின். அங்ஙனம் உயிர்க்கு உயிராகக் கலந்து தன் வழியே உயிர்கள் தொழிலாற்றச் செய்வதைக் காணலு மாகும். ஆகையால் அவளிடம் என்றும் பிரியாத வண்ணம் கருத்துப்பொருந்த நிற்பாயாக என்றவாறு.

கருத்துவழி செய்தலாவது தன்தொழிலே உயிர்களின் தொழிலாகச் செய்தல். பசுபோதம் கெடுத்துத் திருவருட் போதத்தில் இருத்துதலின் உயிர்கள் தொழில் அம்மையின் தொழிலாயிற்று என்பது. (469)

**நின்றிடும் ஏழு புவனமும் ஒன்றாகக்**
**கண்டிடும் உள்ளங் கலந்தெங்குந் தானாகக்**
**கொண்டிடும் வையங் குணம்பல தன்னையும்**
**விண்டிடும் வல்வினை மெய்ப்பொரு ளாகுமே. 1353**

இ - னின், இதுவுமது.

இ - ள்: ஏழுலகமும் ஒன்றாகக் கலந்து விளங்கும்: உயிரோடு கலந்து உலகங்கள் எங்கும் சத்தியாகிய தானே யாகக் காணும். உலக குணங்கள் அனைத்தையும் ஏற்று நிற்கும். ஆன்மாக்கள் எய்திய வலிய வினைகளை விலக்கும் உண்மைப் பொருளாக விளங்கும் என்றவாறு.

ஏழு புவனங்களிலும் உள்ள உயிர்களனைத்தினும், சடப்பொருள்கள் அனைத்தினுங்கலந்து எல்லாம் தன்மயம் எனக் காட்டி நிற்றலான் ஏழுபுவனமும் ஒன்றாகக் கலந்து நிற்கும் என்றது. உள்ளம் - உயிர். உலகத்துப் பலவகை யான குணங்களும் உலக காரணியாகிய தன்னுடையன ஆதலால், காரணத்தின் தன்மையே காரியமாகிய பிரபஞ் சத்தும் காணப்படுதலால் உலக குணங்களைக்கொண்டிடும் என்றது. வினைகள் மலைபோலத் திரண்டு உறுதியாகத் தம் பயனை ஊட்டியன்றிக் கழியோம் என்று இருப்பினும் அம்மையின் அருள் எந்த ஆன்மாவின்மேல் விழுந்ததோ அவ்வான்மாவுக்குள்ள வினைகள் தாமே பிளந்துபோம்.

விலகும் என்பதே வல்வினை விண்டிடும் என்றது. மெய்ப் பொருள் - சிவபரம்பொருள். (470)

**மெய்ப்பொரு ளௌமுதல் ஹௌவது ஈருக்**
**கைப்பொரு ளாகக் கலந்தெழு சக்கரம்**
**தற்பொரு ளாகச் சமைந்தமு தேஸ்வரி**
**நற்பொரு ளாக நடுவிருந் தாளே.** 1354

இது முதல் ஐந்து மந்திரங்கள் ஔம் முதல் ஹௌம் ஈருன பீசங்கள் அமைத்த சக்கர தேவதையாகிய அமுதேஸ்வரியின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : மெய்ப்பொருளாகிய ஔ முதல் ஹௌ ஈருன எழுத்துக்களமைந்த சக்கரத்தின் பொருளாகச் சமைந்து, அமுதேஸ்வரி நற்பொருளாக அச்சக்கர நடுவில் இருந்தாள் என்றவாறு.

நற்பொருள் - அச்சக்கரமாகிய பிரமாணத்தால் அறியப்படும் பிரமேயப் பொருள். (471)

**தாளதி னுள்ளே சமைந்தமு தேஸ்வரி**
**காலது கொண்டு கலந்துற வீசிடில்**
**நாளது நாளும் புதுமைகள் கண்டபின்**
**கேளது காயமுங் கேடில்லை காணுமே** 1355

இம் - எனின், இதுவுமது

இ - ள் : சக்கரத்துள் அமைந்த அமுதேஸ்வரியை, பிராணவாயுவைக் கொண்டு மேலேறிக் கலந்து மதிமண்டலத்துப் பொருந்தச் செய்யின், நாடோறும் புதுமைகளைக் கண்டு, அதன்பின் உன் உடலுக்கும் அழிவில்லையாம்; நன்கு கேட்பாயாக என்றவாறு.

பிராணாயாமத்தைச் சுழுமுனை நாடியின் வழியாக மேலேற்றி, சகஸ்ராரத்து வாழும் அமுதேஸ்வரியுடன் சேர்க்கச் செய்யின் காயம் அழியாது; நாடோறும் புதுமை உண்டாகும் என்பது கருத்து. **(472)**

**பொழுதில்லை காணுங் கிளரொளி கண்டபின்**
**நாடில்லை காணும் நாண்முத லற்றபின்**
**மாடில்லை காணும் வரும்வழி கண்டபின்**
**காடில்லை காணுங் கருத்துற் றிடத்துக்கே** 1356

இ-ள் - ளனின், இதுவுமது.

இ-ள்: நம் கருத்து அம்மையினருளில் உற்ற விடத்து, கேடே இல்லையாம்; காணப்பெறுகின்ற பேரொளியைக் கண்டபின் தேசமுதலிய இடவேறுபாடு இல்லையாம். நாள்வேறுபாடும் அற்றபின் கீழ் மேல் உயர்வு தாழ்வு என்ற தகுதி வேறுபாடு இல்லையாம். அம்மையின் அருள் வரும் வழியைக் கண்டபின் பிரபஞ்ச மாகிற துக்கக்காடு இல்லையாம். இதனை நன்கு கண்டு உய்யுங்கள் என்றவாறு.

அமுதேஸ்வரி அம்மையின் அருளுற்றவிடத்துக் கால தேச வேறுபாடுகளும், கீழ்மேல் வேறுபாடுகளும் உலகத் துன்பக்காடும் இல்லை என்பது கருத்து. **(473)**

**உற்றிட மெல்லாம் உலப்பில்பா ழாக்கிக்**
**கற்றிட மெல்லாங் கடுவெளி யானது**
**மற்றிட மில்லை வழியில்லை தானில்லை**
**சற்றிட மில்லை சலிப்பற நின்றிடே.** 1357

இம் - எனின், உபாசகன் எய்தும் உயர்நிலையிது என்ல் நுதலிற்று.

இ - ள்: தான் வந்துற்ற இடமாகிய மாயாகாரிய உலகம் தோன்ருதவாறு பாழாக்கி, அப்பிரபஞ்சத்தில் கண்டறிந்தவை யாவும் வெட்டவெளியாயிற்று. தானே எங்கும் பூரணனுக இருத்தலின் வேறு இடமில்லையாம். தான் செல்லுதற்கும் மீட்டுவருதற்கும்உரிய வழியில்லையாம். தான் என்பதொரு பொருளே இல்லையாம். சலித்தற்குரிய இடம் சிறிதும் இல்லை. ஆதலால் அசையாது அவ்வநுப வத்திலே நிலைபெறு வாயாக என்றவாறு.

அம்மையினது அருள் வியாபகத்துள் அடங்கிய பேருக்கு மாயாகாரியமான பிரபஞ்சம் தோன்ருமையின் 'உற்றிடமெல்லாம் பாழாக்கி' என்றருளியது. உற்றஇடம்- தான் விளைக்கிடமாகத் தோற்றுதற்கு இடமாகிய பிரபஞ்சம். உலப்பில் பாழ்ஆக்கி - என்றும் அழியாத சூனியமாக்கி; என்றது பரமே பார்த்திருப்பார்க்குப் பதபதார்த்தங்கள் தோன்ருமையின் என்க.

கற்ற இடம் எல்லாம் கடுவெளியானது - மாயாகாரிய மான பிரபஞ்சத்தில் கற்றறிந்தன யாவும் வெட்டவெளி யாயிற்று. இல்லையாயிற்று என்றதாம். பிரபஞ்ச ஞானம், பாச ஞானம், பதிஞானம் கைவரப்பெற்று அதில் அநுபவ முதிர்ந்தார்க்குப் பாசஞானம் தோன்ருதாதலின் கடுவெளி யானது என்றது.

மற்று இடம் இல்லை - அநுபவியாகிய ஆன்மா எங்கும் ஒழிவறநிறைந்திருத்தலின் இவனில்லாத இடம்இல்லையாம்.

இவனுக்குச் சலித்தற்கு இடமின்மையால் சலிப்பற நில் என்றருளியது.

(474)

**நின்றிடும் ஏழ்கடல் ஏழ்புவி எல்லாம்**
**நின்றிடும் உள்ளம் நினைத்தவை தானொக்கும்**
**நின்றிடுஞ் சத்தி நிலைபெறக் கண்டிட**
**நின்றிடும் மேலை விளக்கொளி தானே 1358**

இ-ள்: சத்தியின் அருளநுபவமே அனைத்திற்கும் ஆதாரமாதலை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: நிலைபெற்ற ஏழுகடல், ஏழுபுவி அனைத்தும் இவளை ஆதாரமாகக் கொண்டு நிலைபெறும். மனத்தால் நினைக்கப்பெற்ற யாவும் இவன் முன்னே வந்து நிற்கும். அவை, தம்முள் மாறுபாடின்றி ஒத்து விளங்கும் நன்மையையே செய்கிற பராசத்தி கண்டவிட மெல்லாம் நிலைபெற நிற்கும். மேலைநிலையாகிய பிரமரந்திரத்தும். துவாதசாந்தத்தும் இரத்தினதீபம் போலக் காட்சி வழங்கும் என்றவாறு.

அமுதேஸ்வரியின் அருளிற்றோய்ந்தவன் தன்னில் அனைத்தையும் கண்டு. தான் அனைத்திலுமாய், தேவியை மேலைநிலத்து விளக்கொளி போற்கண்டு விளங்குவான் என்பது கருத்து. (475)

**விளக்கொளி ஸௌமுதல் ஔவது ஈறு**
**விளக்கொளி சக்கரம் மெய்ப்பொருளாகும்**
**விளக்கொளி யாகிய மின்கொடி யாளை**
**விளக்கொளி யாக விளங்கிடு நீயே. 1359**

இ-ள்: ஸௌமுதல் ஔவீறான சக்கரத் தெய்வத்தின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: விளக்குகின்ற ஒளியாகவிளங்கும் மௌன முதல் ஒளவீருன பீசங்களை உடைய விளக்கொளிச் சக்கரம் உண்மைப் பொருளாம். அதில் விளக்கொளி யாகிய மின்கொடி போன்றவளை விளக்கொளிபோல கண்டு நீ விளங்குவாயாக என்றவாறு.

விளக்கு ஒளியாகி என்பதற்கு விளக்குகின்ற ஞானத் தையுடையவளுகி எனலுமாம். (476)

**விளங்கிடு மேல்வரு மெய்ப்பொருள் சொல்லின்**
**விளங்கிடு மெல்லிய லானது வாகும்**
**விளங்கிடு மெய்ந்நின்ற ஞானப் பொருளை**
**விளங்கிடு வார்கள் விளங்கினர் தானே.** 1360

இம் - எனின், இதுவுமது.

இ - ள்: இதனுல் விளங்கும் மேல் வருகின்ற உண்மையை உணர்த்தப்புகின் அனைத்துலகிலும் விளங்கும் தேவியானதேயாம். இங்ஙனம் விளங்குகின்ற உண்மை ஞானப்பொருள் உணர்ந்தவர்களே விளக்கம் பெற்றவராவர் என்றவாறு,

இதனுல் விளையும் பயன் தேவியே யாதலாம்: இவ் வுண்மையினை உணர்ந்தவர்களே விளக்கம் பெறுவர் என்பது கருத்து. (477)

**தானே வெளியென எங்கும் நிறைந்தவள்**
**தானே பரம வெளியது வானவள்**
**தானே சகலமு மாகி அழித்தவள்**
**தானே யனைத்துள அண்ட சகலமே.** 1361

இ-ம் - எனின், தேவியின் எல்லையற்ற அருளாற்றலை அறிவித்தல் நுதலிற்று.

இ - ள்: தானே ஆகாயம்போல எல்லாவற்றையும் அடக்கி உருவின்றி வியாபகமாய் நின்றவள்; தானே பராகாயமாய் நின்றவள்; தானே எல்லாப் பொருளுமாகி அவையனைத்தையும் தன்னுள் ஒடுக்கிக் கொண்டவள்; எல்லா அண்டங்களும் தானே ஆனவள் என்றவாறு.

அம்மை ஐந்தொழிலை ஆற்றி, அனைத்தண்டமாயும் அவற்றுள் உயிராயும் நிற்பள் என்பதாம். (478)

**அண்டத்தி னுள்ளே அளப்பரி தானவள்**
**பிண்டத்தி னுள்ளே பெருவெளி கண்டவள்**
**குண்டத்தி னுள்ளே குணம்பல காணினுங்**
**கண்டத்தில் நின்ற கலப்பறி யார்களே** 1362

இ-ம் - எனின், அண்டபிண்டங்களில் வியாபித்திருக்கும் அம்மை, மூலாதாரத்தினின்றும் கண்டத் தானத்துப் பொருந்தி வைகரியாக விளங்குவதை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: அண்டங்களனைத்திலும் அளத்தற்கரிய நிலையிலிருப்பவள்; பிண்டமாகிய வுடலில் ஞானமாகிய பெருவெளியைத் த ன க் கு த் தானமாகக் கண்டவள்; ஓமகுண்டமாகிய நாபித்தானத்தில் மயிலண்டசலம் போலப் பலகுணங்களோடு காணப்படினும், கண்டத் தானத்தில் வைகரி வாக்காக நிலைபெற்ற கலப்பினை அறியார்கள் என்றவாறு.

அண்டத்தினுள்ளே அளப்பரிதானவள் என்பதால் அண்டத்துள் எல்லாப் பொருளிலும் உள்ளும் புறம்புமாக ஒன்றியும் வேருயும் உடனுயும் அம்மை கலந்திருக்கின்ற நிலை யாரானும் அளவிட்டுச் சொல்லொணுதது என்பதுணர்த்தியவாறு.

பிண்டம் - உடல், அது சிறிதாயினும் அதனுள் அனைத்தண்டங்களையும் அளக்க முயலுவதும், அண்டங் கடந்த பொருளாகிய அம்மையின் அருளை அடைய முயல்வதும் ஆகிய ஞான வடிவாகிய பேராகாயம் விளங்குகின்றது. ஆதலால் பிண்டத்தினுள்ளே பெரு வெளி கண்டவள் என்றது.

குண்டம் - ஓமகுண்டம்; நாபித்தானம். அதுவே அக்கினி மண்டலமாம். அதில் பைசந்தி வாக்காக நாதம் விளங்கி, உதானன் என்ற காற்ருல் உந்தப்பட்டு கண்டத்தானத்தில் வைகரிவாக்காகிப் பொருள் உணர்த்தும் என்க.

இதன் விரிவையும் இயல்பையும் "வைகரி செவியில் கேட்பதாய்" என்பது முதலிய சித்தித் திருவிருத்தங்களான் உணர்க.

இவ்வண்ணம் நாலுவகை வாக்காகவும் கலந்து நிற்பவள் சுத்தமாயா ரூபமான சத்தி என்றவாறு. (479)

கலப்பறி யார்கடல் சூழுல கெல்லாம்
உலப்பறி யாருட லோடுயிர் தன்னைச்
சிலப்பறி யார்சில தேவரை நாடித்
தலைப்பறி யாகச் சமைந்தவர் ஞானே. 1363

இம் - எனின், அம்மையின் அருள்வழிப்பட்டோர் அடையும் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : சிறந்த பொன்னாகச் சமைந்த மெய்யன்பர்கள், கடலாற் சூழப்பெற்ற உலகனைத்தினும் மீட்டுங் கலத்தலை அறியார்; உடலோடு கூடிய உயிருக்குள்ள அழிவை அறியார்கள்; சில தேவர்களைத் தேடிக் கொண்டு சிலம்பித் திரிதலை அறியார்கள் என்றவாறு.

இதன் கருத்து அம்மையின் அருளைப்பெற்றுப் பொன்மேனியாகச் சமைந்த மெய்யன்பர்க்கு இனிப் பிறப்பில்லை; எடுத்த இவ்வுடலோடு இறப்பின்றி நீடு வாழ்வர்; அருளம்மையைத் தவிர வேறு தேவர்களைத் தேடிக்கொண்டு ஒலித்தலையார்கள் என்பதாம். பறி - பொன். சிலம்பு - சிலம்பு; முதனிலைத் தொழிற்பெயர். ஒலித்தல்.

இம்மந்திரத்திற்கு இவ்வாறன்றி, பூமிக்குத் தலைப் பாரமாகச் சமைந்த வீணர்கள் கடல்சூழ் உலகெல்லாம் அம்மை கலந்திருத்தலை அறியார்கள்; உடலோடு கூடிய உயிர் நிலையாதென்பதையும் அறியார்கள்; சில தேவர்கள் தம் தலைவனைத்தேடி அரற்றியலைதலையும் அறியார்கள என அம்மையின் அருளிற்சேரயாதார் நிலை கூறிற்று எனலுமாம்.

இங்ஙனன்றி, பொறி யென்பதன் சிதை சொல்லாகப் பறி யென்பதனைக்கொண்டு, தலையெழுத்தாகச்சமைந்தவர்கள் உலகெல்லாம் தோன்றுதலை அறியார்; அழிதலை அறியார்; தலைமையில்லாத தேவர்களைத் தலைவரென்று அரற்றுதலால் அம்மையை அறியார்கள் என்று உரை

கூறுவாரும் உளர். இவற்றுள் மெலிந்து கூட்டாது தெளிந்தனவே சிறந்தன எனக்கொள்ளுக. ( 480 )

**தானே எழுந்தஅச் சக்கரஞ் சொல்லிடின்**
**மானே மதிவரை பத்திட்டு வைத்தபின்**
**தேனே யிரேகை திகைப்பற ஒன்பதில்**
**தானே கலந்தவரை யெண்பத் தொன்றுமே 1364**

இம் – எனின், நாலெண்கரி சக்கரம் அமைக்குமுறை அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : மானே! சுயம்புவாகத்தோன்றிய அச் சக்கரத்தைப் பற்றிச் சொல்லின், மதிக்கப்படு கோடுகள் பத்தை அமைத்தபின், தேன்போன்ற வளே! குறுக்கு ரேகைகளாக அமைத்து மயக்கற்ற ஒன்பது அறைகளால் கலந்து தானேவிளங்குழ் அறை எண்பத்தொன்றுதும் என்றவாறு.

மானே தேனே உவமவாகு பெயர்களாக மகளிரை உணர்த்தின. சித்தர்கள் பெண்களை பராசத்தி அம்ச மாக முன்னிலைப் படுத்திக் கூறுதல் மரபென்க. இன்னணமன்றி மன் - மான் எனக்கொண்டு, மன் - அரசன். வேந்தன் - இந்திரன் என வழிவழிப் பொருள் கண்டு, அதற்கு ஆதாரமாக ‘ இருந்தவக் காரணங்கேள் இந்திரனே ’ என்ற திருமந்திரத்தை மேற்கோளாகக் காட்டுவாரும் உளர். ( 481 )

**ஒன்றிய சக்கரம் ஓதிடும் வேளையில்**
**வென்றிகொள் மேனி மதிவட்டம் பொன்மையாம்**
**கன்றிய ரேகை கலந்திடுஞ் செம்மையில்**
**என்றிய லம்மை எழுத்தவை பச்சையே. 1365**

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| க்லீம் | ஸௌம் | ஔம் | ஹ்ரௌம் | ஹ்ரீம் | ஜௌம் | வௌம் | ரீம் | ஸ்ரீம் |
| ஸௌம் | ஔம் | ஹ்ரௌம் | ஹ்ரீம் | ஜௌம் | வௌம் | ரீம் | ஸ்ரீம் | க்லீம் |
| ஔம் | ஹ்ரௌம் | ஹ்ரீம் | ஜௌம் | வௌம் | ரீம் | ஸ்ரீம் | க்லீம் | ஜௌம் |
| ஹ்ரௌம் | ஹ்ரீம் | ஜௌம் | வௌம் | ரீம் | ஸ்ரீம் | க்லீம் | ஜௌம் | ஔம் |
| ஹ்ரீம் | ஜௌம் | வௌம் | ரீம் | ஸ்ரீம் | க்லீம் | ஜௌம் | ஔம் | ஹ்ரௌம் |
| ஜௌம் | வௌம் | ரீம் | ஸ்ரீம் | க்லீம் | ஜௌம் | ஔம் | ஹ்ரௌம் | ஹ்ரீம் |
| வௌம் | ரீம் | ஸ்ரீம் | க்லீம் | ஜௌம் | ஔம் | ஹ்ரௌம் | ஹ்ரீம் | ஜௌம் |
| ரீம் | ஸ்ரீம் | க்லீம் | ஜௌம் | ஔம் | ஹ்ரௌம் | ஹ்ரீம் | ஜௌம் | வௌம் |
| ஸ்ரீம் | க்லீம் | ஜௌம் | ஔம் | ஹ்ரௌம் | ஹ்ரீம் | ஜௌம் | வௌம் | ரீம் |

ஓம்

**1364-வது திருமந்திர விளக்கம்**

இம் - எனின், சக்கரத் திருமேனியின் நிறம் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் - பொருந்திய சக்கரத்தைப்பற்றிச் சொல்லும்போது, வென்றிகொண்ட மேனியாகிய மதிவட்டம் பொன்மை நிறம் ஆம். அழுந்த இடப்பட்ட ரேகை செம்மையாகக் கலக்கும். சூரிய ஒளியைப்போல என்றும் சக்கரத்திடமாக இயலுகின்ற சத்தியட்சரங்கள் ஒன்பதும் பச்சையாம் என்றவாறு.

சக்கரத்தைச் சுற்றியுள்ள மதிவட்டத்தைப் பொன்னிறமாகவும், ரேகைகளைச் செந்நிறமாகவும் அட்சரங்களைப் பச்சையாகவும் அமைக்க என்பதாம். (482)

**ஏய்ந்த மரவுரி தன்னில் எழுதிய**
**வாய்ந்தஇப் பெண்ணெண்பத் தொன்றில் நிரைத்த பின்**
**காய்ந்தவி நெய்யுட் கலந்துடன் ஓமமும்**
**ஆய்ந்தலத் தாமுயி ராகுதி பண்ணுமே** 1366

இம் - எனின், சக்கரம் அமைத்தற்குரியது மரவுரி எனல் நுதலிற்று.

இ - ள் : பொருந்திய மரவுரியில் எழுதிய இப் பெண்ணாகிய சத்தி பீசங்களை எண்பத்தோரறையில் அமைத்தபிறகு, அவிசை நெய்யுடன் கலந்து ஆராய்ந் தெடுக்கப்பட்ட இடத்தினின்று ஓமம் செய்து, பின் பிராணகுதியும் செய்க என்றவாறு.

பெண் : ஆகுபெயராகச் சத்திபீசத்தை உணர்த்திற்று. அவி - உப்பின்றி அட்ட யாகச் சோறு. உயிர் ஆகுதி - பிராணகுதி.

ஆய்ந்த தலத்து என்பது ஆய்ந்தலத்து எனவிகாரப் பட்டது. மரவுரியில் சக்கரத்தை அமைத்து ஓமம் ஆகுதி முதலியன செய்க என்பது கருத்து. (483)

**பண்ணிய பொன்னைப் பரப்பற நீபிடி**
**எண்ணிய நாட்களில் இன்பமும் எய்திடும்**
**நண்ணிய நாமமும் நான்முகன் ஒத்தபின்**
**துண்ணென நேயநற் சேர்க்கலு மாமே.** 1367

இம் - எனின், பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: இயந்திரத்தில் அமைக்கப்பட்ட ஸ்ரீம் பீஜத்திற்கு உரிய தேவியைப் பரபரப்பின்றி நீ பற்று; தியானிக்கத் தொடங்கிய நாளிலேயே இன்பமெய்தும். உனது பெயரும் நான்முகனாகிய பிரமனை ஒத்தபின், விரைவாக நேயப் பொருளாகிய சிவத்தோடு நன்றாகச் சேர்த்தலும் ஆம் என்றவாறு.

பொன் - லக்ஷ்மி; என்றது லக்ஷ்மிபீஜமாகிய ஸ்ரீம் என்ற பீஜத்தின் தெய்வமாகிய சத்தியை என்னும் பொருளில் வந்தது. அன்றி, பொன்போலும் பராசத்தி என உவமவாகுபெயராகக் கோடலுமாம். பண்ணிய - அமைத்த. இயந்திரத்தில் என இடம் வருவித்துரைக்க. பரப்பற - விரைவற; நிதானமாக. பிடி - பற்று.

எண்ணிய நாட்களில் - தியானித்த நாட்களில் அல்லது எண்ணிய நாளிலேயே என விரைவுபற்றிச் சொன்னதுமாம்.

நண்ணிய - அடைந்த. நான்முகன் ஒத்தபின் - பிரமன் பெயராகிய வேதா என்று ஒத்தபின், என்றது.

உபாசகனுகிய நீ அறிபவனுக ஆனபின்னர். வேதா ஞாதா என்பன ஒருபொருட்கிளவிகள்.

துன்னெனை - விரைய. ஞேயம் - அறிப்படுபொருளாகிய சிவம். ஞாதாவாகிய ஆன்மா ஞேயமாகிய சிவத்தைப் பொருந்தலுமாம் என்பது. (384)

**ஆகின்ற சந்தனங் குங்குமங் கத்தூரி**
**போகின்ற சாந்து சவாது புழுகு நெய்**
**ஆகின்ற கற்பூர மாகோ சனைநீருஞ்**
**சேர்கின்ற ஒன்பதுஞ் சேரநீ வைத்திடே. 1368**

இ - எனின், நவ கந்தம் சாத்தும் முறை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : சந்தனம், குங்குமப்பூ, கத்தூரி, மணம் பரவுகின்ற செஞ்சந்தனம், சவ்வாது, புனுகு நெய், ஆகின்ற பச்சைக்கர்ப்பூரம், ஆவினிடமிருந்து பெறுவதாகிய கோரோசனை. பனிநீர் ஆகச் சேர்கின்ற ஒன்பதையும் ஒன்றுசேர்த்து நீ சக்கரத்திற்குச் சாத்துக என்றவாறு.

சந்தனம் - சந்தனக்கட்டை அரைத்த சந்தனம். போகின்ற சாந்து - மணம்போகின்ற செஞ்சந்தனக் கட்டை அரைத்த சாந்து. ஏலம், இலவங்கம். பச்சிலை முதலிய கூட்டி அரைத்த சாந்தென்பாரும் உளர். அது கருவன்மையின் செஞ்சந்தனமே கொள்க. குங்குமம் - குங்குமப்பூ, புழுகுநெய் - புனுகு கலந்த நெய். புனுகுச் சட்டம் காய்ச்சித் தட்டப்பட்ட புனுகு நெய்யுமாம். கர்ப்பூரம் - பச்சைக்கர்ப்பூரம். கோரோசனை ஈனுக் கன்றுகிய வலிய பசுவினிடமிருந்து பெறப்படுதலின் ஆகோசனம் எனப்பட்டது. (485)

**வைத்திடும் பொன்னுடன் மாதவ நோக்கிடிற்**
**கைச்சிறு கொங்கை கலந்தெழு கன்னியைத்**
**தச்சிது வாகச் சமைந்தஇம் மந்திரம்**
**அர்ச்சனை யாயிரம் ஆயிரஞ் சிந்தியே.** 1369

இ-ம் - எனின், அருச்சித்து வழிபடும் முறைமை அறிவித்தல் நுதலிற்று.

இ-ள் : வைக்கப்படுகிற சுவர்ணபுஷ்பத்துடன் செய்யப்பெறுகின்ற பெரிய தவத்தை நோக்கினால் மிகச் சிறிய கொங்கைகளோடு கூடிய தியானிப்பவர்களுடைய மனதில் கலந்து எழுகின்ற கன்னியாகிய தேவியை வசியமுறை இதுவாகச்சமைந்த இம்மந்திரத்தைக்கொண்டு ஆயிரம் அர்ச்சனை ஆயிரமுறைசெய்து சிந்திக்க என்றவாறு.

பொன் - சுவர்ணபுஷ்பம்; பொற்பூ. அருச்சனை மந்திரத்தியானம் முதலியன. பெரியதவமாதலின் பொன்னுடன் ( செய்யும் ) மாதவம் நோக்கிடின் என்றது.

கை - சிறுமை. கைச்சிறு கொங்கை - மிகச்சிறிய கொங்கை; இது ஒரு பொருட் பன்மொழி. கை - அழகு என்பாரும் உளர்.

தச்சு - வசியம். தச்சு இதுவாக - வசியமுறை இதுவாக. சமைந்த - அமைந்த. சகஸ்ரநாமார்ச்சனையும் ஆயிரம் உருவும் சிந்திக்க என்றது. ஆயிரம் ஆயிரம் நூறுலட்சம் உருச்செபமும் அருச்சனையும் செய்க எனலுமாம்.

**சிந்தையி னுள்ளே திகழ்தரு சோதியாய்**
**எந்தை கரங்கள் இருமூன்றும் உள்ளது**
**பந்தமா சூலம் படைபாசம் வில்லம்பு**
**முந்த கிலீயெழ முன்னிருந் தாளே** 1370

இ-ம் - எனின், அம்மை வெளிப்பட்டு அருளும் வகை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : மனத்தில் விளங்குகின்ற ஒளிவடிவாகிய எம் தாயும் தந்தையுமாகிய நவாக்கரி தேவிக்குக் கரங்கள் ஆறு உள்ளன. அதில் மழு, சூலம், தோட்டி, பாசம், வில், அம்பு என்ற ஆயுதங்களுடன் முதலில் 'க்லீம்' என்னும் பீஜாக்கரம் எழ, உபாசகன் முன்பு எழுந்தருளி னள் என்றவாறு.

ஒளிவடிவாக எந்தையாகிய சத்தி ஆறுகரங்களிலும் ஆறு ஆயுதங்களுடன் க்லீம் முதலான நவாக்கரியைச் செபிக்கத் தோன்றியருளுவள் என்பது கருத்து.

வடமொழியிலே (துவந்த சமாசம்) உம்மைத் தொகையில் மாதாச+பிதாச=பிதரௌ என வருதல் போல எம் தாய் தந்தை என்பன தொக்கு எந்தையென ஆயிற்று. ஆன்மாக்கட்குத் தாயாய் முலையைத் தருவா ளும், தந்தையாய் அறிவூட்டுவாளும் அம்மையே ஆவள் என்பதாம்.

இருமூன்று என்ற தொகை ஒருமையாதல் நோக்கி, உள்ளது என ஒருமைவாய்பாட்டான் முடிந்தது.

பந்தம் - தீப்பந்தம்; என்றது தீ யகலாகிய மழுவை. மா சூலம் - பெரிய சூலம், படை - தோட்டி; சக்கரப் படையுமாம்.

முந்த கிலீம் எழ - முதலில் க்லீம் பீசம் எழ, க்லீம் ஸ்ரீம் ரீம் ஐம் சௌம் ஹ்ரூம் ஹௌம் ஔம் கௌம் என்று செபிக்க என்பதாம். (487)

**இருந்தனர் சத்திகள் அறுபத்து நால்வர்**
**இருந்தனர் கன்னிகள் எண்வகை எண்மர்**
**இருந்தனர் சூழ எதிர்சக் கரத்தே**
**இருந்த கரமிரு வில்லம்பு கொண்டே.** 1371

இம் - எனின், பரிவார சத்திகள் சூழ நடுவில் தேவி வீற்றிருக்குமுறை உணர்த்துதல நுதலிற்று.

இ - ள், யோகினி சத்திகள் அறுபத்துநால்வர் இருந்தனர். எண்ணும் வகையாக, வசினியாதி எட்டு சத்திகளும் இருந்தனர். இருகரங்களிலும் வில்லும் அம்பும் கொண்டு சக்கரத்து எதிரில் சக்கரத்தைச் சூழ இருந்தனர் என்றவாறு.

நவாக்கரி சக்கரத்தைச் சூழ மோகினி சத்திகள் அறுபத்துநால்வரும், அட்ட கன்னிகளும் இருந்தனர் என்பது கருத்து. (488)

**கொண்ட கனகங் குழைமுடி யாடையாய்க்**
**கண்டஇம் முத்தங் கலைல்திரு மேனியாய்ப்**
**பண்டமர் சோதிப் படரித ழானவள்**
**உண்டங் கொருத்தி உணரவல் லாருக்கே.** 1372

இம் - எனின்; சக்கரத்துள் சத்தியினது உருவ விளக்கம் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : அணிந்துகொண்ட பொன்னுபரணங்கள். காதணி, கிரீடம், ஆடை, விளங்குகின்ற பருத்த

முத்து நெருப்பொத்த மேனி இவற்றுடனாய், அநாதியே பொருந்திய ஒளிபடர்ந்த இதழை உடயவளுமான பராசத்தியாகிய ஒருத்தி அங்கே உண்டு உணரவல்லார்க்கு என்றவாறு, ( 489 )

**உணர்ந்திருந் துள்ளே ஒருத்தியை நோக்கிற்**
**கலந்திருந் தெங்குங் கருணை பொழியும்**
**மணந்தெழும் ஓசை யொளியது காணுந்**
**தணந்தெழு சக்கரத் தான்தரு வாளே. 1373**

இம் எனின், பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இவ்வண்ணம் அறிந்திருந்து மனத்துள்ளே ஒப்பற்றவளாகிய பராசத்தியைத் தரிசித்தால், அவள் எங்கும் எவற்றினும் கலந்தருளிக் கருணை பொழிவள், எங்கும் கலந்தெழுகின்ற ஓசையும் ஒலியுமாகிய இவை தோன்றும். சத்தியாகிய தான், சக்கரத்தை விட்டுப் பிரிந்து, எழுந்து அருள் வழங்குவள் என்றவாறு.

ஓசை - சங்கோசை, கடலோசை போன்றன. ஒலி - பிரணவஒலி, பீசாக்கர ஒலி போல்வன, " ஓசையொலியெலாம் ஆனாய் நீயே " எனத் திருமறையில் கூறப்பெறுதலும் காண்க. தான் சக்கரந்தணந்து எழுதருவாள எனக்கூட்டுக. ( 490 )

**தருவழி யாகிய தத்துவ ஞானங்**
**குருவழி யாதுங் குணங்களுள் நின்று**
**கருவழி யாகுங் கணக்கை யறுத்துப்**
**பெருவழி யார்க்கும் பேரொளி தானே. 1374**

இம் - எனின், இதுவுமது.

இ - ள் : பேரொளிப்பிழம்பாகிய பராசத்தி முத்தியைத்தரும் வழியாகிய தத்துவஞானத்தைக் குருமுமாகக் கிடைக்கச்செய்யும். இறைவனுடைய எண் குணங்களும் உயிரினிடத்து மேம்பட நின்று, மீட்டும் கருவின் வழிப்பட்டுப் பிறக்கும் காரியத்தை அகற்றி, பெரியவழியாகிய வீட்டுநெறியை விளைவிக்கும் எ - று.

தருவழி என்றமைக்கு ஏற்பச் செயப்படுபொருள் வருவித்து முடிக்க. இறைவன் தம்முதல் குருவுமாய்த் தவத்தினின் உணர்த்துதலே முறையாகலின் தத்துவ ஞானம் குருவழியாகும் என்றது. தத்துவஞானம் - தத்துவதரிசனமாதியாய தசகாரியங்களுமாம்.

குணங்கள் - இறைவனுக்குரிய தன்வயத்தனுதல் முதலிய எட்டுக்குணங்கள். அவற்றுள் நின்று - ஆன்மாக்களும் அக்குணங்களில் தலைப்பட்டுநின்று. கருவழியாகும் கணக்கு - கருவாய்ப்பட்டுப் பிறக்கும் காரியம். பெருவழி - பெரிய வீட்டு நெறி. பேரொளி ஆக்கும் என்க. ( 491 )

**பேரொளி யாய பெரிய பெருஞ்சுடர்**
**சீரொளி யாகித் திகழ்தரு நாயகி**
**காரொளி யாகிய கன்னிகை பொன்னிறம்**
**பாரொளி யாகிப் பரந்துநின் றாளே.** 1375

இம் - எனின், இதுவுமது.

இ - ள் : பேரொளிப்பிழம்பாகிய பெருஞ்சுடராய், சீர்த்த ஒளியாகித் திகழ்கின்ற தலைவி, கருமையான

மேகத்தின் ஒளிபோன்ற ஒளியினையுடைய கன்னியாகி, பொன்னிறத்தோடு பொன்னொளியாக எங்கும் விரிந்து நின்றாள் என்றவாறு.

பராசத்தியாகப் பரசிவத்தோடு நின்ற நிலையில் பேரொளியாகிய பெருஞ்சுடராயும், ஆதி சத்தியாய் நின்ற நிலையில், ஆன்மாக்களுடைய பரிபாக நிலைக்கு ஏற்பச் சிரான ஒளியாகவும், பால்மொழிக் கன்னியாகிய உமையான நிலையில் காரொளிக் கன்னியாகவும், பிரபஞ்சமாக விரிந்துநின்றபோது பூமியின் நிறமாகிய பொன்னிறமாகவும் விரிந்தனள் என சிருட்டிக் கிரமத்து வியாபித்திருக்கும் நிலை அறிவித்தவாறு. (492)

**பரந்த கரம்இரு பங்கயம் ஏந்திக**
**குவிந்த கரமிரு கொய்தளிர்ப் பாணி**
**பரிந்தருள் கொங்கைகள் முத்தார் பவளம்**
**இருந்தநல் லாடை மணிபொதிந் தன்றே** 1376

இம் - எனின், இதுவுமது,

இ - ள்: இருமருங்கும் பரந்த கரத்தில். இரண்டு தாமரையைத் தாங்கி, அபயமாகவும் வரதமாகவும் குவிந்த கரங்கள் கொய்யத்தக்க இளந் தளிர்போன்ற கைகளாகவும், விரும்பி அளிக்கப்பெறுகிற கொங்கைளில் முத்து, நிறைந்த பவளம், உயர்ந்த நல்ல பட்டாடை, இரத்தினங்கள் இவற்றால் பொதியப்பெற்று விளங்குவள் அன்றே என்றவாறு.

பரந்த கரம் - இருமருங்கும் மேனோக்கிப் பரந்த கரம். குவிந்த கரம் - அபய வரதங்கள் இரண்டும்.

கொய்தளிர் என்றது அதனிளமையும், மென்மையும் செந்நிறமும் தோன்ற நின்றது. பாணி - கை. பரிந்தருள் கொங்கை - பரிந்து பால் சுரந்தூட்டும் கொங்கைகள் என அம்மையின் தாயன்பை விளக்கிற்று. (493)

**மணிமுடி பாதஞ் சிலம்பணி மங்கை**
**அணிபவ ளன்றி யிருளில்லை யாகுந்**
**தணிபவர் நெஞ்சினுள் தன்னரு ளாகிப்**
**பணிபவர்க் கன்றே பரகதி யாமே.** 1377

இம் - எனின், இதுவுமது.

இ - ள்: இரத்தினமிழைத்த முடியையும், பாதங்களிலே சிலம்பையும் அணிந்த மங்கை; இத்தகைய செவ்வணிகளை அணிபவளே அன்றி இருளின் நிறம் வாய்ந்த பொருள்களை அணிபவளல்லள். அடங்கிய பொறிபுலன்களை உடையவர்களது நெஞ்சில் தனது அருளே வடிவாக என்றும் எழுந்தருளி, வணங்குபவர்க்குப் பரகதியே ஆவள் என்றவாறு.

இருள் இல்லையாகும் - செந்நிற அணிகளை அணிவதால் இருளில்லையாம் எனலுமாம். தணிபவர் - ஆறிய மனத்தன்பர். பணிபவர் - மூலமல முனைப்பு அடங்கித் திருவடியே துணை என்று பணிபவர்கள். இவளே பரகதியாவள் என்றவாறு. (494)

**பரந்திருந் துள்ளே அறுபது சத்தி**
**கரந்தன கன்னிகள் அப்படி சூழ**
**மலர்ந்திரு கையின் மலரவை ஏந்தச்**
**சிறந்தவர் ஏத்துஞ் சிரீம்தன மாமே.** 1378

இம் - எனின். அவ்வம்மை சக்கரத்தின் நடுவில் விளங்கும் நிலையை ஞாபகப்படுத்துதல் நுதலிற்று.

இ - ள் : சக்கரத்தைச் சூழப்பரந்து உன்முகமாக நின்று அறுபது சத்திகளும், கன்னிமார் எண்மரும் அப்படிச் சூழநிற்க, மலர்களை விரிந்த மலர்போலும் கையிற்றாங்கி. அவைபிற் சிறந்தவர்கள் ஏத்தும் ஸ்ரீம் பீஜத்திற்குரிய செல்வமாக விளங்குவாள் என்றவாறு.

லட்சுமி பீசம் ஸ்ரீம் ; இதனைச் செபிக்க வளைவற்ற செல்வம் உண்டாம் ; யோகிகளும், வசினியாதி கன்னிகளும் புடைசூழ ஸ்ரீம் பீஜ செல்வமாகத் தனதாதை வழங்குவள என்பதறைத்தவாறு. (495)

**தனமது வாகிய தையலை நோக்கி**
**மனமது வோடி மரிக்கிலோ ராண்டிற்**
**கனமவை யற்றுக் கருதிய நெஞ்சந்**
**தினகர ஞரிட செய்திய தாமே.** 1379

இம் - எனின். அம்மைவழிபாடு அரனடி சேர்ப்பிக்கும் எனல் நுதலிற்று.

இ - ள் : இவ்வண்ணம் செல்வத்தையருளும் நிறைசெல்வ வடி வாகியசத்தியைத் தியானித்து, மனம் பற்றுக்களில் ஓடிக் களைத்த அடங்கினால், ஓராண்டில் பற்றுகிய சுமை நீங்கித் தியானிக்கின்ற மனம் சிவசூரியனிடம் சென்று சேரும் செய்தியைப் பெறுவதாம் என்றவாறு.

ஸ்ரீம் பீஜவடிவாகிய அம்மையைத் தியானிக்கில் ஓராண்டில் ஆசையடங்கி மனம் ஒடுங்கிச் சிவசூரியன்

திருவடியை அடைதலாகிய சிவப்பேறு சித்திக்கும் என்பதாம். (496)

**ஆகின்ற மூலத் தெழுந்த முழுமலர்**
**போகின்ற பேரொளி யாய மலரதாய்ப்**
**போகின்ற பூரண மாக நிறைந்தபின்**
**சேர்கின்ற செந்தழல் மண்டல மானதே.** 1380

இம் - எனின், மூலாதாரமுதல் வியோமம்வரையில் சத்தி வியாபித்துநிற்குமுறை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : ஆகின்ற மூலாதாரத்தெழுந்த முழுமலராகிய நாலிதழ்த் தாமரையிலிருந்து மேற்போகின்ற பேரொளிப்பிழம்பாகிய மலர்களில். தாயாகிய பராசத்தி வியாபிக்கின்ற பூரணப்பொருளாக விளங்கியபின்னர் மூலம் முதல் துவாதசாந்தம் வரை ஒளி மண்டலம் ஆயிற்று என்றவாறு.

மூலாதாரத்திலிருந்து மேனோக்கிக் கிளம்பிய பராசத்தியாகிய ஒளிப்பிழம்பு ஆதாரங்களிலேயுள்ள தாமரைமலர்கள் அனைத்திலும் வியாபித்துத் துவாதசாந்தம்வரை சென்று பூரணமாக நிறைந்தபின் ஆதாரங்கட்கு ஆதேயமான மாயாகாரியமாகிய இவ்வுடலும் தோன்றாது ; ஒரே ஒளிமயமே தோன்றும் என்றநுபவம் அறிவித்தவாறு (497)

**ஆகின்ற மண்டலத் துள்ளே அமர்ந்தவள்**
**ஆகின்ற ஐம்பத் தறுவகை யானவள்**
**ஆகின்ற ஐம்பத் தறுசத்தி நேர்தரு**
**ஆகின்ற ஐம்பத் தறுவகை சூழவே.** 1381

இம் - எனின், இதுவுமது.

இ - ள் : இவ்வண்ணமாகிற சோதிமண்டலத்துள் விரும்பி எழுந்தருளியிருப்பவளும் ஐம்பத்தொன்றும் ஐந்துமாகிய சக்கரவடிவாக ஆருதாரங்களிலும் வியாபித்து நிற்பவளுமாகிய ஆகின்ற அக்கரங்களாகிய ஐம்பத்தாறினையும் இயக்கும் ஐம்பத்தாறு வகைச் சத்திகளும் தன்னைச்சூழ எழுந்தருளுவள் என்றவாறு.

அகாராதி க்ஷகாராந்தம் ஐம்பத்தோரக்கரங்களும், அகாரம் உகாரம் மகாரம் நாதம் பிந்துவாகிய நுண் எழுத்துக்களாகிய வியட்டிப்பிரணவ பஞ்சாக்கரங்களுமாக ஐம்பத்தாறு, ஐந்தெழுத்து சிவாயநம என்பாரும் உளர். அக்கரங்கள் அனைத்திற்கும் தேவதைகளாவார் அட்சரயோகினி சத்திகளாதலின் அவர்கள் ஐம்பத்தாறு வகையர் என்றது. (498)

**சூழ்ந்தெழு சோதி சுடர்முடி பாதமாய்**
**ஆங்கணி முத்தம் அழகிய மேனியா**
**தாங்கிய கையவை தார்கிளி ஞானமாய்**
**ஏந்து கரங்கள் எடுத்தமா பாசமே.** 1382

இம் - எனின், இதுவுமது.

இ - ள் : ஒளிவிடுகிற முடியும் பாதமும் உலகங்களனைத்தையும் சூழ்ந்தெழுகின்ற சோதியாகவும், அவ்விடத்து அணியாரம் முத்தமே அழகிய மேனியாகவும் தாங்கிய கைகளிரண்டிலும், செந்தார்ப் பசுங்கிளியும் ஞான முத்திரையுமாக, மேல் ஏந்திய கைகளிரண்டிலும் ஏந்திய பாச முதல் ஆயுதங்களாம் என்றவாறு.

மா பாசமே என உபலக்கணத்தால் அங்குசமும் கொள்ளப்படும். அம்மைக்கு முடியும் அழகும் சோதி; மேனி முத்துபோன்ற வெண்மை நிறம்; தாங்கிய கையிரண்டிலும் கிளியும் ஞானமுத்திரையாகிய சின் முத்திரையும்; உயரத்தூக்கிய கைகள் இரண்டிலும் பாசமும் அங்குசமுமாம் என்பது.

தார் - கிளியின் கழுத்திற் வரை. " செந்தார்ப் பசுங் கிளியார் " என்ற சிந்தாமணிச் செய்யுளும் நோக்குக. தார் - படிகமாலை யென்பாருமு உளர். (499)

**பாசம தாகிய வேரை யறுத்திட்டு**
**நேசம தாக நினைந்திரு மும்முளே**
**நாசம தெல்லாம் நடந்திடும் ஐயாண்டிற்**
**காசினி மேலமர் கண்ணுத லாகுமே.** 1383

இது - எனின், பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் ; பாசமாகிய வேரை அறுத்து அன்போடு மனத்தில் தியானியுங்கள். கேடெல்லாம் நடந்திடும். ஐந்து ஆண்டுகளிலே பூமியின்மேல் எழுந்தருளியுள்ள சிவமாகலாம் என்றவாறு.

பாசம் பிறவிக்கு வேராதலின் பாசமாகிய வேர் எனப்பெற்றது. நேசமதாக உமுளே நினைந்திரும் என மாறுக. நாசம் - கேடு. காசினி - பூமி. (500)

**கண்ணுடை நாயகி தன்னரு ளாம்வழி**
**பண்ணுறு நாதம் பகையற நின்றிடில்**
**விண்ணமர் சோதி விளங்க ஹ்ரீங்கார**
**மண்ணுடை நாயகி மண்டல மாகுமே.** 1384

இம் - எனின், ஹ்ரீம் மண்டலம் ஆதிசத்திக்கு இடமாதலை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : கருணையுடைய பராசத்தியின் அருள் விளங்கும்படி, பணையொடு பொருந்திய நாதம் தம்முள் மாறுபாடறக் காணப்பட்டு நின்றால், பராகாயத்தில் விளங்குகின்ற சோதியாகிய சிவம் தோன்ற, ஹ்ரீங்கார பீசமே உலகத்தை ஆளும் சத்தியாகிய ஆதிசத்திக்கு மண்டலமாகும் என்றவாறு.

பராசத்தியின் அருள் விளங்கத் தடையற்ற நாத தரிசனம் கிட்டப்பெறின், சிவம் சோதி வடிவாகக் காணப்பட ஹ்ரீம்பீசம் ஆதிசத்திக்கு மண்டலமாம் என்பது கருத்து. (501)

**மண்டலத் துள்ளே மலர்ந்தெழு தீபத்தைக்**
**கண்டகத் துள்ளே கருதி யிருந்திடும்**
**விண்டகத் துள்ளே விளங்கி வருதலால்**
**தண்டகத் துள்ளவை தாங்கலு மாமே. 1385**

இம் - எனின், தியானத்தின் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : நவாக்கரி மண்டலத்துள் மலர்ந்து எழுகின்ற தீபம் போன்ற அருளம்மையை மனத்துள்ளாகத் தியானித்து அவளையே இடைவிடாது கருதி இருங்கள்: அம்மை ஆணவாதி மலங்களைக் களைந்துகச்செய்து மனத்துள் இடையறாது விளங்கிவருதலால், நடுநாடியாகிய வீணாதண்டத்துள் தீபச்சோதியான அம்மையையும், பிராணவாயுவையும் தாங்கலாம் என்றவாறு.

ஹ்ரீங்கார மண்டலத்துள் பராசத்தி தீபச்சோதி போல எல்லாவற்றையும் விளக்கித் தானும் விளங்குவள்; அவளை இடைவிடாமல் தியானிக்க. மலநீங்கிய மனத்துள் அவள் விளங்கிவருதலால், சுழுமுனையாகிய நடு நாடியுள் அவளையும் பிராணவாயுவையும் தரிக்கலாம் என்பது கருத்து. அவை – அம்மை, பிராணன் என்ற இரண்டையும். (502)

**தாங்கிய நாபித் தடமலர் மண்டலத்**
**தோங்கி எழுங்கலைக் குள்ளுணர் வானவள்**
**ஏங்க வரும்பிறப் பெண்ணி யறுத்திட**
**வாங்கிய நாதம் வலியுட னாகுமே.** 1386

இ-ம் – எனின், நாதபந்தனம் செய்தலால் வரும் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: தாங்கிய உந்தியங் தாமரையாகிய மணி பூரக மண்டலத்துள்நின்று தோன்றுகின்ற நாதவடிவான கலைக்கு உள்ளுணர்வாக விளங்குபவள், மனம் வருந்த வருகின்ற பிறப்பை ஆய்ந்து நீக்க, வெளிப்படாது உள்ளுக்கு விளங்கிய நாதமானது வலிமையுடன் காணப் பெறும் என்றவாறு.

நாதம் வாங்குதலாவது நாதம் வெளிப்படாதவாறு உபாசகன் மூலாதாரத்தைச் சுருக்குதலாகிய மூலபந்தம் செய்தலாம். மூலபந்தத்தை ஒருவன் ஒழுங்காக விதிப்படி செய்யின் பிராணன் அபானன் ஆகிய வாயுக்கள் இரண்டும் சுழுமுனையிற் பிரவேசிக்க நாதம் வெளிப்படும். நாதமும் முற்கூறிய இரண்டும் சேர்ந்து இதயத்தின் மேற் சென்று நாதபிந்துக்கள் ஒன்றுபட்டுப் பிரமரந்திரத்திற்

செல்கின்றன. அதனாற் பிறவியறுதலும் நாதபலமும் விளையும் நாபித் தட்மலா மண்டலம் – மணிபூரக சக்கரம். ஏங்க – வருந்த. வாங்கிய நாதம் – வெளிப்படாதவாறு பந்தித்த நாதம். (503)

**நாவுக்கு நாயகி நன்மணி பூணாரம்**
**பூவுக்கு நாயகி பொன்முடி யாடையாம்**
**பாவுக்கு நாயகி பாலொத்த வண்ணத்தாள்**
**ஆவுக்கு நாயகி அங்கமர்ந் தாளே.** 1387

இம் - எனின். அம்மை எழுந்தருளிய இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : வாகீஸ்வரியும், சகஸ்ரதள பதுமத்தில் வீற்றிருக்கும் மகாலெட்சுமியும், கவிதைகட்கெல்லாந் தலைவியும், பசுபதியுமாகிய அம்மை, நல்ல இரத்தினங்களிழைக்கப்பெற்ற ஆபரணங்களையும் ஆரங்களையும் அணிந்தவளாக, பொன்முடியும் பொன்னுடையும் புனைந் தவளாக, பால்போலும் நிறத்தினளாக, அங்கு எழுந் தருளியிருந்தாள் என்றவாறு. (504)

**அன்றிரு கையில் அளந்த பொருள்முறை**
**இன்றிரு கையில் எடுத்தவெண் குண்டிகை**
**மன்றது காணும் வழியது வாகவே**
**கண்டங் கிருந்தவர் காரணி காணுமே.** 1388

இம் - எனின். காரணேஸ்வரியைத் தரிசிப்பவரின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் ; யோகப் பயிற்சித் தொடக்க காலத்தில் இடை பிங்கலைகள் இருபக்கங்களிலும் பன்னிரண்டும்.

நாலும் பதினாறுமான மாத்திரைக்காலமான அளந்த பிராணவாயுவாகிய பொருளை ஒழுங்குபடுத்தும் முறையும் இன்று நவாக்கரி தியானத்தால், பெரிய கையில் எடுத்த வெண்குண்டிகையாகிய சுழுமுனையும் ஆகிய இந்த இரண்டையும், புருவமத்தியாகிய மன்றைக் காணும் வழியாகக் கண்டு புருவமத்தியாகிற விசுத்தித் தானத்தை விட்டு இறங்காது அங்கேயே இருந்தனர் பரமகாரணியாகிய சத்தியைக் காண்பார் என்றவாறு.

சித்த பரிபாஷையாக மந்திர செபத்திற்கு இன்றியமையாத பிராணயாம முறைகளை இருகையிலளந்த பொருள் முறை என்றும், எடுத்த வெண் குண்டிகை என்றும் கூறுதல் உற்று அறிக. உத்தம மத்திம அதம பிராணயாம அளவுகளைக் குறிக்க அளந்த என்றும், சுழுமுனையில் பிராணயாமம் செய்தபோது மூலத்தினின்று குண்டலினி சக்தியையும் கனலையும் எழுத்து மேற்சேறலின் எடுத்த என்றும் குறிப்பித்தவாறும். மன்று, சபை, விசுத்தி என்பன ஒருபொருட் கிளவிகள். பிராணயாம முறைகளையே சித்தசபையாகிய விசுத்தியைக் காணும் வழியாகக் கொண்டவர்களே சத்தியைத் தரிசிப்பார்கள் என்பதாம். காரணி - எல்லாம தோன்றற்குக் காரணமாக இருப்பவள். (505)

காரணி சத்திகள் ஐம்பத் திரண்டெனக்
காரணி கன்னிகள் ஐம்பத் திருவராய்க்
காரணி சக்கரத் துள்ளே கரந்தெங்குங்
காரணி தன்னரு ளாகிநின் றாளே. 1389

இ - ள். ஐம்பத்திரு சக்திகளை அறிவித்தல் நுதலிற்று.

இ - ள்; காரணியாகிய சக்திகள் ஐம்பத்திருவராக, அவர்கள் கன்னியராக, நவாக்கரி சக்கரத்துள்ளே மறைந்து எங்கும தன்னருளாகவே வியாபித்துநின்ருள் என்றவாறு.

ஐம்பத்திருவர் என்றது ஐம்பத்தோரக்கர சத்திகளையும், சமட்டிப்பிரணவ சத்தியையுமாம். இம்மாலா மந்திரம் சூழ்ந்த சக்கரத்துள் சத்தி அருளே உருவாக எங்கும பரவிக் கலந்து நின்ருள் என்பதாம். (506)

**நின்றஇச் சத்தி நிலைபெற நின்றிடிற்**
**கண்டஇவ் வன்னி கலந்திடும் ஓராண்டிற்**
**கொண்ட விரதநீர் குன்ருமல் நின்றிடின்**
**மன்றினி லாடு மணியது காணுமே. 1390**

இம் - எனின், நவாக்கரிதியானயோக அநுபவம் அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் ; சக்கரத்துள்ளே நிலைபெற்ற இச்சத்தி மனத்துள் நிலைபெற நீங்கள் நிற்பின், மண்டலத்துள்ளாகக் கண்ட இச்சோதி ஓராண்டுப் பயிற்சியினல் காண்பானும் காட்சியும் வேறன்றி ஒன்ருகக் கலக்கும். அவ்வநுபவம் முதிருங்காலத்து நீங்கள் கொண்ட விரதம் குன்ருமல் உறுதியாக இருக்கின், விசுத்தித்தானத்தில் மணிநாதமும் கேட்கலாம் என்றவாறு.

மணியதுகாணும் என்பதற்கு இரத்தின தீபம்போல அசையாத அழியாத ஒளிதரிசனம் விளையும் எனலுமாம். வன்னி - சோதி. நவாக்கரி சக்கரத்தில் சத்தியை நிலையாகத் தியானிக்கில் ஒளிதரிசனம் உண்டாகும். ஒளியும்

உயிரும் ஓராண்டிற் கலக்குர்; பின் மணி நாதம் கேட்கும் என்பது கருத்து. (507)

**கண்டஇச் சத்தி இருதய பங்கயங்**
**கொண்டஇத் தத்துவ நாயகி யானவள்**
**பண்டையவ் வாயுப் பகையை யறுத்திட**
**இன்றென் மனத்துள் இனிதிருந் தாளே.** 1391

இம் - எனின், அம்மை, காலனை வெல்லுதற்குக் கருத்துளிருந்தமை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: மணிபூரகத்தில் தரிசிக்கப்பட்ட இச்சத்தி இதயத்தாமரையை இடமாகக் கொண்ட இத்தத்துவநாயகி பழமையான அந்த ஆயுப்பகையான காலனைக் கொல்ல இன்று என் மனத்துள் இனிதாக வீற்றிருந்தாள் என்றவாறு.

கண்ட இச்சத்தி - தரிசிக்கப்பட்ட இந்தச் சத்தி முற்றிருமந்திரத்தில் வன்னி கலந்திடும் என்றமையால் அக்கினிமண்டலமாகிய மணிபூரகத்தில அம்மை கலந் திருப்பதை உணர்ந்த உபாசகன். மேலும் இதயத்தா மரையாகிய அநாகத்தானத்தில் இருப்பதை அறிவான் என்றருளப்பெற்றது. அங்ஙனம் உணர்ந்த என்மனத் துள ஆயுப்பகையையறுக்க இனிதிருந்தாள் என்பதாம்.

வாயுப்பகையெனக் கொண்டு உச்சுவாசம் நிச்சுவாச மாகிய ஒன்றற்கொன்று மாறான வாயுப்பகையை அறுத் திட எனவே பூரணகும்பத்திருக்க என் சலனமற்ற மனத்துள் இருந்தாள் என்று பொருள் கொள்ளலு முண்டு. (508)

**இருந்தவிச் சத்தி இருநாலு கையிற்**
**பரந்தஇப் பூங்கிளி பாச மழுவாள்**
**கரந்திடு கேடகம் வில்லம்பு கொண்டங்**
**குரத்தங் கிருந்தவள் கூத்துகந் தாளே. 1392**

இ - னிஸ். உருவத்தியானம் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : அநாகதத்தலத்தில் இருந்த சக்தியின் எட்டுக்கையிலும் பரந்த இந்தபூவும், கிளியும், பாசமும், மழுவும், வாளும் எதிரியின் வாள் வீச்சைக் கரந்திடும் கேடயமும், வில்லும், அம்பும் ஆகிய ஆயுதங்களைத் தாங்கி ஆரவாரித்து எழுந்தருளியிருந்த அம்மை கூத்தினை விரும்பினள் என்றவாறு.

ஆயுதங்கள் ஏந்திய அம்மை விரும்பியது வீர நடனத்தை என்க. எட்டுக் கைகளிலும தாமரை முதலிய எட்டையும் ஆகமவிதிப்படி அமைக்க. (509)

**உகந்தனள் பொன்முடி முத்தார மாகப்**
**பரந்த பவளமும் பட்டாடை சாத்தி**
**மலர்ந்தெழு கொங்கை மணிக்கச் சணிந்து**
**தழைந்தங் கிருந்தவள் தான்பச்சை யாமே. 1393**

இ - னின், இதுவுமது.

இ - ள் : பொன்முடியை விரும்பியவளாக, முத்துமாலையும் மிகப் பரந்த பட்டாடையும் பவளமும் அணிந்து, அடிபரந்தெழுகிற கொங்கையின்மீது இரத்தினக்கச்சை அணிந்து, தழைந்து அங்கு இருந்தவள் பச்சை நிறமுடையவள் ஆவள் என்றவாறு.

கிணற்றில் நிறைந்து, நாபியிலிறங்கி. சூரியமண்டலமும் குளிரச்செய்து தழைத்திருட்பதையறிக என்பதாம்.

சூரியமண்டலம் என்றது நாபிமுதல் இதயம் வரையுள்ள பகுதியாகும். இதனை அமிர்தாப்லாவனம் என்னும் அகோர சிவபத்ததி. (513)

கூபத்துச் சத்தி குளிர்முகம் பத்துள
தாபத்துச் சத்தி தயங்கி வருதலால்
ஆபத்துக் கைகள் அடைந்தன நாலைந்து
பாசம் அறுக்கப் பரந்தன சூலமே. 1397

இ – ள் : அவ்வண்ணம் விசுத்தித் தானத்திலுள்ள சத்திக்கு முகங்கள் பத்து. சூரியமண்டலத்து வெப்பமாகிய ஆற்றல் அவ்வப்போது வேண்டிய அளவாகத் தடைபட்டு வருதலால், அவ்வமைக்கு ஆபத்துக் காலத்தில் உதவும் கைகள் இருபது உள. அவற்றுள் ஒன்றில் ஆன்மாக்களுடைய பாசத்தை நீக்கச் சூலம் பரந்துள்ளன என்றவாறு.

விசுத்தித்தானத்திற்கு முகம் பத்தென்றது, அங்கு விளங்குபவர் சதாசிவமூர்த்தி; சதாசிவமூர்த்தி அர்த்தநாரீசுரவடிவாக விளங்குகின்றார். ஆகவே அவர்முகம் சத்திமுகம் ஐந்து, கைகள் இருபது எனக் குறித்தவாறு. இது யோகசிகையுட் கூறப்பட்டது.

தாபத்துச்சத்தி – வெப்ப ஆற்றல், சூரியமண்டல வெப்பம், தயங்கி – தடைபட்டு. ஆபத்துக்கைகள் – ஊறுகட்கு உதவுங்கைகள், அம்மை கரத்தில் சூலம்

இருப்பது ஆன்மாக்களுடைய சாசத்தை அறுப்பதற் காக என்க. (514)

**சூலந்தண் டொள்வாள் சுடர்பறை ஞானமாய்**
**வேலம்பு தமருக மாகிளி விற்கொண்டு**
**காலம்பூப் பாசம் மழுகத்தி கைக்கொண்டு**
**கோலஞ்சேர் சங்கு குவிந்தகை எண்ணதே 1398**

இம் - எனின், அக்கரங்களில் விளங்கும் ஆயுத வகைகளை அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : சூலம், தண்டு, ஒளிபொருந்திய வாள், அக்கினி, பறை ஞானவடிவான வேல், அம்பு, தமருகம், பெரியகிளி, வில்இவற்றைக்கொண்டு, மற்றொரு பக்கத்தில் காலபாசம், மழு, சத்தி, இவற்றைக் கைக் கொண்டு, அழகிய சங்கு, அபயவரதங்களாகிய குவிந்த கைகள் இவ்வாருக எண்ணுக என்றவாறு.

இந்த ஆயுதவகைகளைக்கொண்டு அம்பிகையின் எந்தக்கோலத்தை அறிவிக்கிருர்கள் என்று ஆகமங் களிலும், புராணங்களிலும், சாரதசதிபோன்ற மந்திர நூல்களிலும் சிறிதும் மாற்றமின்றி அறியக்கூடா மையின் எவ்வெக்கரத்தில் எவ்வெவ்வாயுதங்கள் உள எனவும் கரங்களின் எண்ணும் ஆயுத எண்ணும் ஒத்துள்ளனவா என்றும் ஆராய்ந்து உறுதிகூற இப்போது இயலவில்லை. (515)

**எண்ணமர் சத்திகள் நாற்பத்து நாலுடன்**
**எண்ணமர் சத்திகள் நாற்பத்து நால்வராம்**
**எண்ணிய பூவித முள்ளே யிருந்தவள்**
**எண்ணிய எண்ணங் கடந்துநின் ருளே. 1399**

அம்மை நிறம் பச்சையாம் என்பது. ஆக – மிக பரந்த – செவ்வொளி பரந்த. (510)

பச்சை இவளுக்குப் பாங்கிமார் ஆறெட்டு
கொச்சையார் எண்மாகள் கூடி வருதலாற்
கச்சணி கொங்கைகள் கையிரு காப்பதாய்
எச்ச விடைச்சி இனிதிருந் தாளே. 1394

இம் – எனின், இதுவுமது

இ – ள் : பச்சை நிறமுடைய இவளுக்குப் பாங்கிமார் நாற்பத்தெண்மரும் பழிலே பேசும் தோழியர் எண்மரும் எடபோதும் கூடிவருதலால. கச்சணிந்த கொங்கைகளையும், காப்பாகிய இரண்டு கரங்களையும் இளைத்த இடையினையுமுடையாள் இனிது வீற்றிருந்தாள் என்றவாறு.

காப்பதாய் இருவகை எனமாறுக. எச்ச – எய்த்த என்பதன் மரூஉ; இளைத்த என்னும் பொருளது. தோழியர் நாற்பத்தெண்மர் அணுக்கத்தோழியர் எண்மர் என்ற தொகைகளின் விரியும் அவர்களின் பெயரும் தியானமும் இன்றுவரை விளங்கவில்லை. (511)

தாளதி னுள்ளே தாங்கிய சோதியைக்
காலது வாகக் கலந்துகொள் என்று
மாலது வாக வழிபாடு செய்துநீ
பாலது போலப் பரந்தெழு விண்ணிலே. 1395

இம் – எனின், பிராணயாமத்துடன் அம்மையை வழிபடுமுறையும் பயனும் அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : மூலத்திலே தங்கிய சோதிவடிவாகிய சத்தியை, பிராணவாயுவோடு கலந்துகொள் என்று தன்வசமற்று வழிபாடுசெய்து, பால்போல வெண்மையாக விணணிடத்துப் பரந்தெழுக என்றவாறு.

தாள் - அடி ; அதாவது ஆருதாரங்கட்கும் தாளான மூலாதாரம். மூலாதாரத்துள்ள குண்டலினிசக்தியை. பிராணவாயுடன் கலக்கஎன்று, பரவசமாகவழிபடின் பால்போல விண்ணிற்பரவலாம என்பதாம் இங்ஙனம் அன்றித் தாள் – தாமரைநாளம் ; அதுபோன்ற பிரமரந்திரம் என்பாரும் உளர். அது யோக நூற்கருத்தோடு மாறுபடுதலை ஹடயோகப் பிரதீபிகையில மூன்றும் பரிச்சேதத்திற் காண்க. **(512)**

**விண்ணமர் நாபி இருதய மாங்கிடைக்**
**கண்ணமர் கூபங் கலந்து வருதலாற்**
**பண்ணமர்ந் தாதித்த மண்டல மானது**
**தண்ணமர் கூபந் தழைத்தது காணுமே** 1396

இம் - எனின், அமுதம் பெருகிப் பாயும் முறை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : சிதாகாயத்தானமாகிய புருவமத்தியிலிருந்து, இதயத்தானமாகிய அநாகதம், நாபித்தானமாகிய மணிபூரகம், இவற்றினிடையிலுள்ள விசுத்தித்தானம் இவற்றில் பொருந்திக் கலந்து வருதலால், அழகிய ஆதித்த மண்டலமானது, குளிர்ச்சி பொருந்தித் தழைத்ததை அறியுங்கள் என்றவாறு.

அமுதம் புருவமத்தியாகிய சிதாகாயத்திலிருந்து பெருகி, அநாகதத்தில் இறங்கி, விசுத்தியினுள் (கூப)

கிணற்றில் நிறைந்து, நாபியிலிறங்கி. சூரியமண்டலமும் குளிரச்செய்து தழைத்திருட்பதையறிக என்பதாம்.

சூரியமண்டலம் என்றது நாபிமுதல் இதயம் வரையுள்ள பகுதியாகும். இதனை அமிர்தாப்லாவனம் என்னும் அகோர சிவபத்ததி. (513)

**கூபத்துச் சத்தி குளிர்முகம் பத்துள**
**தாபத்துச் சத்தி தயங்கி வருதலால்**
**ஆபத்துக் கைகள் அடைந்தன நாலைந்து**
**பாசம் அறுக்கப் பரந்தன சூலமே.** 1397

இ - ள் : அவ்வண்ணம் விசுத்தித் தானத்திலுள்ள சத்திக்கு முகங்கள் பத்து. சூரியமண்டலத்து வெப்பமாகிய ஆற்றல் அவ்வப்போது வேண்டிய அளவாகத் தடைபட்டு வருதலால், அவ்வமைக்கு ஆபத்துக் காலத்தில் உதவும் கைகள் இருபது உள. அவற்றுள் ஒன்றில் ஆன்மாக்களுடைய பாசத்தை நீக்கச் சூலம் பரந்துள்ளன என்றவாறு.

விசுத்தித்தானத்திற்கு முகம் பத்தென்றது, அங்கு விளங்குபவர் சதாசிவமூர்த்தி ; சதாசிவமூர்த்தி அர்த்தநாரீசுரவடிவாக விளங்குகின்றார். ஆகவே அவர்முகம் ஐந்து, சத்திமுகம் ஐந்து, கைகள் இருபது எனக் குறித்தவாறு. இது யோகசிகையுட் கூறப்பட்டது.

தாபத்துச்சத்தி - வெப்ப ஆற்றல், சூரியமண்டல வெப்பம், தயங்கி - தடைபட்டு. ஆபத்துக்கைகள் - ஊறுகட்கு உதவுங்கைகள், அம்மை கரத்தில் சூலம்

இருப்பது ஆன்மாக்களுடைய சாசத்தை அறுப்பதற்காக என்க. (514)

**சூலந்தண் டொள்வாள் சுடர்பறை ஞானமாய்**
**வேலம்பு தமருக மாகிளி விற்கொண்டு**
**காலம்பூப் பாசம் மழுகத்தி கைக்கொண்டு**
**கோலஞ்சேர் சங்கு குவிந்தகை எண்ணதே 1398**

இம் - எனின், அக்கரங்களில் விளங்கும் ஆயுத வகைகளை அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : சூலம், தண்டு, ஒளிபொருந்திய வாள், அக்கினி, பறை ஞானவடிவான வேல், அம்பு, தமருகம், பெரியகிளி, வில்இவற்றைக்கொண்டு, மற்றொரு பக்கத்தில் காலபாசம், மழு, சத்தி, இவற்றைக் கைக்கொண்டு, அழகிய சங்கு, அபயவரதங்களாகிய குவிந்த கைகள் இவ்வாருக எண்ணுக என்றவாறு.

இந்த ஆயுதவகைகளைக்கொண்டு அம்பிகையின் எந்தக்கோலத்தை அறிவிக்கிருர்கள் என்று ஆகமங்களிலும், புராணங்களிலும், சாதசதிபோன்ற மந்திர நூல்களிலும் சிறிதும் மாற்றமின்றி அறியக்கூடாமையின் எவ்வெக்கரத்தில் எவ்வெவ்வாயுதங்கள் உள எனவும் கரங்களின் எண்ணும் ஆயுத எண்ணும் ஒத்துள்ளனவா என்றும் ஆராய்ந்து உறுதிகூற இப்போது இயலவில்லை. (515)

**எண்ணமர் சத்திகள் நாற்பத்து நாலுடன்**
**எண்ணமர் சத்திகள் நாற்பத்து நால்வராம்**
**எண்ணிய பூவித முள்ளே யிருந்தவள்**
**எண்ணிய எண்ணங் கடந்துநின் ருளே. 1399**

இம் - எனின், நாற்பத்து நான்கு சத்திகள் சூழ அம்மை விசுத்திசக்கரப்பூவில் இருந்தருள் நிலையை உணர்த்துதல நுதலிற்று.

இ - ள் : உபாசகன் எண்ணத்தில விருப்பியமர்கின்ற சத்திகள் நாறபத்து நாலவருடன் விசுத்தி சக்கரத்தாமரையுள் இருந்த சதந் ஆன்மாக்களுடைய எண்ணங்களைக் கடந்து நின்ருள என்றவாறு.

விசுத்திசக்கரத்துப் பதினறிதழ்த் தாமரைக்கண் வீற்றிருக்கின்ற சத்தி எண்ணுகற்கு அப்பாற்பட்டவள் என்பதாம். (516)

**கடந்தவள் பொன்முடி மாணிக்கத் தோடு**
**தொடர்ந்தணி முத்து பவளங்கச் சாகப்**
**படர்ந்தல்குற் பட்டாடை பாதச் சிலம்பு** 1400
**மடந்தை சிறியவள் வந்துநின் ருளே.**

இம் - எனின், இதுவுமது.

இ - ள் : அவ் வண்ணம் கடந்து நின்றவள், எளி வந்த கருணையால ஆன்மாக்கள் அறிந்து ஈடேறும் வண்ணம், பொற்கிரீடம மாணிக்கம் முத்து பவளம் இவை விரவச்செய்யப்பெற்ற கச்சு இவற்றையணிந்து பரவிய அல்குலமீது பட்டாடைபுனைந்து, பாதச்சிலம்பு அணிந்து பாலையாக வந்து நின்ருள் என்றவாறு. (517)

**நின்றஇச் சத்தி நிரந்தர மாகவே**
**கண்டிடு மேரு வணிமாதி தாளுகிப்**
**பண்டைய வானின் பகட்டை யறுத்திட** 1401
**ஒன்றிய தீபம் உணர்ந்தார்க் குண்டாமே.**

இம் – எனின், சத்தி, ஆஞ்ஞையில் தீப ஒளி போல விளங்குமுண்மையை அறிவித்தல் நுதலிற்று.

இ – ள் : நிலைபெற்ற இந்தச்சக்தியானவள், இடையீடின்றிக் காணப்படுவதாகிய மேருவாகி, புருவமத்தியில், அணிமாதி சித்திகள் ஆன்மாக்களுக்கு அநாதியேயுள்ள பாசங்களாகிற பகட்டை நீக்க, பொருந்திய தீபமாக விளங்குவதை அறிந்தார்கட்குத் தானாக விளையும் என்றவாறு,

நின்ற இச்சத்தி நிரந்தரமாகவே கண்டிடு மேரு ஒன்றிய தீபம் உணர்ந்தார்க்கு, பண்டைய ஆனின் பகட்டை அறுத்திட அணிமாதி தானாக உண்டாம் என வினைமுடித்துப் பொருள்கொள்க.

நிரந்தரம் – இடையீடின்றி. ஆன் – பசு ; ஆன்மா ; பகட்டு – வீண்பெருமை. ஈண்டு மலமாயா கன்மச் சேர்க்கையால் விளையும் பொய்யான பெருமை. அணிமாதி சத்திகள் முயற்சியின்றி நினைத்தபோது தானாகவே விளையும் என்பதாம். (518)

**உண்டோர் அதோமுகம் உத்தம மானது**
**கண்டஇச் சத்தி சதாசிவ நாயகி**
**கொண்ட முகமைந்து கூறுங் கரங்களும்**
**ஒன்றிரண் டாகவே மூன்றுநா லானதே. 1402**

இம் – எனின்: சந்திரமண்டலத்துச் சதாசிவநாயகியானவள் ஐந்து முகங்களும் பத்துக் கரங்களும் பெற்று விளங்குதலை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : சிறந்ததான கீழ்நோக்கிய தாமரையை யுடைய சந்திரமண்டலம் உண்டு. அதிலே காணப் பெற்ற இந்தச் சதாசிவநாயகி தாங்கிய முகமைந்தும் கைகள் பத்தும் உடையதாயிற்று என்றவாறு.

நாயகி ஆனது எனத் தெய்வங்குறித்த பெயர் அஃறிணை முடிபெற்றது. சூரியமண்டலம் மேனோக்கி யும், சந்திரமண்டலம் கீழ்நோக்கியும் கவிந்த மலர்ந்த தாமரை இதழ்களை உடையது. இதனையே முன்னர், சதாசிவதேவர்க்கும் ஐம்முகங்களும், பத்துக் கரங்க ளும் சதாசிவநாயகிக்கும் அங்ஙனமேயாக, பத்து முகங் களும் பத்துக் கரங்களும் கூறப்பெற்றன. 'ஒன்றிரண் டாகவே மூன்று நாலானதே' என்பது உம்மைத் தொகைபடநின்றது.

**நன்மணி சூலங் கபாலங் கிளியுடன்**
**பன்மணி நாகம் மழுகத்தி பந்தாகுங்**
**கன்மணி தாமரைக் கையில் தமருகம்**
**பொன்மணி பூணாரம் பூசனை யானதே** 1403

இம் – எனின், இதுவுமது.

இ - ள் : நல்ல மணி. சூலம் கபாலம். கிளி இவற் றுடன் பலவாகிய மணிகளையுடைய பாம்பு மழு கத்தி பந்து இவைகளும் அம்மையின் கரத்தில் ஆகும். மாணிக் கக்கல்போல் சிவந்த தாமரைக்கையில் தமருகமும் பொன்னால் செய்யப்பெற்று மணிகள் அழுத்திய பூண் களும், ஆரங்களும் அணிதலே பூசனையாகும் என்றவாறு.

நல்மணி - நல்லநாதத்தையுடைய மணி. பல்மலி நாகம் - பல முடிகளை உடைமையால் பல மாணிக்கங்களை உடைய நாகம். அம்மைக்கு நாகம் கங்கணமாக விளங்குவது. கல் மணி தாமரைக் கை - மணிக்கல் தாமரைக் கையில். மாணிக்கக்கல்போலும் சிவந்த தாமரை, தாமரை போலும் சிவப்பையும் மென்மையையும் உடைய கை ஆதலின் உமைக்கு உவமையாகாது. இவ்வண்ணம் அணிகளையும் ஆயுதங்களையும் அணிதலே பூசனையாம என்றவாறு. (520)

**பூசனைச் சத்திகள் எண்ணைவர் சூழவே**
**நேசவள் கன்னிகள் நாற்பத்து நேரதாய்க்**
**காசினிச் சக்கரத் துள்ளே கலந்தவள்**
**மாசடை யாமல் மகிழ்ந்திருந் தார்களே. 1404**

இம் – எனின். நாற்சதுரமாகிய பூபுரச் சக்கரத்துள் நாற்பதின்மர் சூழ அம்மை எழுந்தருளியிருக்கும் நிலை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : வழிபடற்குரிய சத்திகள் நாற்பதின்மர் சூழ நேசத்தையுடைய பராசத்தி முற்கூறிய நாற்பது கன்னியர்க்கு நேராகப் பூப்பிரஸ்தாரச் சக்கரத்துள் கலந்தவள் குற்றங்கள் ஒன்றும் சாராதபடி மகிழ்ந்து எழுந்தருளியிருந்தாள் என்றவாறு.

காசினிச் சக்கரம் - பூப்பிரஸ்தாரம். பூப்பிரஸ்தாரம் கைலாசபிரஸ்தாரம் மேருப்பிரஸ்தாரம் எனச் சக்கரம் மூன்று வகைப்படும். அவற்றுள் பூப்பிரஸ்தாரத்துள் மத்ய திரிகண்டையில் விளங்குகின்ற சத்திகள் நீங்க ஏனைய நாற்பது கோணங்களிலும் நாற்பது சத்திகள்

விளங்குவர்; அவர்களுக்கு நேராக விந்துவில் சத்தியாகிய பரை வீற்றிருப்பதை விளக்குவது இம்மந்திரம். (521)

**தாரத்தி னுள்ளே தங்கிய சோதியைப்**
**பாரத்தி னுள்ளே பரந்துள் எழுந்திட**
**வேரது வொன்றிநின் றெண்ணு மனோமயங்**
**காரது போலக் கலந்தெழு மண்ணிலே** 1405

இம் - எனின், பிரணவத் தியானத்தால் பராசத்தி அருளும் வகை உணர்த்துதல நுதலிற்று.

இ-ள்: மூலாதாரத்துள் விளங்கிய சோதியைப் பிண்டமாக்கிய உடற்பாரத்துள எங்கும் பரவி, உள்ளே எழும்ப. வேரெழுத்தாகிய ஓங்காரத்துடன் ஒன்றி நின்று முறையே எண்ணுகின்ற மனோமயம் மண்ணுலகில மேகம்போலக் கலந்து பிரமரந்திரம்வரை எழும் என்றவாறு.

மனோமயச் சோதியைப் பரந்து உள் எழுந்திட வேரது ஒன்றி நின்று மண்ணிலே கலந்தெழும் என முடிக்க. தாரம் மூலாதாரம் எனபதன் குறையாக மூலாதாரத்தை உணர்த்திற்று. பிரணவம் எனலுமாம். பாரம் — சுமை; உடல், பிராணவாயுவுமாம. வேர் — ஒலிகளுககெல்லாம் வேராகிய பிரணவநாதம். மூலாதாரம எனபாருமுளர். கார் - சுழுத்தி என்பாருமுளர். ( 522 )

**மண்ணில் எழுந்த அகார உகாரங்கள்**
**விண்ணில் எழுந்து சிவாய நமவென்று**
**கண்ணில் எழுந்தது காண்பரி தன்றுகொல்**
**கண்ணில் எழுந்தது காட்சி தரஎன்றே.** 1406

இ-ள் - எனின், மூலாதாரத்தில் எழுந்த பராவாக்கே விசுத்தியிலும், அதற்குமேல் ஆஞ்ஞையிலும் திருவைந் தெழுத்தாக எழுந்தது, நமக்குக் காட்சி வழங்குவதற் காகவே என்பது நுதலிற்று.

இ-ள் : மூலாதாரத்தில் எழுந்த அகார உகார ஒலிகளின் சமட்டியாகிய பிரணவமே ஆகாயமாகிய ஆஞ்ஞையில் சென்று சிவாயநம என்னும் வைகரி வாக் காகக் கட்புலனாயிற்று. ஆகவே காண்பதற்கு அரி தன்று. அங்ஙனம் அந்நாதம் ஐந்தெழுத்தாக எழுந்தது ஆன்மாக்களாகிய நமக்குக் காட்சி வழங்குதற்காகவே என்க என்றவாறு. (523)

என்றும் இருந்த அமுத கலையிடைச்
சென்றும் இருந்த அமுத பயோதரி
கண்டங் கரமிரு வெள்ளிபொன் மண்ணடை
கொண்டங் இருந்தது வண்ணம் அமுதே. 1407

இம் - எனின், அமுதேஸ்வரியின் நிறம் முதலியன உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : காட்சி வழங்குதற்காக என்று சந்திர மண்டலமாகிய ஆஞ்ஞாசக்கரத்தில இருந்த அமுத கலை யிடத்துச் சென்று தங்கிய அமுதம போன்ற பாலைத் தாங்குகின்ற தனங்களையுடையவளான சீபரமேசுவரி கண்டமும், கரங்களும் முறையே வெள்ளிபோல வெண்மை நிறமாகவும், பொன்னிறமாகவும் கொண்டு, கரம் ஒன்றில மண்ணாற் செய்யப்பெற்ற கமண்டலம் தாங்கி எழுந்தருளியிருக்கும். அதன் நிறம் அமுதம்போல வெண்மையாம் என்றவாறு. (524)

அமுதம தாக அழகிய மேனி
படிகம தாகப் பரந்தெழு முள்ளே
குமுதம தாகக் குளிர்ந்தெழு முத்துக்
கெமுதம தாகிய கேடிலி தானே. 1408

இம் – எனின், இதுவுமது.

இ – ள் : அல்லி மொட்டுப்போலக் குளிர்ச்சியுடன் தோன்றுகிற முத்துப்போலும் நிறத்துடன், ஆநந்தமயமாக விளங்கும் ஒடுக்கமற்ற பரமேசுவரி அமுதம்போல நோக்கினோர்கட்கினிமையும் வெண்மையும் சாவாமையும் மகிழ்ச்சியும் ஊட்டவல்ல அழகிய மேனியுடன் படிகம்போல நினைப்பவர் மனத்துள் பரிபூரணமாக விளங்கும் என்றவாறு.

கெமுதம் - ஆனந்தம். முத்தினது பருமைக்கும் குளிர்ச்சிக்கும் குமுதம் உவமை. கேடிலி, அழகிய மேனியுடன் படிகமதாகப் பரந்தெழும் என்க. (525)

கேடிலி சத்திகள் முப்பத் தறுவரும்
நாடிலி கன்னிகள் நாலொன் பதின்மரும்
பூவிலி பூவிதழ் உள்ளே யிருந்தவர்
நாளிலி தன்னை நணுகிநின் றார்களே. 1409

இம் - எனின், தேவியைத் தியானிப்பவர் எய்தும் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : பிறப்பில்லாதாளும், நெஞ்சத்தாமரையில் வீற்றிருந்து விளங்குகின்ற காலாதீதமானவளும், கேடற்றவளும், சத்திகளும் யோகினிகளாகிற கன்னிகளுமாக முப்பத்தாறு பேர் சூழ நின்றவளுமாகிய பராசத்தியை

அடைந்து அகலாதே நிற்கும் அநுபவிகட்கு எல்லாம் விளையும் என்றவாறு.

எல்லாம் உண்டாம் என இருசொல் வருவித்து முடிக்க. முப்பத்து அறுவர் என்றது பூமி முதல் குடிலை வரையுள்ள தத்துவங்களின் சத்திகளும் அவற்றின் குல யோகினிகளும் என்க. (526)

**நின்றது புந்தி நிறைந்திடும் வன்னியும்**
**கண்டது சோதி கருத்தில் இருந்திடக்**
**கொண்டது வோராண்டு கூடி வருகைக்கு**
**விண்ட வௌகாரம் விளங்கின அன்றே** 1410

இம் - எனின், நவாக்கரி பீசத்தால் சித்தியெல்லாம் பெருகுதல் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இதயத் தாமரையில் நிறைந்து விளங்கும் ஒளியுருவுடைய சிவம் நின்றது. அதன் ஒளியாகிய சத்தி மண்டலத்துள் நீங்காது அனவரதமும் விளங்கக் கண்டதாம். இங்ஙனம் கண்டு கொண்டதாகிய ஒளி சித்தியாதற்கு ஓராண்டுக்காலம் முற்கூறப்பட்ட ஔகாராதி பீசங்கள் விளங்கின என்றவாறு.

வன்னி - தீயுருவச்சிவம். ஔகாராதி ஒன்பது பீசங்களையும் ஓராண்டுச் செபிக்க மனத்துள் வன்னி வடிவச் சிவமும் சோதி வடிவச் சிவையும் வெளிப்பட்டுச் சித்தி தருவர் என்பது கருத்து. (527)

**விளங்கிடு வானிடை நின்றவை யெல்லாம்**
**வணங்கிடு மண்டலம் மன்னுயி ராக**
**நலங்கிளர் நன்மைகள் நாரண னொத்துச்**
**சுணங்கிடை நின்றிவை சொல்லலு மாமே.** 1411

இம் - எனின், அங்ஙனம் சித்தி பெற்றார்களுக்கு ஆகாதன இல்லையென்று அறிவித்தல் நுதலிற்று.

இ - ள் : விளங்குகிற வானத்து நிலைபெற்ற அண்டங்களில் வாழும் உயிர்கள் அனைத்தும், மண்ணுலகில் வாழுகின்ற உயிர்களைப்போல் இவ்வன்பரை வந்து வணங்கும். நாராயணனை ஒத்து, மிக்க நன்மைகள் யாவும் விளையும். மற்றை புழுதி தோய்ந்த பூமியினின்று சொல்ல முடியுமோ? என்றவாறு.

நல்லொழுக்கம் மேற்கொள்வோன் பெறும் பயன்களை நோய் புழுதி முதலிய உடைய இந்தப் பூமியிலிருந்து விரித்துரைக்க ஒண்ணாது. சுணங்கு - நோய், துகள், அஃது ஆகுபெயராகப் பூமியை உணர்த்திற்று. அவன் இன்பவடிவினனாக - புண்ணிய மூர்த்தியாக விளங்குவன் என்பதை இன்பத்துன்பக் கலப்பாக - புண்ணியபாவக் கலப்பினைச் செய்தற்கு உரிய கன்ம பூமியாகிய இந்தப் பூமியிலிருந்தா சொல்ல முடியும்? முடியாது என்பதாம். (528)

ஆமே அதோமுக மேலே அமுதமாய்த்
தாமே யுகாரந் தழைத்தெழுஞ் சோமனும்
காமேல் வருகின்ற கற்பக மானது
பூமேல் வருகின்ற பொற்கொடி யானதே. 1412

இம் - எனின், குண்டலினி மதிமண்டலம் வரை வியாபித்து, காமருவல்லி போலத் தாவிப் படர்ந்து விளங்குதல் நுதலிற்று.

இ – ள் : கடம்பாடவியில் வருகின்ற கற்பகமான சத்தியே, மூலாதார நாலிதழ்த் தாமரையில எழுந்தருளி யிருக்கின்ற சத்தி; பொற்கொடியான காமருவவல்லிக் கொடியாய், கீழ்நோக்கி மலர்ந்துள்ள தாமரை மலராய், அமுதம் பொழிவதாய் உகாரமாகிய சத்தியட்சரத்தில் விளங்கும் சந்திரனும் ஆம என்றவாறு.

கா – கதம்பவனம். 'கதமபவன வாசினி' என்பது அம்மையின பெயர்களுள் ஒன்று. அன்பர் நினைத்த வண்ணம அனைத்தையும் அருளலின கற்பகமானது என்றார். பூ–மூலாதாரத்துள்ள தாமரை. பொற்கொடி– பொன்னிறமான கொடி. கற்பகம் என்றதற்கேற்ப அடுத்துப் பொற்கொடியானது என்றார். மதிமண்டலம் கீழ் நோக்கியும். சூரியமண்டலம் மேல் நோக்கியும் விரிந்த தாமரைபோல்வது ஆதலின், 'அதோமுகம' என்றருளியது. (529)

பொற்கொடி யாளுடைப் பூசனை செய்திட
அக்களி யாகிய ஆங்காரம் போயிடும்
மற்கட மாகிய மண்டலந் தன்னுள்ளே
பிற்கொடி யாகிய பேதையைக் காணுமே. 1413

இம் – எனின், அம்மையை வழிபட் ஆணவம் அகலும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : பொற்கொடி போலும் வடிவு உடைய பராசத்தியின் பூசனை செய்ய, ஆணவமலமாகிய அகங் காரம் போகும். நிலை பெற்ற பெருவெளியாகிய பரா காயத்தில், பின்னிய கொடிபோன்ற சத்தியைக் காண லாம் என்றவாறு.

அக்களி — அக்களிப்பைத் தருவதாகிய ஆணவம்; களி என்ற காரியத்தின் பெயர் அதன் காரணமாகிய ஆணவத்திற்குப் பெயராயிற்று. ஆங்காரம் - அகங்காரம். மன் — நிலைபெற்ற. கடம் — வெளி. பின் + கொடி திருவைந்தெழுத்தினுள் இரண்டாவதாகிய 'வ' காரப் பொருளாகிய சத்தி எனலுமாம்.

சத்தி பூசனையால் ஆணவம் அகலும், பராகாயத்தில் பராசத்தியைக் காணலாம் என்பது கருத்து. (530)

**பேதை யவளுக்குப் பெண்மை அழகாகும்**
**தாதை யிவளுக்குத் தாணுவு மாய்நிற்கும்**
**மாதை யிவளுக்கு மண்ணுந் திலகமாய்க்**
**கோதையர் சூழக் குவிந்திடம் காணுமே.** 1414

இம் - எனின், அம்மையினது அளவிலாற்றலை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: பேதையாகிய பராசத்திக்கு எல்லாவுயிர் களையும் பேணும் பெண்மையே அழகாம். இவ்வம்மைக் குச் சிவம் தந்தையுமாய் விளங்கும். மாதாகிய இவ்வம் மைக்கு இம்மண்ணுலகம் திலகமாய், பெண்கள் பலர் சூழ விந்துவாகிய குவிந்த இடத்தையே தமது உறைவிட மாகக் கொண்டு விளங்கும் என்றவாறு.

பெண்மை — பேணுந்தன்மை. அதாவது இயங்குவ நிற்பவான அனைத்தையும் பாதுகாக்கும் தன்மை.

தாணு அவளுக்குத் தாதையுமாய் நிற்கும் என உம்மைப் பிரித்துக் கூட்டிப் பொருள் காண்க.

மண்ணுந்திலகமாய் மாதையிவளுக்கு எனமாற்றி மண்ணுலகத்துள்ளார்க்கே திலகமாய் விளங்கும் மாதாகிய அவளுக்கு எனவும் பொருள் கொள்ளலாம். இப்பொருளில் மண் ஆகுபெயராக மண்ணுலக மாதரை உணர்த்திற்று. மாதை என்பதில் ஐ சாரியை. (531)

குவிந்தனர் சத்திகள் முப்பத் திருவர்
நடந்தனர் கன்னிகள் நாலெண்மர் சூழப்
பரந்தித ழாகிய பங்கயத் துள்ளே
இருந்தனள் காணும் இடம்பல கொண்டே. 1415

இம் - எனின், யந்திரமண்டலத்தில் சத்தி விளங்குநிலை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் - சத்திகள் முப்பத்திருவர் கூடியுள்ளனர். கன்னியராகிய அம்முப்பத்திருவர் சூழ, பரந்த இதழ்களையுடைய தாமரையுள்ளே காணப்பெறும் இடங்கள் பலவற்றையும் தமக்கிடமாகக்கொண்டு எழுந்தருளியிருந்தனள் என்றவாறு.

பங்கயம் என்பது ஆருதாரங்களிலுள்ள தாமரைகளை என்பாரும் உளர். நவாக்கரி சக்கரத்தைச் சூழ உள்ள பதினாலும் எட்டும் ஆகிய இதழ்களையுடைய தாமரையைக் குறிப்பதாம். அதில் யோகினி சத்திகள் முப்பத்திருவர் விளங்குகின்றனர் என்றது மந்திரநூற் கொள்கை. இதனை யந்திரோத்தார விதிகொண்டு பின்னர் விளக்குவாம். (532)

கொண்டங் கிருந்தனர் கூத்தன் ஒளியினைக்
கண்டங் கிருந்தனர் காரணத் துள்ளது
பண்டை மறைகள் பரந்தெங்குந் தேடுமால்
இன்றென் மனத்துளே இல்லடைந் தாளுமே. 1416

இம் — எனின், அம்மை தனக்கு எளிவந்து அருள் செய்யு முறையினை உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள் : இவ்வியந்திர ராசனை மனத்துட் கொண்டு இருந்தவர்களாகிய யோகியர்கள் புருவமத்தியில் கூத்தனையும் ஒளியையும் கண்டிருந்தனராவர். அக்கூத்தனும் ஒளியுமே அனைத்திற்கும் பரமகாரணமாக உள்ளதாம ; இவர்களைப் பழைய வேதங்கள் எங்கும் பரந்து தேடும். அத்தகைய தேவி இன்று என் மனத்தை என்றும் வீடாக அடைந்து ஆளும் என்றவாறு

யோகியர் கூத்தனையும் ஒளியையும் கண்டனர். ஒளி - சத்தி. கூத்தன் - சத்தன். சிவமும் சத்தியுமாம், பரமகாரணமாயுள்ள சிவசத்திகளை யோகியர் மனத்துட் கண்டனர் ; வேதங்கள் எங்கும் தேடும் ; அவர்கள் என் மனத்தைச் சொந்த வீடாகக்கொண்டு தாமே வந்து அடைந்தனர் எனககருணைத்திறம் வியந்தவாறு (533)

இல்லடைந் தானுக்கும் இல்லாத தொன்றில்லை
இல்லடைந் தானுக் கிரப்பது தானில்லை
இல்லடைந் தானுக் கிமையவர் தாமொவ்வார்
இல்லடைந் தானுக்கு இல்லாதில் லானயே. 1417

இம் - எனின். இவ்வண்ணம் இல்லாக அடையப் பெற்ற யோகியர்க்கு இல்லாததில்லை எனல் நுதலிற்று.

இ - ள் சிவசத்திகள் தாமே இல்லாக அடைந்து ஆளப்பெற்றார்க்கு இல்லாத தொன்றும இல்லை. இரப்பதுமில்லை, அவர்களுக்குத் தேவர்களும் ஒப்பாகார். இடபவாகனத்தையுடைய இறைவனாகிய சிவம் இல் லாதிரார் என்றவாறு.

இல்லடைந்தானுக்கு — சிவமும் சத்தியும் யோகியின் மனத்தை இல்லாக அடையப் பெற்றவனுக்கு. இது முன் திருமந்திரத்திற் கூறிய ' இல்லடைந்தாளுமே ' என்பதனை அநுவதித்துக் கூறினது. ஆன் ஐ இல்லாதது இல் - சிவம் இல்லையாதல் இல்லையாம். (534)

ஆனை மயக்கும் அறுபத்து நாற்றறி
ஆனை யிருக்கும் அறுபத்து நாலொளி
ஆனை யிருக்கும் அறுபத்து நாலறை
ஆனையுங் கோடும் அறுபத்து நாலிலே. 1418

இம் - எனின், உச்சிக்குமேல் அறுபத்து நான்கு கிரணங்களும் அவற்றில் சிவமும் சத்தியும் விளங்குதலும் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: அறுபத்துநான்த கிரணங்கள் ஆன்மா வுடன் கலந்துள்ளது; அவ்வறுபத்துநான்கு ஒளியாகிய கிரணங்களிலும் உள்ளொளியாகச் சிவம் விளங்கும்; அச்சிவம் நவாக்கரி சக்கரமாகிய அறுபத்துநாலறைகளி லும இருக்கும்; சுழிவடிவாய பிரணவமும், கோடாகிய நாதமும அவ்வறுபத்துநான்கு கிரணங்களிலும் விளங்கும் என்றவாறு.

அறுபத்துநால் தறி - அறுபத்துநான்கு தறிவடிவான கிரணங்கள். தறி - தடி, கிரணங்கள் மேனோக்கித் தறி போல் விரிதலின் தறி என்கிறார். ஆன் - பசு; ஆன்மா. அறுபத்து நான்கு தறிகளும் பசுவாகிய ஆன்மாவைக் கலந்து பிரமரந்திரத்திற்கு மேல் வெளிப்பட்டு விரிந்து விளங்கும் என்பதாம்.

அவ்வொளியுள் ஆனேறும் ஐயாகிய சிவம் எழுந்தருளியிருக்கும் என்பதை அறுபத்து நால் ஒளி ஆன் ஐ இருக்கும் என்றருளியவாறு.

அவ்வறுபத்துநாலு கதிர்களே அறுபத்துநான்கு அறைகளையுடைய சக்கரமுமாம் என்பது குறிப்பித்தவாறு. எட்டு வரைகளின்மேல் எட்டு வரை கிடந்து அறுபத்து நான்கு அறைகளாக்கிச் சக்கரம் வரைதலை உணர்த்தியது.

ஆனையும் கோடும் – ஆனைவடிவான பிரணவமும், கோட்டு வடிவான நாதமும் என்பது, சிவமும் மூலாதாரத்திலிருந்து அதீதம்வரை பரவியுள்ள நாதமும் அந்த அறுபத்து நாலிலே ஆம் என்பது. (535)

## திருமந்திரம் நான்காந்தந்திரம்

பஞ்சாக்ஷரதீபம் என்னும் உரையுடன் முற்றிற்று.



# செய்யுள் முதற்குறிப்பு அகராதி

## நான்காம் தந்திரம்

[ பக்க எண் ]

உ

சிவமயம்

சிவநேயச் செல்வீர் !

**திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்**

இருபத்துமூன்றாவது குரு மகாசந்நிதானம்

**சீர் வளர் சீர் சிவப்பிரகாச தேசிக பரமாசாரியசுவாமிகள் அவர்கள்**

திருவுளப்பாங்கின் வண்ணம்

நிகழும் திருவள்ளுவர் - ஆண்டு 2027 மெய்கண்டார் - ஆண்டு 773 யுவ - ஆண்டு தை மாதம் 4-ஆம் நாள் (18—1—96) வியாழக்கிழமை முதல் 13-ஆம் நாள் (27—1—96) சனிக்கிழமை வரை

ஆதீனம் குருமுதல்வர்

**அருள்திரு நமசிவாயமூர்த்திகள் மகரத்தலைநாள் குருபூசை விழா**

சிறப்பாக நடைபெறும் விழா நாட்களில்

**திருநாவுக்கரசு நாயனார் அருளிய தேவாரச் சிந்தனை விரிவுரைகள்**

வேணுவனலிங்க விலாசத்திலும் (கொலுமண்டபம்)

**கலைநிகழ்ச்சிகள்** அம்பலவாணர் கலையரங்கத்திலும் நிகழும்.

27—1—96 சனிக்கிழமையன்று **குருபூசை** நிகழ்வுறும்.

அன்பர்கள் அனைவரும் கலந்துகொண்டு குருவருளும் திருவருளும் பெற்று இன்புற விரும்புகின்றோம்.

இங்ஙனம்,

**காறுபாறு - வைத்தியநாதத் தம்பிரான்**

திருவாவடுதுறை
**10—1—96**

முதல் திருநாள் — 18 — 1 — 96 — வியாழக்கிழமை

| | | |
|---|---|---|
| காலை மணி | 8 - 00—8 - 30 | **கொடியேற்றம்** |
| **திருமுறை விண்ணப்பம் :** | | " தமிழ்மறை இன்னிசைப் பண்மணி " |
| | மாலை மணி 5 - 30 | திரு. டி. எம். சபாபதி ஓதுவார், திருவாவடுதுறை |
| வரவேற்புரை : | 6 - 30 | புலவர் தவத்திரு சுயம்புநாதத் தம்பிரான் சுவாமிகள், திருவாவடுதுறை |
| சிறப்புரை : | 6 - 40 | திரு. S. நாராயணன், கோட்டப் பொறியாளர், தொலை தொடர்புத்துறை. கும்பகோணம் |
| சொற்பொழிவு : | 7 - 00 | சித்தாந்த ரத்தினம், திரு. ஞா. சிவஞானம், M. A., M. Ed., பேராசிரியர், ஆதீன சைவ சித்தாந்த நேர்முகப் பயிற்சி மையம்., " வரலாற்று அகச் செய்திகள் |
| மகிழ்வுரை : | 8 - 15 | புலவர் திரு. பா. மகாலிங்கம், நூலகர், சரசுவதி மகால், திருவாவடுதுறை. |
| குருமரபு வாழ்த்து | 8 - 30 | |

**கலை நிகழ்ச்சி - இரவு மணி 8 - 30** நாதசுவர இன்னிசை: நாட்டிய விசாரத், நாதசுவர குழலிசைக் கலைஞர்.
**T. A. P. ரவிசங்கர் குழுவினர்**, திருக்கழுக்குன்றம்.

இரண்டாம் திருநாள் 19 — 1 — 96 வெள்ளிக்கிழமை

| | | |
|---|---|---|
| திருமுறை விண்ணப்பம் : | | திருமுறைக் கலாநிதி |
| மாலை மணி | 5 - 30 | திரு. சொக்கலிங்க ஓதுவார், திருமுறைப் பணியாளர், அருள்மிகு மாயூரநாத சுவாமி திருக்கோயில், மயிலாடுதுறை. |
| வரவேற்புரை : | 6 - 30 | தவத்திரு. காசி விசுவநாதத் தம்பிரான் சுவாமிகள், திருவாவடுதுறை. |
| சிறப்புரை : | 6 - 40 | திருமதி சரஸ்வதி, மாவட்ட சமூக நலத்துறை அலுவலர், தஞ்சாவூர். |
| சொற்பொழிவு : | 7 - 00 | 'சித்தாந்த ரத்தினம்' திரு. மு. பாலவடிவேல், M. A., M. Ed., M. Phil., பேராசிரியர், ஆதீன சைவ சித்தாந்த நேர்முகப் பயிற்சி மையம். "இறைவன் பேருள் திற" |
| மகிழ்வுரை : | 8 - 15 | திரு. சி. மணி, B. Sc., மேலாளர், அருள்மிகு மாயூரநாதசுவாமி திருக்கோயில், மயிலாடுதுறை, |
| குருமரபு வாழ்த்து | 8 - 30 | |
| கலை நிகழ்ச்சி - இரவுமணி | 8 - 30 | வயலின் இன்னிசை ஆச்சாள்புரம் திரு. S. வெங்கடேசன் & செல்வி N. சாரதா குழுவினர் பேராசிரியர், அரசு கல்லூரி - திருவையாறு. |

**மூன்றும் திருநாள் — 20—1—96 — சனிக்கிழமை**

திருமுறை விண்ணப்பம் : "தேவார இசைமணி"

மாலை மணி 5 - 30 திரு. சு. சம்பந்த தேசிகர்,
திருமுறைப் பணியாளர்,
அருள்மிகு மகாலிங்கசுவாமி திருக்கோயில், திருவிடைமருதூர்.

வரவேற்புரை : 6 - 30 புலவர் தவத்திரு. சுயம்புநாதத் தம்பிரான் சுவாமிகள்
திருவாவடுதுறை.

சிறப்புரை : 6 - 40 திரு. சேது. ஆறுமுகம், B. A., B. T.,
மாவட்டக் கல்வித்துறை அலுவலர். தஞ்சை,
"சித்தாந்த ரத்தினம்"

சொற்பொழிவு : 7 - 00 திரு. ச. சௌரிராசன், M. A., B. Ed.,
பேராசிரியர், ஆதீன சைவசித்தாந்த நேர்முகப் பயிற்சி மையம்:
"திருவைந்தெழுத்துப் பெருமை"

மகிழ்வுரை : 8 - 15 திரு. க. முருகையன், M. A., M. Ed.,
தலைமை ஆசிரியர்,
ஆதீனப் நடுநிலைப் பள்ளி, திருவிடைமருதூர்.

குருமரபு வாழ்த்து : 8 - 30

கலை நிகழ்ச்சி · இரவு மணி 8 - 30 கிளாரிநெட் இன்னிசை
தஞ்சை திரு. T. R. பாலகிருஷ்ணன் குழுவினர்

நான்காம் திருநாள் — 21 — 1 — 96 — ஞாயிற்றுக்கிழமை

| | | |
|---|---|---|
| திருமுறை விண்ணப்பம் : மாலை மணி | 5 - 30 | திரு. **பழனிவேல் ஓதுவார்**<br>திருமுறைப் பணியாளர்,<br>அருள்மிகு வீழிநாதசுவாமி திருக்கோயில், திருவீழிமிழலை. |
| வரவேற்புரை : | 6 - 30 | தவத்திரு. **காசி விசுவநாதத் தம்பிரான் சுவாமிகள்**,<br>திருவாவடுதுறை. |
| சிறப்புரை : | 6 - 40 | திரு. **B. சுப்பையா**, B. A.,<br>மாவட்ட வருவாய் அலுவலர், நாகை மாவட்டம். |
| சொற்பொழிவு : | 7 - 00 | டாக்டர் திரு. **கா. மீனாட்சிசுந்தரம்**, M. A., M. Ed., Ph. D.,<br>முன்னாள் கல்லூரிக் கல்வி இயக்குநர்,<br>வெள்ளக்கிணறு, கோவை. "உபதேச மொழிகள்" |
| மகிழ்வுரை : | 8 - 15 | திரு. **ஆதி. முருகவேள்**, M. A.,<br>ஆதீனப் புலவர், திருச்சி |
| குருமரபு வாழ்த்து : | 8 - 30 | |
| பரிசு வழங்கல் : | 9 - 00 | பூசை நிறைவில் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் நினைவுப் பரிசு வழங்கல். பெறுபவர்; திரு. கா. மீனாட்சிசுந்தரம் அவர்கள். அண்மையில் திருக்குடமுழுக்கு நிகழவுள்ள 9-திருக்கோயில்களுக்கு புனித கங்கை நீரும் அஷ்டபந்தன மருந்தும் வழங்கியருளல். |
| கலை-நிகழ்ச்சி இரவு மணி | 8 - 30 | தேவார இன்னிசை: சங்கீதபூஷணம் திரு. **G. சுவாமிநாதன் குழுவினர்**<br>விரிவுரையாளர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலைநகர். |

ஐந்தாம் திருநாள் | 22 — 1 — 96 | திங்கட்கிழமை

**திருமுறை விண்ணப்பம் :**
மாலை மணி 5 - 30 "திருமுறைக் கலாநிதி" "கலைமாமணி"
**திரு. ந. சோமசுந்தர ஓதுவார்,**
திருமுறைப் பணியாளர்,
அருள்மிகு ஆத்மநாதசுவாமி திருக்கோயில், திருப்பெருந்துறை.

**வரவேற்புரை :** 6 - 30 புலவர் தவத்திரு **சுயம்புநாதத் தம்பிரான் சுவாமிகள்,**
திருவாவடுதுறை.

**சிறப்புரை :** 6 - 40 **திரு. S. ரங்கராசன்**
துணைத் தலைவர், வண்ணக்கலை, அரசினர் கலை தொழிற் கல்லூரி,
கும்பகோணம்.

**சொற்பொழிவு :** 7 - 00 முனைவர் திரு. **ம. ரா. அறிவுடைநம்பி,**
அரிய சுவடித்துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.
"திருக்கோயில் வளர்க்கும் ஓவியக்கலை"

**மகிழ்வுரை :** 8 - 15 திரு. **சு. நாராயணசுவாமி,** M. A., M. Ed.,
துணை ஆசிரியர், ஆதீனம் நடுநிலைப்பள்ளி, திருவிடைமருதூர்.

**குருமரபு வாழ்த்து :** 8 - 30

---

**கலை நிகழ்ச்சி இரவு மணி** 8 - 30 இன்னிசை; திருப்பனந்தாள் "மதுரகான இசைச் செல்விகள்"
T. V. **சுசீலா,** M. A , B. Ed., T. V. **இந்திரா,** M. A., B. Ed,

ஆறும் திருநாள் 23 — 1 — 96 செவ்வாய்க்கிழமை

| | | |
|---|---|---|
| திருமுறை விண்ணப்பம் : | | "தமிழ்மறை இன்னிசைப் பண்மணி" |
| மாலை மணி | 5 - 30 | திரு. டி. எம். சாபதி ஓதுவார், திருவாவடுதுறை. |
| வரவேற்புரை : | 6 - 30 | தவத்திரு விசுவநாதத் தம்பிரான் சுவாமிகள், ஆதீனம் கிளை மடம் (மெய்கண்டார் மடம்), காஞ்சிபுரம். |
| சிறப்புரை : | 6 - 40 | முனைவர் திரு. வி. ப. கா. சுந்தரம், தமிழிசைக் கலைக்களஞ்சியம், பாரதிதாசன் பல்கலைக்கழகம், திருச்சிராப்பள்ளி. |
| சொற்பொழிவு : | 7 - 00 | முனைவர் திரு. A. ஆனந்த நடராசன், M. A., B. O. L. தலைவர், தமிழியல்துறை, அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலை நகர். தேவாரப் பண்முறை வைப்பு |
| மகிழ்வுரை : | 8 - 15 | திரு. வை. சிவராமன், M. A., B. Sc., M. Ed., தலைமை ஆசிரியர், ஆதீனம் மேநிலைப்பள்ளி, திருவிடைமருதூர். |
| குருமரபு வாழ்த்து: | 8 - 30 | |
| கலை நிகழ்ச்சி இரவு மணி | 8 - 30 | சாக்ஸ்போன் இன்னிசை 'இசைத் திலகம்' 'இசைத் தென்றல்' திரு. T. G. R. ஆனந்தன் குழுவினர், தஞ்சை. |

| | | |
|---|---|---|
| திருமுறை விண்ணப்பம் : மாலை மணி | 5 - 30 | தேவார இசைமணி திரு. சு. சம்பந்த தேசிகர், திருமுறைப் பணியாளர். அருள்மிகு மகாலிங்க சுவாமி திருக்கோயில், திருவிடைமருதூர். |
| வரவேற்புரை : | 6 - 30 | தவத்திரு மீனாட்சிசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் ஆதீனம் கிளை மடம் (பட்டுலத்தார் மடம்), திருவிடைமருதூர். |
| சிறப்புரை : | 6 - 40 | திரு. V. G. பிரசாத், செய்தி மற்றும் மக்கள் தொடர்பு அலுவலர், நாகைப்பட்டினம். |
| சொற்பொழிவு : | 7 - 00 | திரு. A. S. முத்தையா, ஆதீன சமயப் பரப்புநர், திருநெல்வேலி. "திருவாய்ப் புகழ்ச்சி |
| மகிழ்வுரை : | 8 - 15 | திரு. K. ராஜசேகர், மேலாளர், அருள்மிகு சிவசூரியப்பெருமான் திருக்கோயில், சூரியனார்கோயில். |
| குருமரபு வாழ்த்து : | 8 - 30 | |

| | | |
|---|---|---|
| கலை நிகழ்ச்சி இரவு மணி | 8 - 30 | புல்லாங்குழல் & மின் ஆர்கன் இன்னிசை "இன்ப கான இசைத்திலகம்" திரு. V. வசந்தகுமார், திரு. V. வைரமாணிக்கம் குழுவினர் - தஞ்சை. |

## எட்டாம் திருநாள் 25—1—96 வியாழக்கிழமை

| | | |
|---|---|---|
| திருமுறை விண்ணப்பம் : மாலை மணி | 5 - 30 | திரு. பழனிவேல் ஓதுவார்,<br>திருமுறைப் பணியாளர்,<br>அருள்மிகு வீழிநாதசுவாமி திருக்கோயில் திருவீழிமிழலை, |
| வரவேற்பு : | 6 - 30 | தவத்திரு மாசிலாமணித் தம்பிரான் சுவாமிகள்,<br>ஆதீனம் கிளைமடம், புளியங்குடி. |
| சிறப்புரை : | 6 - 40 | திரு. G. பெரியசாமி, B. Sc., B. T.,<br>காவல்துறை துணை கண்காணிப்பாளர்,<br>சீர்காழி. |
| சொற்பொழிவு : | 7 - 00 | திரு. வீ. தமிழ்ச்சேரனர்<br>ஆதீன சமய பரப்புநர், அம்மாபேட்டை<br>" ஆளுடைப் பிள்ளையும் அரசும் " |
| மகிழ்வுரை : | 8 - 15 | திரு. R. பாலகிருஷ்ணன்<br>மேலாளர், அருள்மிகு மகாலிங்கசுவாமி திருக்கோயில்<br>திருவிடைமருதூர். |
| குருமரபு வாழ்த்து : | 8 - 30 | |
| கலை நிகழ்ச்சி-இரவு மணி | 8 - 30 | திருமுறை இன்னிசை ' இசை ஞானி "<br>T. உருத்திராபதி குழுவினர்<br>மாப்பிள்ளைகுப்பம். |

# மகாவித்துவான் நினைவுப் பரிசு வழங்கல்

ஆதீன மகாவித்துவான் திரிசிரபுரம் திரு. மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் இனிய நினைவுச் சின்னமாக அவர்கள் திருவாவடுதுறையில் வசித்த வீடு இருந்த இடத்தில் சீர் வளர் சீர் குரு மகாசந்நிதானம் அவர்கள் புதியதாக அழகிய மாளிகையை அமைப்பித்து 1993-ஆம் ஆண்டு, அவர்களின் நினைவு நாளில் திறப்பு விழா நிகழ்த்தியருளினார்கள்

மேலும் அவ்வாண்டு முதல் அந்நாளில் தமிழ் மூதறிஞர் ஒருவர் சிறப்பிக்கப்பெற வேண்டும் எனத் திருவுளம் கொண்டு;

1993-ஆம் ஆண்டில் திரு. ஆதி. முருகவேள், M. A., திருச்சிராப்பள்ளி.

1994-ஆம் ஆண்டில் திரு. ப. ஆறுமுகம், M. A., Ph. D., திருச்சி.

1995-ஆம் ஆண்டில் திரு. இராம. பெரியகருப்பன் (தமிழண்ணல்) மதுரை. இவர்களுக்குச் சிறப்புகள் செய்து ஆசியருளியுள்ளார்கள்.

இவ்வாண்டு 21—1—96 ஞாயிற்றுக்கிழமை இரவு அருள்திரு நமசிவாயமூர்த்திகள் பூசை நிறைவில் சீர் வளர் சீர் குரு மகாசந்நிதானம் அவர்கள்

கோவை, முனைவர் திரு. கா. மீனாட்சிசுந்தரம் M. A., M. Ed., Ph D, அவர்கட்கு

மகாவித்துவான் பிள்ளையவர்கள் நினைவுப் பரிசாக மோதிரமும் ரூபா இரண்டாயிரமும் வழங்கி ஆசியருளுகின்றார்கள்.

